# வளர்ச்சிகுறைந்த நாடுகளின் முதலாக்கம்பற்றிய சிக்கல்கள்

ஆசிரியர்

ராக்னர் நர்க்ஸ்

தமிழாக்கம்

மா. குமாரசுவாமி

தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு—அரசாங்கம்



தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—140

# வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கம்பற்றிய சிக்கல்கள்

## (Problems of Capital Formation in Underdeveloped Countries)

ஆசிரியர் :

**ராக்னர் நர்க்ஸ்,**

முன்னாள் பொருளியல் பேராசிரியர்,

கொலம்பியா பல்கலைக் கழகம்,

நியூயார்க்

தமிழாக்கம் :

**மா. குமாரசாமி, எம். ஏ.**

பொருளியல் பேராசிரியர்,

பச்சையப்பன் கல்லூரி

காஞ்சீபுரம்




**தமிழ் வெளியீட்டுக் கழகம்**

தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—April, 1967

B.T.P. No. 140



# Problems of Capital Formation in Underdeveloped Countries

RAGNAR NURKSE

*Translation:*

M. KUMARASWAMI

Price Rs. 5-50

This translation of 'Problems of Capital Formation in Underdeveloped Countries' by Ragnar Nurkse, published by permission of Bazil Blackwell & Mott Ltd., Oxford.

Printed by:

Sri B. L. S. Press,

65/1, Arcot Road,

Kodambakkam, Madras-24

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர் கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும், மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கம்பற்றிய சிக்கல்கள்' என்ற இந் நூல் தமிழ் வெளி யீட்டுக் கழகத்தின் **140**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **175** நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் 'பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

இந் நூலின் பெரும் பகுதி, ரியோ டி ஜனரோவில் (Rio de Janeiro); 1951ஆம் ஆண்டு ஜூலை, ஆகஸ்டு ஆகிய திங்கள்களில்; பிரேசில் பொருளியல் நிறுவனத்தின் (Brazilian Institute of Economics) விருந்தினன் என்கிற முறையில், பேராசிரியர் யூஜெனியோ கூடின் (Professor Eugenio Gudin) அவர்களுடைய தலைமையில் நான் ஆற்றிய ஆறு விரிவுரைகளின் திருத்தப்பட்ட ஓர் அமைப்பு ஆகும். இந்த விரிவுரைகளின் போர்ச்சுகீசிய மொழி பெயர்ப்பு ஒன்று, ஆங்கில மொழியிலும் ஃபிரெஞ்சு மொழியிலும் அமைந்த சுருக்கங்களுடன், 'ரிவிஸ்டா பிரேசிலிரா டி எகானமியா' (Revista Brasileira de Economia) என்னும் கால் ஆண்டுப் பத்திரிகையின் 1951ஆம் ஆண்டு டிசம்பர் இதழில் வெளியாகியிருக்கிறது.

அமெரிக்கப் பொருளியல் கழகத்தின் (American Economic Association) சார்பில், 1951ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 29ஆம் நாள், போஸ்டன் (Boston) நகரில் 'வளர்ச்சி குறைந்த நாடுகளில் நடைபெறும் வளர்ச்சி' என்னும் தலைப்பில் நடைபெற்ற ஒரு கருத்தரங்கில் என்னால் படிக்கப்பட்டு, 'அமெரிக்கன் எகனமிக் ரிவ்யூ' (American Economic Review) என்னும் பத்திரிகையின் 1952ஆம் ஆண்டு மே திங்கள் இதழில் 'தாள்களும் நிகழ்ச்சிகளும்' (Papers and Proceedings) என்னும் பகுதியில் வெளியிடப்பட்டுள்ள ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையையும் இந்நூலில் இணைத்துள்ளேன். இக் கட்டுரையைப்பற்றி விரிவான கருத்துரைகளை அளித்த பேராசிரியர்கள் ஆர்தர் ஆர். பர்ன்ஸ் (Arthur R. Burns), ஜே. மார்கஸ் ஃப்ளெமிங் (J. Marcus Fleming), காட்ஃப்ரிட் ஹெபர்லர் (Gottfried Haberler) ஆகியோருக்கு நான் நன்றி நவிலக் கடமைப்பட்டுள்ளேன். என் விரிவுரைகளைத் திருத்தி இந் நூல் வடிவத்தில் அமைத்தபோது, அவர்களுடைய கருத்துரைகளைப் பயன்படுத்த முயன்றுள்ளேன்.

இந் நூலின் சில பகுதிகள், 1952ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள், கெய்ரோவில் உள்ள அரசியற் பொருளியல் கழகத்தில் (Societe d' economic politique), எகிப்திய நாட்டு பாங்கியின் (National Bank of Egypt) விரிவுரைத் திட்டம் ஒன்றின் பகுதியாக, அந்த

பாங்கியின் ஆராய்ச்சித் துறைத் தலைவராகிய பேராசிரியர் என். கோஸ்ட்னர் (Professor N. Koestner) அவர்களுடைய அன்புத் தூண்டுதலின் பேரில், என்னால் ஆற்றப்பட்ட சொற்பொழிவில் அடங்கியிருப்பவை யாகும். அச் சொற்பொழிவு அந்த பாங்கியால் குறிப்பிட்ட சிலரிடம் வழங்கப்படுவதற்காக அச்சிடப்பட்டுள்ளது.

நான் ஆற்றிய சொற்பொழிவுகளைத் திருத்தி அமைத்து, அவற்றின் பெரும்பகுதியைப் புதிதாக எழுதி இந் நூலை அமைத்திருக்கிறேன் என்றபோதிலும், சொற்பொழிவு வடிவத்தின் சின்னங்கள் யாவற்றையும் இந் நூலிலிருந்து அகற்றிவிட இயலவில்லை. இந் நூல், இதில் ஆராயப்பட்டுள்ள சிக்கலின் எல்லாப் பகுதிகளையும் ஒருங்கே எடுத்து விளக்கும் ஓர் ஓவியமாக விளங்குகிறது என்று நான் உரிமை கொண்டாட முடியாது. இந் நூலின் அமைப்பு, அச் சிக்கலின் குறிப்பிட்ட சில பகுதிகளைமட்டும் தேர்ந்தெடுத்து ஆராயும் தன்மை உடையதாக இருப்பது தவிர்க்க முடியாத ஒன்று. இதனை ஓர் ஆராய்ச்சி நூல் என்று கருதுவதும் பொருந்தாது. இந் நூல், உலகத்தின் மூன்றில் இரண்டு பங்காக உள்ள ஏழை நாடுகளில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்குத் தேவையான அடிப்படை நிலைமைகளிற் சிலவற்றை விளக்குவதற்காக, பொருளியற் கோட்பாட்டையும், குறிப்பாகக் கண்டறிந்த உண்மைகளையும் பயன்படுத்துகின்ற ஒரு சிறு முயற்சியே ஆகும். இந் நூலானது, இதில் ஆராயப்பட்டுள்ள தொல்லைமிக்க சிக்கல்களைப்பற்றிய கருத்தாய்வைத் தூண்டி, அவற்றைப்பற்றிய ஒரு தெளிவான சிந்தனையை உருவாக்குமானால், இந் நூலால் பெறத்தக்க பயன் கிடைத்துவிட்டது என்று நான் மகிழ்வேன்.

நியூயார்க்,<br>
ஜூலை, 1952

ராக்னர் நர்க்ஸ்

# பொருளடக்கம்

பக்கம்

# தோற்றுவாய்

நம் நூலின் முதல் தலைப்பைப்பற்றி ஆராயத் தொடங்கு வதற்கு முன்னர், முதல் ஆக்கம் (capital formation) என்னும் பொதுவான பொருள்பற்றி முன்னுரையாகச் சில கருத்து களைத் தெரிவிக்க விழைகிறேன். இந்தப் பொருள்தான் பொரு ளியல் துறையில் பின்தங்கியுள்ள நாடுகளின் வளர்ச்சிபற்றிய சிக்கலின் உயிர்நாடியாகத் திகழ்கிறது. 'வளர்ச்சி குறைந்த' வட்டாரங்கள்[1] என்று அழைக்கப்படும் நாடுகளை முன்னேற்ற மடைந்த நாடுகளோடு ஒப்பிட்டுப்பார்த்தால், அந் நாடுகள் பெற்றுள்ள மூலதனமானது, அந் நாடுகளின் மக்கள்தொகை, இயற்கை வளங்கள் ஆகியவற்றிற்குத் தேவையான அளவைவிடக் குறைவாக இருப்பது தெளிவாகத் தெரியும். இவ்வாறு நாம் இயம்புவதால் ஒரு நாட்டின் பொருளியல் முன்னேற்றம் முழுவதும் அந் நாட்டின் மூலதனத்தைமட்டுமே பொறுத்திருக் கிறது என்று எண்ணிவிடக்கூடாது. பொருளியல் முன்னேற்ற மானது மக்களின் ஆற்றல்கள், சமுதாயப் போக்குகள், அரசி யல் நிலைமைகள், தற்செயலாக ஏற்பட்டுவிட்ட வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகியவற்றையும் சார்ந்திருக்கிறது. முன்னேற்றம் ஏற்படவேண்டுமானால் மூலதனம் இருந்தாகவேண்டும் என்பது உண்மைதான்; ஆனால், மூலதனம்மட்டும் போதும் என்பது உண்மையன்று.

முதல் ஆக்கம் என்னும் பொருள் பல்வேறு பிரிவுகளையும் கிளைகளையும் கொண்டதாகத் திகழ்கிறது. அப் பிரிவுகளில் சில வற்றைமட்டுமே நாம் இந் நூலில் கருத்தாய்வு செய்ய முடியும். அவ்வாறு கருத்தாய்வு செய்வதற்கு நான் என்னென்ன பிரிவு களைத் தேர்ந்தெடுத்துள்ளேன் என்பது ஓரளவுக்கு என் விருப் பத்தை ஒட்டிய முடிவாகவே அமைந்துள்ளது. நான் தேர்ந் தெடுத்துள்ள பிரிவுகள் பொதுப்படையான இயல்பை உடை

யவை. ஆகவே, இந் நூலில் எடுத்துக்கொண்ட பொருளை முழு அளவிலும் கட்டுக்கோப்பான முறையிலும் ஆராய்ந்து காட்டும் கட்டுரைகளையோ, அல்லது ஒரு குறிப்பிட்ட நாட்டுக்குமட்டும் உரிய சிக்கல்களைப்பற்றிய கருத்தாய்வையோ எதிர்பார்க்கவேண்டாம் என்று வாசகர்களுக்குப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன். இந் நூலின் கருத்தாய்வானது ஏழை நாடுகள் பலவற்றிற்கும் பொதுவாக உள்ள சிக்கல்களைப்பற்றிய ஓர் ஆராய்ச்சி என்பது உண்மைதான். ஆனால், அதே சமயத்தில் அத்தகைய நாடுகளில் ஒவ்வொன்றிற்கும் சிற்சில சிறப்பியல்புகள் இருக்கும் என்பதையும், அத்தகைய இயல்புகள் பொதுப்படையான ஒரு கருத்தாய்வாக விளங்கும் இந் நூலில் இடம்பெற முடியாது என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

இந் நூலில் ஆராயப்பட்டுள்ள தலைப்புகளில், குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளின் முதலாக்கம்பற்றிய சிக்கலின் பன்னாட்டுத் தன்மைகள் சிலவும் இடம்பெற்றுள்ளன. அத்தகைய பன்னாட்டுத் தன்மைகளுக்கு முறைப்படி அளிக்கவேண்டியதைவிட மிகக் கூடுதலான கவனத்தை இந் நூலில் நான் அளித்துள்ளேன் என்று சிலர் என்மீது குறைகூறக்கூடும். குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளின் முதலாக்கத்தைப்பற்றிய கருத்தாய்வில், 'தன் கையே தனக்கு உதவி' என்னும் கோட்பாடு அழுத்தந் திருத்தமாக வற்புறுத்தப்படவேண்டும் என்பதுதான் என் திட்டவட்டமான கருத்து. என் கருத்து இதுவாக இருந்தபோதிலும், இந் நூலில் உள்ள பக்கங்களில் ஏறத்தாழப் பாதி அளவுதான் உள்நாட்டு நிலைமைகளைப்பற்றிய ஆராய்ச்சியாக அமைந்துள்ளது. அந் நிலைமைகளைப்பற்றி இன்னும் விரிவாக ஆராயத் தொடங்கினால் பல்வேறு நாடுகளின் தனிப்பட்ட விவரங்களை நுணுக்கமான முறையில் எடுத்துக்கூற வேண்டியிருக்கும் என்பதும், அப்படிக் கூறுவதற்குத் தேவையான நேரமோ அல்லது தகுதியோ எனக்குக் கிடையாது என்பதும், ஐக்கிய அமெரிக்க நாடு, பிரிட்டன் ஆகிய இரு நாடுகளிலும் முதலாக்கத்தின் பன்னாட்டு இயல்புகளைத் தெளிந்தறிவதிலேயே மிகுந்த ஆர்வம் காணப்படுகிறது என்பதுமே உள்நாட்டு நிலைமைகளை நான் குறைந்த அளவில் ஆராய்ந்திருப்பதற்குரிய காரணங்கள் ஆகும்.

ஒரு சமூகமானது, அதன் நடப்புக் கால உற்பத்தி நடவடிக்கை முழுவதையும், உடனடி நுகர்வின் (immediate consumption) விருப்பங்களையும் தேவைகளையும் நிறைவேற்றுவதற்காகமட்டும் பயன்படுத்தாமல், அதன் ஒரு பகுதியை

உற்பத்தி ஆற்றலைப் பலமடங்காகப் பெருக்கக்கூடிய கருவிகள், பொறிகள், தளவாடங்கள், போக்குவரத்து அமைப்புகள் முதலிய பலதிறப்பட்ட மெய்ம் முதற் பொருள்களை (real capital goods) உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்துவதைத்தான் 'முதலாக்கம்' என்று நாம் அழைக்கிறோம். சில சமயங்களில் இந்தச் சொல்லானது, பருப்பொருள் மூலதனத்தை (material capital) மட்டுமல்லாமல், மனித மூலதனத்தையும் (human capital) குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது; அதாவது, மக்களின் ஆற்றல்கள், கல்வி, உடல்நலம் ஆகியவற்றில் செய்யப்படுகிற மிக இன்றியமையாத முதலீட்டைக் குறிப்பிடவும் பயன்படுத்தப் படுகிறது. ஆனால், இந்த நூலில் நான் அத்தகைய முதலீடு பற்றிய கருத்தாய்வில், அதாவது, பண்பாட்டு நிலைமைகள், சமுதாய நிலைமைகள், மக்கள்தொகை நிலைமைகள் ஆகியவை பற்றிய கருத்தாய்வில் ஈடுபட விரும்பவில்லை. அப்படி விரும்பாததற்கு ஒரு காரணம், அத்தகைய நிலைமைகள் இடத்திற்கு இடம் மாபெரும் அளவில் மாறுபடுகின்றன என்பது ஆகும்; ஆனால், முக்கியமான காரணம், அந்த நிலைமைகள்பற்றி எனக்குள்ள அறிவு மிகக் குறைவு என்பதே. இந்த நூலில் நான் பருப்பொருள் மூலதனத் திரட்சியைப்பற்றிமட்டுமே கருத்தாய்வு செய்துள்ளேன் என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

எதிர்காலத்தில் கிடைக்கக்கூடிய நுகர்வுப் பொருள்களின் அளவைப் பெருக்கவேண்டுமானால், நிகழ்காலத்தில் முதற் பொருள்களின் (capital goods) அளவைப் பெருக்கவேண்டும். அப்படிப் பெருக்குவதற்காகச் சமுதாயத்திடம் தற்போது உள்ள மூலவளங்களில் ஒரு பகுதியை ஒதுக்குவதுதான், முதலாக்கத்தின் அடிப்படைத் தன்மை ஆகும். இந்த அடிப்படைத் தன்மையை ஆராய்வதில்தான் இந்த நூலின் தலையாய கவனம் செலுத்தப்பட்டுள்ளது. ஆனால், முதலாக்கத்தின் எல்லாத் தன்மைகள்குறித்தும் ஒத்த அளவில் இந்த நூலில் கவனம் செலுத்தப்படவில்லை. அதன் தன்மைகள் சிலவற்றிற்கு இரண்டாந்தர முக்கியத்துவம்தான் தரப்பட்டிருக்கிறது. எடுத்துக்காட்டாக, முதல் ஆக்கத்தின் தொழில்நுணுக்கத் துறை முழுவதும் இந் நூலில் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது என்றே சொல்லிவிடலாம். முதற் பொருள்களின் இருப்புப் பெருகும் போது, இயல்பாகவே அப் பொருள்களின் வடிவமானது மாறுதல் அடைகிறது. தொழிலாளர்களின் குழு ஒன்று ஒரு சாலையை அமைத்துக்கொண்டிருக்கிறது என்றும், அத் தொழிலாளர்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு டாலர் மதிப்புள்ள ஒரு

முதற் பொருள் — எடுத்துக்காட்டாக, ஒரு மண்வெட்டி தரப் பட்டிருக்கிறது என்றும் கற்பனைசெய்துகொள்வோம். சில நாட் களுக்குப் பின்னர், அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் டாலர் மதிப்புள்ள முதற் பொருள் தருவதென்று முடிவு செய்யப்படு கிறது என்றும் வைத்துக்கொள்வோம். அந் நிலையில் அவர்களுக்கு எத்தகைய முதற் பொருள் தரப்படும்? ஒவ்வொருவருக்கும் ஓர் ஆயிரம் மண்வெட்டிகளை வழங்கினால் அது பொருளற்ற செயலாக அமைந்துவிடும். அவர்களில் சிலருக்காவது இப்போது டிராக்டர்கள் அல்லது பாரவண்டிகள் வழங்கப்படும்; ஆகவே, உற்பத்திப் பணியில் முதலீடு செய்யப்படுகிற மூலதனத்தின் அளவு பெருகப் பெருக முதற் பொருள்களின் உருவம் மாறு தலடையும் என்பது வெள்ளிடைமலை. முதற் பொருள் களின் இந்த உருவ மாறுதல்தான் பாமரமக்களின் கருத்தை மிகப் பெரிய அளவில் கவர்கின்றது. அத்தகைய மாறுதல் ஏற்படுவது, ஆர்வத்தை ஊட்டுவதும் இன்றியமையா ததுமான ஒரு நிகழ்ச்சியே என்பதில் ஐயமில்லை. ஆனால், முத லாக்கம் என்னும் பொருளைப் பொறுத்தவரை அத்தகைய மாறுதல், குறிப்பிடத்தக்க மாறுதல் அன்று. மெய்ம் முதற் பொருள்களின் அளவு பெருகும்போது அந்தப் பெருக்கத்தின் பொறி இயல் தன்மையாகமட்டும் விளங்குவது அந்த மாறுதல். ஆகவே, முதற் பொருள்களின் பெருக்கத்தின்போது அத்தகைய மாறுதல் ஏற்படுவது இயல்பு என்பதைமட்டும் நம் நினைவில் வைத்துக்கொண்டால் போதும்; அதைப்பற்றி மேற்கொண்டு அலசி ஆராயவேண்டிய தேவையில்லை.

'தொழில்நுணுக்க முன்னேற்றம்' என்று அழைக்கப்படும் சொற்றொடரானது இரண்டு பொருள்கள் கொண்டதாக விளங்குகிறது. முன்னிலும் சிறந்த—முன்னிலும் மிகுதியான உற்பத்திக் கருவிகளை உருவாக்குவதையும், அப்படி உருவாக்கு வதற்காகத் தற்போது உள்ள தொழில்நுணுக்க அறிவை முன் னிலும் மிகுதியான அளவில் பயன்படுத்துவதையும் குறிப்பிடுவது அதன் ஒரு பொருளாகும். இந்தப் பொருளில்தான் அந்தச் சொற் றொடர் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. தொழில்நுணுக்க அறிவின் அளவு கூடுதலாகப் பெருகாமல் இருந்தால்கூட, இருக் கின்ற அறிவைக் கூடுதலான அளவு பயன்படுத்துவதன் வாயி லாகவும், அந்த அறிவைக்கொண்டு புதிய பருப்பொருள்கள் பலவற்றைப் படைப்பதன் வாயிலாகவும் தொழில்நுணுக்க முன்னேற்றத்தை ஏற்படுத்த முடியும். சில சமயங்களில் முதற் பொருள்களின் உருவத்திலோ அளவிலோ மாறுதல் நிகழாவிட் டாலும், தொழில்நுணுக்க அறிவானது பெருகிக்கொண்டே

போகும். இத்தகைய பெருக்கத்தைச் சுட்டிக்காட்டுவதற்கும் 'தொழில்நுணுக்க முன்னேற்றம்' என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்படலாம். இதுதான் சொற்றொடரின் இரண்டாவது பொருளாகும். வளர்ந்துவரும் தொழில்நுணுக்க அறிவை உற்பத்தித்துறையில் பயன்படுத்துவதற்குத் தேவையான மூலதனம் இல்லாத நிலைமை இருக்குமானால், கொள்கை அளவில் ஏற்படுகிற அந்த அறிவு வளர்ச்சியால் பொருளியல் முன்னேற்றத்திற்கு எத்தகைய நன்மையும் இருக்க முடியாது. உற்பத்தித் துறையில் தொழில்நுணுக்க அறிவைக் கையாள்வதற்குத் தேவையான பொருளியல் சாதனங்கள்மட்டும் இருக்குமானால், அப்படிக் கையாளப்படுவதற்கு ஆயத்தமாக ஏராளமான அளவில் தொழில்நுணுக்க அறிவு உலகத்தில் இருக்கிறது என்னும் பாவனையில் நம் கருத்தாய்வை நாம் தொடங்கலாம். குறைந்த வளர்ச்சி படைத்த நாடுகளைப் பொறுத்தவரை, இத்தகைய ஒரு பாவனை கற்பனையின் அடிப்படையில் எழுந்த ஒன்று அன்று; நடைமுறை உண்மைக்கு முற்றிலும் பொருந்திய ஒன்றே. நாம் முன்னரே சுட்டிக்காட்டியதைப்போல், இக் கருத்தாய்வில் முதல் ஆக்கத்தின் பொறி இயல் தன்மையைப்பற்றி நாம் ஆராயப்போவதில்லை.

தொழில்நுணுக்கத் துறையைப்பற்றி ஆராயப்படுவதைவிட மிகுதியான அளவில் இந் நூலில் நிதித்துறைபற்றிய ஆய்வு காணப்படும் என்றாலும், அந்த ஆய்வுக்குத் தரப்படும் முதன்மையைவிட, முதல் திரட்சியின் (accumulation of capital) 'மெய்யான', அதாவது, பணச்சார்பல்லாத சிக்கல்களைப் பற்றிய ஆய்வுக்குத் தரப்படும் முதன்மையே கூடுதலாக இருக்கும். நிதித்துறைபற்றிய விரிவான கருத்தாய்வில் நாம் இறங்கினால், நிதி அமைப்புகள் மற்றும் நிறுவனங்கள்பற்றிய சிக்கல்களை ஆராயவேண்டியிருக்கும் என்பதும், அத்தகைய அமைப்புகள் நாட்டுக்கு நாடு குறிப்பிடத்தக்க அளவு மாறுபடுகின்றன என்பதும், சில சமயங்களில் அந்த மாறுதல்கள் தற்செயலாக நேரிட்டவையாக இருக்கின்றன என்பதும், அவை பெரும்பாலும் அடிப்படை இன்றியமையாமை உடையன அல்ல என்பதுமே அப்படி இருப்பதற்குரிய காரணங்களாகும்.

இந்த நூலில் என்னென்ன பொருள்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை என்பதைப்பற்றி இதுவரை கவனித்தோம். என்னென்ன பொருள்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன என்பதை இனிக் கவனிப்போம்.

## தோற்றுவாய்க்கான அடிக்குறிப்பு

1. வளர்ச்சி குறைந்த வட்டாரங்கள் (underdeveloped areas) என்னும் சொல்லமைப்பு முழு மனநிறைவு அளிக்கவல்லதாக இல்லை என்றாலும், அது பரவலான முறையில் கையாளப்பட்டு வருகிறது. எனவே, அது இந் நூலின் மூன்றாவது அத்தியாயத்தில், '1949-ல் உலக வருமானத்தின் பங்கீடு' என்னும் தலைப்பின்கீழ் அமைந்துள்ள பட்டியலில், குறைந்த வருமான நாடுகள் (low-income countries) என்று சுட்டிக் காட்டப்பட்டு, அந்தப் பட்டியலைத் தொடர்ந்துவருகிற பத்திகளில் விளக்கிக் கூறப்பட்டுள்ள நாடுகளைக் குறிப்பிடும் வகையில் இந் நூலில் கையாளப்பட்டுள்ளது.

# 1. அங்காடியின் அளவும் முதலீட்டுக்கான தூண்டுதலும்

தனிப்பட்ட முதலீட்டாளர் (investor) அல்லது தொழில் துணிவோருக்கு (entrepreneur) ஏற்படக்கூடிய முதலீட்டுக்கான தூண்டுதலைப்பற்றி ஆராய்வதே இந்த அத்தியாயத்தின் நோக்க மாகும். வேறு சொற்களிற் கூறுவதானால், உற்பத்தித்துறையில் மூலதனத்திற்கு ஏற்படக்கூடிய தேவையை (demand) உருவாக்கும் நிலைமைகளைப்பற்றிக் கருத்தாய்வு செய்வதே இந்த அத்தி யாயத்தின் குறிக்கோள் எனலாம். பொருளியல் புலவர்களுக்கு மிகப் பிடித்தமான தேவை (demand), அளிப்பு (supply)— என்னும் இருவகைப் பிரிவானது, மூலதனத் திரட்சியை உருவாக்குகிற நிலைமைகளுக்கு முற்றிலும் பொருத்தமாக உள்ள ஒன்றேயாகும். முதலாக்கத்தில் அமைந்துள்ள மூலதனத் தேவை, மூலதன அளிப்பு ஆகிய இரு பிரிவுகளில், மூலதன அளிப்பே கூடுதலான இன்றியமையாமையை உடையது என்றபோதிலும், முதலாக்கம் முழுவதும் மூலதன அளிப்பை மட்டுமே சார்ந்திருக்கிறது என்று கூறிவிடமுடியாது. பின்னர் வருகிற பல அத்தியாயங்கள், மூலதன அளிப்பைப்பற்றிய பல் வேறு கருத்தோட்டங்களை ஆராய்கின்றன. ஆனால், மூலதன ஆக்கத்தைத் தடுக்கக்கூடிய முட்டுக்கட்டைகள் மூலதனத் தேவை என்ற பகுதியிலும் இருக்கின்றன. அந்தப் பகுதியை முதலில் கருத்தாய்வு செய்வோம்.

## வறுமை என்னும் நச்சு வளையம்

வறுமை என்னும் நச்சு வளையம்'—இந்தச் சொற்றொடர் 'பொருளாதார வளர்ச்சிச் சிக்கல்பற்றிய கருத்தாய்வுகளில் அடிக்கடி கையாளப்படுகின்ற ஒன்றாகும். ஆராய்ந்து பார்க்க வேண்டிய தேவையே இல்லாத ஒன்றாக—பெயரைச் சொன்ன

அளவிலேயே விளங்கிவிடுகிற ஒன்ருக, அது பொதுவாகக் கருதப்படுகிறது. இவ்வளவு 'விளக்கமாகத் தெரிகிற' ஒன்றைப்பற்றி நான் சற்று ஆராய விரும்புகிறேன். அப்படி விரும்புவது தவருனுல், வாசகர்கள் என்னை மன்னிப்பார்கள் என்று நம்புகிறேன்.

ஓர் ஏழை நாட்டைத் தொடர்ந்து ஏழ்மை நிலையிலேயே வைத்திருக்கக்கூடிய வகையில், ஒன்றிலிருந்து ஒன்று பிறக்கின்ற—ஒன்றை ஒன்று வளர்க்கின்ற பல்வேறு சக்திகளின் ஒரு தொகுப்பைத்தான், 'வறுமை என்னும் நச்சு வளையம்' என்கின்ற சொற்ருெடர் குறிக்கின்றது. ஒன்றை ஒன்று வளையவருகிற அத்தகைய சக்தித் தொகுதிகளைப்பற்றிய சில எடுத்துக்காட்டுகளைத் தருவது கடினமான செயலன்று. அத்தகைய எடுத்துக்காட்டுகளில் ஒன்று இது: ஏழை மக்களுக்குப் போதிய அளவு உணவு கிடைப்பதில்லை; அப்படிக் கிடைக்காததால் அவர்களுடைய உடல்நலம் குன்றிவிடுகிறது; உடல்நலம் குன்றுவதால் வேலை செய்யும் திறன் குறைந்துவிடுகிறது; அத்திறன் குறைகிறது என்ருல் அவர்களின் ஏழ்மை வளர்கிறது என்று பொருள். ஏழ்மை வளருமானுல், கிடைக்கும் உணவின் அளவு குறைதல், உடல்நலம் குன்றுதல் முதலிய நிலைமைகள் தொடர்ந்து ஏற்படுகின்றன. அதாவது, ஒரு நச்சு வளையம் உருவாகித் தொடர்ச்சியாகச் சுழன்றுகொண்டேயிருக்கிறது. இத்தகைய ஒரு நிலைமை நாடு முழுவதிலும் ஏற்படும்போது, அந்த நிலைமையைப்பற்றிச் சுருக்கமாகச் சொல்லவேண்டுமானுல், 'ஒரு நாடு ஏழையாக இருப்பதற்குக் காரணம் அது ஏழையாக இருப்பதுதான்' என்று இயம்பிவிடலாம்.

பொருளியல்துறையில் பின்தங்கியுள்ள நாடுகளின் மூலதனத் திரட்சியைப் பாதிக்கிற நச்சு வளையங்களே இத்தகைய வளையங்களில் மிக முதன்மையானவையாக இருக்கின்றன என்று கூறினுல், அது மிகையாகாது. மூலதன அளிப்பானது, சேமிக்கும் திறன், சேமிக்கும் விருப்பம் ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. மூலதனத் தேவையோ, முதலீட்டுக்கான தூண்டுதல்களைப் பொறுத்திருக்கிறது. வறுமையில் உழலும் நாடுகளின் முதலாக்கச் சிக்கலின் அளிப்புப் பகுதி, தேவைப் பகுதி ஆகிய இரு பகுதிகளிலுமே நச்சு வளைய நிலைமை அமைந்திருக்கிறது.

அளிப்புப் பகுதியை முதலில் எடுத்துக்கொள்வோம். அத்தகைய நாடுகளில் சேமிக்கும் ஆற்றல் குறைந்த அளவினதாக இருக்கிறது. அந்த ஆற்றல் குறைவாக இருப்பதற்குக் காரணம், மெய் வருமானத்தின் (real income) அளவு குறைவாக இருப்ப

தாகும். மெய் வருமானத்தின் அளவு குறைவாக இருப்பது ஏன்? உற்பத்தி குறைவாக இருப்பதால்! உற்பத்திக் குறைவோ பெரும்பாலும் மூலதனக் குறைவால் உருவாகிறது. மூலதனக் குறைவுக்குக் காரணம் என்ன? சேமிக்கும் ஆற்றல் குறைவாக இருப்பது! ஆகவே, இந்த வளையம் முழுமையாக ஒரு சுற்றுச் சுற்றித் தொடங்கிய இடத்துக்கே வந்துவிட்டது அல்லவா?

அடுத்ததாக, முதலாக்கத்தின் தேவைப் பகுதிமீது நம் பார்வையைச் செலுத்துவோம். ஏழை நாடுகளில் முதலீட்டுக்கான தூண்டுதல் குறைவாக இருக்கிறது. அது குறைவாக இருப்பதற்குக் காரணம், மக்களின் வாங்கும் திறன் (buying power) குறைவாக இருப்பது எனலாம். வாங்கும் திறன் குறைவாக இருப்பது எதனால்? மக்களின் மெய் வருமானம் குறைவாக இருப்பதனால்! ஆமாம்! ஆனால், அது ஏன் குறைவாக இருக்கிறது? உற்பத்தியின் அளவு குறைந்திருப்பதால்! உற்பத்தியின் அளவு குறைந்திருப்பதற்குக் காரணம் உற்பத்தித்துறையில் பயன்படுத்தப்பட்டுள்ள மூலதனம் குறைவாக இருப்பது! மூலதனக் குறைவோ, ஓரளவுக்காவது முதலீட்டுத் தூண்டுதலின் குறைவால்தான் ஏற்படுகிறது. இவ்வாறாக, இந்த வளையமும் முழுமை அடைந்திருக்கிறது.

உற்பத்திக் குறைவின் விளைவாக உருவாகிற மெய்வருமானக் குறைவானது இந்த இரு வளையங்களிலும் காணப்படுகிற ஒரு பொது இயல்பாகும். பெரும்பாலும் அளிப்புப் பகுதியில் காணப்படுகிற இடையூறுகள்தாம் அனைவரின் கவனத்தையும் ஈர்த்துவிடுகின்றன. அந்த இடையூறுகள் தீவிரமானவை என்பதும், தெள்ளத் தெளிவாகத் தெரிபவை என்பதும் உண்மையே. அந்த இடையூறுகளின் சில தன்மைகள் இந் நூலின் பிற்பகுதியில் விரிவாக ஆராயப்படும். தேவைப் பகுதியில் உள்ள இடையூறுகள் அளிப்புப் பகுதியிலுள்ள இடையூறுகளைப்போல அவ்வளவு தீவிரமானவை அல்ல; அவற்றை அகற்றுவதும் அவ்வளவு கடினமான செயலன்று. ஆனால், அதே நேரத்தில், அந்த இடையூறுகளும், அளிப்புப் பகுதி இடையூறுகளைப்போல, அவற்றை அறிந்தவர்களுக்குத் தெள்ளத் தெளிவாக விளங்குபவையே என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும்.

ஒரு நாட்டின் வறுமை நிலை மூலதனப் பற்றுக்குறை ஒன்றினால்மட்டுமே உருவாவதன்று என்னும் உண்மையை இச் சந்தர்ப்பத்தில் நாம் நினைவில் வைத்துக்கொள்வது நலம். ஒரு நாடு வறுமையால் வாடுவதற்கு, முதலாக்கத்திற்கு இடையூறு

களாக விளங்கும் நச்சு வளையங்களைத் தவிர வேறு பல காரணங்களும் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, கனிவளங்களின் பற்றுக்குறை, போதிய அளவு நீர் வசதியின்மை, நிலத்தின் வளமற்ற தன்மை முதலிய காரணங்களாலும் ஒரு நாடு வறிய நிலையை எய்தலாம். இன்றைய உலகத்தில் உள்ள ஏழை நாடுகள் சிலவற்றின் வறுமை, ஓரளவுக்கு இத்தகைய காரணங்களால்தான் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், அதே நேரத்தில் அந்த நாடுகள் அத்தனையிலும் வறுமை நிலை இருப்பதற்கு ஓரளவுக்காவது காரணமாக இருப்பது, போதிய அளவு முதற் பொருள் இல்லாமையே என்பதையும் மறுப்பதற்கில்லை. முதற் பொருளின் இப் பற்றுக்குறையானது முதலீட்டுக்கான தூண்டுதல் குறைந்த அளவினதாக இருப்பதாலும், சேமிப்பதற்கான ஆற்றல் குறைவாக இருப்பதாலும் ஏற்படுகிறது.

## முதலீட்டுத் தூண்டுதல்களின் பலவீனம்

வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கலின் தேவைப் பகுதியில் இடையூறுகள் இருக்கக்கூடும் என்கின்ற கூற்றைச் செவிமடுக்கும்போது முதலில் வியப்பாக இருக்கக்கூடும். மூலதனத்திற்கான தேவையில்கூடவா பற்றுக்குறை இருக்க முடியும்? பின்தங்கிய நாடுகளின் இயற்கை வளங்களைத் தக்க முறையில் பயன்படுத்திக்கொள்வதற்கும், அவற்றின் தொழிலாளர்களைத் திறன்மிக்க வகையில் கையாள்வதற்கும், அவற்றிற்கு இன்றியமையாத முறையில் மூலதனம் தேவைப்படுகிறது என்னும் உண்மை, 'பின்தங்கிய நாடுகள்' என்னும் பெயருக்கு உள்ள இலக்கணத்திலேயே பொதிந்திருக்கவில்லையா? அந் நாடுகளில் மூலதனத்திற்கு உள்ள தேவை மாபெரும் அளவினது அல்லவா? இந்தக் கேள்விகள்தாம் எவருடைய உள்ளத்திலும் தோன்றக்கூடும். உண்மைதான்; பின்தங்கிய நாடுகளில் மூலதனத்திற்கான தேவை மிகப் பெரிய அளவில்தான் இருக்கிறது. நாடு முழுவதன் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது இது உண்மைதான் என்ற போதிலும், உற்பத்தித்துறையில் முதல்மய முறைகளைக் (capitalistic methods of production) கையாள்வதற்கு அந் நாடுகளின் தனியார்துறையினருக்கு இருக்கக்கூடிய தூண்டுதல் குறைவாகவே இருக்கிறது. ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சி தொடக்க நிலைகளில் இருக்கும்போது அந் நாட்டின் உள்நாட்டு அங்காடி (Domestic Market) குறைந்த அளவினதாக இருப்பதே இத் தூண்டுதல் குறைவுக்குக் காரணமாகும்.

**முதலீட்டுக்கான தூண்டுதலின் அளவு அங்காடியின் அளவைப் பொறுத்ததே :** நடைமுறையில் இந்தக் கருத்துரை, 'உழைப் பின் பகுப்பானது (division of labour) அங்காடியின் அளவைப் பொறுத்ததே' என்று ஆடம் ஸ்மித் (Adam Smith) அவர்களால் கூறப்பட்ட அந்தப் புகழ்மிக்க கருத்துரையின் ஒரு தற்கால வடிவமேயாகும்.[1] இந்தக் கருத்து எளிதில் விளங்கும் தன்மை யதுமட்டுமன்று; வாணிப உலகத்திற்கு நீண்டகாலமாகத் தெரிந் துள்ள ஒன்றும் ஆகும். ஏழை நாடுகளின் உள்நாட்டு அங்காடிக் காகப் பொருள்களையும் ஊழியங்களையும் (services) உற்பத்தி செய்யும் பணியில் முதற் பொருள்களைப் பயன்படுத்துவது, அந்த அங்காடியின் அளவு குறைவாக இருப்பதால்—அதாவது, உள் நாட்டு வாங்கும் திறன் குறைவாக இருப்பதால் தடைப்படு கிறது என்னும் உண்மை எளிதில் தெரிந்துகொள்ளக்கூடிய தாகும். வாங்கும் திறன் குறைவாக இருக்கிறது என்று நாம் குறிப்பிடும்போது, பணத்தின் வாயிலாக மதிப்பிடப்படும் வாங்கும் திறனை அன்று—உண்மையான வாங்கும் திறனையே குறிப்பிடுகிறோம். ஏழை நாடுகளில் உள்ள குறைபாடு, பண வழித் தேவையின் (monetary demand) பற்றாக்குறையாக மட்டும் இருந்தால், பணப்பெருக்கத்தின் (monetary expansion) வாயிலாக அக் குறைபாட்டை எளிதில் போக்கிவிடமுடியும். ஆனால், அந்தக் குறைபாடு அத்துணை எளிதில் அகற்றப்படக்கூடிய தன்று. பணப்பெருக்கம் ஒன்றைமட்டுமே அந்தக் குறை பாட்டை நீக்குவதற்குரிய கருவியாகக் கையாள்வோமானால், அந்தக் குறைபாடு அகலாது என்பதுமட்டுமன்று; பண்டங் களின் விலைகளெல்லாம் உயரத் தொடங்கிவிடும்.

மூலதனத்தைப் பயன்படுத்துவதற்கான தூண்டுதலானது அங்காடியின் அளவைச் சார்ந்திருக்கிறது என்னும் இந்த எளிய உண்மை, நடைமுறை உலகத்தில் காணப்படுகிற அங் காடிப் பொருளியலுக்கு (market economy) மட்டுமல்லாமல், தொடக்கநிலைப் பாடநூல்களிலிருந்து நம் முன்னோர்களுக்கு நன்கு அறிமுகமாகியுள்ள ராபின்சன் குருசோவைப்போல (Robinson Crusoe) ஒரே மனிதர் தன்னந்தனியாக வாழ்கிற பொருளியல் அமைப்புக்கும் பொருந்தக்கூடியதுதான். ராபின்சன் குருசோ வாழ்ந்துவந்த தீவில் ஒரு நாள் ஒரு மரப்பெட்டி கடல் அலை களால் ஒதுக்கப்பட்டுக் கரை சேர்ந்தது என்றும், அந்தப் பெட்டி யைக் கண்டெடுத்த குருசோ அதில் இருநூறு அல்லது முந்நூறு ஆணிகள் வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தான் என்றும், சில மரங்களில் அந்த ஆணிகளைப் பதித்து அவற்றில் தன் மீன் வலைகளையும், துணிமணிகள் போன்ற பொருள்களையும் மாட்டி

வைக்க விரும்பினுன் என்றும் வைத்துக்கொள்வோம். இத்தகைய சூழ்நிலையில் அவன் ஒரு பக்கமாக உட்கார்ந்து இந்த ஆணிகளை மரங்களில் அடிப்பதற்காக ஓர் எளிய சுத்தியை முதலில் செய்துகொள்வதுதான் நல்ல ஏற்பாடு. அப்போதுதான் ஆணிகளையெல்லாம் மரங்களில் பதியவைக்கும் வேலையை அவன் விரைவில் முடிக்க முடியும். அப்படிச் செய்தால்தான் அந்த வேலையை முடிப்பதற்காக அவன் செலவிட வேண்டிய உழைப்பின் அளவும் குறையும். ஆனுல், அடிக்கப்படவேண்டிய ஆணிகள் இருநூறு அல்லது முந்நூருக இல்லாமல் இரண்டு அல்லது மூன்ருக மட்டுமே இருக்குமாளுல், அவற்றை அடிப்பதற்காக ஒரு சுத்தியைச் செய்வது பயனுள்ள பணியாக இருக்க முடியாது. அத்தகைய நிலையில் அவன் அந்த இரண்டு அல்லது மூன்று ஆணிகளை அடிப்பதற்குப் பொருத்தமான அளவுள்ள ஒரு கல்லைத்தான் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்திக்கொள்வான். ஆணிகளை அடிப்பதற்கு ஒரு சுத்தியைப் பயன்படுத்தாமல் ஒரு கல்லைப் பயன்படுத்தும் முறை, வசதிக் குறைவான முறைதான்; அந்த முறையால் ஆணியை அடிப்பதற்கு மிகுதியான நேரம் பிடிக்கும் என்பதும் உண்மைதான். ஆனுல், இரண்டு அல்லது மூன்று ஆணிகளை அடிப்பதற்காகமட்டும் சுத்தியின் வடிவத்தில் அமைந்த ஒரு முதற்பொருளை ஆக்குவது சிக்கனமற்ற செயலே அல்லவா?

குறிப்பிட்ட தொழில் துணிவோர் ஒரு குறிப்பிட்ட தொழிலில் நவீன முதற் பொருள்களை இலாபமிக்க முறையில் பயன்படுத்துவதை, நாட்டில் உள்ள அங்காடியின் சிறிய அளவானது தடுத்துவிடுகிறது அல்லது குறைத்துவிடுகிறது. இந்த உண்மையை விளக்கக்கூடிய பல எடுத்துக்காட்டுகளை நடைமுறை உலகத்தின் அங்காடிப் பொருளியலில் நாம் எளிதில் காணமுடியும். எடுத்துக்காட்டாக, காலணிகளை (செருப்புகளை) வாங்கி அணிந்து கொள்வதற்குக்கூட இயலாத அளவுக்கு ஏழைகளாக உள்ளவர்களே மிகப் பெரும்பாலோராக உள்ள ஒரு நாட்டில், நவீன முறையில் அமைந்த ஒரு பெரிய காலணித் தொழிற்சாலையை நிறுவுவது, இலாபம் அளிக்கத்தக்க ஓர் ஏற்பாடாக இருக்க முடியாது. ஏனென்ருல், அத்தகைய நாட்டில் காலணிகளுக்கான அங்காடி மிக மிகச் சிறிய அளவினதாகவே இருக்கும். ஐக்கிய அமெரிக்க நாட்டில் மிகப் பரவலாகப் பயன்படுத்தப்படும் பல பண்டங்கள், குறைந்த வருமானம் படைத்த ஒரு நாட்டில் மிகக் குறைந்த அளவிலேயே கையாளப்படும். அத்தகைய நிலையில் அத்தகைய நாட்டில் அந்தப் பண்டங்களை உற்பத்திசெய்யும் ஒரு பொறியானது, அந்தப் பண்டங்கள்

அந்த நாட்டில் ஆண்டு முழுவதிலும் பயன்படுத்தப்படும் அளவை ஒருசில நாட்களில் அல்லது ஒருசில வாரங்களிலேயே உற்பத்தி செய்துவிட முடியும். அப்படிச் செய்துவிடுவதால் அந்தப் பொறியானது ஓர் ஆண்டில் உள்ள ஏனைய நாட்கள் அத்தனையிலும் வேலையில்லாமல்தான் இருக்கவேண்டியிருக்கும். எடுத்துக்காட்டாக, சிலி (Chile) நாட்டில் அந்த நாட்டிற்கு ஓர் ஆண்டு முழுவதற்கும் தேவையான ஒரு வகை இரும்புக் கருவிகளை எந்தத் தொழில்மய நாட்டிலும் (industrial country) இருக்கக்கூடிய, தக்க அளவுள்ள ஒரு பொறியானது மூன்றே மணி நேரத்தில் ஆக்கித்தர முடியும் என்பது கண்டறியப்பட்டிருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில் இத்தகைய நாடுகளில் அத்தகைய பொறிகளைப் பயன்படுத்துவதற்கான தூண்டுதல் எவ்வாறு இருக்க முடியும்? சில லத்தீன் அமெரிக்க நாடுகளில் (Latin American Countries) தங்கள் கிளைத் தொழிற்சாலைகளை நிறுவிய சில அயல் நாட்டுத் தொழில் நிறுவனங்கள், சிறிது காலத்திற்குப் பிறகு அவற்றை மூடிவிட்டன. அட்படி மூடியதற்குக் காரணம், அவற்றைத் தொடர்ந்து நடத்துவதற்குத் தேவையான அளவுக்கு அந்த நாடுகளின் அங்காடி பெரியதாக இல்லாததுதான்.[2]

இந்த எடுத்துக்காட்டுகள், இருக்கின்ற இடர்ப்பாட்டை மிகைப்படுத்திக் காட்டுவனவாக இருக்கட்டும். ஆனால், ஓரளவுக்காவது இடர்ப்பாடு உண்மையாகவே இருக்கிறது என்று நான் கருதுகிறேன். ஆக்கப்படும் பண்டத்தின் ஒவ்வோர் அலகுக்கும் (unit) உள்ள முதற்பொருளின் சராசரி அளவு கூடுதலாக இருக்கும் நிலையில் உற்பத்தி முறை அமைந்திருந்தால், எப்போதும் என்று இல்லாவிட்டாலும் பெரும்பாலும் உற்பத்தியானது பெரிய அளவில் நடைபெறுகிறது என்றுதான் பொருள். அதாவது, ஒவ்வொரு தொழிற்சாலையிலும் ஆக்கப்படும் பண்டத்தின் அளவு பெரிய அளவு என்றுதான் பொருள். இந்த உண்மையைத்தான் நாம் தற்போதைய கருத்தாய்வில் நினைவுகூர்தல் வேண்டும். ஆனால், அதே சமயத்தில் ஒரு குறிப்பிட்ட உற்பத்தித்துறையில் முன்னரெல்லாம் பயன்படுத்தப்பட்டுவந்த அதே அளவு முதற்பொருள்கள் பயன்படுத்தப்பட்டால்கூட, அங்காடியின் அளவு குறைவாக இருந்தால் உற்பத்தியின் அளவும் குறைவாகத்தான் இருக்கும் என்னும் உண்மையையும் நாம் மறந்துவிடக்கூடாது.

ஏதேனும் ஒரு பண்டத்தை அல்லது ஊழியத்தை உற்பத்தி செய்வதற்கு முதற் பொருள்களைப் பயன்படுத்துவதற்கான பொருளியல் தூண்டுதல், ஓரளவுக்காவது, அந்த முதற்பொருள்களின் வாயிலாகச் செய்யப்படவேண்டிய வேலையின் அளவைச்

சார்ந்திருக்கிறது. தனிப்பட்ட ஒரு தொழில்துணிவோனைப் பொறுத்தவரையில், அவனால் உற்பத்தி செய்யப்படும் பண்டத்தின் அளவு, அவனுக்குத் தற்போது கிடைக்கக்கூடிய அங்காடியின் அளவையே பொறுத்திருக்கிறது. தற்போது உள்ள நுகர்வோரின் தேவையில் ஒரு பகுதியைத் தன் பக்கம் திருப்பிவிட முடியும் என்று அவன் நம்பிக்கொண்டிருக்கலாம். ஆனால், மெய் வருமானமானது ஏறத்தாழப் பிழைப்பின் அளவினதாக (subsistence level) இருக்கும் நாடுகளில் அவ்வாறு திருப்பிவிடுவதற்கான வாய்ப்புப் பெரும்பாலும் இராது என்றே கூறிவிடலாம். எனவே, குறைந்த வருமானம் படைத்த ஒரு நாட்டில் உள்நாட்டு அங்காடியின் அளவு சுருங்கியதாக இருக்கும் நிலையானது, அந்த அங்காடிக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தில் (firm) அல்லது தொழிலில் (industry) முதற்பொருள்களைப் பயன்படுத்துவதைத் தடுக்கும் ஒரு முட்டுக்கட்டையாக அமைந்துவிடுகிறது என்பது தெளிவு. இந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, உள்நாட்டு அங்காடியின் சிறிய அளவானது மொத்தத்தில் பொருளியல் வளர்ச்சியையே தடுக்கும் முட்டுக்கட்டையாக இருக்கிறது.

இந்த முட்டுக்கட்டையை அகற்றுவது எப்படி? அங்காடியின் அளவை உருவாக்குவது எது? என்றெல்லாம் சிந்தித்துப் பார்க்கும்போது, பணப்பெருக்கம்தான் முட்டுக்கட்டையை அகற்றுவதற்கான வழி என்று சிலர் கருதக்கூடும். செறிவாகவும் விரிவாகவும் செய்யப்படுகிற விற்பனை முறைகளும் விளம்பர முறைகளுமே தகுந்த பரிகாரம் என்று வேறு சிலர் எண்ணக்கூடும். ஒரு நாட்டில் உள்ள அங்காடியின் அளவை முடிவு செய்வது அந்த நாட்டு மக்கள்தொகையின் அளவே என்று சிலர் கருதுகின்றனர். வேறு சிலரோ, நாட்டினுடைய பரப்பளவைப் பொறுத்தே அங்காடியின் அளவு அமையும் என்று தெரிவிக்கின்றனர். ஆனால், இந்த நால்வகைக் கருத்துகளுமே நாம் சுட்டிக்காட்டியுள்ள சிக்கலுடன் தொடர்பில்லாதவை; அல்லது இரண்டாந்தர முதன்மைமட்டுமே உடையவை. ஒன்றிற்கு ஒன்று அண்மையில் உள்ள சிறிய நாடுகள், தங்களுக்கிடையே நடைபெறும் வாணிபத்தின்மீது தாங்கள் விதித்துள்ள தடைகளை நீக்கிவிடுவதுதான் மேற்படி சிக்கலைத் தீர்ப்பதற்குரிய சிறந்த பரிகாரம் என்பது மிகப் பலரால் ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு கருத்தாக இருக்கிறது, ஆனால், அடிப்படையாக உள்ள இடர்ப்பாடு ஒரு நாட்டின் அளவு சிறியதாக இருப்பது அன்று. அந்த இடர்ப்பாடு, சீனா, இந்தியா முதலிய மிகப் பெரிய நாடுகளிலும் இருக்கக்கூடும்.

அங்காடியின் அளவைத் தீர்மானிக்கும் தலைசிறந்த காரணி (factor) உற்பத்தியின் அளவே ஆகும். உற்பத்தியின் அளவானது அங்காடியின் அளவைமட்டுமன்று தன்மையையும் தீர்மானிக்கிறது என்னும் உண்மை, குறிப்பிட்ட சிக்கலின் பலதிற இயல்புகளையும் ஒருங்கே காணவல்ல எவருக்கும் தெற்றென விளங்கும். நாட்டின் பொருளியல் முழுவதையும் கருத்தில் வைத்துப் பார்க்கும்போது, உற்பத்தி செய்யப்பட்டு நுகரப்படுகிற பொருள்கள், மற்றும் ஊழியங்களின் அளவானது ஒரே மட்டத்தில் மாறாமல் நிற்பது அன்று என்பது நன்கு புலனாகும். அந்த அளவானது மக்கள்தொகையின் எண்ணிக்கை மாறாமல் இருக்கும்போதுகூட, மக்களின் உற்பத்தித் திறனைப் பொறுத்து மாறிக்கொண்டேயிருக்கும் இயல்புடையதாகும். பண வருமானங்கள் மாறாமல் இருந்து விலைகள் மட்டும் குறைக்கப்பட முடியுமானால், அங்காடியின் அளவை விரிவுபடுத்தமுடியும் என்று சில சமயங்களில் சொல்லப்படுகிறது. அப்படி விரிவுபடுத்தமுடியும் என்பது உண்மைதான். ஆனால், அது அப்படி நடைபெறவேண்டுமானால், உற்பத்தி, மெய் வருமானம் ஆகியவற்றின் அளவு பெருகியாக வேண்டும். விலைகள் மாறாமலிருந்து மக்களின் பண வருமானங்கள் உயர்த்தப்பட முடியுமானாலும் அங்காடியின் அளவை விரிவு படுத்தமுடியும். ஆனால், இவ்வாறு நிகழவேண்டுமானாலும் உற்பத்தி ஆற்றல், மெய் வருமானம் ஆகிய இரண்டும் பெருகியாக வேண்டும். இப்படியெல்லாம் கூறும்போது நம் கருத்துகள் சேயின் விதி (Say's Law) என்னும் தொன்மைப் பொருளியலுக்குப் (Classical Economics) பொருத்தமாக இருப்பதைக் காணலாம். பின்தங்கிய நாடுகளில், பொதுவாக மிகைச் சேமிப்புகளால் ஏற்படும் பண வாட்ட இடைவெளி (deflationary gap) இருப்பதில்லை. உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களுக்கு வேண்டிய தேவையை (demand) உற்பத்தியே உருவாக்கிக்கொள்கிறது. அதாவது, அங்காடியின் அளவு, உற்பத்தியின் அளவைப் பொறுத்திருக்கிறது. இறுதி முடிவாகப் பார்த்தால், எல்லாத் துறைகளிலும் உற்பத்தியின் அளவைப் பெருக்குவதன் வாயிலாகத்தான் அங்காடியின் அளவைப் பெருக்கமுடியும் என்பது தெளிவாகத் தெரிகிறது. உற்பத்தித் திறன் பெருகினால்தான் வாங்கும் திறன் பெருகும்.

ஒவ்வொரு மனித-மணிக்கும் (man-hour) கிடைக்கும் உற்பத்தியின் அளவு முழு அளவுக்கு இல்லாவிட்டாலும் பெரும்பாலான அளவுக்கு உற்பத்தித்துறையில் பயன்படுத்தப்படுகிற மூலதனத்தின் அளவையே பொறுத்திருக்கிறது. வேறு வகை

யாகச் சொல்வதானுல், பொறிகள் முதலிய முதற் பொருள்கள் பயன்படுத்தப்படும் அளவையே பொறுத்திருக்கிறது. தொழில் நுணுக்கச் சொற்களில் கூறுவதானுல், உற்பத்தியின் அளவானது மூலதனச் செறிவின் (capital intensity) ஒரு பணியே (function) ஆகும். ஆனுல், ஒரு தனிப்பட்ட தொழில் துணிவோனைப் பொறுத்தவரையில, அங்காடியின் அளவு சிறியதாக இருப்பதால், முதற் பொருளைப் பயன்படுத்தக்கூடிய தன்மை தடுக்கப்பட்டு விடுகிறது.

இந்த வளையத்திலிருந்து விடுபடுவதற்குரிய வழி யாது? அங்காடியை விரிவுபடுத்துவது எங்ஙனம்? பொருளியலில் பின் தங்கிய நாடுகளைப் பொறுத்தவரை சேயின் விதியானது (Say's Law) பணவாட்ட இடைவெளி இல்லை என்னும் பொருளில் பொருத்தமாக இருந்தபோதிலும், தேவையான முதற் பொருள் களுடன் புதிதாகத் தொடங்கப்பட்ட ஒரு தொழிலின் பொருள் உற்பத்தியானது அதற்கு வேண்டிய தேவையை (demand) அறவே உருவாக்கிக்கொள்ளும் என்னும் பொருளில் ஒருபோதும் பொருத்தமாக இருப்பதில்லை. மக்களுடைய விருப்பங்கள் பல்வேறு வகையினவாக இருப்பதால், ஒரு புதிய தொழிலில் பணியாற்று கின்ற மக்கள், அந்தத் தொழிலின் வாயிலாக அவர்கள் உற்பத்தி செய்கின்ற பண்டங்களை வாங்கிப் பயன்படுத்துவதற்கே தங்களுடைய வருமானம் முழுவதையும் செலவிட விரும்பமாட் டார்கள்.[3] எடுத்துக்காட்டாக, ஒரு காலணித் தொழில் தொடங் கப்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். அத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் காலணிகளை மட்டுமே வைத்துக்கொண்டு உயிர்வாழ்ந்துவிட முடியாது. அவர்களுக்குத் தேவைப்படுகிற ஏனைய பல பண்டங்களைப் பெறவேண்டுமானுல், அவர்கள் தாங்கள் உற்பத்தி செய்கின்ற காலணிகளைப் பண்டமாற்றுச் செய்தாக வேண்டும். நாட்டுப் பொருளியலில் பிற பகுதிகளில் உற்பத் தியைப் பெருக்குவதற்கும், அப்படிப் பெருக்குவதன் வாயிலாக வாங்கும் திறனை மிகுவிப்பதற்கும் தேவையான எத்தகைய நட வடிக்கையும் எடுக்கப்படாமலிருந்தால், புதிதாகத் தொடங்கப் பட்ட காலணித் தொழிலின் பண்டங்களுக்குப் போதிய அளவு அங்காடி இருக்க முடியாது. ஏனைய தொழில்களில் ஈடுபட்டுள்ள மக்கள் போதிய அளவு உணவு, உடை, உறைவிடம் ஆகியவற் றைப் பெறுமல் இருப்பார்களானுல், ஆண்டுதோறும் ஒரு ஜதை காலணிகளை வாங்குவதற்காக அவர்களுக்குத் தேவையான ஏனைய பல பண்டங்களை அவர்கள் தியாகம் செய்ய விரும்பமாட்டார்கள். வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டங்கள் மிகக் குறை வான அளவிலேயே அவர்களுக்குக் கிடைக்கும் நிலையில் அவர்கள்

அவற்றை மேலும் குறைத்துக்கொள்வது இயலாத செயலே. ஆண்டுதோறும் ஒரு ஜதை புதிய காலணிகளை வாங்குவதற்காக அவர்கள் தற்போது துய்த்துவருகிற பண்டங்களில் சிலவற்றைத் தியாகம் செய்ய அவர்கள் ஆயத்தமாக இருப்பார்களானால் - தற்போது அவர்கள் அப்படி இல்லை - ஒருகால் அப்படி இருப்பார்களானால், அப்படி அவர்களால் தியாகம் செய்யப்பட்ட பண்டங்கள், காலணித் தொழிலில் பணியாற்றுவோருக்குக் கிடைக்கும். அப்படிக் கிடைப்பதன்மூலம் அவர்களுடைய நுகர்வுத் தேவைகளில் உள்ள பற்றுக்குறையை அவர்கள் நிறை செய்ய முடியும். ஆனால், நடைமுறை உலகத்தில் பிற தொழில்களில் உள்ளவர்கள் நாம் மேலே குறிப்பிட்ட தியாகத்தைச் செய்ய ஆயத்தமாக இல்லாததால், புதிய காலணித் தொழில் தோல்வியிலேயே முடியும்.

இத்தகைய இடர்ப்பாடானது முதற்பொருள்களின் தொழில் நுணுக்க வடிவங்களில் (technical forms) ஏற்படுகிற மாறுதல்களால் பெருகுகிறது என்றபோதிலும், அந்த மாறுதல்களால் மட்டுமே உருவாகிறது என்று கூறிவிட முடியாது. மெய் வருமான அளவுகள் குறைந்த மட்டத்தில் இருக்கும்போது தவிர்க்க முடியாமல் ஏற்படுகிற தேவைகளின் நெகிழ்ச்சியின்மையே (inelasticity of demands) இந்த இடர்ப்பாட்டிற்குரிய தலைசிறந்த காரணமாகும். இந்த முறையில்தான் வறுமையானது முதலீட்டுக்கான தூண்டுதலைத் தடுத்து, ஒரு குறிப்பிட்ட உற்பத்தித் துறையில் முதற்பொருள் பயன்படுத்தப்படுவதைக் குறைக்கிறது. உற்பத்தித் துறையில் மூலதனச் செறிவைக் கூடுதலாக்குவதன் மூலம் உற்பத்தியின் அளவைக் கூட்டி, அப்படிச் செய்வதன் வாயிலாக அங்காடியின் அளவைப் பெருக்குவதற்கு உள்ள வாய்ப்பு, தொடக்க நிலையில் அங்காடியின் அளவு சிறியதாக இருப்பதால் தடுக்கப்பட்டுவிடுகிறது.

முன்னேறிய நாடுகளில் ஆக்கப்படும் முதற்பொருள்கள், அந்நாடுகளில் உள்ள மிக விரிவான உள்நாட்டு அங்காடிகளுக்குப் பொருத்தமான தன்மையில் அமைந்தவையே தவிர, ஏழை நாடுகளின் நிலைமைகளுக்குப் பொருத்தமானவை அல்ல என்னும் உண்மை மட்டுமே, தொழில் நுணுக்க மாறுதல்கள்பற்றிய சிக்கலுக்குரிய காரணம் ஆகாது. ஏழை நாடுகளுக்கு ஏற்ற வகையில் முதற்பொருள்கள் மாற்றி அமைக்கப்பட்டால்கூட, தொழில் நுணுக்க மாறுதல்கள் ஏற்படத்தான் செய்யும். எது எப்படி இருந்தாலும், முதற்பொருள்களின் அளவை விரிவுபடுத்தும்போது, அந்த விரிவானது பெரிய அலகுகளின் (units) வாயி

லாகத்தான் ஏற்பட முடியும். குறிப்பாகவும் சிறப்பாகவும் இருப்பு வண்டித் தொடர்கள், மின்சார நிலையங்கள், தண்ணீர்த் தொழிற்சாலைகள் முதலிய அடிப்படையான முதற்பொருள் வசதிகளில் முதலீடு செய்யும்போது மாபெரும் அலகுகளின் வாயிலாக முதலீடு செய்வது இயல்பாக இருக்கிறது.

இவ்வாறாகத் தொழில்நுணுக்க மாறுதல்கள் ஏற்படும்போது உற்பத்தியின் அளவில் மாபெரும் உயர்வுகள் ஏற்படுவது இயற்கையே என்றபோதிலும், குறைந்த வருமானமுடைய ஒரு நாட்டில் இருக்கின்ற தேவையின் (demand) அளவானது சுருங்கியதாகவும், நெகிழ்ச்சி அற்றதாகவும் இருக்கின்ற காரணத்தால், ஒரு குறிப்பிட்ட வாணிபத் துறையைப் பொறுத்த அளவில் அத்தகைய உயர்வுகள் ஏற்படுவது ஆபத்தானது; சில சமயங்களில் வெற்றிக்கான வாய்ப்பையே பெற்றிராததுகூட. இந்தக் காரணங்களால், கடந்த காலத்தில் குறிப்பிட்ட தொழில்துறைகளில் உற்பத்தியில் மாபெரும் உயர்வுகளை ஏற்படுத்தும் முயற்சிகள் படுதோல்வியில் முடிந்திருக்குமானால், மீண்டும் அத்தகைய முதலீடுகள் செய்வதுபற்றித் தனியார் தொழில்துணிவுகள் ஆர்வம் காட்டமாட்டா என்பது இயற்கையே அல்லவா? அத்தகைய ஆர்வம் கிளர்ந்து எழாத நிலையில் மூலதனத்திற்கான தேவை குறைவாக இருப்பதும் இயல்பே அன்றோ?[4]

இந்த இடர்ப்பாடு வறுமை என்னும் நச்சு வளையத்தின் பல்வேறு இயல்புகளில் ஒன்றாகும். இது பின்தங்கிய ஒரு பொருளாதாரத்தைத் தேக்க நிலையிலேயே (stationary condition) நிறுத்தி வைக்கக்கூடிய - அதாவது, வளர்ச்சி குறைந்த ஒத்த நிலையிலேயே (underdevelopment equilibrium) நிறுத்திவைக்கக்கூடிய பல திறச் சக்திகளின் ஒரு தொகுப்பு என்பது தெளிவாக விளங்குகிறது. இந்த வளர்ச்சி குறைந்த ஒத்த நிலையானது, தொழில் வளர்ச்சிமிக்க - முன்னேற்றமடைந்த - நாடுகளில் ஏற்படக்கூடும் என்று கீன்ஸ் (Keynes) அவர்களால் எழில்மிகு முறையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ள வேலைக் குறைவு ஒத்த நிலையை (under employment equilibrium) ஓரளவுக்கு ஒத்திருக்கிறது. பொருளியல் முன்னேற்றம் என்பது, தானாகத் தோன்றுவதும் அன்று; தானாக இயங்குவதும் அன்று. அதற்கு மாறாக, பொருளியல் அமைப்பில், அந்த அமைப்பை மேலும் முன்னேறவிடாமல் ஒரு குறிப்பிட்ட மட்டத்திலேயே சிறைப்படுத்திவிடுகிற சில சக்திகள் தாம், தாமாகவே இயங்கும் தன்மையுடன் அமைந்திருக்கின்றன.

ஆனால் ஒன்று: நாம் இதுவரை செய்துள்ள கருத்தாய்வு முழுவதும் முதலாக்கச் சிக்கலின் ஒரு பகுதியை மட்டுமே

சுட்டிக் காட்டுகிறது என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. தேக்கநிலை முறையானது (stationary system) ஒரு நச்சுவளையமாக அமைந்திருக்கிறது என்பது உண்மைதான்; மறுக்கமுடியாது. ஆனால், நல்ல வேளையாக அந்த வளையமானது முறிக்கப்படக் கூடியதாக அமைந்திருக்கிறது. ஏதாவது ஒரு கட்டத்தில் அந்த வளையமானது ஒரு முறை முறிக்கப்பட்டுவிட்டால், அப்படி முறிக்கப்படுவதால் ஏற்படுகிற முன்னேற்றமானது, அந்த வளையம் ஒரு வளையமாக இருக்கும் காரணத்தாலேயே மேலும் மேலும் பெருகிக்கொண்டே யிருக்கும். அத்தகைய சூழ்நிலையில் வறுமை என்னும் வளையத்தை நச்சு வளையம் என்னும் பெயர் சூட்டி அழைப்பதற்குக்கூட நாம் தயங்கவேண்டியிருக்கும். ஏனென்றால், அப்போது அது நலன் தரும் வளையமாக மாறிவிடக் கூடும்.

## வளர்ச்சிபற்றிய கோட்பாடும் ஒத்தநிலை வளர்ச்சியும்

நாம் இதுவரை குறிப்பிட்டுவந்த முட்டுக்கட்டையை உடைத்தெறிவது எப்படி என்பது ஒரு முதன்மையான கேள்வி. வளர்ச்சி குறைந்த நாடுகள், வளர்ச்சிக் குறைவு ஒத்த நிலையை மாற்றவே முடியாத விதியின் விளைவு என்று எண்ணி ஏற்றுக்கொள்ளக் கூடாது; ஏற்றுக்கொள்ளவும் மாட்டா. அது மட்டுமன்று, உலகத்தின் சில பகுதிகளில் உண்மையிலேயே பொருளியல் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அங்கெல்லாம் நாம் மேலே குறிப்பிட்ட நச்சு வளையம் எவ்வாறோ முறிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, தேக்க நிலை தொடர்ந்து இருப்பதுதான் இயற்கை என்று கருதுவதற்கு மாறாக, பொருளியல் வளர்ச்சியை ஏற்படுத்த முடியும் என்கிற கோட்பாட்டை ஏற்றுக்கொள்வதுதான் முறை. அந்தக் கோட்பாடானது, பின்தங்கிய நாடுகளைத் தேக்க நிலையிலிருந்து கைதூக்கிவிடுவதற்கு என்னென்ன சக்திகள் தேவைப்படுகின்றன என்பதை, அல்லது, கடந்த காலத்தில் அத்தகு பணியை ஆற்றுவதற்கு என்னென்ன சக்திகள் பயன் பட்டிருக்கின்றன என்பதை விளக்கிக் கூறும் தன்மை உடையதாக இருக்கவேண்டும். ஷூம்பீடர் (Shumpeter) இயற்றியுள்ள மாபெரும் நூலைப்பற்றிக் குறிப்பிடாமல் இந்தப் பொருள்பற்றி ஆராய்வது இயலாத செயலே என்பதை, இனி நாம் செய்ய இருக்கிற கருத்தாய்விலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

ஆனால், தற்போது நாம் சற்றுமுன் ஆராய்ந்த அங்காடிச் சிக்கலைப்பற்றி மீண்டும் கவனிப்போம். ஒரு குறிப்பிட்ட உற்பத்தித் துறையில் செய்யப்படக்கூடிய தனியார் முதலீட்டுக்

கான தூண்டுதலைப் பொறுத்த அளவில்தான் அங்காடியின் சிறிய அளவானது இடர்ப்பாட்டை ஏற்படுத்துகிறது. ஏராளமான தொழில்துறைகளில் ஒரே நேரத்தில் பரவலான முறையில் முதலீடு செய்யப்படுமானால், கொள்கை அளவிலாவது, இந்த இடர்ப்பாடு மறைந்துவிடுகிறது. முன்னர் நாம் சுட்டிக்காட்டிய முட்டுக்கட்டையை உடைத்தெறிவதற்கான ஒரு வழியாக இது அமைந்துவிடுகிறது. இந்த வழியைக் கையாள்வதன்மூலம் பல்வேறு தொழில்களுக்கான மொத்த அங்காடியானது விரிவடைகிறது. ஒன்றிற்கு ஒன்று துணையாக உள்ள பல்வேறு தொழில்களில், முன்னிலும் மிகுதியான - முன்னிலும் சிறந்த கருவிகளைக் கொண்டு - பண்டங்களை உற்பத்தி செய்யும் பணியில் ஈடுபடுகிற மக்கள், தங்களில் ஒவ்வொரு சாராரின் பண்டங்களையும் பிறரெல்லாம் வாங்கிப் பயன்படுத்தும் நிலையைப் பெற்றுவிடுகிறார்கள். மிக விரிவான அளவில் பயன்படுத்தப்படுகிற பண்டங்களை உற்பத்தி செய்கிற தொழில் துறைகளில் பெரும்பாலானவை, ஒன்றிற்கு ஒன்று அங்காடியாக விளங்குவதன் மூலமும், அப்படி விளங்கி ஒன்றை ஒன்று ஆதரிப்பதன் மூலமும், துணைபுரி தொழில்களாக (complementary industries) அமைந்துவிடுகின்றன. தெளிவாக ஆராய்ந்து பார்த்தால், இந்தத் துணைபுரி தன்மையானது மக்களின் விருப்பங்கள் மிகப் பலவாக இருக்கும் உண்மையிலிருந்தே கிளைத்து எழுகிறது என்பது நன்கு புலனாகும். ஒத்த நிலை உணவின் (balanced diet) தேவையிலிருந்தே ஒத்த நிலை வளர்ச்சியின் (balanced growth) தேவை உருவாகிறது.

ஒத்த நிலைக் கருத்தானது, சேயின் விதி என்று அழைக்கப்படுகிற தொன்மைப் பொருளியலின் அங்காடிகள்பற்றிய விதியிலேயே (Law of Markets) பொதிந்திருக்கிறது. அந்த விதியை ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) பின்வரும் சொற்களால் விவரித்துள்ளார்: 'உற்பத்தியில் ஏற்படுகிற ஒவ்வோர் உயர்வும், தனியார் நலன்களுக்கு ஏற்ற வீதாசாரத்தில் எல்லாவகைப் பண்டங்களுக்கு இடையேயும் எவ்வகைத் தப்புக் கணக்குமின்றி ஒதுக்கீடு செய்யப்படுமானால், அந்த உயர்வுக்கான தேவையை (demand) அதுவே எழுப்பிக்கொள்ளும்; அல்லது அந்த உயர்வே அதனுடைய தேவையாக அமைந்துவிடும்.'[5] ஒத்த நிலை வளர்ச்சி எவ்வளவு இன்றியமையாதது என்னும் உண்மையை, ஸ்டூவர்ட் மில்லின் இந்த வாக்கியங்கள் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கின்றன. காலணிகளின் உற்பத்தியில் மட்டும் உயர்வு ஏற்படுமானால், அத்தகைய உயர்விலிருந்து அக்காலணிகளுக்குரிய தேவை (demand) பிறந்துவிடாது. ஆனால்,

நுகர்வோரின் விருப்பங்களுக்கு ஏற்ற வீதாசாரத்தில் பல்வேறு வகைப்பட்ட நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியில் உயர்வு ஏற்படுமானல் அத்தகைய உயர்விலிருந்து அதற்குரிய தேவை தானுகவே பிறக்கும். தொழிலாளர்களின் எண்ணிக்கையும், தொழில் நுணுக்க முறைகளும், இயற்கை வளங்களும் ஒரு குறிப்பிட்ட அளவில் மாருமல் இருக்கும் நிலேயில் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமானல், அதற்குரிய ஒரே வழி, முன்னிலும் மிகுதியான அளவில் முதற்பொருள்களேப் பயன்படுத்துவதே என்னும் உண்மை, தானுகவே விளங்கும் ஒன்ருகும்.

ஒத்த நிலே வளர்ச்சியானது, அதன் அளவிலேயே விரும்பத்தக்க ஒன்ருக இருக்கலாம். ஆனல், தற்போதைய கருத்தாய்வில் நாம் அதைப்பற்றி ஆராய்வதெல்லாம் மூலதனத்திற்கான தேவையை அது எந்த அளவு பாதிக்கிறது என்பதைப் பொறுத்த மட்டும்தான். தற்போதைய கருத்தாய்வின் கண்ணேட்டத்திலிருந்து பார்த்தால், ஒத்த நிலே வளர்ச்சியானது அங்காடியின் அளவைப் பெருக்குவதற்கும், முதலீட்டுக்கான தூண்டுதல்களே உருவாக்குவதற்கும் உரிய இன்றியமையாத ஒரு கருவியாகக் காட்சியளிக்கிறது.

அப்படிக் காட்சியளிப்பது உண்மைதான். ஆனல், ஒத்த நிலே வளர்ச்சியைப் பெறுவது எப்படி? விலே உயர்வால் ஏற்படும் தூண்டுதல்கள், சிறு சிறு அளவிலேயே ஒத்த நிலே வளர்ச்சியை ஏற்படுத்த முடியும். அப்படி ஏற்படுத்துவதைக்கூடத் தொழில் நுணுக்க மாறுதல்கள் தடைப்படுத்தக்கூடும். அதுமட்டுமன்று; மக்கள் தொகை மிகுதியாக உள்ள நாடுகளில் சிறிய அளவில் வளர்ச்சி ஏற்படுவது போதிய நலனேத் தரமுடியாது. ஷும்பீடருடைய புகழ்மிக்க கோட்பாட்டின்படி, மேல்நாடுகளின் முதலாளித்துவ வளர்ச்சியைப் பொறுத்தவரை, தனியார் தொழில்துணிவோரின் நடவடிக்கைகளாலேயே விரைவான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. அத்தகைய நடவடிக்கைகளின் விளேவாகத் தொழில் முன்னேற்றம், அலே அலேயாக மீண்டும் மீண்டும் ஏற்பட்டபடி இருந்திருக்கிறது. முன்னேறிய தொழில்துறை நாடுகளில் உள்ள பொருளியல் புலவர்கள், ஷும்பீடருடைய 'பொருளியல் வளர்ச்சிக் கோட்பாடு' (Theory of Economic Development) என்னும் நூலேப் பொதுவாக வாணிபச் சுழல்கள் பற்றிய ஒரு கோட்பாடாகவே கருதுகிருர்கள். பொருளியல் வளர்ச்சியைத் தானுகவே ஏற்படுகிற ஒருவகை இயற்கை நிகழ்ச்சியாக எண்ணிக்கொள்ளும் போக்கும், அப்படி எண்ணுகிற காரணத்தால் பொருளியல் துறையில் குறுகிய காலத்தில் ஏற்படுகிற உயர்வுதாழ்வுகளேப்பற்றிமட்டுமே விரிவாக

ஆராய்கிற போக்கும், முன்னேறிய நாடுகளில் காட்சி தருகின்றன. ஆனுல், ஷும்பீடருடைய கோட்பாட்டின் உள்ளுறை பொருள் இஃதன்று. அந்தக் கோட்பாட்டைத் தக்க முறையில் புரிந்துகொண்டால், அந்தக் கோட்பாட்டின் பொருள், அதன் தலைப்பில் யாது கூறப்பட்டிருக்கிறதோ அதுவேதான் என்பது தெளிவாக விளங்கும். அதாவது, அக் கோட்பாடு வாணிபச் சுழல்களைப்பற்றிமட்டும் ஆராயும் தன்மையது அன்று; பொருளியல் வளர்ச்சி முழுவதையும் ஆராயும் இயல்புடையது ஆகும். பொருளியல் வளர்ச்சியின் வடிவம் எத்தகையது என்பதை எடுத்துக்காட்டும் முறையில்தான் வாணிபச் சுழல்கள் அக் கோட்பாட்டில் இடம் பெறுகின்றன.

நம்முடைய கருத்தாய்வுக்கு நாம் பயன்படுத்தவேண்டிய பொருத்தமான கருவி ஷும்பீடருடைய கோட்பாடுதான் என்பது என் கருத்து. ஆனுல், அந்தக் கோட்பாட்டின் அமைப்பு முறையில் சில மாறுதல்களைச் செய்துகொள்ளவேண்டியிருக்கும். புதியன புனையும் தொழில்துணிவோர்களே ஒரு நாட்டின் பொருளியல் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் பணியில் தலைசிறந்த பங்கு பெறுகின்றனர் என்பது இக்கோட்பாட்டின் அடிப்படை என்பதை அனைவரும் அறிவர். அத்தகைய தொழில்துணிவோரும் அவர்களைப் பின்பற்றும் இயல்புடையோரும் புத்தமைப்புகளை உருவாக்குவதாலும், புதிய பொருள்களைப் படைத்து அளிப்பதாலும், உற்பத்திக் காரணிகளின் புதிய தொகுப்புகளை (new combinations of productive factors) ஏற்படுத்துவதாலும் பொருளியல் முன்னேற்றம் விரைவாக நிகழ்கிறது. புதுமைகள் (innovations தோன்றுகிறபோதெல்லாம் ஒரு குறிப்பிட்ட தொழிலிலேயே தோன்றிக்கொண்டிருந்தாலும், அப் புதுமைகளுக்காகச் செய்யப்படுகிற தொடக்க நிலை முதலீட்டின் பண விளைவுகள் (monetary effects), பிற விளைவுகள் ஆகியவற்றின் பயனுகப் பல்வேறு வகைப்பட்ட பிற தொழில்களில் மீண்டும் மீண்டும் புதிதாக முதலீடுகள் செய்யப்படும். ஷும்பீடரின் சொற்களில் கூறுவதானுல், 'இத்தகைய முதலீடுகள் அலை அலையாக எழுகிற ஒவ்வோர் ஆயமும், அவற்றின் விளைவாகத் தொடக்க நிலையில் குழப்பங்களும் இழப்புகளும் வேலையின்மையுமே உருவாகும் என்றபோதிலும், இறுதியில் ஏராளமான அளவில் நுகர்வோரின் பொருள்கள் (consumers' goods) உற்பத்தி செய்யப்பட்டு, அவற்றின் பயனுக மெய் வருமான நீரோட்டையின் ஆழமும் அகலமும் நிலையான முறையில் பெருகிவிடும்.'[6]

வாணிபச் சுழல்களின்போது முதலீட்டு நடவடிக்கைகளில் ஏற்படுகிற பெருக்கத்திற்கு முதலீட்டின் பண வருமான விளைவு

ஓரளவுக்காவது காரணமாக இருக்கிறது என்றபோதிலும், முதலீடுகளின் விளைவாக உற்பத்தியின் அளவில் ஏற்படுகிற மாறுதல்களால்தான் நுகர்வோர் பொருள்கள், மற்றும் ஊழியங்களின் உற்பத்தி பெருகுகிறது. இந்த மெய் வருமான விளைவால் குறுகிய காலத்தில் விரும்பத்தகாத பணத்துறை நிலைமைகள் உருவாகலாம் என்றபோதிலும், நீண்ட காலப் பொருளியல் வளர்ச்சியின் உள்ளடக்கமாகத் திகழ்வது இந்த மெய் வருமான விளைவுதான். ஆனால், அது அப்படித் திகழவேண்டு மானால், கூடுதலாக உற்பத்தியாகிற நுகர்வோர் பொருள்களின் வகைகள் ஏறத்தாழ நுகர்வோரின் தேவைகளை ஒத்தனவாக இருக்கவேண்டும் என்பது உண்மைதான்.

ஒரு குறிப்பிட்ட தொழிலில் ஒரு குறிப்பிட்ட தொழில் துணிவோரால் விரிவான அளவில் செய்யப்படுகிற முதலீடுகூட, அப்போது இருக்கின்ற அங்காடியின் அளவு சிறியதாக இருக்கின்ற காரணத்தால் பயனளிக்கத் தவறிவிடுகிறது என்பதும், ஆனால், அதே சமயத்தில் பல்வேறு தொழில்களில் பரவலான முறையிலும் ஒரே காலத்திலும் செய்யப்படுகிற முதலீட்டு அலைகள் வெற்றி பெற முடிகிறது என்பதும்தான் தற்போது நாம் நினைவில் நிறுத்த வேண்டிய உண்மைகள். ஒரு குறிப்பிட்ட தொழில்துணிவானது, அதன் அளவில் தனித்து நிற்கும்போது வெறிபெற முடியாத தாகவும் நடைமுறைக்கு ஒவ்வாததாகவும் இருந்தபோதிலும், பல்வேறு தொழில்துறைகளில் ஒரே சமயத்தில் தொடங்கப்படுகிற பல்வேறு தொழில் துணிவுகள் வெற்றிபெற முடிவதற்குக் காரணம், அவை ஒன்றிற்கு ஒன்று துணையாக - ஆதரவாக - இருப் பதுதான். அப் பல்வேறு தொழில்துணிவுகளில் பணியாற்று வோருக்கு இப்போது கிடைக்கும் தலா மெய்ம்முதல் (real capital per head) கூடுதலாக இருக்கிறது. ஒவ்வொரு மணி நேரத் திலும் அவர்களின் உழைப்பால் விளையும் உற்பத்தியின் அளவும் மிகுதியாக இருக்கிறது. இத்தகு நிலையில், அவர்களில் ஒவ்வொரு தொழிலில் இருப்பவர்களும் பிற தொழில்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கு உரிய அங்காடியாக அமைந்து விடுகிறார்கள். அங்காடியின் சிறிய அளவால் ஏற்படும் இடர்ப் பாடும், அந்த இடர்ப்பாட்டின் விளைவாகத் தனியாரின் முதலீட்டுத் தூண்டுதல் பலவீனம் அடையும் போக்கும், ஒரே சம யத்தில் பலதிறத் தொழில்களில் முதலீடு செய்யப்படுவதாலும், அப்படிச் செய்யப்படுவதால் ஏற்படுகிற அங்காடிப் பெருக்கத் தாலும் அடியோடு அகற்றப்படுகின்றன; அல்லது குறிப்பிடத்தக்க அளவு குறைக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட தொழில் எந்த விகிதத்தில் வளரும் என்பது, பிற தொழில்கள் எந்த விகிதத்தில்

வளரும் என்பதையே பொறுத்திருக்கிறது. ஆனல், ஒன்று: பல்வேறு பண்டங்களின் தேவை நெகிழ்ச்சிகளும் அளிப்பு நெகிழ்ச்சிகளும் பல்வேறு தன்மையனவாக இருக்கும் காரணத்தால், சில தொழில்களின் வளர்ச்சி விகிதம், பிற தொழில்களின் வளர்ச்சி விகிதத்தைவிடக் கூடுதலாக இருப்பது இயற்கையே. பரவலாக அமைந்துள்ள பல்வேறு நடவடிக்கைகளில் முதலீடு செய்வதன் வாயிலாகப் பொருளியல் திறமையின் பொதுவான அளவு உயர்கிறது என்பதும், அங்காடியின் அளவு பெருகுகிறது என்பதுமே, நம் சிந்தையில் இடம் பெறவேண்டிய இன்றியமையாத உண்மைகள்.

பின்தங்கிய நாடுகளில் முதற்பொருள்களைக் கையாள்வதன் மூலம் முன்னேற்றத்தை ஏற்படுத்த முடியும் என்பது எவரும் ஏற்றுக்கொள்ள வேண்டிய உண்மை. தற்காலப் பொறிகளும் திறமைமிக்க நிர்வாகமும் ஒன்றுசேருமானல் பண்டங்களின் உற்பத்தியில் மாபெரும் உயர்வு ஏற்படுவது இயற்கை. ஆனல், இந்த உண்மை, நாம் எடுத்துக்கொண்டுள்ள சிக்கலின் பொறி இயல் பகுதியைமட்டுமே (engineering side) சார்ந்த ஒன்ருகும். ஆனல், நம் சிக்கலின் பொருளியல் பகுதியால் ஆராயப்படும் பொருள், பண்டங்களின் உருவ உற்பத்தி (physical productivity) அன்று; அவற்றின் மதிப்பு உற்பத்தியே (value productivity) ஆகும். ஒரு குறிப்பிட்ட வணிக நிறுவனத்தைப் பொறுத்தவரை இந்த மதிப்பு உற்பத்தியின் அளவானது, நுகர்வோரின் வறுமை காரணமாகக் குறைந்துவிடுகிறது. பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளில் கையாளப்படுகிற உற்பத்தி முறைகள் காலத்திற்கு ஒவ்வாத மிகப் பழைய முறைகளாக இருப்பதையும், அவற்றிற்கு மாருக நவீனப் பொறி வசதிகளைக்கொண்ட தொழிற்சாலைகளில் பண்டங்களின் உற்பத்தியை ஏராளமான அளவில் பெருக்கமுடியும் என்பதையும் எண்ணிப் பார்த்தவுடன், பின்தங்கிய நாடுகளில் மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித்திறன் (marginal productivity of capital) மாபெரும் அளவினது என்கிற திடீர் முடிவுக்கு நாம் வந்துவிடுகிறேம். ஆனல், நாம் கருத்தாய்வுக்கு எடுத்துக்கொண்டுள்ள சிக்கல் அவ்வளவு அவசரமாக முடிவு செய்யக்கூடிய எளிமை வாய்ந்தது அன்று. தொழில் நுணுக்க வாய்ப்புகள் ஏராளமாக இருக்கக்கூடும். முதற்பொருள்களைப் பயன்படுத்துவதால் ஏற்படக்கூடிய பொருள் உற்பத்தி, தற்போதைய உற்பத்தியோடு ஒப்பிடும்போது வியப்பூட்டத்தக்க அளவுக்கு உயர்ந்திருக்கலாம். ஆனல், மக்களின் வாங்கும் திறன் குறைவாக இருக்கும் காரணத்தால் மதிப்பின் உற்பத்தி குறைவாகத்தான் இருக்கும். முதற்பொருள்களைப் பயன்படுத்துவ

தால் தொழில்நுணுக்க அளவில் ஏற்படக்கூடிய பண்ட உற்பத்தி, பொருளியல் அளவிலும் ஏற்படவேண்டுமானல், ஒத்த நிலை வளர்ச்சியால்தான் அது முடியும். ஏனென்றல், அத்தகைய வளர்ச்சியால் அங்காடியின் மொத்த அளவு பெருகும்; பல்வேறு தொழில் துறைகளில் தனியாரின் முதலீட்டுக்குரிய தூண்டுதல்கள் விரிவடையும். ஆனல், ஒரு குறிப்பிட்ட தொழில்துணிவில் மட்டும் தன்னந்தனியாகச் செய்யப்படும் முதலீடானது, அதன் அளவில் பார்க்கும்போது, தக்க அளவு பயனை விளைவிக்காது. அப்படி விளைவிக்காத காரணத்தால், முன்னிலும் கூடுதலான, முன்னிலும் தகுதிமிக்க கருவிகளைப் பயன்படுத்துவதற்குரிய தூண்டுதல் ஏற்படாது.

பல்வேறு தொழில்துறைகளில் ஒரே சமயத்தில் செய்யப்படும் முதலீட்டால் அந்த ஒவ்வொரு தொழிலின் பண்டங்களுக்கும் உரிய அங்காடியின் அளவு பெருகும் என்னும் இந்த நிலைமையானது முற்றிலும் மார்ஷல் (Marshall) தெரிவித்த அதே பொருளில் இல்லாவிட்டாலும், சற்று மாறுபட்ட பொருளில், புறச் சிக்கன நலன்கள் (external economics) என்னும் தலைப்பின்கீழ் வரக் கூடியதே. பல்வேறு தொழில்களில் ஒவ்வொன்றும் அங்காடியின் மொத்த அளவை விரிவாக்குவதன்மூலம் ஒவ்வொரு வாணிப நிறுவனத்திற்கும் புறச் சிக்கன நலன்களை உருவாக்கித் தருகிறது. பொருளியல் முன்னேற்றத்தின்போது வளர்ந்துசெல் விளைவு களைத் (increasing returns) தரவல்ல மிக முதன்மையான புறச் சிக்கன நலன்கள் என்று மார்ஷலாலும், அவரைப் பின்பற்றிய பிற பொருளியல் அறிஞர்களாலும் கருதப்படும் காரணிகளைவிட (அதாவது, ஒரு தொழில் துறையின் பெரிய அளவின் காரணமாக அத் தொழிலில் உள்ள பல்வேறு நிறுவனங்களுக்கும் கிடைக்கும் போக்குவரத்துச் சாதனங்கள், தகவல் அறிவிப்பு வசதிகள், வாணிப இதழ்கள், தொழிலாளர் திறன்கள், தொழில் நுணுக்க முறைகள் முதலிய உற்பத்தி வசதிகளில் ஏற்படும் முன்னேற்றங் களைவிட), அங்காடியின் அளவில் ஏற்படும் உயர்வால் விளைகிற புறச் சிக்கன நலன்களே மிக இன்றியமையாதவை என்று கூறலாம்.

வழக்கமான பொருளில் ஏற்படும் புறச் சிக்கன நலன்களைப் போலவே இந்தப் பொருளில் ஏற்படும் புறச் சிக்கன நலன்களும், தனியாரின் மூலதன இறுதிநிலை உற்பத்தித் திறனுக்கும் (private marginal productivity of capital), சமுதாயத்தின் மூலதன இறுதிநிலை உற்பத்தித் திறனுக்கும் (social marginal productivity of capital) இடையே ஒரு வேறுபாட்டை ஏற்படுத்து

கின்றன. ஒன்றிற்கு ஒன்று துணையாக உள்ள பல்வேறு தொழில்களில் பயன்படுத்தப்படுகிற மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறனானது குறிப்பிடத்தக்க அளவினதாக இருக்கும் சமயங்களில் கூட, ஒரு குறிப்பிட்ட தொழில் நிறுவனத்தில் முதலீடு செய்வதற்கு ஒரு குறிப்பிட்ட தொழில் துணிவோருக்கு இருக்கக்கூடிய தூண்டுதலானது, அங்காடியின் சிற்றளவின் காரணமாக மிகக் குறைவாக இருக்கக்கூடும். இதனால்தான், உற்பத்தியின் பல்வேறு பிரிவுகளில் ஒரே சமயத்தில் செய்யப்படுகிற புதிய முதலீடுகளின் விளைவாகப் பொருளியல் வெற்றி உருவாகிறது; மொத்த அங்காடியின் அளவு பெருகுகிறது; அப்படிப் பெருகுவதால், வளர்ச்சிக் குறைவின் தேக்க நிலை ஒத்தநிலைத் தளைகள் (bonds of the stationary equilibrium of underdevelopment) உடைபடுகின்றன. தொழில் வளர்ச்சியின் தொடக்க காலத்தில் உருவாக்கப்படக்கூடிய அங்காடிகளை மனக்கண்ணால் காண்பதற்கு நம்பிக்கை நிறைந்த உள்ளப்போக்கு இருந்தாக வேண்டும். ஷும்பீடரால் சுட்டிக் காட்டப்பட்ட புதியன புனையும் தொழில்துணிவாளர்களிடம் அத்தகைய உள்ளப்போக்குப் பொதிந்து கிடக்கிறது. நம்பிக்கை ததும்பும் நெஞ்சத்தோடு அவர்கள் விரிவான அளவில் தங்கள் முதலீட்டுப் பணிகளைச் செய்யச் செய்ய, இறுதியில் அவர்களுடைய நம்பிக்கையானது வாணிப வெற்றி என்னும் எழில் ததும்பும் விளைவைப் பெற்றுத் தருகிறது.

ஷும்பீடருடைய பொருளியல் வளர்ச்சிக் கோட்பாடானது, சிறப்பாகவும் குறிப்பாகவும் மேல்நாட்டு முதலாளித்துவத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் விளக்கிக்கூறும் இயல்புடையதாகத்தான் அமைக்கப்பட்டிருக்கிறது. அந்தக் கோட்பாடானது அந்த மேல்நாட்டு முதலாளித்துவச் சமுதாயங்களுக்குப் பொருந்துகிற அதே அளவு பிற வகைச் சமுதாயங்களுக்கும் பொருந்தியே தீரும் என்று கூறமுடியாது. அத்தகைய சமுதாயங்களில் பொருளியல் தேக்க நிலையின் இரும்புப் பிடியைத் தளர்த்துவதற்குத் தேவையான சக்திகள் தாமாகத் தோன்றாமல் இருக்கலாம். அத்தகைய சக்திகளை, தொடக்க நிலைகளில் மட்டுமாவது, திட்டமிட்டு உருவாக்கவேண்டியிருக்கலாம். எடுத்துக்காட்டாக, ஜப்பான் நாட்டில் தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் அரசாங்கம்தான் விரிவான அளவில் தொழிற் புதுமைகளை உருவாக்கும் சக்தியாகவும், பல புதிய தொழில்களைத் தொடங்கி நடத்தும் முன்னோடியாகவும் விளங்கியது.[7] அந்த நாட்டின் தொடக்கநிலைத் தொழில் வளர்ச்சியானது பெரும்பாலும் அரசாங்கத்தாலேயே திட்டமிடப்பட்டு நிறைவேற்றப்பட்டது என்று

சொல்லிவிடலாம். அங்காடியின் சிற்றளவால் ஏற்படும் இடர்ப் பாடு உட்படத் தொடக்கநிலை இடையூறுகளெல்லாம் அகற்றப் பட்ட பிறகு, அந் நாட்டு அரசாங்கம், தன்னால் தொடங்கி நடத்தப் பட்ட பல தொழில்களைத் தனியார் துறையிடம் ஒப்படைத்து விட்டது. 1914ஆம் ஆண்டிற்குமுன் ஏற்பட்ட ஜப்பானின் தொடக்கநிலைத் தொழில் வளர்ச்சியானது பெரும்பாலும் உள் நாட்டு அங்காடியின் பெருக்கத்தையே சார்ந்ததாக இருந்திருக் கிறது என்பதையும், பிறநாட்டு அங்காடிகளுக்கான ஏற்றுமதிகள், அந் நாட்டின் தொழில் வளர்ச்சியில் தலையாய இடத்தைப் பெற்றது 1914-க்குப் பல ஆண்டுகளுக்குப் பிறகே என்பதையும் இச் சமயத்தில் குறிப்பிடுவது நல்லது.

பொருளியல் வளர்ச்சிக்கான சக்திகள் திட்டமிட்டு உருவாக்கப் படவேண்டுமா, அல்லது தனியார் தொழில்துணிவின் நடவடிக் கைக்கு விடப்படவேண்டுமா என்னும் கேள்வியானது, அதாவது, ஒத்தநிலை வளர்ச்சியானது திட்டமிடும் வாரியங்களால் (planning boards) ஏற்படுத்தப்படவேண்டுமா, அல்லது புதியன புனையும் தொழில்துணிவோர்களால் ஏற்படட்டும் என்று விடப்பட வேண்டுமா என்னும் கேள்வியானது, கருத்தாழம் மிகுந்ததும் அடிக்கடி எழுப்பப்படுவதுமான ஒரு கேள்வி என்பது உண்மைதான். ஆனால், நம்முடைய தற்போதைய கண்ணோட்டத்திலிருந்து பார்த் தால், அந்தக் கேள்வியானது, நடைமுறையைப் பொறுத்த ஒரு கேள்வியே தவிர, கொள்கையைப் பொறுத்த ஒன்றன்று என்பது தெளிவு. அந்தக் கேள்வியைப்பற்றி விரிவான முறையில் ஆராய வேண்டிய தேவை இல்லை என்பதே என் கருத்து. ஏனென்றால், சிக்கலுக்கான தீர்வின் பொருளியல் தன்மையைப்பற்றித்தான் நாம் இச் சமயத்தில் (இக் கருத்தாய்வில்) அக்கறை கொண்டிருக் கிறோமே தவிர, அத் தீர்வின் நிர்வாக வடிவத்தைப்பற்றி அன்று. கையாளப்படுகிற நிர்வாக வடிவம் அல்லது முறை எத்தன்மைய தாக இருந்தாலும், அதன்மூலமாக நாம் அடைய விரும்புகிற தீர்வின் தன்மை ஒன்றாகவே இருக்கிறது. பொருளியல் வளர்ச்சிக் கான சக்திகளைத் திட்டமிட்டு உருவாக்குதல், அல்லது தனியார் தொழில்துணிவால் உருவாகட்டும் என்று விட்டுவிடுதல் ஆகிய இருவகை முறைகளிலுமே (நாம் முன்னர் எடுத்துக்காட்டிய மேற் கோளில்), மில் (Mill) அவர்களால் சுட்டிக் காட்டப்பட்ட 'தப்புக் கணக்குகளை'த் (miscalculations) தவிர்ப்பது கடினமான செயலேயாகும். அரசாங்க முதலீட்டுத் திட்டங்கள் பெரிய அளவில் கையாளப்படும்போது அவற்றை உருவாக்கும் கட்டத்தில் இல்லாவிட்டாலும், அவற்றின் நடைமுறைக் கட்டத்தில் ஒத்த நிலையின்மை (lack of balance) என்னும் கோளாற்றுக்கு அவை

உள்ளாகின்றன என்பதை அனுபவத்தின் வாயிலாக நாம் நன்கு அறிந்துள்ளோம். ஆனால், தனியார் தொழில்துணிவால் ஏற்படுத்தப்பட்டுள்ள பொருளியல் முன்னேற்றம் எந்த வாணிபச் சுழல்களின் செழிப்பு நிலைகளால் (cyclical booms) உருவாகியிருக்கிறதோ, அந்தச் செழிப்பு நிலைகளிலும் அத்தகைய கோளாறுகள் செறிந்துகிடக்கின்றன.

நான் இதுவரை சுட்டிக்காட்ட முயன்றதெல்லாம் தீர்வின் தன்மையை மட்டும்தான். அந்தத் தீர்வைச் செயற்படுத்துவதற்குக் கையாளவேண்டிய முறை எதுவாக இருக்கவேண்டும் என்பது, ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் காணப்படும் மனித இயல்புகள், பொறிகளை இயக்கும் ஆற்றல்கள் (motive forces) முதலிய பல காரணிகளின் அடிப்படையில் முடிவு செய்யப்படவேண்டிய ஒன்றாகும். ஒரு பொருளியல் புலவர், பொருளியல் புலவர் என்னும் முறையில், ஒரு குறிப்பிட்ட முறையைத்தான் கையாளவேண்டும் என்று கட்டளைகள் பிறப்பிக்க முடியாது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் விடுதலைக் கோட்பாட்டை (theory of liberalism) உருவாக்கிய சிந்தனைச் சிற்பிகளில் ஒருவராகிய ஜெரிமி பெந்தாம் (Jeremy Bentham) அவர்களேகூட, இந்தக் கேள்வியைப் பொறுத்தவரை ஒரு திட்டவட்டமான முடிவைக் கொண்டவராக இல்லை. 'ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சியில் அரசாங்கம் தலையிடவேண்டுமா என்பது, அந் நாட்டு மக்களின் அறிவு, ஆற்றல், மனப்போக்கு, அவர்களிடமிருந்து தானாகக் கிளர்ந்து எழக்கூடிய முனைப்பு அல்லது முந்துந் துணிவு (Initiative) ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. இந்தப் பண்புகளோ நாட்டிற்கு நாடு வேறுபடும் இயல்புடையவை' என்பது பெந்தாமின் கருத்துரை.[8] பல்வேறு காரணங்களால் - அக் காரணங்களில் சிலவற்றைத் திட்டவட்டமான வகையிலும், தெளிவான முறையிலும் எடுத்துக்காட்ட முடியும் - அமெரிக்க நாட்டுப் பொருளியலில் தொழிலூக்கம், முந்தும் துணிவு ஆகிய மனித இயல்புகள் ஏராளமான அளவில் அமைந்திருக்கின்றன. ஆனால், அந்த இயல்புகள் அதே அளவுக்குப் பிற நாடுகளின் பொருளியல்களுக்கும் கிடைப்பது உறுதி என்று நாம் கருதிவிட முடியாது. மேற்கு ஐரோப்பாவின் தொழில்வளர்ச்சியின்போது, நடுத்தர வகுப்பினர்தாம், இந்த இயல்புகளைத் தோற்றுவிக்கும் தலைசிறந்த ஊற்றுக்கால்களாக விளங்கினார்கள். ஐக்கிய அமெரிக்க நாட்டுச் சமுதாயத்திற்கு 'நடுத்தர வகுப்பினர்' என்னும் தொடர் பொருந்துமானால், அங்குள்ள மக்களில் மிகப் பெரும்பாலோர் நடுத்தர வகுப்பினரே என்று கூறிவிடலாம். ஆனால், பின்தங்கிய நாடுகள் பலவற்றில் இந்நாளில் நடுத்தர வகுப்பு என்பதாக ஒன்று இல்லை என்றே சொல்லலாம்.[9]

## அங்காடியின் அளவைத் தீர்மானிப்பவை

பின்தங்கிய நாடுகளின் உள்நாட்டுப் பொருளியல்களில் தனியார் முதலீட்டுத் தூண்டுதல்களை ஆற்றலிழக்கச் செய்வது அங்காடித் தேவையின் பற்றுக்குறையே என்பதையும், தொன்மைப் பொருளியலின் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது அந்தப் பற்றுக்குறையானது மெய்யான வாங்கும் திறனின் பற்றுக் குறையே என்பதையும், நாம் முன்னரே குறிப்பிட்டிருந்தோம். கீன்சின் பொருளியலின் (Keynesian Economics) கண்ணோட்டத்தில் அப் பற்றுக்குறையை, பயன் விளை தேவையின் (effective demand) பற்றுக்குறை என்று கூறமுடியாது. ஏனென்றால், பின்தங்கிய நாடுகளில் பணவழித் தேவையின் பற்றுக்குறை இருப்பதே கிடையாது. பணவாட்ட இடைவெளியும் இருப்பதில்லை. இவை இருப்பதில்லை என்பது மட்டுமல்ல; அத்தகைய நாடுகள் பலவற்றில் தீவிரமான பணவீக்க அழுத்தம்தான் (inflationary pressure) காட்சியளிக்கிறது. அந் நாடுகளில் உள்ள பணவழித் தேவையின் (monetary demand) மொத்த அளவு குறைவாக இருந்தபோதிலும், அந் நாடுகளின் உற்பத்தித் திறனோடு ஒப்பிடும்போது அது மிகக் கூடுதலாகவே இருக்கிறது. அளிப்புக்கு (supply) வேண்டிய தேவையை (demand) அதுவே (அளிப்பே) உருவாக்கிக்கொள்கிறது என்பது உண்மைதான். ஆனால், பின்தங்கிய நாடுகளில் அளிப்பின் அளவே குறைவாக இருக்கிறது. இப்படி நாம் கூறும்போது, அளிப்பு என்னும் சொல்லை, தொன்மைப் பொருளியல் கருத்தில் தான் - அதாவது, அங்காடியில் தரப்படக்கூடிய அளிப்பு என்னும் கருத்தில்தான் - பயன்படுத்துகிறோம். இந்த அளிப்பு குறைவாக இருப்பதற்குக் காரணம், உற்பத்தியின் அளவு குறைவாக இருப்பதே. உற்பத்திக் குறைவுக்குக் காரணமோ, மெய்ம்முதற் பொருளின் பற்றுக்குறையே. இந்தச் சூழலில் பணப்பெருக்கத் தால் தீர்க்கப்படக்கூடிய சிக்கல் எதுவும் இல்லை என்றே கூறிவிட லாம். வறுமையில் வாடும் வேளாண்மை நாடுகளில் அளிப்பின் அளவானது குறைவானதாகவும் நெகிழ்ச்சி அற்றதாகவும் இருப் பதால் பணப் பெருக்கமானது வெறும் விலை வீக்கத்தையே (price inflation) ஏற்படுத்திவிடும். அப் பெருக்கத்தால் தனியார் முதலீடு செய்வதைத் தடுத்து நிறுத்தும் முட்டுக்கட்டையாக விளங்கும் அங்காடிப் பற்றுக்குறை என்னும் அடிப்படைக் கோளாற்றைச் சிறிதளவுகூட ஒழுங்குபடுத்த முடிவதில்லை. பணவழிக் கைக் கோளால் (monetary policy) நிறைவேற்றப்படக்கூடிய இன்றி யமையாத பணிகள் வேறு பல இருக்கின்றன என்பது உண்மை தான். ஆனால், அக் கைக்கோள், அங்காடியின் அளவை (அதனை நம் கருத்தாய்வில் பயன்படுத்தியுள்ள பொருளில்) முடிவு செய்யும் முக்கியமான காரணிகளில் ஒன்று அன்று.

அதுபோலவே ஒரு நாட்டின் மக்கள் தொகையையும் அத்தகைய முதன்மையான காரணிகளில் ஒன்றுகக் கருதமுடியாது. ஒரு நாடு மிகப் பெரிய மக்கள் தொகையைப் பெற்றிருந்தாலும், அம் மக்களின் தலா உற்பத்தித் திறன் சுருங்கிய அளவினதாக இருக்குமாஞல், அந் நாட்டின் மொத்த உற்பத்தித் திறன் சிறிய அளவினதாகத்தான் இருக்கமுடியும். உத்தம மக்கள் தொகை (optimum population) என்னும் கருத்து ஏற்புடையதாத இருக்கின்ற அளவுக்குத்தான், மக்கள் தொகையின் அளவானது சராசரி உற்பத்தியின் அளவைப் பாதிக்க முடியும். பெரிய அளவில் மக்கள் தொகையை உடைய ஒரு நாட்டின் மொத்த உற்பத்தி பெரிய அளவினதாக இருந்தால் கூட, அப்படி இருப்பதாலேயே ஓர் ஒருங்கிணைந்த அங்காடி (coherent market) அங்கு உருவாகியிருப்பதாகக் கூறமுடியாது. அத்தகைய அங்காடி உருவாகியிருக்கிறதா என்பதை முடிவு செய்யுமுன் போக்குவரத்துச் செலவைப்பற்றியும் எண்ணிப் பார்க்கவேண்டும். பொருளியல் வளர்ச்சியின் நெருக்கடியான காலங்களில் போக்குவரத்துச் செலவுக்கு இருந்த வரலாற்று முக்கியத்துவம் காரணமாக, தொடர்புடைய ஏனைய பொருள்களிலிருந்து அதனைமட்டும் தனியாகப் பிரித்தெடுத்து, அதற்கு அளவுக்கு மீறிய முதன்மை கொடுத்து ஆராய்கிற போக்குப் பரவலாகக் காணப்படுகிறது. ஆனல், அத்தகைய போக்கு முறையானது அன்று. மற்றப் பொருள்களோடு தொடர்பு அற்ற முறையில் அதனைமட்டும் தனித்தெடுத்து ஆராய்தல் ஆகாது.

அங்காடியின் அளவானது அதன் பரப்பளவை மட்டும் பொறுத்திருக்கிறது என்று தவருக எண்ணிக்கொள்ளும் போக்கும், அப்படி எண்ணுகின்ற காரணத்தால் பண்டங்களின் போக்குவரத்துச் செலவுக்கு அளவுக்குமீறிய முதன்மை தருகின்ற போக்கும் மிகப் பலரிடம் அமைந்திருக்கின்றன. மக்கள் தொகைச் செறிவும் (population density), தலா உற்பத்தியும் ஒரு குறிப்பிட்ட அளவில் மாருமல் இருக்கும்போது, போக்குவரத்தில் முன்னேற்றங்கள் ஏற்படுமாஞல், அங்காடியின் பரப்பளவு, பொருளியல் அளவு ஆகிய இரண்டுமே பெருகும் என்பது உண்மைதான். ஆனல், அப்படிப் பெருகுவதால் அவை இரண்டும் ஒன்றுகிவிடமாட்டா. பொருளியல் வளர்ச்சியைப் பெருக்குவதில் போக்குவரத்து வசதிகள் தனிச் சிறப்புள்ள பங்கு பெறுகின்றன என்பது உடனடியாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய உண்மைதான். ஆனல், அதே சமயத்தில் அங்காடியின் பொருளியல் அளவானது போக்குவரத்தின் திறமையை மட்டுமல்லாமல்,

உற்பத்தி முழுவதன் திறமையையும் பொறுத்திருக்கிறது என்பதை எடுத்துக் கூறத்தான் வேண்டும்.[10]

போக்குவரத்து வசதிகளின் முன்னேற்றங்கள் இன்றியமையாதவைதாம். ஆனால், பண்டங்களின் இயக்கத்தைத் தடுக்கும் சுங்க வரிகள் (tariff) முதலிய செயற்கைக் கட்டுப்பாடுகளைக் குறைப்பதும் அதே அளவு இன்றியமையாததுதான். ஐக்கிய நாடுகள் மன்றத்தால் அண்மையில் வெளியிடப்பட்ட ஓர் அறிக்கையானது, 'வளர்ச்சி குறைந்த நாடுகளிற் சில மிகச் சிறியனவாக இருப்பதால், அவற்றினுடைய உள்நாட்டு அங்காடி, பெரிய அளவு தொழில்களைத் தாங்கக்கூடிய அளவுக்குப் பெரியதாக இல்லை' என்று கருத்தறிவித்திருக்கிறது. அப்படித் தெரிவித்திருப்பதோடு, அத்தகைய நாடுகளுக்கிடையே சலுகைச் சுங்க முறைகள் (preferential tariff system), சுங்க ஒன்றியங்கள் (customs unions), முடியுமானால் அரசியல் கூட்டாட்சிகள் முதலியவற்றை ஏற்படுத்திக்கொள்வதே அந்தக் குறைபாட்டை நிறைசெய்தற்குரிய பரிகாரம் என்றும் ஆய்வுரை தந்திருக்கிறது.[11] அங்காடிச் சிக்கலுக்குரிய உண்மையான தீர்வு இதுவாக இருந்தால், இத் தீர்வை நடைமுறைப்படுத்துவது ஏறத்தாழ எளிய செயலேயாகும். ஒன்றிற்கு ஒன்று அண்டையில் உள்ள சிறிய நாடுகள் சில சட்டங்களை நிறைவேற்றிவிட்டால் - அல்லது அரசாங்கக் கட்டளைகள் சிலவற்றைப் பிறப்பித்துவிட்டால் - போதும்; மேற்படித் தீர்வு நடைமுறைக்கு வந்துவிடும். அத்தகைய நிலையில் அரசாங்கத்திற்கு அத் தீர்வுக்காக மாபெரும் செயல்களை ஆற்றவேண்டிய இன்றியமையாமை இருக்க முடியாது.

ஆனால், இருக்கின்ற தலையாய இடர்ப்பாடு, நாடுகள் மிகச் சிறியனவாக இருக்கின்றன என்பது அன்று; உள்நாட்டுத் தொழில்களுக்குத் தேவையான அங்காடிகளை உருவாக்க முடியாத அளவுக்கு அவை ஏழைகளாக இருக்கின்றன என்பதேயாகும். ஸ்வீடன் அல்லது சுவிட்சர்லாந்தின் உற்பத்தி எந்த அளவில் இருக்கிறதோ அதே அளவு ஈக்வடாரின் (Ecuador) உற்பத்தியும் இருக்கமுடியுமானால், பலதிறப்பட்ட தனியார் முதலீடுகளுக்குரிய தூண்டுதல்களைத் தரத்தக்க அளவுக்கு அதனுடைய உள்நாட்டு அங்காடி பெரிதாக இருந்திருக்கும். ஆனால், தற்போது உள்ள நிலையில் அது அப்படி இல்லை. அண்டை நாடுகளுக்கு இடையே உள்ள வாணிபக் கட்டுப்பாடுகளை அகற்றுவது முற்றிலும் பயனற்ற செயல் என்று யாரும் இயம்பிவிட முடியாது. சுங்க வரிகளைச் செலுத்துவதால் ஏற்படும் செலவைச் செயற்கையான

போக்கு வரத்துச் செலவு என்று கருதலாம். அத்தகைய செலவால் ஏற்படும் தீய விளைவுகளை அகற்றத்தக்க முறையில் கொலம்பியா, பெரு, வெனிசூலா ஆகியவற்றோடு ஈக்வடாரையும் இணைத்து ஒன்றுபட்ட ஒரு சுங்க வட்டாரத்தை உருவாக்குவதால் சில நன்மைகள் ஏற்படக்கூடும் என்பது உண்மையே. ஆனால், அத்தகைய ஓர் அமைப்புமட்டும் பொருளியல் வளர்ச்சிச் சிக்கலுக்குரிய பொருத்தமான தீர்வாக அமைந்துவிடமுடியுமா? அத்தகைய அமைப்பின் வாயிலாக வாணிபத் தடைகள் அகற்றப்பட்டுவிட்டால்கூட, போக்குவரத்துச் செலவுகள், பொதுவான உற்பத்தியின் அளவு குறைவாக இருத்தல் ஆகிய இடர்ப்பாடுகள் இருக்கமாட்டாவா?

நாம் முன்னரே சுட்டிக்காட்டியதைப்போல் சுங்க வரிகளைச் செயற்கையான போக்குவரத்துச் செலவுகளாகக் கருதலாம். போக்குவரத்துச் செலவுகள் இயற்கையானவையாக இருந்தாலும் அல்லது செயற்கையானவையாக இருந்தாலும், அவற்றில் குறைவு ஏற்படுமானால், அங்காடியின் அளவு, பரப்பளவு ஆகிய இரண்டுமே பெருகுவது உறுதி. ஆனால், போக்குவரத்துச் செலவில் குறைவு ஏற்படும்போதுமட்டும் அன்று, பல்வேறு வகைப்பட்ட உற்பத்திச் செலவுகளில் எச் செலவு குறைந்தபோதிலும் அத்தகைய பெருக்கம் ஏற்படுவது இயல்பு. போக்குவரத்துத் திறமையில் ஏற்படுகிற உயர்வால் மட்டுமல்ல - பொருளியல் திறமையில் ஏற்படுகிற எந்த உயர்வாலும் - அங்காடியின் அளவு, நாம் முன்னரே எடுத்துக்காட்டியதைப் போல உயரத்தான் செய்யும். போக்குவரத்து வசதிகளுக்கு ஆடம் ஸ்மித் மிகுந்த முக்கியத்துவம் கொடுத்ததற்குப் பல அருமையான வரலாற்றுக் காரணங்கள் இருக்கின்றன. நாம் விரும்பினால் அதற்குச் சில கோட்பாட்டு வழிக் காரணங்களையும் (theoretical reasons) சுட்டிக் காட்டமுடியும். போக்குவரத்துச் செலவு குறைவாக இருப்பதாலும், தடையிலா வாணிபத்தாலும் (free trade) ஏற்படக்கூடிய நன்மைகளை நான் இல்லை என்று மறுக்கவில்லை. ஆனால், இயற்கையான அல்லது செயற்கையான போக்குவரத்துச் செலவுகளைமட்டும் தனியாக எடுத்துவைத்து அவற்றிற்கு அளவு கடந்த முதன்மை அளிப்பதையும், அங்காடியின் நிலப் பரப்பளவுதான் அதன் அளவை முடிவு செய்யும் ஒரே காரணி அல்லது தலையாய காரணி என்று இயம்புவதையும்தான் தவறான போக்குகள் என்று நான் கருதுகிறேன். (கருத்துகள் திட்டவட்டமானவையாக இருக்கவேண்டும் என்பதற்காக ஒருசில காரணிகளுக்கு அளவுகடந்த முதன்மை தருகிற விருப்பம் பரவலாக இருப்பதே இத்தகைய போக்குகளுக்குக் காரணமாக இருக்கலாம்.)

உலகத்தில் உள்ள வறுமை மிகுந்த நாடுகளில் ஒன்றாகிய சீனாவில், பல ஆண்டுகளுக்குமுன் உள்நாட்டுச் சுங்க வரிகள் விதிக்கப்படுகிற ஒரு முறை இருந்தது. இந்த முறையின்கீழ்ப் பண்டங்கள் சீனாவிலேயே ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குச் சென்றபோதெல்லாம், 'லிகின்' (likin) என்று அழைக்கப்பட்ட உள்நாட்டுச் சுங்க வரிகளைச் செலுத்தவேண்டியிருந்தது. அரசாங்கத்திற்கு வேண்டிய வருவாயைத் திரட்டுவதுதான் இந்த வரிகளின் தலைசிறந்த நோக்கம் என்றபோதிலும், மாநிலங்களுக்கிடையே நடைபெற்ற வாணிபத்தைத் தடுக்கும் முட்டுக்கட்டைகளாகவும் இவை விளங்கின என்பதில் சிறிதும் ஐயமில்லை. 1928ல் இந்த வரி விதிப்பு முறை அகற்றப்பட்ட பிறகு, வாணிபக் கைக்கோளின் (Commercial policy) கண்ணோட்டத்தில், சீனநாடு முழுவதும் ஒரே அங்காடியாக - மக்கள் தொகையிலும் சரி, பரப்பளவிலும் சரி, உலகத்தின் மிகப் பெரிய நாட்டு அங்காடிகளில் ஒன்றாக - மாறியது. அப்படி மாறியபோதிலும் சீனா உலகத்தின் வறுமை மிகுந்த நாடுகளில் ஒன்றாகத்தான் தொடர்ந்து காட்சியளித்துவந்தது.

ஐக்கிய அமெரிக்காவில் உள்நாட்டு வாணிபத் தடைகள் இல்லாதிருப்பதைச் சுட்டிக்காட்டி, அப்படி இல்லாத காரணத்தால்தான் அங்குப் பொருளியல் வளம் செழித்துப் பெருகியிருக்கிறது என்று தெரிவித்து, எனவே, அத்தகைய தடைகள் இல்லாத நிலைமை உலகத்தின் ஏனைய நாடுகளெல்லாம் பின்பற்றவேண்டிய ஓர் எடுத்துக்காட்டு என்று சிலர் வாதாடுகிறார்கள். ஆனால், அந்நிலைமை, அமெரிக்காவின் பொருளியல் செழிப்புக்கான காரணங்களில், இரண்டாந்தர முதன்மை உடையதேயன்றித் தலையாய முதன்மை உடையதன்று என்பது என் கருத்து. மாபெரும் அளவில் முதற் பொருள்களைப் பயன்படுத்தியதால் உற்பத்தியில் ஏற்பட்ட உயர்வுதான் அச் செழிப்புக்கான தலைசிறந்த காரணம் என்று நான் கருதுகிறேன். அமெரிக்காவின் அங்காடி மாபெரும் அளவினதாக இருப்பதற்கும், உற்பத்தி மாபெரும் அளவில் நடைபெறுவதற்கும் உரிய முதற்பெரும் காரணம், முதற் பொருள்கள் மிகுதியான அளவில் பயன்படுத்தப்படுவதே. ஏராளமான மக்களுக்காக உற்பத்தி என்கிற நிலை இல்லாவிட்டால் ஏராளமான அளவில் உற்பத்தி என்கிற நிலை இருக்கமுடியாது. ஐக்கிய அமெரிக்காவில் ஏற்பட்டுள்ள பொருளியல் முன்னேற்றத்தால், குறைந்த வருமானப் பிரிவினர் உட்பட ஏராளமான மக்கள், முன்னிலும் மிகுதியான-முன்னிலும் சிறப்பான-பொருள்களையும் ஊழியங்களையும் பெற முடிந்திருக்கிறது. அமெரிக்க வாழ்க்கைத் தரத்தின் பிரிக்கமுடியாத பகுதிகளாக

இக் காலத்தில் கருதப்படுகிற பண்டங்களிற் பெரும்பாலான வற்றை அந்நாட்டில் உள்ள குறைந்த வருமானப் பிரிவினர் பயன் படுத்துகின்றனர். அப் பண்டங்கள் மாபெரும் அளவில் உற்பத்தி செய்யப்படுவதைப் போலவே மாபெரும் அளவில் பயன்படுத்தப் படுகின்றன. இதற்குக் காரணம், அமெரிக்கத் தொழிலாளியின் உற்பத்தித் திறன் உயர்ந்ததாக இருப்பதே; அதாவது, அத் தொழிலாளியிடம் பலதிறப்பட்ட முதற் பொருள்கள், கருவிகள், தளவாடங்கள் முதலியன மிகச் சிறந்த அளவில் தரப்பட் டிருப்பதே. ஓர் அங்காடி மாபெரும் அளவுடையதாக இருக்க வேண்டுமானுல் அதற்குத் தேவைப்படும் தலைசிறந்த பொருள்கள் இவைதாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

## ஒத்த நிலை வளர்ச்சியும் பன்னுட்டுச் சிறப்புத் தேர்ச்சியும் (Balanced growth and international specialisation)

பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளில் அங்காடியின் அளவு குறைவாக இருப்பதால், பன்னுட்டு வாணிபத்தின் அளவு, அயல்நாட்டு முதலீட்டின் தன்மை, உள்நாட்டுச் சேமிப்புகளைப் பயன்படுத்தும் போக்கு ஆகியவற்றில் பல மாறுதல்கள் ஏற்படு கின்றன. இவை ஒவ்வொன்றைப்பற்றியும் சில கருத்துகளைத் தெரிவிப்பது நலம் பயப்பதாகும்.

அங்காடியின் அளவானது, முதலீட்டுக்கான தூண்டுதல்களை மட்டுமல்லாமல், பன்னுட்டு வாணிபத்தின் அளவையும் முடிவு செய்யும் ஓர் அடிப்படைத் தீர்மானியாக (Basic determinant) விளங்குகிறது. பின்தங்கியுள்ள வேளாண்மை நாடுகளின் உற்பத்தி அளவு குறைவாக இருப்பதாலும், அக் குறைவின் விளைவாக அவற்றின் மெய்யான வாங்கும் திறன் குறைவாக இருப்பதாலும், உலக வாணிபத்தில் அந் நாடுகளின் பங்கு சின்னஞ் சிறு அளவினதாகவே இருக்கிறது என்பது, அனைவரும் அறிந்த ஓர் உண்மை. மொத்தமாகப் பார்க்கும்போது, முன்னேறிய தொழில்துறை நாடுகளில் ஒவ்வொன்றுமே ஏனைய வற்றின் பண்டங்களை வாங்கிப் பயன்படுத்தும் தலைசிறந்த நுகர்வோராகக் காட்சியளிக்கின்றது.[12] தொழில்துறை நாடு களுக்கிடையே நடைபெறும் பன்னுட்டு வாணிபத்தின் அளவு, அந் நாடுகளில் அமைந்துள்ள வேலையின் நிலைமையையும் பயன் விளை தேவையின் நிலைமையையுமே பொறுத்திருக்கிறது என்பதையும், அந்நாடுகளின் உள்நாட்டுப் பொருளியல்களின் நிலைமை மந்தமானதாக இருக்குமானுல் அவற்றின் அயல்நாட்டு வாணிப நிலைமை சுறுசுறுப்பு மிகுந்ததாக இருக்கமுடியாது

என்பதையும் அழுத்தந் திருத்தமாக எடுத்துக் கூறுவதுதான், கீன்சின் பொருளியலால் பன்னுட்டு வாணிபக் கோட்பாட்டில் ஏற்பட்டுள்ள தலையாய விளைவாகும். இது திட்டவட்டமாக எடுத்துக் கூறப்படவேண்டிய ஓர் அருமையான கருத்துத்தான்; ஆனால் மிக இன்றியமையாத கருத்து அன்று. நெடுங்காலக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, அங்காடியின் அளவும் உற்பத்தியின் அளவுமே, பன்னுட்டு வாணிபத்தின் அளவைத் தீர்மானிப்பதில், கீன்சால் சுட்டிக்காட்டப்பட்ட காரணிகளைவிட மிக முக்கியமான பங்கு பெறுபவையாகும். அங்காடியின் அளவை விரிவுபடுத்துவதற்கும், முதலீட்டின் வாயிலாக உற்பத்தியைப் பெருக்குவதற்கான தூண்டுகோல்களை உருவாக்குவதற்கும் உரிய கருவி என்னும் முறையில், ஒத்தநிலை வளர்ச்சியானது, பன்னுட்டு வாணிபத்தை விரிவுபடுத்துவதற்கான ஓர் இன்றியமையாத அடிப்படையாகத் திகழ்கிறது.

அப்படித் திகழ்வது உண்மையாக இருந்தபோதிலும், ஏழை நாடுகள், அவற்றினுடைய உள்நாட்டுப் பொருளியல்களைப் பல் வேறு வகைப்பட்ட பண்டங்களை ஆக்கித்தரும் திறம் உடையனவா கவும், ஒத்தநிலை வளர்ச்சியை உடையனவாகவும் மாற்றி அமைக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கூறும்போது, அந்தக் கருத்து, அனைவராலும் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. அந் நாடுகள் அப்படியெல்லாம் முயல்வது தராதர நன்மைக் கோட் பாட்டிலிருந்து (Theory of comparative advantage) விலகிச் செல்வ தாக ஆகாதா என்றும், பன்னுட்டுச் சிறப்புத் தேர்ச்சி விதிகளுக்கு (Rules of international specialisation) இணங்க அந்நாடுகள் ஏன் தங்களுடைய வேளாண்மைப் பொருள்களின் ஏற்றுமதியை விரிவு படுத்துவதிலும், ''ஒத்த நிலை உணவை''ப் (Balanced diet) பெறுவதற்கு அவற்றிற்குத் தேவையான பண்டங்களின் இறக்கு மதியைப் பெருக்கிக்கொள்வதிலும் ஆர்வம் கொள்ளக்கூடாது என்றும் பலர் கேள்விக் கணைகள் தொடுக்கின்றனர். இந்தக் கேள்விகளுக்கெல்லாம் ஒரே வாக்கியத்தில் விடை கூறவேண்டு மானல், அந்த விடை இப்படித்தான் இருக்கும் :—''ஏனென் ருல், ஒத்த நிலைக் கருத்தானது, ஒரு நாடு என்ற சிறு எல்லைக்கு மட்டுமல்லாமல் உலகம் என்ற பேரெல்லைக்கும் பொருந்தும்.'' ஏற்றுமதிக்காக வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவது என்னும் கொள்கையை ஏழை நாடுகள் கையாளத் தொடங்கினல், அதே சமயத்தில் தொழில் துறை நாடுகளில் அப் பொருள்களுக்கான தேவை தொடர்ச்சியாக உயர்ந்துகொண்டே போனலொழிய, உலக அங்காடியில் அப்பொருள்களின் விலைகள் குறைந்துவிடும். ஏன் அப்படிக் குறைந்துவிடும் என்பதற்கான

காரணங்கள் கிட்டத்தட்டத் தாமாக விளங்குபவையே. பத்தொன்பதாம் நூற்ருண்டில் மேற்கு ஐரோப்பாவின் மக்கள் தொகையும் உற்பத்தி அளவும் விரைவாகப் பெருகிக்கொண்டிருந்ததாலும், மூலப் பொருள்களுக்கான செயற்கை மாற்றுப்பொருள்கள் (Synthetic substitutes) அப்போது கண்டுபிடிக்கப்படாததாலும், பிரிட்டிஷ் பெருநாடு சுங்க வரிகளால் ஏற்படுகிற பாதுகாப்பை விட்டுக் கொடுக்கவும்-அப்படி விட்டுக் கொடுப்பதன் விளைவாக, பன்னுட்டுச் சிறப்புத் தேர்ச்சியின் நலன்களை முன்னிட்டுத் தன் வேளாண்மை நலன்களில் ஒரு பகுதியைத் தன்மறுப்புச் செய்யவும் முடிவு செய்த காரணத்தாலும், அந்த நூற்ருண்டில் தொழில் துறை நாடுகளில் வேளாண்மைப் பொருள்களுக்கு உரிய தேவை தொடர்ச்சியாகப் பெருகிக்கொண்டிருந்தது. ஆனுல் இருபதாம் நூற்ருண்டில் நிலைமைகள் மாறிவிட்டன. இந்த நூற்ருண்டில் அந்தத் தேவை ஓரளவு குறைந்து போயிருக்கிறது. அண்மை ஆண்டுகளில் மூலப் பொருள்களின் உற்பத்தியில் செழிப்பு நிலை ஏற்பட்டுள்ளபோதிலும் மேற்படிக் குறைவு நிலை மீண்டும் வர முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது என்று கூறமுடியாது.

வேளாண்மைப் பொருள்களுக்கான வெளிநாடுகளின் தேவை, நெகிழ்ச்சி அற்றதாகவும் ஏறத்தாழ ஒரே அளவில் நிற்பதாகவும் இருக்கும் நிலையில் அப்பொருள்களின் ஏற்றுமதிகளைப் பெருக்கும் செயலில் ஈடுபடுவது, நீண்ட காலக் கண்ணேட்டத்தில் பார்க்கும் போது, வெற்றி பெறத்தக்க முயற்சியாக அமையாது. செப்பனிடப்படாத உணவுப் பண்டங்கள், மூலப் பொருள்கள் ஆகியவற்றிற்கான தேவையின் விலை நெகிழ்ச்சி (Price elasticity of demand) ஒன்றினும் குறைந்ததாக (Less than unitary) இருக்கிறது என்று பாவித்துக்கொள்வது முறையான செயலாக இருக்குமானுல், அத்தகைய சூழ்நிலையில் வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளியல் முன்னேற்றமானது பெரும்பாலும் உள்நாட்டு அங்காடிகளுக்கான உற்பத்தியின் பெருக்கத்தையே சார்ந்திருக்க வேண்டும் என்கிற முடிவுக்கு வருவதும் முறையான செயலேயாகும். (மேலே குறிப்பிட்ட அதே வகைச் சூழ்நிலை எதிர்காலத்திலும் இருக்குமா என்பதை முடிவு செய்வது, வரும் பொருள் உரைக்கும் ஆற்றலைப் பொறுத்திருக்கிறது. அந்த ஆருடம் கணிக்கும் பணியில் இங்கு நாம் இறங்கத் தேவையில்லை.) இத்தகைய நிலைமையில், பின் தங்கிய ஒரு நாட்டில் பொருளியல் வளர்ச்சி ஏதேனும் ஏற்படவேண்டுமானுல், தொடக்க நிலைகளிலாவது அந்நாடு உள்நாட்டுத் தேவைகளுக்கான உற்பத்தியைப் பெருக்குவதிலேயே முழு மூச்சுடன் ஈடுபட வேண்டும். இத்தகைய முயற்சியின் விளைவாக உற்பத்தியின் அளவில் உயர்வும், அதன் பயனுக

மெய்யான வாங்கும் திறனின் பெருக்கமும் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் வரையில், நீண்ட கால அளவில் பார்க்கும்போது, அத்தகைய முயற்சியால், பன்னாட்டு வாணிபத்தின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும்தான் ஏற்படுமே தவிர இடையூறும் இடுக்கணும் விளையமாட்டா.

இவையெல்லாம்தான் பின்தங்கிய நாடுகளில் ஒத்த நிலை வளர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்பதில் காட்டப்படுகிற ஆர்வம் பரவலான அளவில் இருப்பதற்குரிய காரணங்களிற் சில ஆகும். பொருளியல் நோக்கில் பார்க்கும்போது அந்த ஆர்வம் எந்த அளவு நியாயமானது என்பதையும் இவை எடுத்துக் கூறுகின்றன. அந்த ஆர்வம், பொருளியல் துறையில் தன்னிறைவு அடையவேண்டும் என்ற நோக்கத்திலிருந்து பிறந்ததன்று. தராதர நன்மையின் (Comparative advantage) அளவு, மாறுதலுக்கு உட்பட்டது. சில சமயங்களில் இயங்காநிலைப் பகுத்தாய்விலிருந்து (Static analysis) சிலர் சில அவசர முடிவுகளைச் செய்துவிடுகிறார்கள். வளர்ச்சியுறு நாடுகள் தங்கள் உள்நாட்டு அங்காடிகளுக்குத் தேவையான தொழில்களை உருவாக்கிவளர்ப்பதில் ஆர்வம் காட்டும்போது சில பொருளியல்வாதிகள், அந்த ஆர்வத்தை, தன்னிறைவு நிலையைப் பெறுவதற்காகச் செய்யப்படும் முயற்சி என்று தவறாகக் கருதிவிடுகிறார்கள். ஆனால் அந் நாடுகளின் உள்நாட்டு அங்காடிகளின் அளவு மாறக்கூடிய தன்மையை உடையது என்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள். எடுத்துக்காட்டாக ஒரு நாடு ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை உள்ள காலணிகளைப் பயன்படுத்தி வருகிறது என்றும், இதுவரை அந்தக் காலணிகள் அத்தனையையும் அந் நாடு பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து வந்தது என்றும், அதே அளவு எண்ணிக்கையுள்ள காலணிகளை ஆண்டுதோறும் உற்பத்தி செய்வதற்கான உள்நாட்டுத் தொழிற்சாலை ஒன்றைத் தொடங்கி நடத்துவது என்று அந் நாடு இப்போது முடிவு செய்கிறது என்றும் வைத்துக்கொள்வோமானால், இந் நிலையில் அந் நாடு காலணிகளைப் பொறுத்த வரையில் தன்னிறைவு நிலையை அடைய முயல்கிறது என்கிற முடிவுக்கு வருவதுதான் இயற்கை என்று தோன்றக்கூடும். ஆனால், அந் நாட்டில் புதிதாகத் தொடங்கப்படுகிற காலணித் தொழிற்சாலையானது விரிவான அளவில் நடைபெறும் பொருளியல் வளர்ச்சியின் ஒரு பகுதியாக இருக்குமானால், அந்நாட்டில் உள்ள காலணிகளுக்கான அங்காடியின் அளவு பத்து மடங்காகப் பெருகக்கூடும். அப்படிப் பெருகுமானால் அந் நாட்டில் இறக்குமதி செய்யப்படும் காலணிகளின் தொகை, உள்நாட்டுக் காலணித் தொழிற்சாலை தொடங்கப்படுவதற்கு முன் இருந்ததைவிடக் கூடுதலாகப் பெருகுமே

தவிரக் குறையாது. எடுத்துக்காட்டாக, கனடா நாட்டில் (Canada) முதன் முதலில் வளரத் தொடங்கிய சில தொழில்களில் ஒன்று, நெசவாலைத் தொழில். சுங்க வரிகளால் அளிக்கப்பட்ட பாதுகாப்பின் துணையுடன், 1879ஆம் ஆண்டிலிருந்தே ஓங்கி வளரத் தொடங்கிவிட்டது அத் தொழில். அப்படி இருந்த போதிலும் கனடா இன்றைய தினம் உலகத்திலேயே மிகக் கூடுதலான அளவில் ஆலைத் துணிகளை இறக்குமதி செய்யும் நாடுகளில் ஒன்றாகத் திகழ்கிறது.

உற்பத்தியின் அளவு பெருகி, உள்நாட்டு அங்காடியின் அளவு விரிவடையும்போது, இறக்குமதி செய்யப்படும் பண்டங்கள் எவை, ஏற்றுமதி செய்யப்படும் பண்டங்கள் எவை என்பதில் மாறுதல் ஏற்படுவது இயற்கையே என்றபோதிலும், அயல்நாட்டு வாணிபத்தின் மொத்த அளவு, பெரும்பாலும் உயர்வடையுமே தவிரக் குறைந்துவிடாது. அந்த அளவு உயர்வடையாமல் ஒரே நிலையில் இருப்பதாக வைத்துக்கொண்டால்கூட, உள்நாட்டு அரங்கத்தின் ஒத்த நிலை வளர்ச்சியால் பிற நாடுகளுக்கு எத்தகைய இடையூறும் ஏற்பட்டுவிடாது. வெனிசூலா (Venezuela) என்னும் நாட்டை உதாரணத்திற்கு எடுத்துக்கொள்வோம். பெட்ரோல்தான் அந் நாட்டின் ஏற்றுமதிகளில் 90 சதவிகிதம் இடத்தைப் பெற்றிருக்கிறது என்றபோதிலும், அந் நாட்டின் தொழிலாளர்களில் 2 சதவிகிதம் பேர்மட்டும்தான் பெட்ரோல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஏனைய தொழிலாளர்களிற் பெரும்பாலோர் நாட்டின் உட்பகுதிகளில் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டு, ஒருவாறு உயிர் பிழைத்திருப்பதற்குத் தேவையான மிகக் குறைந்த வருமானத்தை ஈட்டிக்கொண் டிருக்கிறார்கள். முதற் பொருள்களைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்குவதன் வாயிலாக உள்நாட்டுப் பொருளியல் வளர்ச்சியடைந்து, அப்படி வளர்ச்சியடைந்த காரணத்தால், முன்னர்ப் பயிர்த் தொழிலில்மட்டுமே ஈடுபட்டிருந்த மக்கள் இப்போது ஆடை வகைகள்-காலணிகள்-வீடுகள்-வீட்டுப் பண்டங்கள்-உணவுப் பொருள்கள் ஆகிய பலதிறப் பண்டங்களை உற்பத்தி செய்து ஒருவருக்கொருவர் வழங்கிக்கொள்வார்களானால், அப்படி வழங்கிக் கொள்கிற அதே நேரத்தில் பெட்ரோலின் ஏற்றுமதி, பிற பொருள்களின் இறக்குமதி ஆகியவற்றின் மொத்த அளவு முன்னர் இருந்த நிலையிலேயே இருக்குமானால், அத்தகைய மாறுதலால் அந் நாட்டின் குடிமக்களுக்கு ஆதாயமே தவிர இழப்பு இல்லை; அதே சமயத்தில் அம் மாறுதலால் பிற நாடுகளுக்கும் இழப்பு எதுவும் கிடையாது. அத்தகைய மாறுதலின் விளைவாக, நாட்டு வருமானத்தில் அயல் நாட்டு வாணிபத்தின் வீதாசாரம் குறைந்துவிடும் என்பது

உண்மைதான். ஆனால் அந்த வீதாசாரம், மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்து வந்த வெனிசூலா முதலிய நாடுகளில் கடந்த காலத்தில் அளவுக்கு மீறிய உயரத்தில் இருந்துவந்தது என்பதும், அப்படி இருந்ததற்குக் காரணம் அந் நாடுகளின் உள்நாட்டுப் பொருளியலில் காணப்பட்ட வறுமை நிலையே என்பதும் உண்மையே அல்லவா ?

பத்தொன்பதாம் நூற்றாண்டின் உலகப் பொருளியலில் பன்னாட்டு வாணிபத்தின் பங்கு தலைசிறந்ததாக விளங்கியது என்றால், அதற்கு ஓரளவு காரணமாக இருந்தது, மூலப் பொருள்கள் மிகுந்த உலகப் பகுதி ஒன்றாகவும் அவை அற்ற பகுதி வேறொன்றாகவும் இருந்ததாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பன்னாட்டு வாணிப அமைப்பு, ஒரு குறிப்பிட்ட அளவு மூலவளங்களை உத்தமமான முறையில் ஒதுக்கீடு செய்வதற்கான ஒரு கருவியாகமட்டும் இருக்கவில்லை; டி. எச். ராபர்ட்சன் (D. H. Robertson) குறிப்பிட்டதுபோல வளர்ச்சிக்கான ஒரு கருவியாகவும் விளங்கியது.[13] அந்த வளர்ச்சியானது, முதலில் தொழில் வளர்ச்சியுற்ற நாடுகளில் உருவாகிப் பின்னர்ப் பிற பகுதிகளில் பரவலாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் இருந்த பன்னாட்டு வாணிபக் கோலம்தான் (Pattern) இயல்பான ஒன்று என்று கருதுகிற மனப்பான்மை ஐக்கிய அமெரிக்காவில் வாழ்பவர்களிடம் கூடக் காணப்படுகிறது. ஆனால் ஐக்கிய அமெரிக்காவின் பொருளியல் வளர்ச்சியே அந்தக் கோலத்திலிருந்து வியக்கத்தக்க முறையில் மாறுபட்டிருக்கிறது என்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள்.

ஆனால் ஒன்று: தொழில் வளர்ச்சி பெருகியுள்ள இன்றைய நிலையில், பன்னாட்டு வாணிப அருவியின் தலையாய பகுதிகள், பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளின் வழியாகப் பாயாமல் முன்னேற்றமடைந்துள்ள தொழில்துறை நாடுகளின் வழியாகவே ஓடிக் கொண்டிருக்கின்றன. ஒத்த நிலை வளர்ச்சியானது பன்னாட்டு வாணிபத்திற்கான ஓர் அருமையான கடைக்காலாக மட்டும் விளங்கவில்லை ; பொருள்களின் பற்றாக்குறை மிகுந்த நாடுகளில் குறையை நிறை செய்யும் கருவியாகவும் ஒளி வீசித் திகழ்கிறது.

## அயல்நாட்டு முதலீட்டின் மரபுவழிக் கோலம்
## (The Traditional pattern of foreign investment)

முதலீட்டுக்கான தூண்டுதலானது அங்காடியின் அளவைப் பொறுத்திருக்கிறது என்னும் பொருள்பற்றிய நம்முடைய கருத்தாய்வு, பன்னாட்டு முதலீடு என்னும் துறையில் நேரடியாகக் கையாளப்படக்கூடிய ஒன்றாகும்.

சென்ற சில ஆண்டுகளிலும் சரி, பத்தொன்பதாம் நூற்ருண்டிலும் சரி, வெளிநாடுகளில் செய்யப்பட்ட தனியார் வாணிப முதலீடானது, வளர்ச்சி குறைந்த நாடுகளின் உள்நாட்டு அங்காடிக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் ஈடுபடாமல், முன்னேறிய தொழில்துறை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்குரிய வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியிலேயே ஈடுபட்டதற்குரிய காரணம் யாது? அத்தகைய ஒரு போக்கு இருந்துவந்தது என்பதிலும், இப்போதும் இருந்துவருகிறது என்பதிலும் துளியளவும் ஐயமில்லை. இந்நூலின் நான்காவது அத்தியாயத்தில் அதற்குரிய சில எடுத்துக்காட்டுகள் தரப்பட்டிருக்கின்றன. வெளிநாடுகளில் செய்யப்படுகிற அமெரிக்க நேர்முக முதலீடுகள் (அதாவது, தனியார் வாணிப முதலீடுகள்) இத்தகைய போக்கைத்தான் கொண்டிருக்கின்றன) என்பது வெள்ளிடைமலையென விளங்குகிற ஓர் உண்மை. பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளைப் பொறுத்தவரை, ஏற்றுமதி செய்வதற்காகவே உற்பத்தியில் ஈடுபட்டுள்ள எண்ணெய்க் கிணறுகள், சுரங்கங்கள், தோட்டத் தொழில்கள் முதலிய விளைவுப் பறித் தொழில்களிலேயே (Extractive industries) அம் முதலீடுகள் செய்யப்பட்டுள்ளன. கனடா, மேற்கு ஐரோப்பா முதலிய பொருளியல் வளர்ச்சி மிக்க நாடுகளில்தான், அம் முதலீடுகள், உள்நாட்டு அங்காடிகளுக்குப் பண்டங்களை உற்பத்தி செய்யும் கைத்தொழில்களில் குறிப்பிடத்தக்க அளவு ஆர்வம் காட்டியுள்ளன. அயல் நாடுகளில் செய்யப்படும் முதலீடானது, பொருளியலில் முன்னேறியுள்ள—கடன் வழங்கும் நாடுகளின் தேவைகளையே நிறைவு செய்கிறது; அவ்வகையில் அந்நாடுகளின் ஒரு புறவாயிலாகவே அது காட்சி தருகிறது. ஜே. எஸ். மில் (J. S. Mill)[14] அவர்களால் கண்டறியப்பட்ட இந்த உண்மை, அண்மைக் காலத்தில் ஜே. எச். வில்லியம்ஸ் (J. H. Willams)[15] அவர்களால் வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளது.

இந்த உண்மையைத்தான், ஐக்கிய நாடுகள் மன்றத்தின் செயலாண்மைத் துறையைச் சேர்ந்த (The United Nations Secretariat) டாக்டர் எச். டபள்யூ. சிங்கர் (Dr. H. W. Singer) அயல் நாட்டு முதலீட்டின் மரபுவழி முறையைப்பற்றிய அவருடைய கண்டனத்தின் அடிப்படையாக அமைத்துக்கொண்டிருக்கிறார். அயல்நாட்டு முதலீடானது, பூகோளப் பொருளில்மட்டும்தான்[16] அயல்நாட்டு முதலீடாக இருந்திருக்கிறது என்றும், ஆனல் நடைமுறையில் அம் முதலீடு, கடன் வழங்கும் நாட்டுப் பொருளியலின் ஒரு பகுதியாகவே விளங்கியிருக்கிறது என்றும், கடன் பெறும் நாடுகளின் பொருளியல் வளர்ச்சியைப் பெருக்கும்

பணியில் அது ஈடுபடவேயில்லை என்று கூறிவிடலாம் என்றும், சில சமயங்களில் அது அவ் வளர்ச்சியைத் தடுக்கும் முட்டுக் கட்டையாகவும் இருந்திருக்கிறது என்றும் அவர் தெரிவித்திருக் கிறார்.

அவர் தெரிவித்துள்ள இந்தக் கருத்துகளெல்லாம் ஓரளவுக்கு மிகைபடக் கூறல் என்னும் குற்றத்திற்கு உள் ளாகின்றன என்று நான் கருதுகிறேன். முதலாவதாக, 1914ஆம் ஆண்டுவரை உள்ள நூறு ஆண்டுகளில் செய்யப்பட்டுள்ள முதலீட் டில் ஒரு சிறு பகுதியைப் பொறுத்த அளவில்தான் இந்தக் கருத் துகள் பொருத்தம் உடையனவாக இருக்கின்றன. அந்தக் காலத்தில், அரசாங்கங்களுக்கும் பொதுப் பயன்பாட்டுத் தொழில்களுக்கும் (Public utility undertakings) அளிக்கப்பட்ட அயல்நாட்டுத் தனியார் கடன்கள் குறிப்பிடத்தக்க அளவு இருந் திருக்கின்றன. 1870க்கும் 1914க்கும் இடைப்பட்ட ஆண்டு களில் செய்யப்பட்ட பிரிட்டிஷ் அயல்நாட்டு முதலீடுகளில் தனிப் பெரும் முதலீடாகத் திகழ்ந்தது, புகைவண்டித் தொடர் நிறு வனங்களின் பங்குகளில் செய்யப்பட்ட முதலீடேயாகும். அம் முதலீடானது, முதலீட்டுக்கு உள்ளாகிய நாடுகளின் பொதுவான வளர்ச்சிக்கு உரிய பயன்மிக்க அடிப்படையாகத் திகழ்ந்தது என் பது மறுக்கப்பட முடியாத உண்மை.

இரண்டாவதாக, குடியேற்ற முறை (Colonial type) என்று சொல்லப்படுகிற முறையைச் சேர்ந்த அயல்நாட்டு முதலீடு களைப் பொறுத்தவரையில்கூட - அதாவது, தொழில்துறை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்காகப் பின்தங்கிய நாடுகளில் அயல்நாட்டு மூலதனத்தால் நடத்தப்படுகிற விளைவுப்பறித் தொழில்களைப் பொறுத்தவரையில்கூட - அம் முதலீட்டுக்கு உள்ளாகிற நாடுகளில், முதலீட்டால் பலதிற நேர்முக நன்மை களும், மறைமுக நன்மைகளும் ஏற்படுகின்றன என்று நான் கருது கிறேன். முதலீட்டின் துணை விளைவுகள் (By products) என்கிற வகையிலாவது அந் நன்மைகள் அந் நாடுகளின் உள்நாட்டுப் பொருளியலின் வளர்ச்சிக்குப் படிப்படியாகத் துணை புரிகின்றன.

எது எப்படியிருந்தாலும், மொத்தமாகப் பார்க்கும்போது, பின்தங்கிய நாடுகளிற் செய்யப்படுகிற அயல்நாட்டுத் தனியா ரின் முதலீட்டைப் பொறுத்தவரை, கடன்பெறும் நாடுகளின் உள்நாட்டு அங்காடிகளுக்கான பொருள்களை உற்பத்தி செய்யும் துறைகளை வெறுத்து ஒதுக்குகிற போக்கும், அதே நேரத்தில் முன்னேறிய நாடுகளுக்குத் தேவைப்படுகிற வேளாண்மைப்

பொருள்களை ஏற்றுமதி செய்வதற்காக உற்பத்தி செய்கிற தொழில்களில் நேசமும் பாசமும் காட்டுகிற போக்கும் கொண்டதாகவே அம் முதலீடு இருந்திருக்கிறது. இது உண்மை; வெறும் இகழ்ச்சியில்லை. ஆனால் இந்த உண்மையை எடுத்துக்கூறுவது, நடைமுறை நிகழ்ச்சி ஒன்றைச் சுட்டிக்காட்டுகிற செயலே தவிர வேறில்லை. அப்படிச் சுட்டிக் காட்டிவிட்டால் போதுமா? ஏன் அது அப்படி நடக்கிறது என்பதை விளக்கிக் கூற வேண்டாமா?

அயல்நாட்டுத் தனியார் வாணிப முதலீடானது, பின் தங்கிய நாடுகளின் உள்நாட்டு அங்காடிகளுக்கான பண்டங்களை உற்பத்தி செய்வதில் ஆர்வம் காட்டாமல் ஒதுங்கி நிற்பதும், அதற்கு மாறாகத் தொழில்துறை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்குரிய பண்டங்களின் உற்பத்தியில் ஈடுபடுவதில் கடந்த காலத்தில் மிகுந்த ஆர்வம் காட்டியதும், வேண்டுமென்றே கையாளப்பட்ட ஒரு கொள்கையின் விளைவுகள் அல்ல; வஞ்சக எண்ணம் கொண்ட சதித்திட்டம் ஒன்றின் பகுதிகளும் அல்ல. ஏழை நாடுகளைச் சுரண்டிக் கொழுப்பதற்காகச் செல்வச் செழிப்பு மிக்க நாடுகளெல்லாம் ஒன்றுதிரண்டு மேற்கொண்ட ஒருங்கிணைந்த முயற்சிகள் என்றும் அவற்றைக் கூறமுடியாது. சில அயல்நாட்டு முதலீடுகளின் விளைவாகச் சுரண்டல் நடைபெற்றிருக்கக்கூடும்; இல்லை என்று நாம் இயம்பவில்லை. ஆனால் நாம் மேலே சுட்டிக்காட்டிய முறையில் நடைபெறுகிற அயல்நாட்டு முதலீட்டின் அமைப்பில் இயல்பாகவே சுரண்டல்தன்மை அமைந்திருக்கிறது என்று கூறப்படுவதை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. மேற்படி மரபுவழி அயல்நாட்டு முதலீட்டுக் கோலத்தில் வஞ்சக எண்ணம் எதுவும் பொதிந்திருக்கவில்லை. அத்தகைய முதலீட்டு முறை ஏன் உருவாயிற்று என்பதற்குச் சில பொருளியல் காரணங்கள் இருக்கின்றன. அக் காரணங்கள், தாமாகவே விளங்குகிற தன்மை படைத்தவை. வளர்ச்சி குறைந்த நாடுகளில் உள்ள நுகர்வோர், வறுமை மிகுந்தவர்களாகக் காட்சிதருவது ஒரு காரணம். உலகத்தின் தொழில்துறை நாடுகளில் காணப்படுகிற வேளாண்மைப் பொருள்களுக்கான அங்காடிகள், பெரிய அளவினவாகவும், பத்தொன்பதாம் நூற்றாண்டைப் பொறுத்தவரை மடமடவென வளர்ந்துவரும் இயல்புடையனவாகவும் இருந்தது மற்றொரு காரணம்.

இத்தகைய சூழ்நிலையில், அயல்நாட்டுத் தனியார் வாணிப முதலீடானது, கடன் வழங்கும் தொழில்துறை நாடுகளுக்குத் தேவையான குறைந்த விலையுள்ள உணவுப் பொருள்களையும் மூலப் பொருள்களையும் வழங்குகின்ற பணியில் ஈடுபடுவதும், அப்படி ஈடுபடுவதன் வாயிலாக அந் நாடுகளின் புறவாயில்கள்

போல் (அல்லது வெளி முற்றங்கள்போல்) காட்சி அளிப்பதும் இயல்பே அன்ருே? முதலீடு செய்யும் நாடுகளுக்கு முதன்மைப் பொருள்கள் (Primary commodities) தேவைப்படுகின்றன என்னும் நிலைமையிலிருந்துதான் அந் நாடுகளின் முதலீட்டுத் தூண்டுதலே உருவாகியிருக்கிறது. இந் நிலையில் பின்தங்கிய நாடுகளில் ஏற்றத் தாழ்வுள்ள ஒருவகைப் பொருளியல் வளர்ச்சி ஏற்படுவது, தவிர்க்க முடியாத விளைவேயாகும். ஆனுல் அண்மை ஆண்டுகளில், தொழில்துறை நாடுகளிலிருந்து முதன்மைப் பொருள்களுக்காக எழுகின்ற தேவை குறைந்துகொண்டு வருகிறது. அப்படிக் குறைந்து வருவதால், நாம் மேலே குறிப்பிட்ட அயல்நாட்டு முதலீட்டின் மரபுவழிக் கோலத்தின் பொருளியல் அடிப்படையானது, தன் பகுதிகளிற் சிலவற்றை இழந்து வருகிறது.[17]

பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளுக்குச் சென்று, அங்குள்ள உள்நாட்டு அங்காடிகளுக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் துறையில் ஈடுபடுவதற்குத் தேவையான தூண்டுதல், அயல்நாட்டுத் தனியார் வாணிப முதலீட்டுக்கு எப்போதுமே இருந்ததில்லை. அத்தகைய தூண்டுதலைத் தரமுடியாத அளவுக்கு அந்த அங்காடிகள் மிகச் சிறியனவாக இருக்கின்றன. தனியார் முதலீடுகள், பொதுவாக அங்காடித் தேவையின் (Market demand) அளவையும் இயல்பையும் பொறுத்தே அமைகின்றன. தனியார் வாணிபத் துறையினரால் செய்யப்படுகிற பன்னுட்டு முதலீடுகளும் இந்தப் பொது விதிக்கு உடன்பட்டவையே.

குறைந்த வருமானமுள்ள நாடுகளின் உள்நாட்டுப் பொருளியலில் தனியார் முதலீடு செய்யப்படுவதற்குத் தேவையான தூண்டுதலைத் தரமுடியாத அளவுக்குப் பலவீனமான நிலையில் அந் நாடுகளின் அங்காடிகள் இருப்பது, வெளிநாட்டு மூலதனத்தை மட்டுமல்லாமல் உள்நாட்டு மூலதனத்தையும் பாதிக்கிறது. அங்காடிகளின் இப் பலவீனம், அத்தகைய நாடுகளின் உள்நாட்டுச் சேமிப்புகள் பயன்படுத்தப்படும் முறையில் காட்சியளிக்கிற முக்கியமான ஒரு குறைபாடு ஏன் ஏற்படுகிறது என்பதை ஓரளவுக்கு விளக்கிக் காட்டுகிறது. அந் நாடுகளின் சேமிப்புகளைப் பொறுத்த முதற்பெரும் இடர்ப்பாடு, அந் நாடுகளின் வருமான அளவு சிறியதாக இருக்கும் காரணத்தால் அவற்றின் சேமிப்புகளும் சிறிய அளவினவாக இருப்பதே. ஆனுல் அதைத் தொடர்ந்துவருகிற மற்ருேர் இடர்ப்பாடு, அச் சிறிய அளவு சேமிப்புகள்கூட உற்பத்திக்குப் பயன்படாத முறையில் கையாளப்படுகின்றன என்பதே. அதாவது, அச்சேமிப்புகள், நிலங்கள், வீடுகள், தங்கம், நகைகள், பண்டங்களைப் பதுக்குதல், அயல் நாட்டுச்

செலாவணிகளை (Currency) அல்லது உள்நாட்டுச் செலவாணி களைப் பதுக்குதல் ஆகிய துறைகளிலேயே பயன்படுத்தப்பட்டுவிடு கின்றன.[18] நிதித்துறை அமைப்புகள் (Financial organisations) அல்லது கல்வி வசதிகள் போதிய அளவில் இல்லாததே விரும்பத் தகாத இந்தப்போக்குக்கு உரிய காரணம் என்று பொதுவாகக் கூறப்படுகிறது. அத்தகைய கூற்றில் ஓரளவு பொருத்தம் இருக் கிறது என்றபோதிலும், இந்தப் போக்குக்கு மிக ஆழமான அடிப் படை பொருந்திய பொருளியல் காரணமும் இருக்கிறது என்று நான் கருதுகிறேன். உள்நாட்டு அங்காடியின் அளவு சிறியதாக இருக்கும் காரணத்தால் முதலீட்டுக்கான தூண்டுதல் போதிய அளவில் இல்லாததே அந்தப் பொருளியல் காரணமாகும்.

தனியார் முதலீடு, அங்காடிகளாலேயே தூண்டப்படுகிறது. முதலீட்டுத் தூண்டுதல்களுக்கும் அங்காடித் தேவைக்கும் உள்ள உறவு முறையை விளக்கும் ஒரு குறிப்பான எடுத்துக்காட்டை வேக வளர்ச்சிக் கோட்பாட்டில் (Acceleration principle) நாம் காணமுடிகிறது. இட அளவு, கால அளவு ஆகிய இரண்டிலுமே இந்த உறவு முறை பொதிந்திருக்கிறது. காரணி வீதாசாரங்கள் (Factor proportions), மூலதன இயக்கங்கள் (Capital move-ments) ஆகியவைபற்றிய வழக்கமான கோட்பாடு என்ன வென்ருல், எந்தெந்த நாடுகளில் நிலத்தோடும் உழைப்போடும் ஒப்பிடும்போது மூலதனத்தின் அளவு குறைவாக இருக்கின்றதோ அந்தந்த நாடுகளில், மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தி, ஆதாய விளைவு ஆகியவை உயர்வாக இருக்கும் என்பதும், அத்தகைய நிலையில் ஆபத்து (Risk) முதலான தடைகள் இல்லாமல் இருக்கு மானல், மூலதனமானது, அது மிகுதியாக இருக்கும் நாடுகளி லிருந்து அது குறைவாக உள்ள இந் நாடுகளுக்கு வந்து சேரும் என்பதுமே ஆகும். இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்வதற்குமுன் ஓர் உண்மையை நாம் நினைவில் நிறுத்திக்கொள்வது நல்லது. மூலதனப் பற்ருக்குறை உள்ள நாடுகளில் மூலதனத்தின் ஆதாய விளைவு மிகுதியாக இருக்கக்கூடிய சாத்தியக்கூறு இருக்கிறது என்றபோதிலும், ஒன்றிற்கொன்று துணையாக இருக்கக்கூடிய பல்வேறு தொழில்களில் ஒரே சமயத்தில் முதலீடு செய்வதன் மூலமாகத்தான் (அல்லது, பல்வேறு துறைகளில் உற்பத்தியைப் பெருக்கக்கூடிய பொதுவசதித் தொழில்களில் முதலீடு செய் வதன் வாயிலாகத்தான்) நடைமுறையில் அத்தகைய ஆதாய விளைவைப் பெறமுடியும். உற்பத்தியில் ஏற்படுகிற ஒத்தநிலை உயர்வானது, அங்காடியின் அளவைப் பெருக்குவதன் வாயி லாகப் புறச் சிக்கன நலன்களை (External economics) உருவாக்கு கிறது. இந்தக் காரணத்தாலும் வேறு பல காரணங்களாலும்,

தனியாரின் மூலதன இறுதிநிலை உற்பத்தித் திறனுக்கும் (Private marginal productivity of capital) சமுதாயத்தின் மூலதன இறுதி நிலை உற்பத்தித் திறனுக்கும் (Social marginal productivity of capital) இடையே வேறுபாடு இருக்கிறது என்பதை நாம் முன்னரே அறிந்திருக்கிறோம். பணக்கார நாடுகளின் மூலதன இறுதி நிலை உற்பத்தித் திறனைவிட ஏழை நாடுகளின் மூலதன இறுதிநிலை உற்பத்தித் திறன் உண்மையிலேயே கூடுதலாக இருக்கலாம். ஆனால் அது அப்படி இருப்பது தனியாரின் தொழில்துறையில் தான் என்று கூறுவதற்கில்லை.

அரசியல் தடைகளையும் பிறவகை ஆபத்துகள் (Risks) ஏற்படக்கூடும் என்கிற நிலைமையையும் ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் கூட, தனியார் துறை வாணிகர்களுக்கு இயல்பாக இருக்கக்கூடிய நோக்கங்களின் விளைவாகப் பணக்கார நாடுகளிலிருந்து மூலதனமானது ஏழை நாடுகளுக்குச் சென்றே தீரும் என்று சொல்லிவிட முடியாது. மூலதனப் பற்றுக்குறை உள்ள நாடுகளில், நுகர்வோரின் வாங்கும் திறன் குறைவாக இருக்கும் காரணத்தால் தனியாரின் முதலீட்டுத் தூண்டுதல்கள் குறைந்த ஆற்றல் உடையனவாக இருந்து, மூலதனத்தை மிகுதியாக உடைய நாடுகளில் செழிப்பு மிகுந்த பெரிய அளவு அங்காடி இருக்கும் காரணத்தால் தனியாரின் முதலீட்டுத் தூண்டுதல்கள் மிகுந்த ஆற்றல் படைத்தனவாக இருக்குமானால், முதல்வகை நாடுகளிலிருந்து இரண்டாம் வகை நாடுகளுக்கு மூலதனம் செல்கிற விபரீத நிலைமை உருவாகக்கூடும். அண்மை ஆண்டுகளாக ஐக்கிய அமெரிக்காவில் கிடைக்கக்கூடிய வாணிப ஆதாயங்கள் (Business profits) மிக உயர்ந்த அளவினவாக இருப்பது, அமெரிக்க வாணிப மூலதனம் பிற நாடுகளுக்குச் செல்வதைத் தடுக்கும் ஒரு முக்கியமான முட்டுக்கட்டையாக விளங்குகிறது என்று சொல்லப்படுகிறது அல்லவா? அப்படிச் சொல்லப்படுவது, நாம் மேலே சுட்டிக்காட்டிய அடிப்படையில்தான்.[19]

ஆனால் இந்த நிலைமைக்கு நேர்மாறாக, சில சமயங்களில், வளர்ச்சி குறைந்த நாடுகளில், உள்நாட்டு அங்காடிக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில்கூட, மிக உயர்ந்த அளவில் வாணிப ஆதாயங்கள் கிடைக்கின்றன என்பது உண்மையே. சில சமயங்களில் அவ்வாறு நிகழ்வதாலேயே நான் மேலே சுட்டிக்காட்டிய கருத்து, தவறானதாகிவிடாது. வளர்ச்சி குறைந்த நாடுகள் சிலவற்றில் அங்காடியின் பல்வேறு பகுதிகளும் ஒரே நேரத்தில் விரிவாக்கப்பட்டு வரலாம். அப்படி விரிவாக்கப்படுவதால் அந் நாடுகளில் மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறன் பெருகி, அதன் விளைவாக வாணிப ஆதாயங்கள் பெருகக்

கூடும். சில நாடுகள், இன்னும் பின்தங்கிய நிலையிலேயே இருந்த போதிலும், தங்களுடைய உள்நாட்டுப் பொருளியலைப் பெருக்கிக் கொள்ளும் பணியில் ஈடுபட்டுள்ளன. அத்தகைய நிலையில் அவற்றில் கிடைக்கக்கூடிய வாணிப ஆதாயங்கள் உயர்வது இயல்பே. ஆனல் சில சமயங்களில் அவ்வாறு பொருளியல் வளர்ச்சி ஏற்படாத நிலையில்கூட ஆதாயங்கள் உயர் அளவின வாக இருக்கக்கூடும். அப்படி இருப்பதற்குரிய ஒரு காரணம், அத்தகைய நாடுகளில் தொழில் துணிவு மற்றும் நிர்வாக ஊழியங் கள் கிடைக்கும் அளவு குறைவாகவும், ஆகவே அவற்றிற்குக் கிடைக்கும் விலை மிகுதியாகவும் இருப்பது ஆகும். மற் ருெரு காரணம், பண்ட இருப்புக்களால் ஏற்படுகிற போலியான ஆதாயங்களும் (Illusory investory profits), நிலை முதற் பொருள் களைப் புதுப்பிக்காததால் ஏற்படுகிற ஆதாயங்களும், ஆதாயங் கள் என்கிற தலைப்பின்கீழ்ச் சேர்க்கப்பட்டிருப்பதாகும். கடைசி யாகக் குறிப்பிடப்பட்ட இருவகை ஆதாயங்களும் பணவீக்க நிலைமைகளில் ஏற்படுவது, பரவலாகக் காணப்படக்கூடிய ஒரு நிகழ்ச்சியே.

வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டில் ஒத்தநிலை வளர்ச்சி ஏற்படு கின்றபோதுகூட, பன்னுட்டு முதலீடு அங்கு நடைபெறுவதற்கு ஏராளமான வாய்ப்புகள் இருக்கின்றன என்பது உண்மைதான். ஆனல், அந்தப் பன்னுட்டு முதலீடு நேர்முகத் தனியார் வாணிப முதலீடாக இருக்குமானல் அத்தகைய முதலீட்டுக்குரிய வாய்ப்பு கள் குறுகிய அளவுடையனவே. பின்தங்கிய ஒரு நாட்டின் உள் நாட்டுப் பொருளியலில், உற்பத்தித் திறன், மெய்யான வாங் குந் திறன், முதலீட்டுத் தூண்டுதல்கள் ஆகியவை குறைவாக இருக்கும் காரணத்தால் உருவாகிற முட்டுக்கட்டைகளை உடைத் தெறிவதற்கு உரிய விருப்பம் இருந்தால்கூட, அதற்குத் தேவை யான ஆற்றல், தனியார் துறை முதலீட்டாளருக்கு இருப்பது அரிது. அயல்நாட்டுக் கைத்தொழில்களில் செய்யப்பட்டுள்ள அமெரிக்காவின் நேர்முக வாணிப முதலீடுகள் பெரும்பாலும், ஏற்கெனவே உயர்ந்த அளவு தொழில் வளர்ச்சியைப் பெற்றுள்ள மேற்கு ஐரோப்பிய நாடுகள், கனடா ஆகிய நாடுகளுக்குச் சென்றுள்ளனவே தவிர, தொழில் துறையில் பின்தங்கியுள்ள நாடுகளுக்குச் செல்லவில்லை. (''1948இல் நடைபெற்ற ஐக்கிய அமெரிக்க நேர்முக முதலீடுகளின் சதவிகிதப் பங்கீடு '' என்னும் தலைப்பின்கீழ், இந் நூலின் நான்காவது அத்தியாயத்தில் தரப் பட்டுள்ள பட்டியலைக் காண்க.) இப்படியெல்லாம் நடைபெறு வதைப் பார்த்தால், அயல்நாட்டு வாணிப முதலீடானது, செல்வத்தை உடையவர்களுக்கே மேலும் செல்வம் வழங்கப்

படும் '' என்னும் விதியைப் பின்பற்றுகிறது போலும் என்றே சொல்லத் தோன்றுகிறது! ஆனால் இப்படி நடைபெறுவது வியப் பிற்கு உரிய ஒன்று அன்று. பொருளியல் வளர்ச்சிக்கான மூலதனத் திரட்சி நடைபெறுவதைத் தடுக்கிற நச்சு வளையம் ஒன்றில், பல் வேறு சக்திகள், ஒன்றை ஒன்று பின்னிக்கொண்ட முறையில் இணைந்து கிடப்பதற்கான மற்றொரு சான்று இது. அவ்வளவு தான்.

இதுவரை நாம் எடுத்துக்கூறிய இவ்வளவும் நேர்முக வாணிப முதலீட்டுக்கு மட்டுமே பொருந்தும். ஆனால், தனியார் மூலதன இயக்கங்கள் உச்சநிலையில் இருந்த காலத்தில்கூட, பன்னாட்டு மூலதன இயக்கங்களின் மொத்த அளவில், நேர்முக வாணிப முதலீடுகள், ஒரு சிறு பகுதியாகத்தான் அமைந்திருந்தன. பன்னாட்டு முதலீடுகளில், பிற நாட்டு அரசாங்கங்களின் செலவுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக அளிக்கப்பட்ட அயல்நாட்டுத் தனியார் கடன்கள், எப்போதுமே சிறப்பான ஓர் இடத்தைப் பெற்றிருக்கின்றன. 1870ஆம் ஆண்டு முதல் 1913ஆம் ஆண்டு வரை நடைப்பெற்றுள்ள பிரிட்டிஷ் மூலதன ஏற்றுமதிகளிற் பெரும்பகுதி, நிலையான வட்டியுடைய பத்திரங்களிலேயே (Fixed interests bearing securities) முதலீடு செய்யப்பட்டுள்ளது.[20] இந் தக் கால அளவில் செய்யப்பட்டுள்ள பன்னாட்டு முதலீடுகளின் மொத்த அளவில் ஏறத்தாழ மூன்றில் இரண்டு பங்கு, அயல்நாட்டு அரசாங்கங்களின் கடன் பத்திரங்களிலும், புகை வண்டித் தொடர் நிறுவனங்களின் பத்திரங்களிலுமே போடப்பட்டிருக் கிறது. இவற்றைத் தவிர, பன்னாட்டு முதலீட்டின் மற்றொரு பகுதி, துறைமுக வசதிகள், காற்று மற்றும் தண்ணீர் வழங்கும் நிறுவனங்கள், மின்சார உற்பத்தி நிலையங்கள் முதலிய பொதுப் பயன்பாட்டு இயல்புடைய உடைமைகளில் போடப்பட்டிருக் கிறது. இவற்றையெல்லாம் கழித்துவிட்டுப் பார்த்தால் பன்னாட்டு முதலீட்டின் ஒரு சிறு பகுதி மட்டுந்தான், குடியேற்ற முறை (Colonial type) முதலீட்டில்-அதாவது, கடன் வழங்கும் நாடு களிற் பயன்படுத்துவதற்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் முறையில், அந் நாட்டவரால், பின்தங்கிய நாடுகளில் தம் உடைமைகளாக நடத்தப்படும் அரங்கங்கள், தோட்டத் தொழில் கள் ஆகியவற்றில் செய்யப்படும் முதலீட்டில்-போடப்பட்டிருக்கும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும். அப்படி விளங்கினால், பத்தொன்பதாம் நூற்றாண்டில் செய்யப்பட்ட பன் னாட்டு முதலீட்டின் பொது இயல்பே குடியேற்ற முறை முதலீடு தான் என்று முடிவு செய்வது எத்துணைப் பெருந்தவறு என்பது தெற்றெனப் புலனாகும்.

ஒரு நாட்டின் அரசாங்கங்களால், பிற நாட்டுத் தனியார் தரும் கடன்களிலிருந்து அல்லது பிற நாட்டு அரசாங்கங்கள் தரும் கடன்களிலிருந்து செய்யப்படும் முதலீடுகளைத் தன்னுரிமை முதலீடுகள் (Autonomous investments) என்று அழைக்கலாம். ஏனென்றால், அத்தகைய முதலீடுகள், அங்காடித் தேவையின் (Market demand) அளவைப் பொறுத்து அமைவதில்லை என்றே சொல்லிவிடலாம். அவற்றிற்கு மாறாக, நேர்முக வாணிப முதலீடுகளிற் பெரும்பாலானவற்றைத் தூண்டப்பட்ட முதலீடுகள் (Induced investments) என்னும் பிரிவில் சேர்க்கலாம். ஏனென்றால், அவை பொதுவாக, ஏற்கெனவே அமைந்துள்ள - அல்லது, தெளிவாகத் தெரியும் முறையில் உருவாகிக்கொண்டுள்ள - திட்டவட்டமான அங்காடித் தேவையால் தூண்டப்படவேண்டிய அவசியத்தில் இருப்பவை. இவ்வாறாக, வர்ணிபச் சுழல்பற்றிய இலக்கியத்தின் வாயிலாக நன்கு அறிமுகமாகியுள்ள தன்னுரிமை முதலீட்டுக்கும் தூண்டப்பட்ட முதலீட்டுக்கும் இடையேயுள்ள பொதுவான வேறுபாடானது, ஒரு குறிப்பிட்ட பொருளில், பன்னாட்டு முதலீட்டுக்கும் பொருந்தும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், வாணிபச் சுழல்பற்றிய கோட்பாட்டிலும் சரி, பன்னாட்டு முதலீட்டைப் பொறுத்த அளவிலும் சரி, இந்த வேறுபாடானது, அளவைப் பொறுத்த வேறுபாடே தவிர, தன்மையைப் பொறுத்த வேறுபாடு அன்று.

தனியார் வாணிபத் துறையினரால் செய்யப்படுகிற பன்னாட்டு முதலீடு, அங்காடிகளால் தூண்டப்பட்டே செய்யப்படுகிறது. ஏழை நாடுகளைப் பொறுத்தவரை, அவற்றில் குறிப்பிடத்தக்க அளவில் உள்நாட்டு அங்காடிகள் அமைந்திராத காரணத்தால், மர்பெரும் தொழில் துறை நாடுகளுக்குப் பண்டங்களை ஏற்றுமதி செய்யும் அங்காடிகள்தான் முதலீட்டுக்கான தூண்டுதல்களைப் பலம் பொருந்திய முறையில் அளிக்க முடியும். ஆகவேதான் அயல்நாட்டு வாணிபத் தொழில் துணிவானது, ஏற்றுமதி செய்வதற்காகப் பண்டங்களை உற்பத்தி செய்கிற விளைவுப் பறித் தொழில்களிலேயே முழுமூச்சுடன் ஈடுபட்டிருக்கிறது. என்னுடைய கருத்தில், 'மரபு வழி' முறையில் அமைந்த இத்தகைய அயல்நாட்டு முதலீட்டில் உள்ள கோளாறு, அது தீதான ஒன்று என்பது அன்று; பொருளியல் வளர்ச்சியைப் பெருக்குவதற்கு அது பயன்படுவதில்லை என்பதும் அன்று. உண்மையை உள்ளபடி உரைப்பதானால், அது பொருளியல் வளர்ச்சியைப் பெருக்கத்தான் செய்கிறது. அப் பெருக்கம், எல்லாத் துறைகளிலும் ஒரே அளவில் ஏற்படாமல் இருக்கலாம்; மறைமுகமாக நிகழ்வதாகவும் இருக்கலாம். ஆனால் பெருக்கம் ஏற்படுகிறது

என்பதுமட்டும் உண்மை. ஆனால் மரபுவழி அயல்நாட்டு முதலீட்டால் ஏற்படுகிற உண்மையான சிக்கல் என்னவென்றால், பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்டதைப்போல் முதன்மைப் பொருள்களுக்கான உலகத் தேவையானது மாபெரும் அளவிலும் இடையீடு இல்லாமலும் உயர்ந்துகொண்டே போனாலொழிய, அம் முதலீடானது போதுமான அளவில் நிகழ்வதில்லை என்பதுதான். இந்தச் சிக்கலைப்பற்றிப் பின்னர் ஒரு முறை மீண்டும் ஆராய்வோம்.

இதுவரை நம்மால் பகுத்தாய்வு செய்யப்பட்ட சிக்கல் அல்லது இடர்ப்பாடு சிறப்பாகவும் குறிப்பாகவும், நேர்முகத் தனியார் முதலீட்டைப்பற்றியதே - அதாவது, தூண் டப்பட்ட முதலீட்டைப்பற்றியதே. அத்தகைய முதலீட்டை உருவாக்குவது, அம் முதலீடு செய்யப்படுவதற்குமுன் இருக்கிற அங்காடித் தேவையின் அளவே யாகும். ஆனால் தன்னுரிமை வகையைச் சேர்ந்த பன்னாட்டு முதலீடுகளைப் பொறுத்த வரை, அவை அங்காடிச் சிக்கலால் பாதிக்கப்படுவதில்லை; பாதிக்கப்பட வேண்டிய தேவையுமில்லை. ஆனால் ஒன்று: ஏழை நாடுகளில் தனியார் வாணிப முதலீட்டைத் தடுக்கிற முட்டுக் கட்டையால் (அங்காடித் தேவையால்) பாதிக்கப்படாமல் பன்னாட்டுத் தன்னுரிமை முதலீடு விடுதலை நிலையில் வாழ்கிறது என்றபோதிலும், அதற்கென்றே ஏற்பட்டுள்ள வேறு சில இடர்ப்பாடுகளாலும் சிக்கல்களாலும் அது பாதிக்கப்படுகிறது என்பதை இங்கு நாம் சுட்டிக்காட்டத்தான் வேண்டும். ஆனால் அந்த இடர்ப்பாடுகளுக்கும் சிக்கல்களுக்கும், நாம் இந்த அத்தியாயத்தில் கருத்தாய்வுக்கு எடுத்துக்கொண்டுள்ள தலைப்புக்கும் இடையே எத்தகைய தொடர்பும் இல்லை ; அந்த இடர்ப்பாடுகளும் சிக்கல்களும், இந் நூலின் நான்காவது அத்தியாயத்தில்தான் நம் கருத்தாய்வுக்கு வரும்.

இந்த அத்தியாயத்தில் இதுவரை நம்மால் பகுத்தாய்வு செய்யப்பட்ட கருத்துக்களை இப்போது தொகுத்துச் சுருக்கிக் கூறுவது நலம் பயக்கும் என்று கருதுகிறேன். அயல்நாட்டு முதலீட்டின் 'மரபுவழி' முறையைக் கண்டனம் செய்யும்போது, எச். டபள்யூ. சிங்கர் (H. W. Singer), கடந்த கால முதலீட்டுக் கோலத்தின் விளைவாக, ''வளர்ச்சி குறைந்த நாடுகளின் ஏற்றுமதித் தொழில்கள் - அவை உலோகத் தொழில்களாக இருந்தாலும் சரி, தோட்டத் தொழில்களாக இருந்தாலும் சரி - பெரும்பாலும் மூலதனச் செறிவு மிகுந்தனவாக இருக்கின்றன'' என்றும், ''அதற்கு மாறாக, உள்நாட்டில் பயன்படுத்தப்படுவதற்கான பண்டங்களின் உற்பத்தி - குறிப்பாக, உணவு, உடை

ஆகியவற்றின் உற்பத்தி, மிகப் பழைய - பிழைப்பு முறையில் அமைந்த (Of subsistence nature) ஒன்ருக இருக்கிறது''[21] என்றும் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பொது முடிவு பொருத்த மாக இருக்கிற அளவுக்கு - இப் பொது முடிவில் ஓரளவு வர்ணனைப் பொருத்தம் இருக்கிறது என்று நான் உறுதியாக நம்பு கிறேன். முதலீடுகளைத் தூண்டுவதில் அங்காடியின் அளவுக்கு ஒரு முக்கியமான பங்கு இருக்கிறது என்னும் உண்மையை நிலைநாட்டு வதற்கு இதைவிடச் சிறந்த சான்று வேறு இருக்கமுடியாது. வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கலின் தேவைப் பகுதியில் (Demand side of the problem of capital formation) ஒரு பற்ருக் குறை இருக்கக்கூடும் என்னும் கருத்தை இந்த அத்தி யாயத்தின் தொடக்கத்தில் நான் எடுத்துக் கூறினேன் அல்லவா? - அந்தக் கருத்தை அழுத்தந் திருத்தமான வகையில் ஆதரிப்பதாக இருக்கிறது, சிங்கர் அவர்களின் பொது முடிவு.

ஆனுல் அந்தப் பற்ருக்குறையானது, குறைந்த வருமான முள்ள நாடுகளின் தனியார் முதலீட்டுத் தூண்டுதலைப் பொறுத்த மட்டும்தான் - அந்த முதலீடு ஒரு குறிப்பிட்ட தொழிலில்மட்டும் தனித்த முறையில் நடைபெறும்போது மட்டும்தான்-உருவாகிறது என்பது தெளிவு. வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டின் பொருளியல் முழுவதையும் ஒருங்கே வைத்துப் பார்க்கும்போது மூலதனம் அல்லது முதற்பொருளுக்கான தேவையில் பற்ருக்குறை இருப்ப தில்லை. இந்தக் கண்ணேட்டத்தில் பார்த்தால், முதலாக்கச் சிக்க லின் தேவைப் பகுதியில் எழும் இடர்ப்பாடு, அதன் அளிப்புப் பகுதியில் (Supply side) எழக்கூடிய இடர்ப்பாட்டிலிருந்து மாறு பட்டது என்பது நன்கு புலனுகும். மூலதனத்திற்கான தேவை யில் இருக்கக்கூடிய பற்ருக்குறையை, மூலதனத்தின் சமுதாய இறுதிநிலை உற்பத்தித் திறனுக்கும் தனியார் இறுதிநிலை உற்பத்தித் திறனுக்கும் இருக்கக்கூடிய வேறுபாட்டை அகற்றுவதற்கான ஏற்பாடுகள் உள்ளிட்ட பல்வேறு நடைமுறைத் திட்டங்களை உரு வாக்குவதன்மூலம் நிறை செய்துவிடலாம் அல்லது அகற்றி விட லாம். மூலதனத்திற்கான சமுதாயத் தேவையின் (Social demand for capital) பயனைத் தனியார் வாணிபத் துறைக்குக் கிடைக்கும் படிச் செய்வதோ, அல்லது அரசாங்க முதலீட்டின்மூலம் அந்தத் தேவையை நேரடியாக நிறைவேற்றுவதோ, இயலக்கூடிய செயல்கள்தாம். இத்தகைய சிக்கல் ஒன்று இருக்கிறது என்பதை மட்டும் தொடர்புடையவர்கள் உணர்ந்துகொள்வராயின், அந்தந்த நாட்டில் உள்ள நிலைமைகளுக்கு ஏற்ற முறையில் இச் சிக்கலைத் தீர்ப்பதற்கான திட்டங்கள் வகுப்பது மிகக் கடினமான செயலாக இருக்கமுடியாது என்பது என் கருத்து.

முதலாக்கச் சிக்கலின் தேவைப் பகுதியைமட்டும் செம்மை யாக அமைத்துக் கொள்வதன்மூலம் எந்த நாடும் அச் சிக்கலை மிக எளிதில் தீர்த்துவிட முடியும் என்று நான் இங்குத் தெரிவிப்ப தாக யாரும் கருதிவிடக் கூடாது. முதலாக்கச் சிக்கலின் தேவைப் பகுதியைப் போலவே அளிப்புப் பகுதியிலும் பல்வேறு இடர்ப் பாடுகள் இருக்கின்றன. அந்த இடர்ப்பாடுகள், தேவைப் பகுதி யின் இடர்ப்பாடுகளைவிட ஆழமான அடிப்படை உடையவை. அப்படி இருந்தபோதிலும், நாம் இதுவரை அவற்றைப்பற்றிப் பயிலாமல் தேவைப் பகுதியின் இடர்ப்பாடுகளைப்பற்றி மட்டுமே கருத்தாய்வு செய்ததற்குக் காரணம், நம் கருத்தாய்வு, குழப்பம் அற்றதாக இருக்கவேண்டும் என்பதுதான்.

முதலாக்கம் நடைபெறவேண்டுமானால், முதலீட்டுச் செயல், சேமிப்புத் திறன் ஆகிய இரண்டும் இருந்தாகவேண்டும் என்ற போதிலும், பகுத்தாய்வு (Analysis) செய்வதற்காகவாவது, அந்த இரண்டையும் தனித்தனியாகப் பிரித்துப் பார்க்கவேண்டும்; பிரித்துப் பார்க்க முடியும். முதலீட்டுத் தூண்டுதல்கள்பற்றிய சிக்கல், இடர்ப்பாடுகள் மிகுந்ததுதான் என்றபோதிலும், தீர்க்க முடியாதது அன்று. இந்தச் சிக்கலைப்பற்றி இதுவரை நாம் ஆராய்ந்தோம். பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான மூலதன அளிப்பைப்பற்றிய சிக்கல், முதலீட்டுத் தூண்டுதல்கள்பற்றிய சிக்கலைவிட இடர்ப்பாடுகள் மிகுந்தது. அடுத்து வருகிற அத்தியா யங்களில் அந்தச் சிக்கலைப்பற்றி ஆராய்வோம்.

## முதல் அத்தியாயத்திற்கான அடிக் குறிப்புகள்

1. இந்தப் புதிய கருத்துரையை, ஆல்லின் ஏ. யங் (Allyn A. Young), Economic Journal என்னும் பத்திரிகையின் 1928 டிசம்பர் இதழில், 'வளர்ந்துசெல் விளைவுகளும் பொருளியல் முன்னேற்றமும்' (Increasing Returns and Economic Progress) என்னும் தலைப்பில் வெளியாகியுள்ள புகழ்மிக்க அவருடைய கட்டுரையில் தந்துள்ளார். (கேம்பிரிட்ஜைச் சேர்ந்த ஆர். வி. கிளெமன்ஸ் (R. V. Clemence) அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 1950ல் வெளியிடப்பட்டுள்ள (Readings in Economic Analysis) என்னும் நூலிலும் இக் கட்டுரை இணைக்கப்பட்டுள்ளது.) உற்பத்தித் துறையில் மூல தனத்தைப் பயன்படுத்துவதற்கும் உழைப்பின் பகுப்பிற்கும் (Division of labour) இடையே நெருங்கிய தொடர்பு இருக் கிறது என்பது, எளிதில் உணரப்படக்கூடிய உண்மை. ஆடம் ஸ்மித் (Adam Smith) அவர்களேகூட இந்த உண்மையை நன்கு உணர்ந்திருக்கிறார்.

2. இந்த எடுத்துக்காட்டுகளையும், இவை போன்ற பிற எடுத்துக் காட்டுகளையும், ஜி. வைத் (G. Wythe) [redacted]

in Latin America என்னும் நூலில் (நியூ யார்க், 1951) காண்க.

3. பால் என். ரொசென்ஸ்டீன்—ரொடான் (Paul N. Rosenstein—Rodan) என்பார், Economic Journal என்னும் பத்திரிகையின் 1943 ஜூன் - செப்டம்பர் இதழில் (பக்கம் 205) எழுதியுள்ள "கிழக்கு மற்றும் தென்கிழக்கு ஐரோப்பாவின் தொழில்மயச் சிக்கல்கள்" (Problem of Industrialisation of Eastern and South - Eastern Europe) என்னும் கட்டுரையைக் காண்க.

4. மாபெரும் அளவில் வறுமையால் வாடும் சமுதாயங்களில், தொழில்துணிவு, தொழில்முனைப்பு ஆகிய பண்புகள், தொடக்க நிலையில் மிகக் குறைந்த அளவினவாகவே இருக்கும். இந்தக் காரணத்தால் மூலதனத்திற்கான தேவை (Demand for capital) சுருங்கிய அளவுடையதாக இருக்கும். மேலே குறிப்பிடப்பட்டுள்ள இடர்ப்பாடுகள் யாவும், இந்த இடர்ப்பாட்டோடுகூட, இதற்கு மேலாக எழுவனவே. குறைந்த வருமானமுள்ள நாடுகளின் மூலதனத் தேவையை, நுகர்வோர் தேவையின் நெகிழ்ச்சியின்மை, தொழில்நுணுக்க மாறுதல்கள், தொழில் துணிவின்மை ஆகிய மூன்று காரணிகளும் எந்தெந்த வழிகளால் குறைக்கின்றன என்பதை மிகத் துல்லியமான முறையிலும் விரிவான வகையிலும் ராபர்ட் ஜி. லிங்க் (Robert G. Link) அவர்கள் எடுத்துக் கூறியுள்ளார். அதற்காக அவருக்கு நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

5. ஜே. எஸ். மில் (J. S. Mill) அவர்களால் எழுதப்பட்டு London School of Economics என்னும் நிறுவனத்தால் 1948ல் மறு பதிப்பாக வெளியிடப்பட்டுள்ள Essays on Some Unsettled Questions of Political Economy என்னும் நூலைக் காண்க. (பக்கம் 73)

6. Capitalism, Socialism and Democracy என்னும் நூலைக் காண்க. (மூன்றும் பதிப்பு, நியூ யார்க், 1950, பக்கம் 68)

7. 1941ல் வெளியான Review of Economic Statistics என்னும் நூலில் ஷிகேடோ சுரு (Shigeto Tsuru) என்பவரால் எழுதப்பட்டுள்ள "1868—93ல் ஜப்பானில் ஏற்பட்ட பொருளியல் உயர்வுதாழ்வுகள்" (Economic Fluctuations in Japan 1868—93") என்னும் கட்டுரையைக் காண்க. இக்கருத்து, வேறு பல நூலாசிரியர்களாலும் எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது. இந்தத் துறையில் ஜப்பானுக்கு ஏற்பட்டுள்ள அநுபவத்தை, ஜோசப் ஜே. ஸ்பெங்ளர் (Joseph J. Spengler) என்பார், Proceedings of the American Philosophical Society என்னும் நூலில் (பிப்ரவரி 1951, பக்கம் 44) வெளியாகியுள்ள "மக்கட் செறிவு மிக்க வட்டாரங்களின் வளர்ச்சியில் பொருளியல் காரணிகள்" ("Economic Factors in the Development of Densely Populated Areas") என்னும் தம் கட்டுரையில் பின் வருமாறு எழில்மிகு முறையில் சுருக்கித் தந்துள்ளார்;

தொழில் துணிவோர்களின் எண்ணிக்கை போதிய அளவில் இல்லாத குறையை, அரசாங்கம், அவர்கள் செய்யக்கூடிய பணிகளிற் பலவற்றைத் தானே செய்வதன்மூலமும், பிறவற்றைக் கைப் பொருத்தமான பணவழிக் கைக்கோள்கள், நிதி வழிக் கைக்கோள்கள், இவற்ரேடு தொடர்புடைய பிற வகைக் கைக்கோள்கள் ஆகியவற்றைக் கையாள்வதன் வாயிலாகத் தனியார் துறையினர் அவற்றை மேற்கொள்ளும்படிச் செய்வதன்மூலமும், நிறை செய்திருக்கிறது.''

8. ஜேகப் வைனரால் (Jacob Viner) எழுதப்பட்டு, American Economic Review என்னும் இதழில் (மார்ச் *1949*, பக்கம் *371*) வெளியாகியுள்ள ''பெந்தாமும் ஜே. எஸ். மில்லும் : பயன்பாட்டுவழிப் பின்னணி'' (''Bentham and J. S. Mill : The Utilitarian Background'') என்னும் கட்டுரையைக் காண்க. ''பீட்டர் என்னும் பேரரசரின் காலத்தில் ரஷ்யாவில் தனியாரின் தொழில் துணிவுகள் மிகக் குறைவாக இருந்த காரணத்தால் அரசாங்க முயற்சிகளின் வீதாசாரம் மிகக் கூடுதலாக இருந்தது'' என்னும் எடுத்துக்காட்டைப் பெந்தாம் தந்துள்ளார்.

9. ஜோசப் ஜே. ஸ்பெங்க்ளர் இந்தக் கருத்துக்களையெல்லாம் பின்வரும் முறையில் அருமையாகச் சுருக்கித் தந்துள்ளார் : தொழில் முன்னேற்றமானது, குறிப்பிடத்தக்க அளவுக்கு, (அ) கற்பனைத் திறனும் சுறுசுறுப்பும் மிகுந்த புத்தமைப்பாளர்களும் (Innovators) தொழில் துணிவோர்களும் சமுதாயத்தில் எத்தனை பேராக உள்ளனர் என்னும் எண்ணிக்கை; (ஆ) தேவையான தகுதிகளைப் பெற்றுள்ள இவர்களுக்கு, பொருத்தமான முடிவுகளைச் செய்யவும் அவற்றை நிறைவேற்றவும் எந்த அளவுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது என்னும் உண்மை; (இ) இடையூறுகளாக இருக்கக் கூடிய சட்டமுறை ஏற்பாடுகள், நிறுவன ஏற்பாடுகள் ஆகியவற்றிலிருந்து இவர்கள் எந்த அளவு விடுதலை அடைந்திருக்கிருர்கள் என்னும் நிலைமை—ஆகிய இந்த மூன்று காரணிகளையும் பொறுத்ததாகவே அமைந்திருக்கிறது; கடந்த காலத்தில், எந்தெந்த நாடுகளில் ஆற்றல் வாய்ந்த நடுத்தர வகுப்பினர் வாழ்ந்திருந்து அரசாங்கத்திடமிருந்து போதிய ஆதரவைப் பெற்றுத் திகழ்ந்தார்களோ அத்தகைய நாடுகளில்தான், இந்தக் காரணிகள், தொழில் முன்னேற்றத்திற்கு ஏற்ற முறையில் அமைந்திருந்தன. ஆனல் அதே சமயத்தில், போதிய அளவு ஆற்றலுடைய நடுத்தர வகுப்பினரைப் பெற்றிராத நாடுகள், அரசாங்கத்திடமிருந்தே, தொழில் துணிவுத் தலைமையை முடிந்த அளவுக்குப் பெறவேண்டியிருந்தது.'' (முன் குறிப்பிட்ட நூல், பக்கம் 22)

10. இந்தக் கருத்தைப் பொறுத்தவரை ஓரளவு குழப்பம் இருப்பதற்கு ஆடம் ஸ்மித்தே காரணகர்த்தாவாக இருக்கிருர் என்று கூறலாம். ஏனென்ருல், அவர், 'உழைப்பின் பகுப்பானது அங்காடியின் அளவைப் பொறுத்தேயிருக்கிறது, என்னும் தம்முடை[illegible]பெரும் கோட்பாட்டை விளக்கிக்

கூறுகையில், பெரும்பாலும் அங்காடியின் நிலப்பரப்பைப் பற்றியே கருத்தாய்வு செய்துள்ளார். அந்தக் கருத்தாய்வும் கிட்டத்தட்டக் குறைந்த செலவை உடைய போக்குவரத்துச் சாதனங்களின் நலன்களைமட்டுமே எடுத்துக் கூறுவதாக (அதிலும் குறிப்பாக நீர்வழிப் போக்குவரத்தின் நலன்களை மட்டுமே எடுத்துக் கூறுவதாக) அமைந்துவிட்டது. உழைப்பின் பகுப்பிற்கும், உற்பத்தி முறைகளில் மூலதனத்தைப் பயன்படுத்துவதற்கும் இடையே உள்ள நெருங்கிய தொடர்பை அவர் நன்கு அறிந்திருந்தார். மூலதனத்தை எந்த அளவு பயன்படுத்தலாம் என்பது, அங்காடியின் அளவையே பொறுத்திருக்கிறது என்னும் கருத்தை அவர் தந்துள்ளார். இது அடிப்படைத்தன்மை வாய்ந்த - இன்றியமையாத - ஓர் உண்மையாகும். ஆனால் இதுமட்டுமே முழு உண்மையன்று. இந்த உண்மையை அவர் தெளிவாக உணர்ந்திருந்த அளவுக்கு இந்த உண்மையின் மறுபுறத்தை உணர்ந்திருக்கவில்லை. அதாவது, உழைப்பின் பகுப்பானது அங்காடியின் அளவைப் பொறுத்திருக்கிறது என்பதைப் போலவே, அங்காடியின் அளவு, பெரும் அளவுக்கு, உழைப்பின் பகுப்பையே (அதாவது, மூலதனம் கையாளப்படும் அளவையே) பொறுத்திருக்கிறது என்பதை அவர் உணரவில்லை. இந்த உண்மையை எடுத்துக்காட்டுவதற்கு மாறாக, அங்காடியின் அளவைத் தீர்மானிப்பவை போக்குவரத்து வசதிகளே என்று அவர் வற்புறுத்திக் கூறலானார். வட்டமான உறவுமுறையை (Circular relation) எடுத்துக்காட்ட விழையாத அவர், அதற்கு மாறாக, ஒன்று மற்றொன்றைப் பாதிக்கிறது என்கிற நேர்முகக் காரண காரிய வரிசை முறையைமட்டும் எடுத்துக் காட்டியுள்ளார்.

11. ஐக்கிய நாடுகள் சங்கத்தின் பொதுச் செயலாளரால் நியமிக்கப்பட்ட நுண்ணறிஞர் குழுவின் Measures for the Economic Development of Underdeveloped Countries என்னும் நூல், மே 1951, பக்கம் 23.

12. 1945ல் சர்வதேச சங்கத்தால் (League of Nations) வெளியிடப்பட்ட ஃபோல்க் ஹில்கெர்ட் (Folke Hilgerdt) அவர்களின் Industrialisation and Foreign Trade என்னும் அறிவொளி மிகுந்த நூலைக் காண்க.

13. Economic Journal என்னும் பத்திரிகையின் 1938 மார்ச் இதழின் 5ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள "பன்னாட்டு வாணிபத்தின் எதிர்காலம்" (The Future of International Trade) என்னும் கட்டுரையைக் காண்க. [இக் கட்டுரை, இப்போது எச். எஸ். எல்லிஸ் (H. S. Ellis), எல். ஏ. மெட்ஸ்லர் (L. A. Metzler) ஆகியோரைப் பதிப்பாசிரியர்களாகக்கொண்ட Readings in the Theory of International Trade என்னும் நூலில் (பிலடெல்பியா, 1949) இணைக்கப்பட்டுள்ளது.]

14. Principles of Political Economy என்னும் நூல், பாகம் 3, அத்தியாயம் 25, துணைப் பிரிவு 5.

15. Economic Journal என்னும் பத்திரிகையின் 1929 ஜூன் இதழில் வெளியாகியுள்ள ''பன்னாட்டு வாணிபக் கோட்பாடு பற்றிய மறு ஆய்வு'' (The Theory of International Trade Reconsidered") என்னும் கட்டுரையைக் காண்க. [இக் கட்டுரை, இப்போது, மேலே சுட்டிக் காட்டப்பட்ட Readings in the Theory of International Trade என்னும் நூலில் இணைக்கப்பட்டுள்ளது.]

16. American Economic Review, Papers and Proceedings (மே 1950) என்பதில் வெளியாகியுள்ள ''முதலீடு செய்யும் நாடுகளுக்கும் கடன்வாங்கும் நாடுகளுக்கும் இடையே ஆதாயங்களின் பங்கீடு'' ("Distribution of Gains between Investing and Borrowing Countries") என்னும் கட்டுரை.

17. Royal Institute of International Affairs என்னும் நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ள The Problem of International Investment என்னும் நூல் (லண்டன், 1937) பக்கம் 14.

18. பதுக்கப்படுவது உள்நாட்டுச் செலாவணியா அல்லது வெளிநாட்டுச் செலாவணியா என்பது மிக முக்கியமான ஒரு வேறுபாடு என்பது தெளிவு. உள்நாட்டுச் செலாவணி பதுக்கப்பட்டால், அது எந்த அளவுக்குப் பதுக்கப்படுகிறதோ அந்த அளவுக்குக் கடன் பெருக்கத்தை ஏற்படுத்துவதன்மூலம், அதனை உள்நாட்டு முதலீட்டுக்குரிய சேமிப்பாக ஆக்க முடியும். அதற்கு மாறாக, பதுக்கப்படுவது வெளிநாட்டுச் செலாவணியாக இருந்தால், சேமிப்புகள் வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டுவிட்டன என்று பொருள். அத்தகைய நிலை, நாட்டின் பொருளியலுக்கு ஓர் உண்மையான இழப்பாகும்.

19. சர் ஆர்தர் சால்டரின் (Sir Arthur Salter) Foreign Investment என்னும் நூலின் (Essays in International Finance, பிரின்ஸ்டன், 1951) 36ஆம் பக்கத்தைக் காண்க. இதுவரை நாம் கூறியதெல்லாம், ஜான் எச். வில்லியம்ஸ் (John H. Williams) என்பார் எடுத்துள்ள கீழ்க்கண்ட முடிவுக்குப் பொருந்திவருகின்றன: ''அமெரிக்க முதலீட்டைப் பொறுத்தவரை, அம் முதலீட்டிற் பெரும்பகுதி, அயல்நாட்டில் தனியாரால் செய்யப்படுகிற முதலீடாக இருக்கும் என்று கூறமுடியாது. அமெரிக்கா உலகத்தில் ஏற்கவேண்டிய பங்கு ஒரு கடன் வழங்கும் நாட்டின் பங்காக இருக்கிறது. ஆனால் அமெரிக்காவில் உள்ள நிலைமைகளோ, அமெரிக்க நாட்டினர் மட்டுமல்ல, பிற நாட்டினர்கூட அமெரிக்காவிலேயே முதலீடு செய்வதற்கு ஏற்றனவாக அமைந்துள்ளன. நம்முடைய புதிரின் (Puzzle) ஒரு பகுதி இது. இரண்டு உலகப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தின் வரலாற்றில், இத்தகைய முறைகேடான மூலதன இயக்கங்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இத்தகைய மூலதன இயக்கங்களால் பன்னாட்டு ஒத்தநிலை (International equilibrium) சீர்கேடு அடைந்திருக்கிறதே தவிரச் செப்பனிடப்படவில்லை.'' [American Economic Review, Papers and Proceedings என்னும் நூலின்

(மே *1951*, பக்கம் *425*) International Trade Theory and Policy: Some Current Issues என்னும் கட்டுரையைக் காண்க.] இரண்டு உலகப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் ஒத்த நிலையைக் குலைக்கும் வகையில் ஏற்பட்ட மூலதன இயக்கங்கள், பெரும் அளவுக்கு அரசியல் அச்சங்கள்; நாணயமாற்று வீதங்கள்பற்றிய ஊக வாணிபம் (Speculation regarding exchange rates) *1944*ல் சர்வதேச சங்கத்தால் வெளியிடப்பட்ட International Currency Experience என்னும் நூலில் விவரிக்கப்பட்டுள்ள இன்ன பிற இயல்பல்லாத காரணிகள் ஆகியவற்றின் விளைவாக ஏற்பட்டவை என்றே நான் இன்னமும் கருதுகிறேன். ஆனால் அம் மூலதன இயக்கங்கள், ஓரளவுக்கு, முற்றிலும் இயல்பான தனியார் ஆதாயத் தூண்டுதல்களாலும் (Private Profit Incentives) உருவாகியிருக்கின்றன என்று கூறலாம்.

*20*. ஜே. எஸ். பெஸ்மசோகுலு (J. S. Pesmazoglu) என்பாரால் எழுதப்பட்டு, Review of Economic Studies என்னும் இதழில் (*1949—50*, பக்கம் *120*) வெளியாகியுள்ள "பிரிட்டிஷ் வாணிபச் சுழல் ஏற்றத்தாழ்வுகளின் சில பன்னாட்டு இயல்புகள் *1870—1913*" ("Some International Aspects of British Cyclical Fluctuations: *1870—1913*") என்னும் கட்டுரையைக் காண்க.

*21*. மேற்கூறிய இதழ், பக்கங்கள் *473—474*.

# 2. மக்கள் தொகையும் மூலதன அளிப்பும்

இதுவரை நம்முடைய கருத்தாய்வு, ஒரு குறிப்பிட்ட நாடு அல்லது சில குறிப்பிட்ட நாடுகளோடுமட்டும் தொடர்புடையதாக இல்லாமல், பொதுப்படையான அடிப்படையிலேயே செய்யப்பட்டிருக்கிறது; இனியும் அவ்வாறே தொடர்ந்து செய்யப்படும். ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கத்திற்காக அந்த நாடுகளில் இருக்கக்கூடிய மூல வளங்களைப்பற்றி ஆராயத் தொடங்கும்போது, பல்வேறு நாடுகளை, மிகை மக்கள் தொகை உடைய நாடுகள் (Overpopulated countries), குறை மக்கள் தொகை உடைய நாடுகள் (Underpopulated countries) என்னும் இரண்டு பெரும் பிரிவுகளாகவாவது பிரித்துக்கொள்ளாவிட்டால், கருத்தாய்வு செய்வது இயலாத செயலாக மாறிவிடும். மிகைமக்கள் தொகை உடைய நாடுகளின் மூலதன அளிப்பைப் பற்றிய சிக்கலை (The Problem of Capital Supply) முதலில் ஆய்வுக்கு எடுத்துக்கொள்வோம். இந்தச் சிக்கல், குறைமக்கள் தொகை உடைய நாடுகளின் மூலதன அளிப்புப்பற்றிய சிக்கலிலிருந்து, சில தன்மைகளில், குறிப்பிடத்தக்க அளவு மாறுபடுகிறது.

## மக்கட்செறிவு மிக்க நாடுகளில் மிகையாகவுள்ள மக்கள் தொகை

தென்கிழக்கு ஐரோப்பாவிலிருந்து தென்கிழக்கு ஆசியாவரையில் உள்ள - மக்கட் செறிவு மிகுந்த - வேளாண்மை நாடுகள் அத்தனையிலும், கிராமப் பகுதிகளின் மிகைமக்கள் தொகை என்னும் சிக்கல், அவற்றிற்குரிய ஒரு சிறப்பியல்பாக அமைந்திருக்கிறது. வேளாண்மைத் துறையில் தீவிரமான முறையிலும் பெரிய அளவிலும் வேலைக் குறைவு நிலை (Under employment) அமைந்

திருப்பது, இந்த நாடுகள் யாவற்றிலும் காணப்படுகிற ஒரு பொது இயல்பாகும். செல்வங்கள் அத்தனைக்கும் உரிய பிறப்பிடம் உழைப்புத்தான் என்று கருதப்படுகிறது. ஆனால் அத்தகைய உழைப்போ இந்த நாடுகளில் மாபெரும் அளவில் வீணாகிக் கொண்டிருக்கிறது. இப்படி வீணாகிக் கொண்டிருப்பதால் மூலதன ஆக்கத்தில் ஏற்படுகிற விளைவு எத்தகையது என்பதைத்தான் நாம் இப்போது கருத்தாய்வு செய்ய இருக்கிறோம். இக் கருத்தாய்வின் தொடர்பில், நான் கரந்துறை வேலையின்மை (Disguised unemployment) என்னும் கருத்தைப் பயன்படுத்த விழைகிறேன்.

இந்த நாடுகளில் இப்போது பயன்படுத்தப்படுகிற வேளாண்மைத் தொழில் நுணுக்க முறைகளை மாற்றாமல் இருந்தால்கூட, இப்போது இந் நாடுகளில் உற்பத்தியாகும் வேளாண்மைப் பொருள்களின் அளவைக் குறைக்காமலே, வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ள மக்களில் ஒரு பெரும் பகுதியினரை அத்துறையிலிருந்து அகற்றிவிட முடியும். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், இந்த நாடுகளில், கரந்துறை வேலையின்மையானது பெரும் அளவில் காணப்படுகிறது என்பது வெளிப்படை. நாம் இப்போது செய்ய இருக்கிற கருத்தாய்வில், கரந்துறை வேலையின்மை என்னும் கருத்தை இந்தப் பொருளில்தான் கையாளப் போகிறோம். இப்போது இந்த நாடுகளில் உற்பத்தி செய்யப்படுகிற இதே அளவு வேளாண்மைப் பொருள்களை, இப்போது இத் துறையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களைவிடக் குறைந்த எண்ணிக்கையுள்ள தொழிலாளர்களால் உற்பத்தி செய்யமுடியும். வேளாண்மைத் தொழில்நுணுக்க முறைகளில் எத்தகைய முன்னேற்றமும் இல்லாமலே இதனைச் செய்து காட்டமுடியும் என்னும் உண்மை, இன்றியமையாத ஒன்றாகும். தற்போது கையாளப்படுவதைவிடச் சிறந்த தொழில்நுணுக்க முறைகளைக் கையாண்டால், தற்போது பணியாற்றும் தொழிலாளர்களைவிடக் குறைந்த எண்ணிக்கையினரைக் கொண்டு இதே அளவு உற்பத்தியைப் பெற முடியும் என்பது யாவரும் அறிந்ததே. ஆனால் இங்கே நாம் சுட்டிக் காட்ட விரும்புவது அந்த உண்மையை அன்று. தொழில் நுணுக்க முறைகளில் எத்தகைய முன்னேற்றத்தையும் ஏற்படுத்தாமலே - தற்போது உள்ள முறைகளை வைத்துக்கொண்டே - மேற்படி சாதனையைச் செய்து காட்ட முடியும் என்பதைத்தான் நாம் இங்கே எடுத்துக்காட்ட விழைகிறோம்.

முறைகளில் ஏற்படுகிற மாறுதல் என்றால் என்ன பொருள்? வேளாண்மைத் துறையில் மிகையாகவுள்ள மக்கள் தொகை, அந்தத் துறையைவிட்டு அகன்று செல்வது, அதன் அளவிலேயே ஒரு பெரிய மாறுதல் ஆகும். அந்த மாறுதலிலிருந்து வேறு பல

மாறுதல்கள் ஏற்படுவது தவிர்க்கமுடியாதது என்பதும் உண்மை. நம்முடைய தற்போதைய கருத்தாய்விலிருந்து எந்தெந்த மாறுதல்களை நாம் ஒதுக்க இருக்கிறோம். தொழில்நுணுக்க முன்னேற்றம், கூடுதலான தளவாடங்கள், பொறிமயமாக்கல் (Mechanisation), முன்னிலும் சிறந்த விதைகளைப் பயன்படுத்தல், வடிகால் ஏற்பாடுகளில் முன்னேற்றம், நீர்ப்பாசன வசதி ஆகியவற்றையும் இன்ன பிறவற்றையும் நாம் ஒதுக்க இருக்கிறோம். கரந்துறை வேலையின்மை பெரிய அளவில் காணப்படுவதால் ஏற்படக்கூடிய விளைவுகளைத் தனித்தெடுத்து ஆராய்வதற்காகவே இவற்றையெல்லாம் ஒதுக்கிவிடுகிறோமே தவிர, நடைமுறையில் கையாளப்பட வேண்டிய பொருளியல் வளர்ச்சித் திட்டம் எதிலுமிருந்து இவற்றையெல்லாம் ஒதுக்கிவிடுவது என்பது, எண்ணிக் கூடப் பார்க்க முடியாத ஒன்றாகும்.

ஆனால் ஒன்றைமட்டும் நாம் நம் கருத்தாய்விலிருந்து ஒதுக்கத் தேவையில்லை; ஒதுக்கவும் முடியாது. முன்னிலும் சிறந்த அமைப்புமுறை என்பதுதான் அது. வேளாண்மைத் துறையில் தற்போது மிகையாகவுள்ள உழைப்பாளர்கள் அதிலிருந்து அகற்றப்படுவராயின், அத்துறையில் எஞ்சியுள்ள உழைப்பாளர்கள், முன்னர் உழைத்து வந்த அதே முறையில் தொடர்ந்து உழைத்து வரமாட்டார்கள். துண்டு துண்டாகச் சிதறிக் கிடக்கும் நிலவுடைமைகளின் ஒழுங்கிணைப்பு (Consolidation of scattered holdings) உட்பட, உழைப்பின் தன்மையிலும் அமைப்பு முறையிலும் பல்வேறு மாறுதல்கள் ஏற்படக்கூடும் என்பதை நினைவில் நிறுத்திக் கொண்டு, அதற்கு ஏற்ற முறையில்தான் நம் கருத்தாய்வைச் செய்யவேண்டும்.

கரந்துறை வேலையின்மை என்னும் சொல்லமைப்பானது, கூலிக்கு வேலை செய்யும் தொழிலாளர்களுக்குப் பயன்படுத்தப்படுவதில்லை. வேளாண்மைச் சமுதாயங்களில் குடும்பம் குடும்பமாக - குடும்பத்தில் உள்ள அனைவரும் அல்லது பெரும்பாலோர் - வேளாண்மைப் பணியில் ஈடுபட்டுள்ள ஒரு நிலைமைக்குத்தான் அந்தச் சொல்லமைப்புப் பயன்படுத்தப்படுகிறது. சிறிய நிலவுடைமைகளில் மக்கள் பலர் பணியாற்றிக் கொண்டிருப்பார்கள். ஆனால் நடைமுறையில் அவர்களால் உற்பத்தியில் சிறிதளவு உயர்வும் ஏற்பட்டிருக்காது. ஆகவே, அவர்கள், அவர்களுடைய குடும்பத்தின் மெய் வருமானத்தின் ஒரு பகுதியைக் கொண்டே உயிர் வாழ்ந்து வருகிறார்கள் என்பது (அதாவது, குடும்பத்திலுள்ள பிறருடைய உழைப்பின் விளைவைக்கொண்டே உயிர் வாழ்ந்து வருகிறார்கள் என்பது) தெளிவு. கைத்தொழில் துறைகளில் வேலையில்லாமல் இருப்பவர்களைத் தனித்தனியே சுட்டிக்

காட்ட முடிவதைப் போல, வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ள குடும்ப உறுப்பினர்களில், இன்னின்னார்தாம் வேலையில்லாமல் இருப்பவர்கள் என்று சுட்டிக்காட்டுவது; இயலாத செயல். தொழில்துறை நாடுகளில் வேலையின்மை இருக்குமானால், அதனால் அந் நாடுகளின் மூலவளங்கள் எவ்வாறு வீணாகின்றன என்பது திட்டவட்டமாகவும் தெள்ளத்தெளிவாகவும் அனைவருக்கும் விளங்கிவிடுகிறது. அப்படி விளங்கிவிடுவதால் அந்தச் சிக்கல் நாட்டின் கவனத்தை விரிவான அளவில் பெற்றுவிடுகிறது. ஆனால் மிகை மக்கள் தொகையை உடைய வேளாண்மைப் பொருளியலில் எந்த ஒரு மனிதரையும் தனித்தெடுத்துச் சுட்டிக் காட்டி, இவர் கரந்துறை வேலையின்மைக்கு ஆளானவர் என்று குறிப்பிட முடியாது. அத்தகைய பொருளியலில், எல்லா மனிதர்களும் வேலை செய்துகொண்டிருப்பது போலத்தான் தோன்றும். எந்த மனிதரும், தாம் வேலையில்லாமல் வாளா கிடப்பதாகக் கருத மாட்டார். ஆனால், அதே சமயத்தில், தற்போது வேளாண்மையிலிருந்து கிடைக்கும் உற்பத்தியின் அளவில் எத்தகைய குறையும் ஏற்படாத முறையில், வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்களில் ஒரு பகுதியினரை அதிலிருந்து அகற்றமுடியும் என்கிற உண்மையை யாரும் மறுக்கமுடியாது.

தொழில்நுணுக்கச் சொற்களில் கூறுவதானால், இந் நிலையில், விரிவான அளவில் பார்க்கும்போது, உழைப்பாளர்களின் இறுதி நிலை உற்பத்தித் திறன் சுன்னமாக (Zero) இருக்கிறது என்று இயம்பலாம். அந்தத் திறன் எதிர்மறை எண்ணாக (Negative number) இருக்கக்கூடும் என்றுகூடச் சிலர் கருதுகிறார்கள். அதாவது, வேளாண்மையிலிருந்து சில மனிதர்களை அகற்றுவதன் வாயிலாக, வேளாண்மையின் உற்பத்தி அளவைக் கூடுதலாக்க முடியும் என்று எண்ணுகிறார்கள். அவர்கள் அப்படி எண்ணுவதற்குக் காரணம், தற்போது உள்ள நிலைமைகளில், வேளாண்மையில், தேவையைவிட மிகுதியான மக்கள் ஈடுபட்டிருப்பதால், அவர்கள் சிறந்த முறையில் பணியாற்ற முடியாதபடி ஒருவருக்கு ஒருவர் தடையாக விளங்குகிறார்கள் என்றும், ஆகவே, அவர்களிற் சிலர் அத் துறையைவிட்டு விலகிச் சென்றால் எஞ்சியிருப்பவர்கள் முன்னிலும் சிறப்பாகப் பணியாற்றுவார்கள் என்றும் அவர்கள் நம்புவதே. ஆனால் இந்த நம்பிக்கை, ஐயத்திற்கு உரிய ஒன்றாகவும், தேவையற்ற ஒன்றாகவும் எனக்குத் தோன்றுகிறது. தற்போதைய கருத்தாய்வில் இந்தக் கருத்தை நான் பயன்படுத்தப் போவதில்லை.

கரந்துறை வேலையின்மை என்னும் சொற்றொடரின் வரையறைக்குள் தொழில்நுணுக்க முறைகளில் ஏற்படும் மாறுதல்களை

நாம் சேர்க்கவில்லை. முறைகளில் ஏற்படும் முன்னேற்றங்கள் மிக மிக இன்றியமையாதவைதாம். ஆனால், வேளாண்மையில் உள்ள மிகைமக்கள் தொகையை முதலில் வெளியேற்றுமல் தற்போது கையாளப்படுவதைவிடச் சிறந்த உழவு முறைகளைக் கையாள முற்படுவது பயனற்ற செயல் என்பது, நுண்ணறிஞர்களின் கருத்தாகும். வேளாண்மைத் துறையில் தற்போது ஈடுபட்டுள்ள உற்பத்திக் காரணிகளில் சிலவற்றை அகற்றுமலிருக்கும்வரை, வேளாண்மை உற்பத்திமுறையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை ஏற்படுத்துவது இயலக் கூடிய செயலாகாது. இப்படிக் கூறுவது விசித்திரமான ஒரு புதிர் போலக் காணப்பட்டாலும் இந்தக் கூற்றுக்கு ஓரளவு பொருத்தமான அடிப்படை இருக்கத் தான் செய்கிறது. இந்த விரிவான கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, உழைப்பின் இறுதிநிலை உற்பத்தித் திறன் எதிர் மறை எண்ணை உடையதாக இருக்கிறது என்னும் கருத்தை ஏற்றுக் கொள்ளலாம்.

ஆனல் கரந்துறை வேலையின்மை என்னும் சொற்றொடரை, அதனுடைய திட்ட வட்டமான பொருளில்மட்டும் பயன்படுத்துவதாக இருந்தால், தொழில் நுணுக்க மாறுதல்களை அச் சொற்றொடரின் வரையறைக்குள் சேர்க்க முடியாது. கரந்துறை வேலையின்மை என்னும் நிலைமையானது ஐக்கிய அமெரிக்க நாட்டில்கூட இருக்கிறது என்பதை மறுக்க முடியாது. ஆனல், அந்நிலைமை ஐக்கிய அமெரிக்க நாட்டில் இருக்கிறதே தவிர அது அந் நாட்டின் பொது இயல்பு என்று புகலமுடியாது. அந் நாட்டில் இருக்கின்ற கரந்துறை வேலையின்மையின் அளவு மிகச் சுருங்கியதாகும். பியூர்டோ ரிகோ (Puerto Rico) முதலிய சில கரிபியன் வட்டாரங்களைத் தவிர்த்த (Caribbean regions) ஏனைய லத்தீன் அமெரிக்க நாடுகளைப் பொறுத்தவரையில்கூட அது பொது இயல்பாக இருக்கவில்லை. கரிபியன் வட்டாரங்களிற்கூட, எல்லா இடங்களிலும் காணப்படுகிற இயல்பு என்று அதனைக் கூற முடியாது.[1] ஆனல் தென்கிழக்கு ஐரோப்பாவிலிருந்து தென்கிழக்கு ஆசியா வரை உள்ள நிலப்பகுதியில் இருக்கின்ற பல நாடுகளைப் பொறுத்த வரை, கரந்துறை வேலையின்மையானது, அவற்றின் சிறப்பியல்பாக அமைந்திருக்கிறது. மிகை மக்கள் தொகையை உடைய இந்த வேளாண்மை நாடுகளில், சமூக இயல் - பொருளியல் - மக்கள் தொகைஇயல் காரணங்களின் விளைவாக, கரந்துறை வேலையின்மையானது, உண்மையிலேயே மாபெரும் அளவுடையதாகக் காட்சி தருகிறது. இந்த நாடுகளில் உள்ள உழைக்கும் மக்கள்தொகையின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்குமுதல் ஐந்தில் நான்கு பங்குவரை உள்ள மக்கள், வேளாண்

மைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். மாற்று வேலை வாய்ப்புகள் எவையும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இந்த நாடுகளில் செய்யப்பட்டுள்ள பல்வேறு மதிப்பீடுகளின்படிப் பார்த்தால் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ள இம் மக்கள் தொகை யில், 15 சதவிகிதம், 20 சத விகிதம், அல்லது சில நாடுகளில் 30 சத விகிதம் பேர்கூட, கரந்துறை வேலையின்மைக்கு (அச் சொற் றொடரை நாம் பயன்படுத்தியுள்ள பொருளில்) ஆளாகியுள்ளனர்.

1930 முதல் 1939 வரையுள்ள ஆண்டுகளில், தென்கிழக்கு ஐரோப்பிய நாடுகளிற் சிலவற்றில், அங்குள்ள கரந்துறை வேலையின் மையின் அளவைப்பற்றிய மதிப்பீடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில, விரிவான அளவீடுகள் (Surveys), பரிசோதனைகள் ஆகியவற்றின் அடிப்படையில் செய்யப்பட்டுள்ளன. வேளாண் மைத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களில் 25 முதல் 30 சத விகிதம் பேர் கரந்துறை வேலையின்மைக்கு ஆளாகியுள்ளனர் என்னும் உண்மை, அந்த மதிப்பீடுகளிலிருந்து தெளிவாகத் தெரி கிறது. இத் துறைபற்றிய அண்மைக் காலப் பொருளியல் இலக்கியத்தில் இம் மதிப்பீடுகள் பரவலாகப் பயன்படுத்தப்பட் டுள்ளன.[2] நான் இதுவரை அறிந்தவற்றுள் மிகக் கூடுதலான கரந்துறை வேலையின்மை, எகிப்து நாட்டைச் சேர்ந்ததாக இருக் கிறது. அங்குள்ள அவ் வேலையின்மை, 40 முதல் 50 சதவிகிதமாக இருக்கிறது.[3] இத்தகைய மதிப்பீடுகளை முழு அளவில் நம்ப முடி யாது என்பது இயற்கையே. கரந்துறை வேலையின்மைக்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவம் தரக்கூடாது என்றபோதிலும், அந்த வேலையின்மைக்கு ஆளானவர்கள் குறிப்பிடத்தக்க எண் ணிக்கையினராக இருக்கிறார்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

வேளாண்மைத் துறையில் காணப்படுகிற கரந்துறை வேலை யின்மையானது ஒரு குறிப்பிட்ட பருவத்தில்மட்டும் காட்சியளிக் கிற ஒரு நிகழ்ச்சிதான் என்றும், அறுவடைப் பருவத்தின் உச்ச கட்டத்தில், வேளாண்மைத் துறையில் உள்ள அத்தனை பேருடைய உழைப்பும் தேவைப்படுகிறது என்றும், உண்மை யிலேயே அவர்கள் அத்தனை பேரும் அப்போது நடைமுறையில் வேலை செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்றும் சில பொருளியல் அறிஞர்கள் கருதுகிறார்கள். சில நாடுகளைப் பொறுத்தவரை இத்தகைய நிலை இருக்கிறது என்பதை மறுக்கமுடியாது. ஆனால் ஏனைய நாடுகளில், நிலவுடைமை ஒருங்கிணைப்பு முதலிய அமைப்பு முறை மாறுதல்கள்மட்டும் செய்யப்பட்டுவிட்டால், அறுவடைப் பருவத்தின் உச்ச கட்டத்தில் இருக்கக்கூடிய வேளாண்மைப் பணிகள் அத்தனையையும், இப்போது அப்பணிகளை ஆற்றிக்

கொண்டிருப்பவர்களைவிடக் குறைந்த எண்ணிக்கை உடையவர்களைக் கொண்டு நிறைவேற்றிவிட முடியும். ஆண்டுக்கு ஒருமுறை மட்டுமே அறுவடை செய்யப்படக்கூடிய உணவுத் தானியங்கள் முதலிய பயிர்கள் வேளாண்மைத் துறையில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ள நாடுகளிலும், வேளாண்மைத் துறையில் பால் பண்ணைகளை நடத்துதல் முதலிய முன்னேற்ற முறைகள் கையாளப்படாத நாடுகளிலும்மட்டுமே பருவ கால வேலைக்குறைவு நிலை (Seasonal under employment), குறிப்பிடத் தக்க முதன்மை உடையதாக இருக்கக்கூடும். குறிப்பிட்ட சில பருவங்களில்மட்டுமே கரந்துறை வேலையின்மை காட்சிதரும் நாடுகளிற்கூட, உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஏற்ற வகையில் அதனைப் பயன் படுத்தவேண்டும் என்கிற பிரச்சினையும், முதலாக்கப் பணிக்கு அதனைப் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்கிற நிலைமையும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால், குறிப்பிட்ட பருவகாலங்களில் மட்டுமல்லாமல் ஆண்டு முழுவதுமே கரந்துறை வேலையின்மையை ஏராளமான அளவில் பெற்றுள்ள பல நாடுகள் இருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். எடுத்துக்காட்டாக, எகிப்து நாட்டில், ஒரே ஆண்டில் பல்வேறு தானியங்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் பயிரிடப்பட்டுவருகின்றன. அவற்றில் சில பயிர்கள் ஒரே ஆண்டில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட முறை அறுவடை செய்யப்படுகிற நிலையில் உள்ளவையாகும். இத்தகைய சூழ்நிலையில், அந்த நாட்டின் வேளாண்மைத் துறையில் இருக்கக்கூடிய வேலைக் குறைவு நிலை எதுவும், ஏறத்தாழ ஆண்டு முழுவதும் தொடர்ந்து வருவதாகவே இருக்க முடியும்.

வெளிப்படையாகத் தெரிகிற தொழில்துறை வேலையின்மைக்கும், கரந்து உறைகின்ற வேளாண்மைத் துறை வேலையின்மைக்கும் இடையே பலதிறப்பட்ட வேறுபாடுகள் இருக்கின்றன. பணவழித் தேவையைப் பெருக்குவதன் வாயிலாக அக் கரந்துறை வேலையின்மையை அகற்றமுடியாது என்பது, அவ் வேறுபாடுகளில் முதன்மையான ஒன்று. அவ்வாறு அகற்ற முடியாமற் போவதற்குக் காரணம், வேளாண்மை உற்பத்தியின் நெகிழ்ச்சியற்ற தன்மையே (Inelasticity) ஆகும். கூலிப் பொருள்களின் (Wage goods) அளிப்பானது - பெரும்பாலும் அவை உணவுப் பொருள்களாக இருக்கின்றன - குறுகிய காலத்தில், மாற்றமுடியாத அளவினதாக இருக்கின்ற காரணத்தால், விலைகள் உயர்வது ஒன்றுதான், பணவழிப் பெருக்கத்தின் விளைவாக ஏற்படும் பயனாக அமைந்துவிடுகிறது. ஆனால், வேளாண்மைத் துறையில் மிகையாக உள்ள மக்களை அத் துறையிலிருந்து அகற்றி

விட முடியும் என்கிற நிலைமை இருக்கிறது என்பது உண்மைதான். வேறு துறைகளில் அவர்களை ஈடுபடுத்துவதன் வாயிலாக எப் பண்டங்களையேனும் உற்பத்தி செய்ய முடியுமானால், அந்த உற்பத்தியின் விளைவாக, நாட்டின் மெய் வருமானம் கூடுத லாகும் என்பது வெள்ளிடை மலை. ஆனால், மூலதனம் இல்லாத நிலையில் அவர்களால் எதை உற்பத்தி செய்யமுடியும்? எதையும் உற்பத்தி செய்ய முடியாது என்றுதான் கூறவேண்டும். அப்படி யானால், மெய்ம் முதற் பொருள்களை (மெய்ம் மூலதனத்தை) உற் பத்தி செய்யும் பணியில் அவர்களை ஏன் ஈடுபடுத்தக்கூடாது? கரந்துறை வேலையின்மையை முதலாக்கப் பணிக்கு எவ்வாறு பயன்படுத்திக்கொள்ள முடியும் என்பதற்கான ஒரு சான்று இந்தக் கேள்வியில் பொதிந்திருக்கிறது. உழைப்பாளர்களின் நேர்முக இறுதிநிலை உற்பத்தித் திறன் சுன்னமாக இருக்கும் நிலைகளில்கூட, சுற்றுவழி உற்பத்தி முறைகளில் (Roundabout methods of production) - அதாவது, மூலதனத் திரட்சிப் பணி களில் - அவர்களை ஈடுபடுத்துவதால் கிடைக்கக்கூடிய மறைமுக விளைவானது, மூலதனப் பற்றுக்குறை உள்ள நாடுகளில், மிகக் கூடுதலாக இருக்கும் என்று தோன்றுகிறது.

நாம் மேலே எடுத்துக் கூறியிருப்பது, ஒரு நாட்டின் மக்கள் தொகை வளங்கள்பற்றிய ஓர் இயங்காநிலைக் கண்ணோட்டமே (A static view) ஆகும். இந்தக் கண்ணோட்டத்தில், நாம், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் உள்ள மக்கள் தொகையைமட்டும் கணக்கில் எடுத்துக்கொண்டு, தற்போது கிடைக்கும் வேளாண்மை உற்பத்தியில் எத்தகைய குறையும் ஏற்படாத முறையில் அவர்களில் ஒரு பகுதியினரை வேளாண்மைத் துறையி லிருந்து அகற்றிப் பிற துறைகளில் ஈடுபடுத்த முடியும் என்பதைக் கண்டறிந்தோம். இத்தகைய கண்ணோட்டத்தை இயங்கா நிலைக் கண்ணோட்டம் என்றும், இதற்கு மாறாக, மக்கள் தொகை வளர்ந்துகொண்டிருக்கும் நிலையில் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றிய கருத்தாய்வை இயங்குநிலைக் கண்ணோட்டம் (Dynamic view) என்றும் நான் அழைக்கிறேன். மக்கள் தொகை வளர்ச்சிச் சிக்கல்பற்றிய சில கருத்துக்களை நான் பின்னர்க் கூற இருக்கிறேன்.

## கிராமப்புற வேலைக் குறைவு நிலையில் மறைந்துகிடக்கும் சேமிப்பு ஆற்றல்

வேளாண்மைத் துறையில் மிகையாக உள்ள மக்களை அங் கிருந்து அகற்றி, நீர்ப்பாசனம், வடிகால், சாலைகள், புகை வண்டித் தொடர்கள், வீடுகள், தொழிற்சாலைகள், பயிற்சி தரும் ஏற்பாடுகள் முதலிய முதற்பொருள் திட்டங்களில் அவர்களை ஈடுபடுத்துவதற்குரிய வாய்ப்புகளைப்பற்றி இனிச் சற்று நுணுக்க

மாக ஆராய்வோம். அப்படி ஆராயத் தொடங்கியவுடன் எழுகின்ற முதற் கேள்வி, பலதிறப்பட்ட இம் முதலாக்கப்பணிகளுக்குத் தேவையான நிதிகளை எப்படிப் பெறுவது என்பதாகும். இதே கேள்வியை, மெய்யான சொற்களின் வடிவத்தில் (In real terms) எழுப்பவேண்டுமானால், இத்தகைய முதற் பொருள் திட்டங்களில் ஈடுபடுத்தப்படும் மக்களுக்குத் தேவையான உணவை எப்படிப் பெறுவது என்று கேட்கலாம்.

வறுமையும் மிகைமக்கள் தொகையும் உடைய வேளாண்மைப் பொருளியலில்கூட, மக்கள் தாமே விரும்பி ஓரளவு சேமிப்பைச் செய்வதுண்டு. இத்தகைய இயல்பான சேமிப்பிலிருந்து மேலே நாம் குறிப்பிட்ட மக்களுக்குத் தேவையான உணவைப் பெறலாம். ஏழை வேளாண்மை நாடுகளில் தாமே விரும்பிச் சேமிப்பவர்களிற் பெரும்பாலோர் நகரப் பகுதிகளைச் சேர்ந்த வாணிப வகுப்பினராக இருப்பர். இவ்வாறு சேமிப்பவர்கள், தங்கள் சேமிப்பு முழுவதையும் நுகர்வுப் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தி விடாமல் ஒரு பகுதியை மிகுத்துவைப்பதால், புதிய முதற்பொருள் திட்டங்களில் இப்போது ஈடுபடுத்தப்படுகிற மக்களுக்கு உணவளிக்க அதனைப் பயன்படுத்தமுடிகிறது. ஆனால் அப்படி ஈடுபடுத்தப்படுகிற மக்களின் தொகையோடு ஒப்பிடும்போது மேற்படிச் சேமிப்பால் கிடைக்கும் தொகை மிகக் குறைவாகவே இருக்கும். அது மட்டுமன்று; அந்தத் தொகையின் ஒரு பகுதி, வேறு பல துறைகளுக்காகவும் செலவிடப்படவேண்டியிருக்கும். ஆகவே, தானாக எழும் சேமிப்போடு (Voluntary Saving), மரபுவழி முறைகளிலும் நவீன முறைகளிலும் செய்யப்படுகிற ஆடம்பர நுகர்வின்மீது வரி விதிப்பதன் வாயிலாகக் கட்டாயச் சேமிப்பைச் செய்வதன் மூலமும் பணத்தைத் திரட்டவேண்டியிருக்கும். ஆனால் அப்படித் திரட்டப்படுகிற தொகைகூட, தேவையான தொகையோடு ஒப்பிடும்போது, மிகமிகச் சிறிய அளவினதாகவே இருக்கும். தேவைப்படுகிற மூலதனத்தைத் திரட்டுவதற்குரிய இரண்டாவது வழி, பிற நாடுகளிலிருந்து மூலதனத்தை வரவழைப்பதாகும். ஆனால் இந்த வகையில் எந்த அளவு தொகையைத் திரட்டமுடியும் என்பது உறுதியற்ற ஒன்றாக இருக்கிறது. அதோடு, இந்த வகையில் கிடைக்கக்கூடிய தொகை, நமக்குத் தேவைப்படுகிற தொகையைவிட மிகக் குறைவாகவே இருக்கும் என்று தோன்றுகிறது. தேவைப்படுகிற தொகையை எழுப்புவதற்கு மூன்றாவது வழி ஒன்று இருக்கிறது. இதைப்பற்றிச் சற்று விரிவான முறையில் ஆராய்வது இன்றியமையாதது.

நுணுக்கமான முறையில் ஆராய்ந்து பார்த்தால், கரந்துறை வேலையின்மை நிலையில் ஓரளவுக்காவது சேமிப்பு ஆற்றலும்

கரந்து உறைகிறது என்கிற முடிவுக்கு நாம் வரமுடியும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் முதலாக்கம் செய்வதற்குரிய இந்த ஊற்றுக் கால்பற்றிய ஆராய்ச்சி, பொருளியல் இலக்கியத்தில் இதுவரை புறக்கணிப்பட்டு வந்திருக்கிறது. கரந்துறை சேமிப்பு ஆற்றல் இருக்கிறது என்னும் உண்மையைத் திட்டவட்டமான முறையில் விளக்கிக் காட்டமுடியும். தற்போது உள்ள நிலைமையில், வேளாண்மைத் துறையில் ஈடுபட்டுள்ள பயன்தரா மிகை உழைப் பாளர்கள் (Unproductive surplus labourers), பயன்தரும் உழைப்பாளர்களாலேயே (Productive labourers) உணவளிக்கப் பட்டு வருகிறுர்கள். (இந்த இரு சொற்றொடர்களே, வசதியை முன்னிட்டே நாம் பயன்படுத்துகிறோம். முன்னரே எடுத்துக் காட்டப்பட்டதைப் போல, பயன்தரா உழைப்பாளர்கள் யார் யார் என்பதைத் தனித்தனியே சுட்டிக்காட்டுவது இயலாத செயல். ஆகவே, வேளாண்மையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர் களை மேற்குறித்தபடி இரண்டு தனித் தனிப் பிரிவினராக வகுப் பதும் இயலாத செயலே.) இத்தகைய நிலையில், பயன்தரும் உழைப்பாளர்கள், அவர்களால் நுகரப்படுவதைவிட மிகுதியான அளவு உற்பத்தி செய்கிறுர்கள் என்பதும், ஆகவே, அவர்கள் உண்மையில் சேமிக்கிறுர்கள் என்பதும் தெளிவு. ஆனல் அந்தச் சேமிப்பு வீணுகிவிடுகிறது. அந்தச் சேமிப்பு, கருவிலேயே சிதைந்து விடுகிறது. வேளாண்மைத் துறையில் பயன்தரா உழைப்பாளர் களாக இருந்துகொண்டு, உற்பத்தியைப் பெருக்காமலே உணவை அருந்திக் கொண்டிருப்பவர்களால், மேற்படிச் சேமிப்பு பயனற்றுவிடுகிறது. வேளாண்மைத் துறையில் உள்ள பயன் தரும் உழைப்பாளர்கள், அவர்களைச் சார்ந்து வாழ்ந்து, அவர் களால் ஈட்டப்படுகிற உணவை உண்டுகொண்டிருக்கிற அவர் களுடைய அண்ணன் தம்பிகள், மாமன் மைத்துனர்கள் முதலிய பயன்தரா உழைப்பாளர்களை, முதற்பொருள் திட்டங்களில் பணியாற்றும்படி அனுப்பிவிட்டு அவர்களுக்குத் தேவையான உணவைத் தொடர்ந்து தந்துகொண்டிருப்பார்களானல், அவர் களால் தற்போது செய்யப்பட்டுவருகிற கொள்கையளவுச் சேமிப்பானது, நடைமுறைச் சேமிப்பாக - பயனுள்ள சேமிப்பாக - மாறிவிடும். அந்த நிலையில், வேளாண்மைத் துறையில் உள்ள மிகைமக்கள் தொகையின் பயன்தரா நுகர்வானது, பயன்தரும் நுகர்வாக - அதாவது, உற்பத்திக்குப் பயன்படும் நுகர்வாக - மாறிவிடும்.

இவ்வாறுக, கரந்துறை வேலையின்மையை முதலாக்கப் பணிக்குப் பயன்படுத்தும் செயலுக்குத் தேவையான நிதியை அக் கரந்துறை வேலையின்மை என்னும் நிலைமையிலிருந்தே பெற

முடியும். வேளாண்மைத் துறையில் தொடர்ந்து இருக்கிற உழவர்களை, முன்னிலும் குறைந்த அளவு உணவை உட்கொள்ளும் படிக் கேட்கவேண்டிய தேவை இல்லை. அவர்கள் முன்னிலும் மிகுதியான அளவு உணவை உட்கொள்ளாதபடித் தடுக்கப் பட்டால் போதுமானது. தேவைப்படுவதெல்லாம், உழவுத் துறையைவிட்டு அகன்று முதற்பொருள் திட்டங்களில் பணி யாற்றச் செல்லுகிற அவர்களுடைய உறவினர்களுக்குத் தேவை யான உணவை அவர்கள் தொடர்ந்து அளித்துவரவேண்டும் என்பதுதான். வேறு சொற்களில் கூறவேண்டுமானால், முதற் பொருள் திட்டங்களில் பணியாற்றச் செல்பவர்கள், தாங்கள் உயிர் பிழைத்திருப்பதற்கு (For their subsistence), நிலங்களில் தொடர்ந்து பணியாற்றும் பயன்தரும் உழவர்களைச் சார்ந்திருக் கும் நிலையே தொடர்ந்து நீடிக்கும். முந்திய நிலைக்கும் பிந்திய நிலைக்கும் இடையே ஏற்படுகிற மாறுதல் ஒன்றே ஒன்றுதான்: உழவுத் துறை உழைப்பாளர்களில் ஒரு சாரார், முதற்பொருள் ஆக்கப் பணி என்னும் துறைக்கு மாற்றப்படுகிறார்கள் என்பது தான் அம் மாறுதல். வேளாண்மைத் துறையின் மொத்த உற்பத்தியில் குறைவு நேரிடாத முறையில் அத் துறையில் உள்ள உழைப்பாளர்களில் ஒரு சாராரை வெளியேற்றமுடியும் என்கிற நிலைமைமட்டும் இருக்குமானால், அப்படி வெளியேறுபவர்களும் சரி, வெளியேறாமல் தொடர்ந்து அத் துறையிலேயே இருப்பவர் களும் சரி, தற்போது அவர்கள் அருந்திவருகிற உணவின் அளவைக் குறைக்கவேண்டிய தேவையே இராது.

இக் கருத்தாய்வில் நுகர்வுக்கும் முதலீட்டுக்கும் இடையே காணப்படுகிற உறவு முறையானது, இத் துறைபற்றிய தொன் மைப் பொருளியல் கருத்தோட்டத்திற்கும் கீன்ஸ் வழிப்பட்ட (Keynesian) கருத்தோட்டத்திற்கும் இடைநடுவே அமைந்த ஒரு முறையாகக் காணப்படுகிறது. தொன்மைப் பொருளியல் கண்ணோட்டத்தின்படிப் பார்த்தால், நுகர்வின் அளவில் குறைவு ஏற்பட்டால்தான் முதலாக்க வீதத்தில் உயர்வு ஏற்படமுடியும். ஆனால் கீன்சின் கண்ணோட்டத்தின்படிப் பார்த்தால், தொழில்துறை வேலையின்மை காட்சியளிக்கிற சூழ்நிலையில், ஒரே நேரத்தில், நுகர்வு, முதலீடு ஆகிய இரண்டிலுமே உயர்வு ஏற்பட முடியும். நம்மால் கருத்தாய்வு செய்யப்படுகிற கரந் துறை வேலையின்மை நிலைமையில், நுகர்வு, முதலீடு ஆகிய இரண்டின் அளவையும் ஒரே நேரத்தில் பெருக்க முடியாது. ஆகவே, அந் நிலைமை, கீன்சின் கண்ணோட்டத்திலிருந்து மாறு படுகிறது. ஆனால் அதே சமயத்தில், அந் நிலைமையில், நுகர்வின் அளவைக் குறைக்காமலே முதலாக்க அளவைப் பெருக்கக் கூடியு

வாய்ப்பு இருப்பதால், அந் நிலைமை, தொன்மைப் பொருளியல் கண்ணேட்டத்திலிருந்தும் மாறுபடுகிறது.

இதுவரை நம்மால் செய்யப்பட்ட பகுத்தாய்விலிருந்து ஓர் உண்மை தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. மிகைமக்கள் தொகையை உடைய வேளாண்மைப் பொருளியல்களில் காணப் படுகிற கரந்துறை வேலையின்மையிலேயே, பொருளியல் வளர்ச் சிக்குப் பயன்படுத்தப்படக்கூடிய சேமிப்புத் திறன் ஒளிந்து கிடக் கிறது என்பதுதான் அந்த உண்மை. அந்த உண்மை தானுக விளங் கக்கூடிய ஒன்று. எனவே, அதைப்பற்றி இதற்குமேலும் விளக்க வேண்டிய தேவை இல்லை. ஆனுல், அந்த உண்மையை ஒரு பொதுவான கோட்பாடு என்கிற அளவில் நாம் ஏற்றுக்கொண்ட போதிலும், நடைமுறையில் அதனைப் பயன்படுத்துவதைப்பற்றி ஆராயத் தொடங்கியவுடன், பலதிறப்பட்ட இடர்ப்பாடுகளை நாம் எதிர்நோக்கவேண்டி யிருக்கும் என்பதில் ஐயமில்லை. சிக்கல் நிறைந்த இந்த இடர்ப்பாடுகளைப்பற்றி விரிவான முறையில் இங்கு நான் ஆராயப்போவதில்லை. ஆனுல் அதே சமயத்தில் இவற்றை அடியோடு புறக்கணிப்பதும் இயலாத செயல்.

வேளாண்மைத் துறையில் உள்ள பயன்தரா உழைப்பாளர்கள் அத்துறையைவிட்டு அகன்று செல்வதால், அத்துறையிலேயே தொடர்ந்து இருக்கக்கூடிய பயன்தரும் உழைப்பாளர்களுக்குக் கிடைக்கக்கூடிய உணவு உபரியை (அந்த உபரியின் வடிவத்தில் மறைந்து வாழ்கிற சேமிப்பு ஆற்றலை) எந்த அளவுக்கு நம்மால் சிந்தாமல் சிதருமல் திரட்ட முடிகிறது என்பதைப் பொறுத்துத் தான் இந்தத் திட்டத்தின் வெற்றி அமையமுடியும். வேளாண் மைத் துறையில் நீடிக்கிற உழவர்கள் முன்னிலும் மிகுதியான அளவில் உண்பதை நம்மால் தடுக்க முடியாவிட்டால், மேற் படிச் சேமிப்பு ஆற்றலை நம்மால் முழு அளவுக்குத் திரட்ட முடியாது. அவர்களே உழுது பயிரிட்டு அறுவடை செய்கிற உணவுப் பொருளை முன்னிலும் சற்று மிகுதியான அளவில் அவர்கள் உண்ண முயன்ருல், அந்த முயற்சியை, எவ்வளவு கடுமை யான ஏற்பாடுகளாலும் தடுத்து நிறுத்தமுடியாது. அது போலவே, முன்னர்க் கரந்துறை வேலையின்மைக்கு ஆளானவர் களாக இருந்து தற்போது முதலீட்டுப் பணிகளில் ஈடுபட்டிருப்ப வர்கள், முன்னிலும் சுறுசுறுப்பான முறையில் இப்போது பணி யாற்றிக் கொண்டிருக்கும் காரணத்தாலோ, அல்லது வேளாண் மைத் துறையிலிருந்து முதலீட்டுப் பணித் துறைக்கு மாறிச் செல்வதற்குரிய ஒரு தூண்டுதல் அவர்களுக்குத் தேவை என்கிற காரணத்தாலோ, முன்னினும் சற்றுக் கூடுதலான அளவில் இப் போது உணவை உட்கொள்ளத் தொடங்கக்கூடும். அப்படிச்

செய்வார்களாயின், அக் காரணத்தாலும் உணவுப் பற்றுக்குறை ஏற்படக்கூடும். மேலே சுட்டிக்காட்டப்பட்ட தூண்டுதல் எந்த அளவினதாக இருக்கவேண்டும் என்பது, பெரும்பாலும் சூழ்நிலைகளைப் பொறுத்து முடிவு செய்யப்படவேண்டிய ஒன்றாகும். வேளாண்மைத் துறையில் மிகையாக உள்ள மக்கள், கடந்த காலத்தில் வேறு துறைகளுக்கு மாறிச் செல்லாமல் இருந்ததற்கு உரிய ஒரு காரணம், அவர்கள் அப்படிச் செல்வதற்கு ஏற்ற துறைகள் அப்போது இல்லை என்பது ஆகும். ஆகவே, முதற்பொருள் ஆக்கத் திட்டங்களின் வாயிலாக வேலை வாய்ப்புகள் உருவாக்கப்பட்டால், அப்படி உருவாக்கப்படுகிற காரணத்தாலேயே வேறு எத்தகைய தூண்டுதலும் இல்லாமலே, வேளாண்மைத் துறையில் உள்ள மிகை மக்கள், அந்த வாய்ப்புகளை நோக்கிச் செல்லக்கூடும். எது எப்படியிருந்தாலும், அவர்கள் உண்ணக்கூடிய உணவின் அளவில் ஓரளவு உயர்வு ஏற்படுவது தவிர்க்கமுடியாதது என்றே தோன்றுகிறது.

இவ்வாறாக, வேளாண்மைத் துறையில் தொடர்ந்து ஈடுபடுகிற உழவர்கள் அல்லது முதலீட்டுப் பணிகளுக்குச் சென்றுவிடுகிற உழைப்பாளர்கள் அல்லது இரண்டு சாராரும் முன்னிலும் கூடுதலான உணவை அருந்துவதன் விளைவாக, முதலாக்கப் பணிக்காகக் கிடைக்கக்கூடிய பிழைப்பு நிதியில் (Subsistence fund) குறைவு ஏற்படக்கூடும். இம் மக்கள் முன்னிலும் மிகுதியான அளவு உணவை உட்கொள்வது என்பது, அதன் அளவில் பார்க்கும்போது, வரவேற்கத்தக்க ஒரு நிலைமைதான் என்பதில் ஐயமில்லை. ஆனால், அவர்கள் அப்படி உண்பதன் விளைவாக, கரந்துறை வேலையின்மை நிலைமையில் பொதிந்திருக்கிற சேமிப்பு ஆற்றலின் அளவு குறைந்துவிடுகிறது என்பதை மறப்பதற்கில்லை. பண்ணைகள் இருக்கிற இடங்களிலிருந்து முதற்பொருள் ஆக்கப் பணிகள் நடைபெறுகிற இடங்களுக்கு உணவுப் பொருளைக் கொண்டு செல்வதற்கான போக்குவரத்துச் செலவின் விளைவாகவும் மேற்படிச் சேமிப்பின் அளவு குறையக்கூடும். முதற்பொருள் ஆக்கப் பணிகளைச் சிற்றூர்ப் பகுதிகளில் பரவலான முறையில் அமைப்பதன்மூலம் இந்தக் குறைவின் அளவைச் சுருக்க முடியும் என்றபோதிலும், இந்தக் குறைவை முழுமையாக அகற்றுவது இயலாத செயல் என்றே கூறவேண்டும்.

இத்தகைய சூழ்நிலையில், ஒளிந்து வாழும் சேமிப்பு ஆற்றலை நூற்றுக்கு நூறு பங்கும் சிந்தாமல் சிதறாமல் திரட்ட முடிந்தால்தான், வேளாண்மைத் துறையில் உள்ள மிகை உழைப்பாளர்களைக்கொண்டு முதலாக்கம் செய்யும் பணிக்குத் தேவையான

நிதியை அந்தப் பணியிலிருந்தே பெறமுடியும். ஆனால் சேமிப்பு ஆற்றலை நூற்றுக்கு நூறு பங்காக அல்லாமல் சற்றுக் குறைந்த அளவுதான் திரட்ட முடியும் என்கிற நிலைமை இருக்குமானால், கரந்துறை வேலையின்மையைப் பயன்படுத்தி முதலாக்கம் செய்வது என்கிற திட்டமே சீர்குலைந்துவிடும். ஏனென்றால், அந் நிலையில் கிடைக்கக்கூடிய சேமிப்பின் அளவானது - மெய்யான சொற்களில் கூறுவதானால் (In real terms), மெய்ம் முதல் திரட்சிப் பணியில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களைப் பேணி வளர்ப்பதற்குத் தேவைப் படுகிற உணவின் அளவானது, பற்றாக்குறையாக அமைந்துவிடு கிறது. அந்தப் பற்றாக்குறையானது, பண்ணைகளில் தொடர்ந்து பணியாற்றி, தாங்கள் உழுது பயிரிட்டு அறுவடை செய்த உணவுப் பொருளில் ஒரு பகுதியை, முன்னிலும் கூடுதலான முறையில் உட்கொள்கிற உழவர்களால் ஏற்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். அந் நிலையில், முதலீட்டுப் பணிகளில் இப்போது ஈடுபட்டுள்ள அவர்களுடைய உறவினர்களுக்கு, அந்தப் பணிகளின் வாயிலாகப் போதிய உணவு கிடைக்காமற் போகுமானால், அவர்கள் மீண்டும் அவர்களுடைய முந்திய வேளாண்மை வாழ்க்கை முறைக்கே திரும்பி வருவார்கள் என்ப தும் அங்கே விளைகிற உணவுப் பொருளை அங்கேயே தங்கி அருந்த விழைவார்கள் என்பதும் இயற்கை. கரந்துறை வேலையின்மையைப் பயன்படுத்தி நடைபெறும் முதலாக்கப் பணி, நடந்தால் முழு அள வில் நடைபெறும்; இல்லையேல், சிறு அளவில்கூட நடைபெறாது என்கிற உண்மை, இச் சூழ்நிலையிலிருந்து தெளிவாகத் தெரிகிறது அல்லவா? வேளாண்மைத் துறையிலிருந்து மிகை உழைப்பாளர்கள் முதலாக்கத் துறைக்குத் திருப்பப்படுவதால் வேளாண்மைத் துறை யில் உபரியாகிவிடுகிற உணவு முழுவதும், அந்த உழைப்பாளர் களுக்குத் தரப்படுவதற்காகத் திரட்டப்படவேண்டும் என்பதும், அந்த உபரி உணவில் ஏதேனும் ஒரு பகுதி அப்படித் திரட்டப்பட முடியாவிட்டால், முதலாக்கப் பணி முழுவதுமே தடைப்பட்டு விடும் என்பதும் வெள்ளிடை மலை.

ஆனால் இந்தச் சிக்கலைச் சற்று நுணுக்கமான முறையில் ஆராய்ந்து பார்த்தால், கரந்துறை வேலையின்மையைக்கொண்டு முதலாக்கம் செய்வது என்னும் இந்தத் திட்டத்தில் ஏற்படுகிற சேமிப்புப் பற்றாக்குறையை, இந்தத் திட்டத்திற்குப் புறம்பே செய்யப்படுகிற சேமிப்பு எதையேனும் கொண்டு நிறைசெய்ய முடியுமானால், இந்தத் திட்டத்தை வெற்றி மிக்க முறையில் நிறைவேற்ற முடியும் என்கிற முடிவுக்கு நாம் வருவோம். உள் நாட்டு மூலவளங்களிலிருந்து அத்தகைய சேமிப்புகளைப் பெறக் கூடிய நிலை இருக்கலாம். வெளிநாடுகளிலிருந்து மூலதனத்தை

இறக்குமதி செய்யக்கூடிய வாய்ப்பும் இருக்கலாம். ஆகவே, சேமிக்கப்படக்கூடிய உணவுப் பொருளின் அளவு குறைந்து விட்டாலும், திட்டத்திற்கு வெளியேயிருந்து சேமிப்புகளைப் பெறுவதன்மூலம் அந்தக் குறையை நிறை செய்யக்கூடிய நிலை இருக்குமானால், கரந்துறை வேலையின்மை முழுவதையும் அல்லது அதன் ஒரு பகுதியை முதலாக்கப் பணிக்குப் பயன்படுத்த முடியும் என்பது தெளிவாகிறது. கரந்துறை வேலையின்மையை எந்த அளவுக்கு அவ்வாறு பயன்படுத்த முடியும் என்பது, திட்டத்திற்கு வெளியேயிருந்து கிடைக்கக்கூடிய சேமிப்பின் அளவையும், திட்டத்திற்கு உள்ளே ஏற்படக்கூடிய உணவுப் பற்றுக்குறையின் அளவையும் பொறுத்திருக்கிறது.

வேளாண்மைத் துறையிலிருந்து மிகை உழைப்பாளர்கள் அகன்று செல்வதால் அத் துறையில் ஓர் ஆண்டில் ஏற்படக்கூடிய உபரி உணவின் மதிப்பு 20 மில்லியன் டாலர் என்று வைத்துக் கொள்வோம். முன்னிலும் மிகுதியான அளவு உணவு உட் கொள்ளப்படுவது, பண்ணைகளிலிருந்து முதற் பொருள்கள் உற்பத்தி செய்யப்படும் இடங்களுக்கு உணவைக் கொண்டு செல்வதற்கான போக்குவரத்துச் செலவு முதலிய தடுக்கமுடியாத காரணங்களால் ஏற்படும் சேமிப்புக் குறைவின் மதிப்பு 10 மில்லியன் டாலராக இருக்கிறது என்றும் வைத்துக்கொள் வோம். இத்தகைய சூழ்நிலையில், திட்டத்திற்கு வெளியேயிருந்து 10 மில்லியன் டாலர் மதிப்புள்ள முதலீட்டு நிதிகள் கிடைக்குமானால், 20 மில்லியன் டாலர் மதிப்புள்ள உணவு உபரி முழுவதையுமே, வேளாண்மைத் துறையிலிருந்து விடுவித்து, முதலீட்டுத் துறைக்குப் பயன்படுத்த முடியும். வேறு சொற்களில் கூறுவதானால், திட்டத்திற்கு வெளியேயிருந்து கிடைக்கக்கூடிய ஒவ்வொரு டாலர் பணத்தைக் கொண்டும், கரந்துறை வேலையின்மை நிலையில் பொதிந்திருக்கிற சேமிப்பு ஆற்றலில் இரண்டு டாலர் மதிப்புள்ள பகுதியை நாம் முதலாக்கப் பணிக்குப் பயன் படுத்த முடியும். இவ்வாறாக, திட்டத்திற்கு வெளியேயிருந்து திரட்டப்படக்கூடிய நிதிகள், முதலாக்கத்தின் மொத்த வீதத்தில் ஒரு பெருக்கும் விளைவை ஏற்படுத்துவதை நாம் காணலாம். பொருளியல் இலக்கியத்தில் ஏற்கெனவே பலவாகப் பெருகி விட்டிருக்கிற பெருக்கும் எண்களை (Multipliers) மேலும் பெருக்குவதுபற்றி நாம் சற்றுத் தயங்கத்தான் வேண்டும் என்ற போதிலும், நம்முடைய தற்போதைய கருத்தாய்வைப் பொறுத்தவரை, ஒருவகையான பெருக்கும் எண் கருத்து, பொருத்தமாக இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். “திட்டத்திற்கு வெளியேயிருந்து கிடைக்கக்கூடிய

நிதிகள்'' என்று நம்மால் மேலே சுட்டிக்காட்டப்பட்ட நிதிகள், அயல் நாட்டைச் சேர்ந்தவையாக இருக்கக்கூடும்; ஆனால் அப்படித்தான் இருந்தாகவேண்டும் என்கிற கட்டாயமில்லை. அந் நிதிகள், நாம் முன்னரே எடுத்துக் கூறியிருப்பதற்கு இணங்க, தாமாக எழுகிற, அல்லது கட்டாயத்தால் உருவாகிற உள் நாட்டுச் சேமிப்புகளிலிருந்தும் கிடைக்கக்கூடும். கரந்துறை வேலையின்மை நிலைமையில் ஒளிந்திருக்கிற பிழைப்பு நிதிக்கு (Subsistence fund)-அதாவது, உபரி உணவுக்கு-வெளியேயிருந்து கிடைக்கிற நிதிகள் அவை என்பதைமட்டும் நாம் நினைவில் வைத்துக்கொண்டால் போதும்.

திட்டத்திற்கு வெளியேயிருந்து கிடைக்கக்கூடிய நிதிகளால் ஏற்படும் விளைவைப்பற்றி இன்னும் சற்று விரிவாக ஆராயலாம். கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் பொருந்தக்கூடிய நாடு ஒன்று இருப்பதாக வைத்துக்கொள்வோம்:

| | மக்கள் தொகை | ஆண்டு வருமானம் (மில்லியன் டாலர்களில்) |
|---|---|---|
| மொத்த மக்கள் தொகை | 1,000,000 | 120 |
| நகரப் பகுதி மக்கள் தொகை | 200,000 | 40 |
| கிராமப் பகுதி மக்கள் தொகை | 800,000 | 80 |

அந் நாட்டின் மொத்த மக்கள் தொகையில் உழைக்கும் மக்கள் தொகையின் வீதம், நாடு முழுவதிலும் ஒரே அளவில் இருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். மேலே தரப்பட்ட புள்ளி விவரங்களின்படி, அந்த நாட்டு மக்களின் சராசரி தலா வருமானம் ஆண்டுக்கு 120 டாலராகிறது. நம்முடைய தற்போதைய கருத்தாய்வுக்கு உள்ளாகியுள்ள வேளாண்மை நாடுகளின் சராசரி தலா வருமானம் கிட்டத்தட்ட இந்தத் தொகையை ஒத்ததாகவே இருக்கிறது. மேலே தரப்பட்ட புள்ளி விவரத்திற்கு உரிய கற்பனை நாட்டின் நகரமக்கள் தொகையின் சராசரி தலா வருமானம் அந்நாட்டுக் கிராம மக்கள் தொகையின் சராசரி தலா வருமானத்தைப்போல இரண்டு மடங்காக இருக்கிறது. இந் நிலையில் அந் நகர மக்கள், ஆண்டுக்கு 5 மில்லியன் டாலர் சேமிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். ஆனால் அந் நாட்டின் கிராம மக்கள், அவர்களுடைய வருமானம் முழுவதையும் நுகர்வுப் பொருள்களுக்காகச் செலவழித்துவிடுகிறார்கள் என்றும் வைத்துக்கொள்வோம். ஆனால் அவர்கள் அப்படிச் செலவழித்துவிட்டபோதிலும், அவர்களால் உற்பத்தி செய்யப்படுகிற உணவுப் பொருளில் ஒரு பகுதியை நகரங்களுக்கு அனுப்பி, அங்கே உற்பத்தி செய்யப்படுகிற உணவல்லாத நுகர்வுப் பொருள்களை

அவற்றிற்கு ஈடாகப் பெற்றுக்கொள்கிறார்கள் என்றும் வைத்துக் கொள்வோம்.

அந்த நாட்டின் வேளாண்மைத் துறையில் மிகையாக உள்ள மக்கள்தொகை, வேளாண்மைத் துறையில் உள்ள மொத்த மக்கள் தொகையில் 25 சத வீதம் இருப்பதாக - அதாவது, அவர்களுடைய தொகை 200,000 ஆக இருப்பதாக வைத்துக்கொண்டால், அவர்களால் ஆண்டுதோறும் உண்ணப்படுகிற உணவின் அளவு, கிராமப் பகுதிக்கு உரிய சராசரி அளவின்படி, 20 மில்லியன் டாலர் மதிப்புடையதாகிறது. அவர்களுடைய நுகர்வின் அளவு 22 மில்லியன் டாலராக உயர்த்தப்பட்டால்தான் அவர்களை முதலீட்டுப் பணிகளுக்கு மாற்றமுடியும் என்று வைத்துக் கொள்வோம். அப்படி உயர்த்தப்படுகிற 2 மில்லியன் டாலர் மட்டும்தான், சேமிக்கப்படக்கூடிய உணவில் ஏற்படுகிற குறைவாக இருந்தால், திட்டத்திற்கு வெளியே இருந்து 2 மில்லியன் டாலர் நிதியைத் திரட்டமுடியுமானால், வேளாண்மைத் துறையில் உள்ள மிகை மக்கள் தொகையையும் முதலீட்டுத் துறைக்கு மாற்றமுடியும்; அப்படி மாற்றுவதால், வேளாண்மைத் துறையில் உபரியாகக் கிடைக்கிற 20 மில்லியன் டாலர் மதிப்புள்ள உணவுப் பொருளையும் முதலீட்டுப் பணிக்குப் பயன்படுத்த முடியும் (இத்தகைய நிலைமையில் பெருக்கும் எண் 10 ஆக இருக்கும்).

வேளாண்மைத் துறையிலேயே தொடர்ந்து இருக்கிற உழவர்களின் நுகர்வின் மதிப்பு 60 மில்லியன் டாலரிலிருந்து 63 மில்லியன் டாலராக உயர்கிறது என்று வைத்துக்கொண்டால், சேமிக்கப்படக்கூடிய உணவில் மேலும் 3 மில்லியன் டாலர் குறையும் என்பது தெளிவு. இத்தகைய நிலையில், திட்டத்திற்கு வெளியே 5 மில்லியன் டாலர் மதிப்புள்ள சேமிப்பைத் திரட்ட முடிந்தால்தான், வேளாண்மைத் துறையைவிட்டு அகன்று செல்பவர்கள், அத் துறையிலேயே தொடர்ந்து இருப்பவர்கள் ஆகிய இரு சாராருக்கும் தேவைப்படும் கூடுதல் உணவையும் தரமுடியும்; 20 மில்லியன் டாலர் மதிப்புள்ள உபரி உணவை முதலீட்டுப் பணியாளர்களுக்காக விடுவிக்கவும் முடியும் (இந்த நிலைமையில் பெருக்கும் எண் 4 ஆகக் குறைந்துவிடுகிறது). திட்டத்திற்கு வெளியே இருந்து திரட்டப்படுகிற 5 மில்லியன் டாலர் மதிப்புள்ள சேமிப்பு, உள்நாட்டைச் சேர்ந்த நகரப்பகுதிகளிலிருந்து கிடைப்பதாக இருந்தால், அந்தப் பகுதிகளில் செய்யப்படுகிற கூடுதல் சேமிப்பிலிருந்துதான் அது கிடைக்க முடியும் என்பதை நினைவில் வைத்துக்கொள்வது நல்லது.

பண்ணைப் பகுதிகளிலிருந்து முதலீட்டுப் பணி நடைபெறும் பகுதிகளுக்கு உணவைக் கொண்டு செல்வதற்கான

போக்குவரத்துச் செலவு 5 மில்லியன் டாலராக இருந்தால், பெருக்கும் எண் 2 ஆகக் குறைந்துவிடும். உணவுப் போக்குவரத்துச் செலவால் ஏற்படுகிற சேமிப்புப் பற்றுக்குறை, மேலே குறிப்பிடப்பட்ட கூடுதல் உணவின் நுகர்வால் ஏற்படுகிற பற்றுக்குறையிலிருந்து ஒரு வகையில் மாறுபடுகிறது. போக்குவரத்துச் செலவால் ஏற்படுகிற பற்றுக்குறையை, ஏற்கெனவே நகரப் பகுதிகளில் செய்யப்பட்டுவருகிற சேமிப்பைக்கொண்டே - இதுவரை வேறுவகை முதலீடுகளில் பயன்படுத்தப்பட்டுவந்த சேமிப்பைக்கொண்டே - நிறை செய்யமுடியும். அப்படி நிறை செய்யும்போது, உணவுத் தேவையில் எத்தகைய உயர்வும் ஏற்படாது என்பது குறிப்பிடத்தக்கது. நாம் மேலே தந்துள்ள எடுத்துக் காட்டைப் பொறுத்தவரை, நகரப் பகுதிகளில் 5 மில்லியன் டாலர் மதிப்புள்ள சேமிப்புத் திரட்டப்படவேண்டும் என்று நாம் முன்னர்க் குறிப்பிட்டோம் அல்லவா? அந்தச் சேமிப்பைக் கொண்டே போக்குவரத்துச் செலவால் ஏற்படும் பற்றுக் குறையையும் நிறை செய்ய முடியும்.

எது எப்படி இருந்தாலும், நகரப் பகுதிகளில் ஆண்டுதோறும் செய்யப்படுகிற சேமிப்பில் 5 மில்லியன் டாலர் முதல் 10 மில்லியன் டாலர்வரை உயர்வு ஏற்படுமானால், அதன் விளைவாக நாட்டின் மொத்தச் சேமிப்பில் 20 மில்லியன் டாலர் உயர்வு ஏற்படும் என்பது தெளிவாகிறது. கரந்துறை வேலையின்மையை முதலீட்டுப் பணிக்குப் பயன்படுத்துவதன் விளைவாக, அப்படிப் பயன்படுத்தும்போது சேமிக்கப்படக்கூடிய உணவில் சில குறைவுகள் ஏற்படக்கூடும் என்றபோதிலும், நாட்டின் வருமானத்தில் 4 சத வீதமாக இருக்கும் சேமிப்பின் அளவு, 17 சத வீதமாக உயர்ந்துவிடுகிறது.

கோட்பாட்டு அளவில் பார்க்கும்போது இது உண்மையாக இருந்தபோதிலும், இத் திட்டத்தை நடைமுறையில் கையாளும்போது, திட்டத்திற்கு வெளியே, உள்நாட்டு மூல வளங்களிலிருந்து, தேவையான அளவு சேமிப்பைத் திரட்டுவது, இயலாத செயலாக ஆகிவிடுகிறது; அல்லது, மிகமிகக் கடினமான செயலாக அமைந்துவிடுகிறது.[4] நம்முடைய கருத்தாய்வுக்கு உள்ளாகியுள்ள வேளாண்மை நாடுகளில், தற்போது, அவற்றின் நாட்டு வருமானத்தில் 3 சத வீதம் முதல் 5 சத வீதம்வரை உள்ள ஒரு தொகை சேமிக்கப்பட்டு வருவது உண்மைதான். ஆனால் அச் சேமிப்பில் பெரும் பகுதி, முதலாக்கப் பணிக்குப் பயன்படாத முறையில் நேரடியாக முதலீடு செய்யப்பட்டுவிடுகிறது. தற்போது அந் நாடுகளில் செய்யப்பட்டு வருகிற சேமிப்புகளின் வடிவங்களைமட்டும் தக்கவாறு மாற்றியமைக்க முடியுமானால்,

அச் சேமிப்புகளைக்கொண்டே உணவுப் போக்குவரத்துச் செலவால் ஏற்படும் சேமிப்புப் பற்ருக்குறையை, முழு அளவுக்கோ அல்லது ஓரளவுக்கோ நிறை செய்யமுடியும். வேளாண்மைத் துறையிலேயே நீடித்து இருக்கும் உழவர்கள், முதலீட்டுத் துறைக்கு மாறிச் சென்றவர்கள் ஆகிய இரு சாராரின் கூடுதல் நுகர்வின் காரண மாக ஏற்படுகிற சேமிப்புப் பற்ருக்குறையை, நகரப் பகுதிமக்க ளால் (பெரும்பாலும் வாணிப வகுப்பினராலும் நிலப் பிரபுத்துவ மேல் வகுப்பினராலும்) செய்யப்படுகிற கூடுதல் சேமிப்பிலிருந்துதான் நிறை செய்யமுடியும். கூடுதல் நுகர்வானது பெரும்பாலும் உணவின் வடிவத்தில் நடைபெற்று, நகரப் பகுதிகளின் கூடுதல் சேமிப்பானது (அப்படி ஒரு சேமிப்பு நிகழுமானுல்) ஆடம்பரப் பொருள்கள் அல்லது வீட்டு ஊழியங் கள் முதலிய உணவல்லாத இனங்களின் வடிவத்தில் நிகழுமானுல், அத்தகைய நிலையில், உணவுப் பற்ருக்குறையை, அயல்நாட்டு வாணிபத்தின் மூலமாகத்தான் நேர்முகமாகவோ அல்லது மறை முகமாகவோ தீர்க்கமுடியும். இத்தகைய சூழ்நிலையில், சிக்கல் உள்நாட்டிலிருந்து வெளிநாட்டுக்கு மாறிவிடுகிறது என்பது உண்மைதான். ஆனுல் அப்படி மாறிவிடுவதாலேயே அது தீர்ந்துவிடும் என்று கூறுவதற்கில்லை. அதோடு அத்தகைய மாறுதலால், அயல்நாட்டு வாணிபத்தின் வாணிப மாற்று வீதம் (Terms of trade), குறிப்பிட்ட நாட்டின் நலனுக்கு மாருன திசை யில் திரும்பக்கூடும்.

அயல்நாட்டு மானியங்கள் (Grants) அல்லது கடன்கள், பிழைப்பு நிதியில் ஏற்படுகிற பற்ருக்குறையைத் தீர்ப்பதற்கு உரிய சிறந்த வழிகளாகும். நுகர்வுப் பொருள்களை இறக்குமதி செய்வதற்காக அவை பயன்படுத்தப்பட்டால்கூட, நாம் முன் னரே சுட்டிக் காட்டியதைப்போல, முதலீட்டிற்கு உரிய மூல வளங்களின் ஓட்டத்தில் அவை ஒரு பெருக்கும் விளைவை ஏற் படுத்தமுடியும். ஆனுல் அத்தகைய அயல்நாட்டு நிதிகளை முதலீட்டில் எத்தகைய உயர்வையும் ஏற்படுத்தாமல் நுகர்வைமட்டும் உயர்த்துகிற முறையில் பயன்படுத்துகிற ஆர்வம் எப்போதுமே இருந்துவருகிறது. அந்த ஆர்வம், முன்னர் எப்போதும் இருந்ததைவிட இக் காலத்தில் மிகுதியாக இருக் கிறது. ஏன் அந்த ஆர்வம் அவ்வாறு பெருகிவருகிறது என் பதற்கான காரணங்களைப் பின்னர் ஆராய்வோம். இத்தகைய ஆர்வத்தைக் கட்டுப்படுத்துவதற்காகவே இப்போதெல்லாம் அயல்நாட்டு நிதிகளைக் குறிப்பிட்ட முதற்பொருள்களை இறக்கு மதி செய்வது என்கிற திட்டத்தோடு பிணைக்கிற போக்கு அடிக் கடிக் காணப்படுகிறது. இந்த நடைமுறையின் விளைவாக, அந்

நிதிகளைக் கரந்துறை சேமிப்பைத் திரட்டுவதற்குரிய துணைக் கருவிகளாகப் பயன்படுத்துவது இயலாத செயலாகி விடுகிறது.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, மிகை உழைப் பாளர்கள் முதலாக்கத் துறைக்குச் செல்வதால் ஏற்படும் சேமிப்பில் குறைவுகள் ஏற்படுவதைத் தடுப்பது அல்லது அவற்றை மிகக் குறைந்த அளவுக்குச் சுருக்குவது, மிக இன்றியமையாத நடவடிக்கை என்பது தெளிவாகிறது.[5] ஆகவே, கரந்துறை வேலையின்மையில் பொதிந்துகிடக்கிற சேமிப்பு ஆற்றலை ஒருங்கு திரட்டி முதலாக்கப் பணிக்கு அதனைப் பயன்படுத்துவதற்கு உரிய முறைகளைப்பற்றி உடனடியாகச் சில கருத்துக்களைத் தெரிவிப்பது இன்றியமையாதது. முன்னர்க் கரந்துறை வேலையின்மைக்கு ஆளாகியிருந்தவர்கள் இப்போது முதலாக்கத் துறைக்கு மாறிச் சென்றவுடன், அவர்களால் முன்னர் அருந்தப்பட்ட உணவுப் பொருள் இப்போது தானுகவே முதலாக்கப் பணிக்குக் கிடைத்து விடும் என்று கூறமுடியாது. அவர்கள் அப்படி மாறிச் சென்ற வுடன், வேளாண்மைத் துறையிலேயே தொடர்ந்து இருக்கும் உழவர்கள், அவர்களால் உற்பத்தி செய்யப்படும் உணவில் முன்னிலும் மிகுதியான அளவு உண்ணுமல் தடுக்கப்படவேண்டும். இதனை எவ்வாறு செய்வது என்பதுதான் முக்கியமான சிக்கல். அந்த உழவர்கள் பிழைப்பின் மட்டத்திற்கு (Subsistence level) மிக அருகில் இருப்பதால், அவர்களாகவே அப்படி உண்ணுமல் இருந்து விடுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. உழவர்கள்மீது வரி விதிப்பதும் எளிய செயலன்று என்பது ஊரும் உலகமும் நன்கு உணர்ந்த உண்மை. அவர்களால் வாங்கிப் பயன்படுத்தப்படுகிற பொருள்கள்மீது மறைமுக வரி விதிப்பதன்மூலம் ஓரளவு சேமிப் பைத் திரட்டலாம் என்றாலோ, அவர்கள் குறிப்பிடத்தக்க அளவு பொருள்களை வாங்குவதில்லை. நிலவுடைமையின்மீது வரி விதிப் பதன்மூலமும், குத்தகைதாரர்கள் செலுத்துகிற குத்தகைத் தொகை அல்லது வாரத் தொகைமீது வரி விதிப்பதன்மூலமும், உழவர்கள்மீது வரி விதிக்கமுடியலாம். ஜப்பான் நாட்டில் நிலவரி கடுமையான முறையில் விதிக்கப்பட்டது. அவ் வரியால் அங்கு மிகச் சிறந்த பயன் விளைந்தது என்பது மட்டுமல்ல; பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் ஏற்பட்ட அந் நாட்டின் பொருளியல் வளர்ச்சியில் அந்த வரியால் ஆற்றப்பட்ட பங்கு முதன்மையான ஒன்றுகவும் திகழ்ந்தது. சேமிப்பைத் திரட்டுவதற்கு உரிய மற்றொரு முறை, பண்டங்களின் வடி வத்தில் வரிகளை விதிப்பதாகும். உணவுப்பொருள் விநியோகத் தைக் கட்டுப்படுத்துவது, உணவுப்பொருளில் ஒரு பகுதியை

அரசாங்கம் விலைக்குப் பெறுவது முதலிய முறைகளையும் கையாள லாம்.[6] உணவுப் பொருளைத் திரட்டுவது என்னும் இந்த அடிப் படைச் சிக்கல், சோவியத் ரஷ்யாவில், கூட்டுப் பண்ணைகளை (Collective farms) அமைப்பதன்மூலம் தீர்க்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. கூட்டுப் பண்ணை என்னும் பெயரில் உள்ள கூட்டு (Collective) என்னும் சொல், இச் சூழ்நிலையில் இரண்டு பொருள் களைக் குறிப்பதாக இருக்கிறது என்று இயம்பலாம். 'பலர் ஒன்று திரண்டு கூட்டாக அமைந்து பணியாற்றுவதற்குரிய அமைப்பு' என்பது ஒரு பொருள். 'உற்பத்தியாகிற உணவுப் பொருளை ஒன்றாகத் திரட்டிக் கூட்டுகிற (சேர்க்கிற) அமைப்பு' என்பது மற்றொரு பொருள்.

கரந்துறை வேலையின்மையில் பொதிந்திருக்கிற சேமிப்பு ஆற்றலைத் திரட்டுவதற்காகக் கையாளப்படுகிற அமைப்பு முறை எதுவாக இருந்தாலும், அந்தப் பணி திறமைமிக்க முறையில் நிறைவேற வேண்டுமானால், ஏதேனும் ஒரு வகையான கூட்டுச் சேமிப்புத் திட்டத்தைக் கட்டாயத்தின் அடிப்படையில் அர சாங்கம் கையாள்வது, தவிர்க்கமுடியாத ஒரு நிலையாகும். சேமிப்புச் சிக்கல் அத்தகைய முறையில் தீர்க்கப்பட்டபோதிலும் முதலீட்டுப் பணியைத் தனியார் கையில் ஒப்படைப்பது, இயலக் கூடிய செயலே. பல்வேறு முதலீட்டுத் திட்டங்களில் பணியாற்று கின்ற ஊழியர்களுக்கு உணவளிப்பதற்காக, வேளாண்மைத் துறையில் உள்ள உபரி உணவைத் திரட்டுவது எவ்வாறு என்பதில் தான் சிக்கல் இருக்கிறதே தவிர, முதலீட்டுத் திட்டங்களை நடத்திச் செல்வதில் சிக்கல் இல்லை. இந்த முதலீட்டுத் திட்டங்கள் தனியார் துறையைச் சேர்ந்தவையாக இருப்பதில் தடை ஏதும் இல்லை. சேமிப்புப் பணியைப் பொறுத்த அளவில்தான், அதன் ஒரு பகுதியாவது அரசாங்கத்தால் ஆற்றப் படவேண்டும் என்கிற நிலை இருக்கிறது.[7]

இந்த அத்தியாயத்தில் இதுவரை நம்மால் செய்யப்பட்டுள்ள பகுத்தாய்வில், கோட்பாட்டு அளவில் பார்க்கும்போது, முத லாக்கப் பணிக்கு முன்னர் இருந்ததைவிடக் குறைந்த அளவு நுகர்வை ஏற்கவேண்டிய நிலை, யாருக்குமே இல்லை. அது இல்லை என்றபோதிலும், நம் பகுத்தாய்வில் தரப்பட்டுள்ள ஏற்பாடு, கடுமையானதும் சிக்கனப் போக்கு மிகுந்ததுமான ஓர் ஏற்பாடே என்பதில் ஐயமில்லை. புதிய முதலீட்டு உழைப்பாளர்களைக் காப் பாற்றுவதற்குத் தேவைப்படுகிற உணவு, ஏதேனும் ஒரு வகை யான அயல்நாட்டு உதவி முதலிய முற்றிலும் வெளியே உள்ள திட்டங்களிலிருந்து கிடைக்குமானால் மிகவும் நலமாக இருக்கும். ஏது எப்படியிருந்தாலும், முதலாக்கப்பணிக்குத் தேவையான

சேமிப்பு ஆற்றல் (அல்லது பிழைப்பு நிதி) கரந்துறை வேலையின்மை நிலையிலேயே பொதிந்து கிடக்கிறது என்னும் உண்மையை, நாம் இதுவரை செய்துள்ள பகுத்தாய்வு தெளிவுபடுத்தியிருக்கிறது. நிதி திரட்டப்படுவதற்கு உரிய முதன்மையான ஊற்றுக்கால் ஒன்று, உள் நாட்டிலேயே அமைந்திருப்பதை அப் பகுத்தாய்வு சுட்டிக் காட்டியுள்ளது.

அடுத்தாற்போல் நம்மால் கவனிக்கப்பட வேண்டிய செய்தி, முதலாக்கத்திற்காக நிதிகளைச் செலவிடும் பணி, தெளிவான இரண்டு பகுதிகளைக் கொண்டதாக இருக்கிறது என்பதாகும். முதலீட்டுத் துறையில் புதிதாக ஈடுபடுகிற உழைப்பாளிகளுக்குப் போதிய உணவைத் தருவது அல்லது முதற்பொருள் திட்டங்களில் அவர்கள் வேலை செய்வதற்காக அவர்களுக்குத் தேவைப்படுகிற நுகர்வுப் பொருள்களைத் தருவதுதான், முதலாவதும் முதன்மையானதுமான பகுதியாகும். நிதிகளைச் செலவிடுவதன் அடிப்படையான நோக்கம் இதுதான்: அதாவது, தற்போது தங்களால் நுகரப்படக்கூடிய பொருள்கள் எவற்றையும் உற்பத்தி செய்வதில் ஈடுபடாமல் முதற்பொருள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள உழைப்பாளிகளுக்குத் தேவையான பிழைப்பு நிதியைத் தருவதுதான்.[8] தொன்மைப் பொருளியலின் கண்ணோட்டத்தின்படிப் பார்த்தால், சேமிப்புகள் செய்யப்படவேண்டும் என்பதற்கான காரணம் இதுவே.

நிதிகளைச் செலவிடும் பணியின் இரண்டாவது பகுதி, புதிய முதலீட்டு உழைப்பாளிகளுக்கு, அவர்கள் உழைப்பதற்கு உறுதுணையாக இருக்கக்கூடிய கருவிகளைத் தருவதற்காக ஆகும் செலவாகும். மிகுதியான முதற்பொருள்களை உற்பத்தி செய்வதில் தற்போது ஈடுபட்டுள்ள உழைப்பாளிகளுக்கு, அவர்கள் அப்படி உற்பத்தி செய்வதற்குத் துணையாக இருக்கும் வகையில் சில முதற்பொருள்களை அளிப்பது மிகவும் பயனுடைய செயலாகும். நிதிகளைச் செலவிடும் பணியின் முதற்பகுதி என்று நாம் மேலே சுட்டிக் காட்டிய பணியிலிருந்து இது முற்றிலும் மாறுபட்ட ஒரு பணியாகும். பொது மக்களிடம் பரவலாகக் காணப்படுகிற கருத்தாய்விலும், சில சமயங்களில் பொருளியல் கருத்தாய்விலுங்கூட, இந்தப் பணியைப்பற்றிய ஆய்வே மாபெரும் இடத்தைக் கைப்பற்றி விடுகிறது என்றபோதிலும், முதல் வகைப் பணியோடு ஒப்பிடும்போது இந்த இரண்டாம் வகைப் பணி இரண்டாந்தர முதன்மைதான் உடையது என்பது என் கருத்து. ஏனென்றால், முதலீட்டு உழைப்பாளர்கள், சாலைகள் முதலிய நிலை முதற் பொருள்களை (Fixed capital goods) அமைக்கத் தொடங்குவதற்குமுன்னால், ஒரு புறமாக உட்கார்ந்து, மிக இன்றியமையாத

முறையில் அவர்களுக்குத் தேவைப்படுகிற மிக எளிய கருவிகளை அவர்களுடைய கையாலேயே செய்துகொள்ள முடியும் அல்லவா? எடுத்துக்காட்டாக, அவர்களுடைய சாலை அமைப்புப் பணிக்குத் தேவையாக இருக்கிற மண்வெட்டிகள், தள்ளு வண்டிகள், பார வண்டிகள், கடப்பாரைகள் முதலியவற்றை அவர்களே செய்து விடமுடியும். அவர்களுடைய நாடு, ஒரு மூடப்பட்ட பொருளிய லாக (A closed economy) இருந்திருந்தால், அதாவது முதற் பொருள்கள் வெறும் கைகளால் உற்பத்தி செய்யப்படாமல் வேறு முதற் பொருள்களைக் கொண்டு திறமைமிக்க முறையில் உற்பத்தி செய்யப்படுகிற ஒரு முன்னேறிய நாட்டோடு வாணிபத் தொடர் பைப் பெற்றிராத ஒரு நாடாக இருந்திருந்தால், அவர்கள் அப் படித்தான் உற்பத்தி செய்திருப்பார்கள். ஆனல் இன்றைய நடை முறை உலகத்தில், வளர்ச்சி குறைந்த நாடுகள், முன்னேற்றம் அடைந்த நாடுகளிடமிருந்து தங்களுக்குத் தேவையான முதற் பொருள்களை வாங்கிக்கொள்ளக்கூடிய அநுகூலமான நிலையில் இருக்கின்றன. அயல் நாடுகளிலிருந்து எத்தகைய பண உதவியோ அல்லது கடனே கிடைக்காத நிலையில்கூட, வளர்ச்சி குறைந்த நாடுகள், தங்களுடைய பண்டங்களை அந் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவிட்டு, அவற்றிற்கு மாற்றாக அந் நாடுகளிடமிருந்து முதற் பொருள்களை வாங்கிக்கொள்ள முடியும். ஆனல் வளர்ச்சி குறைந்த நாடுகள் இந்த முறையைக் கையாளவேண்டுமானல் அவற்றில் உள்நாட்டுச் சேமிப்பு ஏற்பட்டாகவேண்டும் என்பது தெளிவு.

உழைப்பாளர்களைப் போதிய அளவு பெற்றிராத - பொருளி யலில் முன்னேறிய - நாடுகளில் பயன்படுத்தப்படுகிற அதே அளவு மூலதனச் செறிவுடைய (Capital intensity) கருவிகளும் பொறிகளும், மக்கட் செறிவு மிகுந்த - வளர்ச்சி குறைந்த - நாடு களுக்குத் தேவைப்படமாட்டா. மிகுந்த பொருளியல் வளர்ச்சி யுடைய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிற கருவி களிலும் உற்பத்தி முறைகளிலும் சில, மிகுந்த மூலதனச் செறிவு உடையனவாக இருக்கக்கூடும். ஆகவே, அவை, மூலதனத்தைப் பற்றாக்குறையான நிலையிலும் தொழிலாளர்களை ஏராளமான அளவிலும் பெற்றுள்ள நாடுகளுக்குப் பொருத்தமாக இருக்க மாட்டா. குறிப்பாக, அமெரிக்கப் பொறிகளைப் பொறுத்தவரை, அவை அமெரிக்கத் தொழிலாளர்களுக்குத் தரப்படுகிற கூலிகளைக் கணக்கிலெடுத்துக்கொண்டு செய்யப்பட்டிருக்கிற காரணத்தால், அவை பெரும்பாலும், மிக விரிவான அமைப்பும், தாமே இயங்கும் தன்மையும், உழைப்பைக் குறைக்கும் இயல்பும் பொருந்தியனவாக இருக்கின்றன. ஆகவே அவை, குறைந்த

அளவு கூலியில் பணியாற்றக்கூடிய ஏராளமான தொழிலாளர்களைப் பெற்றுள்ள நாடுகளில் பயன்படுத்தப்படுவதற்கு ஏற்றனவாக இல்லை. வளர்ச்சி குறைந்த நாடுகளில் இறக்குமதி செய்யப்படுகிற முதற் பொருள்கள், அந்த நாடுகளிற் காணப்படுகிற காரணி வீதங்களுக்குப் (Factor proportions) பொருத்தமாக இருக்கும் முறையில் அவற்றிற்காகவென்றே உற்பத்தி செய்யப்பட்டனவாக இருக்கவேண்டும். கொள்கை அளவில் பார்க்கும்போது இதுதான் மிகச் சிறந்த முறையாகும். ஆனால் நடைமுறையில் அப் பொருள்கள் அவ்வாறு உற்பத்தி செய்யப்படாதனவாக இருந்தபோதிலும், அவ்வாறு உற்பத்தி செய்யப்படாததால் ஏற்படுகிற குறைபாடு, அப்பொருள்களின் விலை, மிகக் குறைவாக இருப்பதன் வாயிலாக நிறை செய்யப்பட்டு விடுகிறது. விலை குறைவாக இருப்பதற்குக் காரணம், ஐக்கிய அமெரிக்க நாட்டில் மாபெரும் அளவில் உள்ள உள்நாட்டு அங்காடிக்காகப் பேரளவு உற்பத்தி முறைகளின்மூலம் முதற் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுவதேயாகும்.

எடுத்துக்காட்டாக, மிகுமக்கள் தொகையுடைய வேளாண்மை நாடுகளில், ஒரு சாலையை அமைப்பதற்காக, ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஒரு புல்டோசரைத் (Bulldozer) தந்தால், அதைவிட வியக்கத்தக்க ஊதாரித்தனம் வேறென்ன இருக்க முடியும்? (புல்டோசரின் விலை மிகுதி என்பது ஒரு புறம் இருக்க, அதனைக் கையாள்வதற்கான பயிற்சியைத் தொழிலாளருக்குத் தருவதற்கான செலவு மற்றொரு புறம் இருக்கிறது.) தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் உள்ள இத்தகைய நாடுகளின் காரணி நிலைமைகளைக் கருத்தில் நிறுத்திப் பார்த்தால், புல்டோசரைவிட மிக எளிய கருவிகளும் தளவாடங்களுமே இந் நாடுகளுக்கு ஏற்றவை என்பது தெளிவுற விளங்கும். இத்தகைய நாடுகளில் அணைக்கட்டுகள் கட்டப்படும்போது, அவற்றின் கட்டுமானத்தில் ஈடுபட்டுள்ள ஆண்களும் பெண்களும் தலைச் சுமையாகவே மண்ணைச் சுமந்து செல்லும் காட்சி, அனைவருக்கும் அறிமுகமான ஒன்றே. பொருளியலில் முன்னேறியுள்ள நாடுகளில் காணப்படுகிற அதே அளவு மூலதனச் செறிவு தங்களுக்கும் தேவை என்று வளர்ச்சி குறைந்த நாடுகள் விரும்பவும் கூடாது; அதனை அனுமதிப்பதும் ஆகாது. இந்நாடுகளில் முதலாக்கப் பணியில் ஈடுபடுகிற புதிய முதலீட்டு உழைப்பாளிகள், எடுத்த எடுப்பிலேயே, மிக உயர்ந்த உற்பத்தித் திறன் உடையவர்களாக விளங்கவேண்டும் என்று நாம் எதிர்பார்க்கக்கூடாது. அவர்கள், அவர்களுடைய நாட்டின் உற்பத்தித் திறன் பெருகுவதற்காக அவர்களால் இயன்ற பங்கைச் செலுத்திக் கொண்டிருப்பார்கள்.

உழைத்துக்கொண்டிருப்பார்கள் - உற்பத்தி செய்துகொண்டிருப்பார்கள் என்று மட்டும்தான் நாம் எதிர்பார்க்கவேண்டும். அவர்கள் முன்போல இப்போது கரந்துறை வேலையின்மைக்கு ஆளாகியிருக்கவில்லை என்பதும், முதலாக்கப் பணியில் ஈடுபட்டு விட்டார்கள் என்பதுமே கவனிக்கப்படவேண்டிய செய்திகள்.

ஒரு நாட்டின் மெய்ம் முதற்பொருள்களில் மிகப் பெரிய பகுதி, அந் நாட்டில் உள்ள உழைப்பாளிகளைக்கொண்டும், அந் நாட்டில் கிடைக்கக்கூடிய பொருள்களைக் கொண்டும் உற்பத்தி செய்யப்படக்கூடியதே என்பதை இத் தொடர்பில் நினைவு வைத்துக்கொள்வது நலம் பயப்பதாகும்.[9] பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிற பொறிகளும் கருவிகளுமே பொதுமக்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்துவிடுகின்றன என்றபோதிலும், அவற்றைவிடக் கட்டிடங்கள், சாலைகள், அணைக்கட்டுகள், தண்ணீர் வழங்கும் அமைப்புகள், நில முன்னேற்றங்கள் ஆகியவையே, மொத்தமாகப் பார்க்கும்போது, மிக இன்றியமையாதனவாக இருக்கின்றன. ஒரு முதற்பொருள் உள்நாட்டில் தயாரிக்கப்பட்டதா அல்லது இறக்குமதி செய்யப்பட்டதா என்னும் கேள்விக்கும், அதனை அமைப்பதற்கு அல்லது பெறுவதற்குத் தேவைப்பட்ட நிதி உள்நாட்டுச் சேமிப்பிலிருந்து கிடைத்ததா அல்லது வெளிநாட்டுச் சேமிப்பிலிருந்து கிடைத்ததா என்னும் கேள்விக்கும், கொள்கை அளவிற் பார்க்கும்போது, நேரடித் தொடர்பு இல்லை. இறக்குமதி செய்யப்பட்ட ஒரு பொறியின் விலை உள்நாட்டுச் சேமிப்பிலிருந்து தரப்பட்டிருக்கலாம். அதுபோலவே, உள்நாட்டு உழைப்பாளிகளைக்கொண்டு ஒரு சாலையை அமைப்பதற்கான செலவுத் தொகை ஓர் அயல்நாட்டுக் கடனிலிருந்து பெறப்பட்டிருக்கலாம். ஆனால், விரிவான அளவில் செய்யப்படுகிற ஒரு பகுத்தாய்வில், குறிப்பிட்ட நிதிகள் குறிப்பிட்ட முதலீட்டுப் பணிகளுக்காக ஒதுக்கப்பட்டிருப்பதாகப் பேசுவதில் சிறிதும் பொருளில்லை என்பதை இச் சமயத்தில் சுட்டிக்காட்டத்தான் வேண்டும். நம்முடைய தற்போதைய கருத்தாய்வின் நோக்கம், உள்நாட்டுச் சேமிப்புகளுக்கான ஊற்றுக்கால்களைப்பற்றி ஆராய்வதே. ஆனால், பின்னர் வருகிற அத்தியாயங்களில், அயல்நாடுகளிலிருந்து கிடைக்கக்கூடிய நிதிகளைப்பற்றியும் ஓரளவு கவனம் செலுத்தப்படும்.

தற்போது உள்ள சூழ்நிலையில், மக்கட்செறிவு மிக்க சில வேளாண்மை நாடுகளில், உழைப்பாளிகள் மட்டுமல்லாமல் முதற்பொருள்கள்கூட வேலைக் குறைவு நிலைக்கு (Underemployment) ஆளாகியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. எடுத்துக்காட்டாக,

அந் நாடுகளின் நிலவுடைமைகள் சிறியனவாகவும் பல்வேறு இடங்களில் துண்டு துண்டாகச் சிதறிய நிலையிலும் காணப்படுவதால், அவை ஒருங்கிணைந்த நிலையில் (Consolidated holdings) அமைக்கப்பட்டால் தேவைப்படக் கூடியதைவிட மிகுதியான எண்ணிக்கையில், தற்போது, மண்வெட்டிகள், தள்ளுவண்டிகள், பாரவண்டிகள், கால்நடைகள் ஆகியவை பயன்படுத்தப்படுகின்றன. இஃது அமைப்புமுறையைப் பொறுத்த ஒரு செய்தியேதவிர உற்பத்தி முறையைப் பொறுத்த ஒன்று அன்று. அந் நாடுகளின் வேளாண்மைத் துறையில், வடிகால் ஏற்பாடுகள், வெள்ளக் கட்டுப்பாடு, நீர்ப்பாசனம், இன்ன பிற முன்னேற்றங்களுக்காக ஏராளமான அளவு முதலீடு தேவைப்படுகிறது என்பதும், இந்தத் தேவை உடனடியாகவோ அல்லது சற்றுப் பொறுத்தோ நிறைவு செய்யப்படவேண்டிய ஒன்று என்பதும் உண்மையே. ஆனால் அதே சமயத்தில், வேளாண்மைத் துறையில் உடனடியாகச் செய்யப்படக்கூடிய சில அமைப்புமுறைச் சீர்திருத்தங்கள் இருக்கின்றன என்பதையும், அச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டால் அத்துறையில் தற்போது பயன்படுத்தப்பட்டு வருகிற எளிய கருவிகளிற் சிலவற்றை (வேளாண்மை உற்பத்தியில் எத்தகைய குறையும் ஏற்படாத முறையில்) அத் துறையிலிருந்து விடுவிக்கமுடியும் என்பதையும், அப்படி அவை விடுவிக்கப்பட்டால் புதிய முதலீட்டு உழைப்பாளிகள் அவற்றைத் தம்முடன் எடுத்துச் சென்று முதற்பொருள் திட்டங்களில் பயன்படுத்த முடியும் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

இம் முதற்பொருள் திட்டங்கள் எவை எவையாக இருக்க வேண்டும் என்பதுபற்றி நாம் கருத்தாய்வு செய்யவேண்டிய தேவை இல்லை என்று நான் கருதுகிறேன். அத் திட்டங்கள், வேளாண்மைத் துறையைச் சேர்ந்தவையாகவும் இருக்கலாம்; கைத்தொழில் துறையைச் சேர்ந்தவையாகவும் இருக்கலாம். குறிப்பாகவும் சிறப்பாகவும், உள்நாட்டு உழைப்பாளர்களில் மிகையாக இருப்பவர்களை அல்லது நாட்டுப்புறங்களில் காணப்படுகிற பருவக்கால வேலைக்குறைவு நிலைகளைப் பயன்படுத்துவதற்காகவென்றே உருவாக்கப்படுகிற 'சமுதாய வளர்ச்சித் திட்டங்க'ளாகவும் (Community development projects) அவை இருக்கலாம். தொடக்க நிலைகளில் அத் திட்டங்கள், பெரும்பாலும், 'சமுதாய ஒட்டு மொத்த மூலதனம்' (Social overhead capital) என்று இப்போதெல்லாம் அழைக்கப்படுகிற வகையைச் சேர்ந்தவையாகவே இருக்கும். பொதுப் பயன்பாட்டு அமைப்புகள் (Public utilities), போக்குவரத்து வசதிகள், பயிற்சித் திட்டங்கள், பலவகை அடிப்படை ஊழியங்கள்

ஆகியவை இந்த வகையில் அடங்கும். சமுதாயம் முழுவதற்கும் பயன்படும் இத்தகைய வசதிகள் எவ்வளவு இன்றியமையாதவை என்பது, தானாகவே விளங்கும் ஓர் உண்மை. பலதிறப்பட்ட தொழில்களில் சிறுசிறு அளவில் செய்யப்படுகிற தனியார் முதலீடு களுக்கு அவை ஓர் இன்றியமையாத அடிப்படையாக விளங்கு கின்றன. பொருளியலில் முன்னேறியுள்ள எந்த நாட்டிலும் அவை அமைந்திருப்பது இயல்பு. எனவே, அத்தகைய நாடுகளில், தனியார் தொழில்துணிவோர் ஒருவர், அத்தகைய வசதிகளெல் லாம் அமைந்திருக்கின்றனவா இல்லையா என்பதைப்பற்றி எத் தகைய ஐயப்பாடும் கொள்ளமுடியாது. ஆனால் பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளில், ஒரு தனியார் தொழில் துணிவினர் ஏதேனும் ஒரு தொழிற்சாலையைத் தொடங்கவிரும்பினால், மேலே குறிப்பிடப்பட்ட வசதிகளையெல்லாம் அவராகவேதான் அமைத் துக்கொள்ள வேண்டியிருக்கும். அவர் ஏதேனும் ஒருவகை முற்றுரிமை நிலையைப் (Monopoly position) பெற்றிருந்தா லொழிய, அத்தகைய பொதுப் பயன்பாட்டு வசதித் துறைகளில் அவரால் செய்யப்படுகிற முதலீட்டிலிருந்து வாணிப ஆதாயம் எதையும் அவர் ஈட்டமுடியாது. தனியார் தொழில் துணிவினர் ஒருவருக்கு அத்தகைய முற்றுரிமை நிலை இருப்பது, பொதுவான காரணங்களை முன்வைத்துப் பார்க்கும்போது, விரும்பத்தக்க ஒரு நிலை ஆகாது. மக்களின் ஆற்றல், கல்வி, உடல்நலம் ஆகிய வற்றின் வளர்ச்சிக்காகச் செய்யப்படுகிற - அடிப்படை வகை யைச் சேர்ந்த முதலீடுகளுக்கும் இந்தக் கருத்துக்கள் பொருத்தம் உடையனவே.

## மக்கள் தொகை வளர்ச்சியும் மூலதனத் தேவைகளும்

நாம் முன்னரே குறிப்பிட்டதைப் போல, கரந்துறை வேலை யின்மை நிலைமையில் செய்யப்படக்கூடிய முதலாக்கம்பற்றிய கோட்பாடு, மக்கள் தொகையானது மாறாமல் ஒரே அளவில் இருக்கும் என்னும் கோணத்திலிருந்து உருவாக்கப்பட்டதாகும். ஆனால் நடைமுறையில் மக்கள் தொகை வளரக்கூடும் அல்லவா? மெய் வருமானத்தில் ஏற்படக்கூடிய உயர்வின் விளைவாக மக்கள் தொகை மாபெரும் அளவில் உயரக்கூடிய ஆபத்து இருக்கிறது அல்லவா ? மக்கள் தொகை அவ்வாறு உயர்வதால், மக்களின் வாழ்க்கை வசதிகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் அழிந்து விடக்கூடும் அல்லவா ?

இஃது, இங்கே பகுத்தாய்வு செய்யப்பட முடியாத மாபெரும் சிக்கல் ஆகும். ஆனால் இதன் தொடர்பில் ஒரு கருத்தைமட்டும் நான் சுட்டிக்காட்ட விழைகிறேன், நம்மால் கருத்தாய்வு

செய்யப்பட்ட கோட்பாட்டுவழி அமைப்பில் (Theoretical model), அந்தத் திட்டம் முற்றிலும் வெற்றி மிக்க முறையில் அமையுமானால், மெய் வருமானத்தில் ஏற்படும் உயர்வு முழுவதும் முதலாக்கப் பணிக்கே பயன்படுத்தப்படும் என்று நாம் முடிவு செய்திருந்தோம். அதாவது, மெய் வருமானத்தில் ஏற்படும் உயர்வு, நுகர்வில் உயர்வை ஏற்படுத்தப் பயன்படுத்தப்படமாட்டாது என்று நாம் பாவித்துக்கொண்டோம். நுகர்வில் ஏற்படும் உயர்வைப் பொறுத்தே மக்கள் தொகையில் உயர்வு ஏற்படுமானால், மேலே குறிப்பிடப்பட்ட சூழ்நிலையில் மக்கள் தொகை உயராது. ஏனென்றால், அச் சூழ்நிலையில் நுகர்வில் உயர்வு எதுவும் ஏற்படவில்லை. அச்சூழ்நிலையில், மெய்வருமானத்தில் ஏற்படுகிற உயர்வு முழுவதும், முதலாக்கப் பணிக்கே பயன்படுத்தப்படுகிறது; அல்லது, பயன்படுத்தப்படவேண்டும். நினைவில் நிறுத்தப்படவேண்டிய இன்றியமையாத கருத்து இது. நம்முடைய கருத்தாய்வில் முன்னரே சுட்டிக்காட்டப்பட்ட - நுகர்வின் விளைவாக ஏற்படுகிற சேமிப்புக் குறைவுகளை அகற்றுவதற்கு அல்லது மிகக் குறைந்த அளவினவாக ஆக்குவதற்குத் திட்டவட்டமான நடவடிக்கைகளை எடுப்பது எத்துணை இன்றியமையாதது என்பதைத்தான் இந்தக் கருத்து மீண்டும் நினைவுபடுத்துகிறது.

மக்கள் தொகைச் சிக்கலைத் தீர்ப்பதற்காக மக்களில் ஒரு பகுதியினரைப் பிற நாடுகளில் குடியேற்றும் முறையானது, கருத்தாய்வுக்கு மட்டும் பயன்படுகிற ஒரு தீர்வே தவிர நடைமுறைக்கு ஒவ்வாதது என்னும் உண்மை, மிகப் பலராலும் உணரப்பட்டுள்ள ஒன்று. ஏனென்றால், அந்தத் தீர்வு, மக்கள் தொகை உயர்வு எந்த நாட்டில் உருவாகிறதோ அந்த நாட்டிலேயே அதைத் தடுக்கிற தீர்வாக இல்லை. மக்கள் தொகைச் சிக்கலைத் தீர்ப்பதற்காக அயல்நாட்டு மானியங்கள், கடன்கள் அல்லது முதலீடுகளையே முற்றிலும் நம்பியிருக்கும் போக்கும் குடியேற்றமுறை போன்றதே. ஏனென்றால், மெய் வருமானத்திலும் நுகர்விலும் ஏற்படுகிற உயர்வின் விளைவாக உருவாகிற மக்கள் தொகை வளர்ச்சியை அந்த முறையாலும் கட்டுப்படுத்த முடிவதில்லை. இந்தக் காரணங்களால்தான், உள்நாட்டுச் சேமிப்பு ஆற்றலைப் பயன்மிக்க முறையில் திரட்டுவது, தலா மெய் வருமானத்தை உயர்த்துவதற்கு உரிய இன்றியமையாத முதல் அடிப்படையாக அமைந்துவிடுகிறது.

நீண்ட காலக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, மக்கள் தொகை உயர்வுச் சிக்கலானது, கல்வி - நகர்மயமாதல் (Urbanisation) ஆகியவற்றின் விளைவாக மதிப்பீட்டு முறையில் (Scale of

valuation) விரிவான அளவில் ஏற்படக்கூடிய மாறுதலின் வாயி லாக்த் தன்னைத்தானே தீர்த்துக்கொள்ளும் என்று நாம் நம்பலாம். ஆனால் குறுகிய கால அளவைப் பொறுத்தவரை, திருமணம் செய்துகொள்வதற்குச் சட்டத்தால் அனுமதிக்கப்படுகிற மிகக் குறைந்த வயதை உயர்த்துவது, தேசீய 'இனப் பெருக்கக் கட்டுப் பாட்டுக் கொள்கை' யின்படி இந்தியாவில்கூட இப்போது கையாளப்படுகிற கருத்தடை முறைகளைப் பரப்புவது முதலிய நடைமுறைத் திட்டங்களைக் கையாளலாம்.

மருத்தவ அறிவு - மருத்துவ வசதிகள் ஆகியவை பரவுவதன் விளைவாகவும், அப்படிப் பரவுவதால் நோய்கள் ஏற்படும் விகிதத் திலும் இறப்பின் விகிதத்திலும் ஏற்படுகிற குறைவின் விளைவாக வும், நுகர்வின் அளவு எப்படியிருந்தபோதிலும், மக்கள் தொகை யில் ஓரளவு உயர்வு ஏற்படக்கூடும். ஆனால் இத்தகைய காரணங் களால் மக்கள் தொகையில் உயர்வு ஏற்படும்போது அவர் களுடைய தரத்திலும் உயர்வு ஏற்படுவது இயற்கை. மக்க ளுடைய உடல்நலமும் ஆற்றலும் பெருகும்போது, அவர்களு டைய உற்பத்தித் திறனும் பெருகும் என்று நாம் எதிர்பார்க் கலாம். இவ்வாறு உற்பத்தித்திறனில் ஏற்படுகிற பெருக்கம் முழு அளவில் பயன்படுத்தப்படுமானால், பொருளியல் கண்ணோட்டத் தில் பார்க்கும்போது அந்தப் பெருக்கம் விரும்பத்தகாத ஒன்றாக இருக்கமுடியாது.

ஆனால் மக்கள் தொகை உயரும்போது அவர்களுக்குத் தரப்படவேண்டிய முதற்பொருளின் அளவும் உயர்கிறது என்பது நினைவில் நிறுத்தத் தக்கது. மக்கள் தொகை உயர்கிறது என்றால், சமுதாயக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, ஆழ்ந்த முத லீட்டிருந்து (Intensive investment) மாறுபட்ட அகன்ற முதலீட் டிற்கான (Extensive investment) மூலதனத்தேவை பெருகுகிறது என்று பொருள். ஆழ்ந்த முதலீடு, அகன்ற முதலீடு என்கிற இச் சொற்றொடர்கள், மக்கள்தொகை இயல் அறிஞர்களாலும் (Demographers) ஆல்வின் ஹான்சன் (Alvin Hansen) முதலிய பொருளியல் புலவர்களாலும், சில சமயங்களில் பயன்படுத்தப் படுகின்றன. ஆழ்ந்த முதலீட்டின் விளைவாகத் தலா மூலதனத் தின் (Capital per head) அளவும், அது காரணமாக உற்பத்தியின் அளவும் பெருகும். ஆனால் மக்கள் தொகை பெருகிக்கொண் டிருக்கும்போது செய்யப்படும் அகன்ற முதலீடானது, உழைப்பாளி களுக்கு அளிக்கப்படுகிற தலா மூலதனத்தின் அளவை முன் இருந்த நிலையிலேயே நிறுத்துவதற்குத்தான் பயன்பட முடியும். கொழும்புத் திட்டத்தின் கீழ்ச் (Colombo Plan) செய்யப்படுகிற

முதலீடுகள் அகன்ற முதலீடுகளாகவே அமையும். ஏனென்றால், தென்கிழக்கு ஆசியாவின் மக்கள்தொகை மிக விரைவாக உயர்ந்துகொண்டிருக்கிற இன்றைய நிலையில், அப் பகுதியில் உள்ள மக்களின் தலா மூலதனத்தைத் தற்போது உள்ள அளவிலேயே நிலைநிறுத்துவதைவிட மிகுதியாக அவற்றால் எதை யும் செய்துவிட முடியாது.[10]

கரந்துறை வேலையின்மைபற்றிய கோட்பாடானது மக்கள் தொகை மாறாமல் இருக்கிறது என்னும் அடிப்படையில் அமைந்த ஒன்றாக இருந்தபோதிலும், மக்கள் வளத்தை முதலாக்கப் பணிக்கு எவ்வாறு பயன்படுத்தலாம் என்பதுபற்றிய பொருத்த மான கோட்பாடாகவும் குறிப்பிடத்தக்க கோட்பாடாகவும் அது விளங்குகிறது. முதலாக்கச் சிக்கலின் அளிப்புப் பகுதியைச் (Supply side) சேர்ந்த ஒரு காரணியின் முதன்மையை அஃது எடுத்துக்காட்டுகிறது. 'உழைப்பே செல்வத்தின் உண்மையான ஊற்றுக்கால்.'[11] வேலையின்மைக்கு ஆளாகியுள்ள உழைப்பாளி களைப் பயன்படுத்துவதன்மூலம் மூலதனத்தின் அளிப்பைப் பெருக்கமுடியும் என்பதை நாம் இப்போது அறிந்துகொண்டிருக் கிறோம். பொருளியல் வளர்ச்சிக்கான அகன்ற முதலீட்டுக்கு மட்டுமல்லாமல் ஆழ்ந்த முதலீட்டுக்காகவும் அதனைப் பெருக்க முடியும்.

கரந்துறை வேலையின்மைக்கும் பொருளியல் வளர்ச்சிக்கும் உள்ள தொடர்புபற்றி முன்நாட்களில் செய்யப்பட்ட கருத்தாய்வு களில், மக்கள் தொகை வளர்ச்சியைப் போலவே மிகை மக்கள் தொகையையும், மூலதனத்தின் தேவையைத் தீர்மானிக்கிற ஒரு கருவியாகக் கருதுவது வழக்கமாக இருந்தது. ஆண்டுதோறும் பெருகுகிற புதிய உழைப்பாளர்களையும், தற்போதைய உழைப் பாளர்களில் மிகையாக இருப்பவர்களையும் உற்பத்தியைப் பெருக்கும் முறையில் பயன்படுத்துவதற்கு எவ்வளவு மூலதனம் தேவைப்படும் என்று மதிப்பிடுவது, மிகப் பலராலும் விரும்பப் படுகிற ஒரு கணக்கீட்டு முறையாக இருந்துவருகிறது. எடுத்துக் காட்டாக, ஒவ்வோர் உழைப்பாளிக்கும் ஆயிரம் டாலர் மதிப் புள்ள முதற்பொருள் தேவைப்படும் என்று வைத்துக்கொண்டு, அந்தத் தொகையை நாட்டில் உள்ள உழைப்பாளிகளின் மொத்த எண்ணிக்கையால் பெருக்கினால் கிடைக்கிற பெருமொத்தத் தொகை, நம்பமுடியாத அளவு மிகப் பெரிதாக அமைந்துவிடு கிறது. ஆனால் ஆயிரம் டாலர் மதிப்புள்ள முதற் பொருள், ஐக்கிய அமெரிக்க நாட்டின் ஒவ்வொரு தொழிலாளிக்கும் கிடைக் கிற தலா முதற்பொருளில் மிகச் சிறிய பகுதியே ஆகும். வரு மானத்தின் அளவு குறைவாக இருக்கும் காரணத்தால் உள்

நாட்டுச் சேமிப்பு ஆற்றல் குறைவாக இருக்கும் அல்லது புறக் கணிக்கப் படத்தக்க அளவு இருக்கும் என்று கருதப்படுகிறது. ஆகவே, இந்த நடைமுறையானது கிட்டத்தட்ட அயல்நாட்டு மூலதனத்தையே முற்றிலும் சார்ந்திருக்கக்கூடிய ஒன்ருக அமைந்துவிடுகிறது.

கரந்துறை வேலையின்மை நிலையில் ஒளிந்திருக்கிற சேமிப்பு ஆற்றல், பொருளியல் கருத்தாய்வில், குறிப்பாக மேற்கு நாடு களில் நடைபெறும் கருத்தாய்வில் தக்க இடத்தைப் பெறவில்லை. ஆனுல் கிராமப்புற வேலைக்குறைவு நிலையைப் பெரிய அளவில் பெற்றுள்ள வளர்ச்சி குறைந்த நாடுகள் சிலவற்றின் நடைமுறை வளர்ச்சியிலும், வளர்ச்சித் திட்டங்களிலும் அச் சேமிப்பு ஆற்றல் சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது என்பது உண்மை.

## குறைந்த மக்கள் தொகையுடைய நாடுகளின் நிலைமை

மக்கள் தொகைக்கும் முதலாக்கத்திற்கும் இடையே உள்ள உறவுபற்றிய இரண்டு வகைக் கருத்துகளை நான் இப்போது குறிப்பிட்டிருக்கிறேன். ஒரு கருத்தானது, வேளாண்மைத் துறையில் மிகை உழைப்பாளர்களை மிகுதியான அளவில் பெற் றுள்ள ஒரு நாட்டில் உள்நாட்டுச் சேமிப்புகள் எவ்வாறு திரட்டப் பட முடியும் என்பதை அழுத்தந் திருத்தமான முறையில் எடுத் துக் காட்டுகிறது. இக்கருத்தோட்டத்தில், மக்கள் தொகை யானது, மூலதனத்தை அளிப்பதற்குரிய ஓர் ஊற்றுக்காலாகக் கருதப்படுகிறது. இவ்வாறு உள்நாட்டில் கரந்து உறையும் சேமிப்பு ஆற்றலைக் கண்டுபிடித்ததன் விளைவாக, பின்தங்கிய வேளாண்மை நாடுகளில், தம்மைத் தாமே சார்ந்திருக்கும் மனப் போக்கு வளரக்கூடும். மற்ருெரு கருத்தானது, மக்கள் தொகை யின் அளவும் வளர்ச்சியும், ஒரு நாட்டிற்குத் தேவைப்படுகிற மூலதனத்தின் மொத்த அளவைத் தீர்மானிக்கிற காரணிகளாக இருக்கின்றன என்று எடுத்துக் காட்டுகிறது. இந்தக் கருத் தோட்டத்தின்படி, மக்களின் தொகை பெரிதாக இருக்குமானுல், அவர்களுக்குத் தேவைப்படுகிற மூலதனத்தின் அளவும் பெரிதாக இருக்கும். அதுபோலவே, மக்கள்தொகை பெருகுமானுல், அம் மக்களுக்குத் தேவைப்படுகிற மூலதனத்தின் அளவும் பெருகும். இந்த இரண்டாவது கருத்தானது, மக்கள்தொகை வளர்ச்சியால் அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தில் ஏற்படுகிற குறைவை நிறை செய்யவும், தலா வருமானத்தின் அளவை உயர்த்தவும், அயல்நாட்டு முதலீட்டின் இன்றியமையாமையை வற்புறுத்திக் காட்டுகிறது. (வேறு சொற்களில் கூறுவதானுல், அகன்ற முத

வீடு, ஆழ்ந்த முதலீடு ஆகிய இரண்டிற்குமே இந்தக் கருத்தானது அயல் நாட்டு முதலீட்டை எதிர்பார்க்கிறது.)

இந்த இருவகைக் கருத்துகளும் ஒன்றிற்கு ஒன்று முற்றிலும் புறம்பானவை அல்ல. இவற்றில் எதுவும் எல்லா நாடுகளுக்கும் பொருந்தக்கூடிய இயல்பை உடையதாக இல்லை. முதல்வகைக் கருத்தானது செறிந்த மக்கள் தொகையை உடைய வேளாண்மை நாடுகளுக்குப் பொருத்தமாக இருக்கிறது என்றால், இரண்டாவது வகைக் கருத்தானது தென் அமெரிக்கா உட்படக் குறைந்த மக்கள் தொகையை உடைய பகுதிகளுக்கு ஏற்புடையதாக இருக்கிறது என்று கூறலாம்.

மொத்தத்தில் உயரிய தலா வருமான அளவைப் பெற்றுள்ள தென் அமெரிக்கா முதலிய பகுதிகள், அளவுக்கு மீறிய மக்கள் தொகையையுடைய வேளாண்மை நாடுகளைவிட மிகுதியான அளவில் அயல்நாட்டு நிதி உதவியைச் சார்ந்திருக்கின்றன என்று கூறப்படுவது, வியக்கத்தக்க ஒரு புதிர்போலக் காணப்படலாம். இந்தக் கூற்றை, நடைமுறைச் செயல்களுக்குப் பொருந்தக் கூடிய ஒரு முடிவாகக் கருதுவதற்கில்லை. இக்கூற்று, இந்த நாடுகளின் மக்கள் தொகையின் வளர்ச்சி வீதம் மிகுதியாக இருப்பது, கரந்துறை வேலையின்மை நிலை பெரிய அளவில் இல்லாமலிருப்பது ஆகிய இரண்டு காரணிகளின் அடிப்படையில்மட்டும் எழுப்பப் பட்டுள்ள ஒரு கருத்தே ஆகும்.

தென் அமெரிக்காவில் உள்ள மக்கள் தொகையின் வளர்ச்சி வீதம், தென்கிழக்கு ஆசியாவில் இருக்கின்ற வளர்ச்சி வீதத்தை விடக்கூட மிகுதியாக இருப்பதாகத் தெரிகிறது. அதே சமயத்தில் தென் அமெரிக்காவில் கரந்துறை வேலையின்மை இருப்பதாகக் கூறுவதற்கு எத்தகைய சான்றும் இல்லை. கரந்துறை வேலையின்மை என்னும் சொற்றொடரை நாம், இந்த வாக்கியத்தில், உணவு உற்பத்தித் துறையில் கையாளப்படுகிற உற்பத்தி முறைகளில் எத்தகைய முன்னேற்றமும் செய்யப்படாத நிலையிலேயே, அத் துறையின் உற்பத்தி அளவும் குறையாத முறையில், அத் துறையில் பணியாற்றும் உழைப்பாளிகளில் ஒரு பெரும் பகுதியினரை அத் துறையிலிருந்து அகற்றி, கைத்தொழில் - வேளாண்மை - பொது ஊழியங்கள் ஆகிய துறைகளில் மெய்ம் முதற் பொருள்களை உற்பத்தி செய்யும் பணியில் ஈடுபடுத்த முடியும் என்னும் பொருளில் பயன்படுத்தியிருக்கிறோம். வேறு ஒரு பொருளில் - அந்தப் பொருள், ஐயத்திற்கு உரிய ஒன்று என்பது என் கருத்து - கரந்துறை வேலையின்மையானது தென் அமெரிக்காவில் இருக்கக்கூடும். ஒப்பீட்டு முறையில் பார்க்கும்போது, சில தொழில்கள் குறைந்த உற்பத்தி ஆற்றல் உடையனவாகவும்,

சில தொழில்கள் கூடுதல் உற்பத்தி ஆற்றல் உடையனவாக வும் இருக்கக்கூடும். அத்தகைய நிலையில், முதல்வகைத் தொழில் களிலிருந்து இரண்டாம் வகைத் தொழில்களுக்கு உழைப்பாளி களை மாற்றுவதால் இருவகைத் தொழில்களின் மொத்த உற்பத்தி பெருகும் என்பது உண்மை. முதல் வகைத் தொழில்களில் பணியாற்றும் மக்கள், இந்தப் பொருளில் வேண்டு மானால், வேலைக் குறைவு நிலைக்கு ஆளானவர்கள் என்று கருதப்படலாம்.

உற்பத்தி ஆற்றல் குறைந்த தொழில்களிலிருந்து உற்பத்தி ஆற்றல் மிகுந்த தொழில்களுக்கு உழைப்பாளிகளை மாற்றுவது தான் தற்போதைய சிக்கலுக்கு உரிய தீர்வு என்று கருதப்படலாம். ஆனால் இந்தத் தீர்வின் வெற்றி முழுவதும் மூலதன அளிப்பையே சார்ந்திருக்கிறது என்பது வெளிப்படை. ஒரு தொழிலின் உற் பத்தி ஆற்றல் மிகுதியாகவும் மற்றொன்றின் உற்பத்தி ஆற்றல் குறைவாகவும் இருப்பதற்குரிய காரணம் யாது? முதல்வகைத் தொழிலில் மிகக் கூடுதலான முதற்பொருளும் இரண்டாம் வகைத் தொழிலில் மிகக் குறைவான முதற்பொருளும் பயன் படுத்தப்படுவதே முதன்மையான காரணமாக இருக்கலாம். குறிப்பாகவும் சிறப்பாகவும், வளர்ச்சி குறைந்த நாடுகளில் வேளாண்மைத் துறையின் உற்பத்தி அளவுக்கும் கைத்தொழில் துறையின் உற்பத்தி அளவுக்கும் இடையே உள்ள குறிப்பிடத்தக்க வேறுபாட்டிற்குரிய ஒரே காரணமாக இஃது இல்லாவிட்டாலும் காரணங்களில் ஒன்றாக இருக்கிறது. சில சமயங்களில் தவறாகக் கருதப்படுவதைப்போல, வேளாண்மைத் துறையானது, கைத் தொழில் துறையைவிட இயல்பாகவே குறைந்த அளவு உற்பத்தி ஆற்றலை உடையது அன்று. ஆனால், தேவை நிலைமைகள் (Demand conditions), பிற பல சூழ்நிலைகள் ஆகியவற்றின் விளை வாக இந்த இருவகைத் துறைகளுக்கும் இடையே முக்கியமான வேறுபாடுகள் ஏற்படுகின்றன என்பது உண்மை. பல்வேறு நாடு களில், தொழில் வளர்ச்சி நடைபெற்றுள்ள அளவுக்கும் தலா வரு மான அளவுக்கும் இடையே புள்ளியல் நேர்முகத் தொடர்பு (Statistical correlation) இருப்பதாகத் தோன்றுகிறது.[12] ஆனால் அப்படி இருப்பதாலேயே, தலா வருமானத்தின் அளவு, தொழில் வளர்ச்சியின் அளவால் தீர்மானிக்கப்படுகிறது என்கிற முடிவுக்கு வருவது முறையாகாது. இந்த இரண்டு அளவுகளும் மூலதனத் தின் அளிப்பு என்னும் மூன்றாவது காரணியால் தீர்மானிக்கப்படு கின்றன என்பதே உண்மையாகும். தற்காலத் தொழில் துறை யின் உற்பத்தி ஆற்றல் மிகுதியாக இருப்பதற்குக் காரணம், அத் துறையில் பயன்படுத்தப்படுகிற முதற் பொருளின் அளவு

மிகுதியாக இருப்பதேயாகும். பொருளியலில் முன்னேறியுள்ள தொழில்துறை நாடுகளில், வேளாண்மைத் துறை, கைத்தொழில் துறை ஆகிய இரு துறைகளில் ஈடுபட்டுள்ள உழைப்பாளிகளுக் கும் ஏராளமான அளவுள்ள முதற்பொருள் தரப்படுகிற அநுகூல மான நிலை இருக்கிறது. ஆனால் வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டைப் பொறுத்த வரையில், வேளாண்மைத் துறையிலிருந்து தொழில் துறைக்கு உழைப்பாளிகளை மாற்றும் ஏற்பாடு, அதன் அளவி லேயே சிக்கலைத் தீர்க்கும் ஒரு வழியாக அமைந்துவிட முடியாது. ஏனென்றால், அப்படி மாற்ற முடியுமா என்னும் கேள்விக்கான விடை, முதலாக்கம் எந்த அளவுக்கு நடைபெறுகிறது என் பதையே பொறுத்திருக்கிறது. அந்த மாற்றம், அதன் அளவி லேயே, தொழில்துறைக்கு மாற்றப்படுகிற உழைப்பாளி களுக்குத் தேவையான மூலதனத்தை உருவாக்கிவிட முடியாது. முதலாக்கச் சிக்கல் முதலில் தீர்க்கப்பட்டாகவேண்டும் என்பது தெளிவு.

முன்னர் நம்மால் கருத்தாய்வு செய்யப்பட்ட மக்கட்செறிவு மிக்க நாடுகளைப் பொறுத்தவரை, கிராமப் பகுதிகளில் உள்ள மிகை மக்கள் தொகையை உற்பத்தியைப் பெருக்கும் முறையில் பயன்படுத்துவது, இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்குரிய ஓரளவு பரிகாரமாக விளங்கியது. அத்தகைய நாடுகளில், வேளாண்மைத் துறையில் உள்ள உழைப்பாளிகளில் ஒரு சாராரை அத்துறையி லிருந்து அகற்றுவதன்மூலம், நுகர்வின் அளவில் எத்தகைய குறை வும் ஏற்படாமலே, உள்நாட்டுச் சாதனங்களிலிருந்து மிகுதியான மூலதனத்தைப் பெறமுடியும் என்பது விளக்கிக் கூறப்பட்டது. இதைப்போன்ற மாயவித்தை மற்றொன்றை நம்மால் செய்ய முடியுமா என்று பார்க்கலாமா? குறைமக்கள் தொகை உடைய நாடுகளுக்குப் பொருந்தக்கூடிய தீர்வு ஒன்றை இத்தகைய முறை யில் உருவாக்க முடியுமா? பெரும்பாலும் உருவாக்க முடியலாம். ஆனால் அப்படி அது முடியவேண்டுமானால், வேளாண்மைத் துறையின் தொழில் நுணுக்கங்களிலும் உற்பத்தி முறையிலும் ஒரு தீவிரமான முன்னேற்றம் ஏற்பட்டாகவேண்டும். மிகை மக்கள் தொகையை உடைய வேளாண்மை நாடுகளின் முதலாக் கப் பணியைப் பொறுத்தவரை, அதன் தொடக்க நிலைகளில், இத்தகைய முன்னேற்றம் ஏற்பட்டாகவேண்டும் என்கிற கட்டா யம் இல்லை. ஆனால் குறைந்த அளவு மக்கள் தொகையை உடைய நாடுகளில் முதலாக்கப் பணி நடைபெற வேண்டு மானால், முதலிலேயே இந்த முன்னேற்றம் ஏற்பட்டாகவேண்டும். ஆனால், இந் நாடுகளில், இத்தகைய முன்னேற்றம் ஏற்படுவதற் குத் தேவையான சூழ்நிலை இருக்கிறது என்பது உண்மையே.

ஏனென்றால், இந்நாடுகளின் மக்கள் தொகையோடு ஒப்பிடும் போது, இவற்றில் உள்ள நிலத்தின் அளவு, ஏராளமானதே.

இத்தகைய நாடுகளில், வேளாண்மைத் துறையின் உற்பத்தியைப் பெருக்கும் ஏற்பாட்டிற்கு, பிற எவற்றிற்கும் தரப்படுவதை விட மிகுதியான முன்னுரிமை தரப்படவேண்டும். வேளாண்மைத் துறையில் செய்யப்பட வேண்டிய முன்னேற்றங்களுக்கு ஏன் இவ்வளவு முதன்மை அளிக்கிறோம்? இதற்குரிய முதற் காரணம், தென் அமெரிக்கா முதலிய மிகக் குறைந்த மக்கள் தொகையை உடைய நாடுகளில்கூட, மிகப் பெரும்பான்மையினராக உள்ள மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருப்பதே. அந் நாடுகளில், முதலாக்கத்திற்குத் தேவைப்படுகிற மக்கள் சக்தியை வேளாண்மைத் துறையிலிருந்தே பெறமுடியும். ஏழை மக்களுடைய வருமானத்திற் பெரும்பகுதி உணவுக்காகவே செலவிடப் படுவதாலும், அதன் விளைவாக ஓர் ஏழைநாட்டின் உழைப்பாளிகளிற் பெரும்பாலோர் வேளாண்மையில் ஈடுபடவேண்டியிருப்பதாலும், வேளாண்மைத் துறையின் உற்பத்தியில் ஏற்படுகிற ஒரு குறிப்பிட்ட சதவீத உயர்வால் அங்கிருந்து அகற்றப்பட்டு முதலாக்கப் பணியில் ஈடுபடுத்தப்படக்கூடிய உழைப்பாளிகளின் எண்ணிக்கை, கைத்தொழில் துறையின் உற்பத்தியில் அல்லது ஊழியங்களின் உற்பத்தியில் ஏற்படக்கூடிய அதே சதவீத உயர்வால் அவ்வாறு ஈடுபடுத்தப்படக்கூடிய உழைப்பாளிகளின் எண்ணிக்கையைவிட மிகக் கூடுதலாகவே இருக்கும். வேளாண்மைத் துறையில் செய்யப்படவேண்டிய முன்னேற்றங்களுக்கு முன்னுரிமை அளிப்பதற்கான இரண்டாவது காரணம், கூடுதலான மூலதனத்தைப் பயன்படுத்தாமல், அல்லது மிகுந்த அளவில் கூடுதல் மூலதனத்தைப் பயன்படுத்தாமல், வேளாண்மைத் துறையின் உற்பத்தியை ஓரளவு பெருக்கமுடியும் என்பதாகும். சிறந்த விதைகளைத் தேர்ந்தெடுத்தல், மண்வளப் பாதுகாப்பு (Soil conservation), மாற்றுப் பயிர்முறை (Rotation of crops), உரங்களைப் பயன்படுத்தல், கால்நடைகளுக்கு உணவளித்தல், பயிர்களைக் கெடுக்கும் பூச்சிகளை அழித்தல் முதலிய பணிகளில் நவீன அறிவைப் பயன்படுத்தக்கூடிய வாய்ப்புகள் இருக்கின்றன. பெரும் அளவில் முதலீடு தேவைப்படாத இந்த வழிகளிலும், இவைபோன்ற எண்ணற்ற பிற வழிகளிலும், வேளாண்மைத் துறையை முன்னேற்ற முடியும். இப்போதே அப்படியெல்லாம் செய்யப்பட்டு வருகிறது.

தொழில் வளர்ச்சியின் முதல் உறைவிடம் ஆகிய இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றாண்டில் நடைபெற்றது யாது? அந்த நாட்டில் வியக்கத்தக்க அளவில் நடைபெற்ற தொழிற்புரட்சி

யானது, அதற்குமுன் அங்கு நடைபெற்ற வேளாண்மைப் புரட்சி நடைபெருமல் இருந்திருந்தால், நடந்திருக்க முடியாது என்பதை அனைவரும் அறிவர். இந்த வேளாண்மைப் புரட்சி என்பது யாது? டர்னிப் (Turnip) என்னும் பயிர் வேளாண்மைத் துறையில் நுழைக்கப்பட்டதன் அடிப்படையிலேயே இந்தப் புரட்சி வீறிட்டெழுந்தது என்று கூறினுல் அது மிகையாகாது. இந்தச் சிறிய டர்னிப் என்னும் பயிரானது, மாற்றுப் பயிர் முறையில் ஒரு மாறுதலை ஏற்படுத்தியது. அந்த மாறுதலுக்கு மிகுதியான மூலதனம் தேவைப்படவில்லை என்ருலும், வேளாண்மை உற்பத்தியில் அதனுல் ஏற்படுத்தப்பட்ட உயர்வு, வியக்கத்தக்க அளவினதாக இருந்தது. இந்த மாறுதலின் விளைவாக ஏற்பட்ட உற்பத்திப் பெருக்கத்தின் காரணமாக, முன்னிலும் மிகக் குறைந்த உழைப்பாளிகளைக்கொண்டு முன்னிலும் மிகக் கூடுதலான உணவை விளைவிக்கமுடிந்தது. அப்படி முடிந்ததால், முதலாக்கம் செய்வதற்குத் தேவைப்பட்ட உழைப்பாளிகள், வேளாண்மையிலிருந்து விடுவிக்கப்பட்டார்கள். ஆதலால்தான், டர்னிப்பின் நுழைவு முதலிய முன்னேற்றங்கள் வேளாண்மைத் துறையில் ஏற்படாமல் இருந்திருந்தால், இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்க முடியாது என்று கூறுகிறேம்.

மக்கள் தொகையை மிகுதியாக உடைய நாடுகளில், தொழில் வளர்ச்சியின் விளைவாகத்தான் வேளாண்மைத் துறையின் உற்பத்தி முறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட முடியும். ஆனுல் அதற்கு மாருக, குறைந்த மக்கள் தொகையை உடைய நாடுகளில், வேளாண்மைத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டபின்னரே முதலாக்கமும் தொழில் வளர்ச்சியும் ஏற்பட முடியும். இந்த முடிவானது, நாம் முன்னர்ச் சுட்டிக்காட்டிய ஐக்கிய நாடுகள் மன்றத்தின் அறிக்கையில், பின்வரும் முறையில் எழில்மிகு வகையில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது: "மிகை உழைப்பாளர்களைப் பெற்றிராத ஒரு நாட்டில், வேளாண்மையில் ஏற்படுகிற முன்னேற்றத்தைப் பொறுத்தே தொழில்வளர்ச்சி ஏற்படமுடியும். அத்தகைய நாட்டில், தொழில் வளர்ச்சிக்கான பாதை, வேளாண்மையில் ஏற்படுகிற முன்னேற்றத்தின் வாயிலாகவே செல்லவேண்டியிருக்கிறது.......பயிரிடப்படக்கூடிய நிலத்தோடு ஒப்பிடும்போது மக்கள்தொகை மிகுதியாக உள்ள ஒரு நாட்டின் நிலை, இதற்கு நேர்மாருக இருக்கிறது. அத்தகைய நாட்டின் வேளாண்மைத் துறையில் எத்தனைபேருக்கு முழு அளவு வேலையைத் தரமுடியுமோ அதனைவிட மிகுதியானவர்கள் அத்துறையில் ஈடுபட்டிருக்கிருர்கள். அத்தகைய நாட்டில், வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்களின் எண்ணிக்கையைக் குறைக்காமல்

அத் துறையின் உற்பத்தி முறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை ஏற்படுத்த முடியாது.''[13]

குறைந்த மக்கள் தொகையை உடைய ஒரு நாடானது, வேளாண்மைத் துறையின் உற்பத்தித் திறனைப் பெருக்குவதன் மூலம், அத்துறையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களில் ஒரு பெரும்பகுதியினரை அதிலிருந்து விடுவித்து, முதலாக்கப் பணியில் ஈடுபடுத்த முடியும் என்பதோடு, அதே நேரத்தில், வேளாண்மைத் துறையால் உற்பத்தி செய்யப்படுகிற உணவுப் பொருளின் அளவு, குறையாமல் இருக்கும்படி அல்லது முன்னிலும் கூடுதலாக ஆகும்படிப் பார்த்துக்கொள்ள முடியும். வேளாண்மைத் துறையிலிருந்து மிகை உழைப்பாளர்களை வெளியேற்றிவிட்டால்மட்டும் போதாது; அதாவது, அவர்களைச் "சேமித்துவிட்டால்" மட்டும் போதாது. அப்படி வெளியேற்றப்பட்ட உழைப்பாளர்களை உடனடியாகப் பயன்மிக்க முதலாக்கப் பணியில் ஈடுபடுத்த வேண்டும்; அதாவது, அவர்களை ''முதலீடு'' செய்யவேண்டும், இந்த உண்மை தானாகவே தெரிகிற ஒன்றாக இருப்பதால் இதனை வற்புறுத்திக் கூறவேண்டிய தேவை இல்லை. மேலே குறிப்பிட்டபடி ''முதலீடு" செய்யப்படாவிட்டால், வேளாண்மையிலிருந்து விடுவிக்கப்பட்ட மக்கள்சக்தி வீணாகிவிடும்; வேளாண்மையின் உற்பத்தித் திறனில் ஏற்பட்ட பெருக்கத்தால் கிடைக்கக்கூடிய நலன்களும் கிடைக்காமற் போய்விடும். முதன்மைப் பொருளை (வேளாண்மைப் பொருளை) உற்பத்தி செய்யும் பணியிலிருந்து உழைப்பாளர்கள் விடுவிக்கப்பட்டால், அப்படி விடுவிக்கப்பட்டவுடனே முதலீட்டுத் திட்டங்களில் அவர்களைப் பயன்படுத்துவதற்கான வேலைவாய்ப்புகள் உண்டாக்கப்படவேண்டும். வேளாண்மையின் உற்பத்திப் பெருக்கம், தருக்க முறைப்படிப் பார்த்தால் அவசரமாகச் செய்யப்படவேண்டிய ஒன்றாக இருந்தபோதிலும், கால முறைப்படிப் பார்த்தால் அதனைச் செய்து முடித்தபின்னரே முதலீட்டுத் திட்டங்களை உருவாக்க வேண்டும் என்று கூற முடியாது.

குறைந்த மக்கள் தொகை உடைய நாடுகளைப்பற்றி நாம் இதுவரை செய்த கருத்தாய்வை இப்போது சுருக்கிக் கூறுவது நலன் பயக்கும் என்று கருதுகிறேன். இத்தகைய நாடுகளைப் பொறுத்தவரை, செய்யப்பட வேண்டியவை என்னென்ன என்று பார்ப்போம். வேளாண்மைத் துறையில் தொழில் நுணுக்க முன்னேற்றங்களை ஏற்படுத்துவதன் வாயிலாக, அங்குள்ள மிகை உழைப்பாளர்களை விடுவித்து, அப்படி விடுவிக்கப்பட்டவர்களை முதலாக்கத் திட்டங்களில் ஈடுபடுத்த வேண்டும். அப்படி ஈடுபடுத்தப்பட்டவர்களுக்குத் தேவையான உணவை நாம் எவ்வாறு பெறுவது? அவர்களுக்குத்

தேவையான உணவும் பிற இன்றியமையாப் பொருள்களும் அவர்களுக்குத் தரப்படவேண்டுமானால், நாட்டின் சேமிப்பு வீதத்தில் ஒரு பெருக்கம் ஏற்பட்டாக வேண்டும் என்பது தெளிவு. ஆம்; வேளாண்மையின் உற்பத்தித் திறன் உயர்ந்தால்மட்டும் போதாது. அந்த உற்பத்தித் திறனின் உயர்வோடு வேலை நின்று விடுமானால், அந்த உயர்வால் கிடைக்கிற கூடுதல் உணவை அதனைப் பயிரிட்டுத் தருகிற உழவர்களே அருந்திவிடக்கூடும். அந்த உயர்வானது அவ்வாறு நடப்புக்காலக் கூடுதல் நுகர்வுக்குப் பயன்படுத்தப்படாமல் முதலாக்கப் பணிக்குப் பயன்படுத்தப் படவேண்டுமானால், ஏதேனும் ஒரு வகையில், முன்னிலும் மிகுதியான சேமிப்பு நடைபெற்றாக வேண்டும். வேளாண்மையின் உற்பத்தித் திறனில் முன்னேற்றத்தை ஏற்படுத்த முடியுமானால், முன்னர் இருந்த நுகர்வின் அளவைச் சிறிதளவும் குறைக்காமலே-சேமிப்பைச் செய்ய முடியும் என்பது தெளிவு.

## இருவகை நிலைமைகள் — ஓர் ஒப்பீடு

குறைந்த மக்கள் தொகையை உடைய நாடுகளில் சேமிப்பைத் திரட்டுவதற்குரிய முறைகள் எவையாக இருக்க வேண்டும் என்னும் கேள்விக்கும், மிகை மக்கள் தொகை உடைய நாடுகளின் கரந்துறை வேலையின்மையில் ஒளிந்திருக்கிற சேமிப்பு ஆற்றலைத் திரட்டுவது எம் முறைகளில் என்னும் கேள்விக்கும் இடையே அடிப்படையான வேறுபாடு இல்லை. முறைகளைப்பற்றிய இக் கேள்வியானது நடைமுறையைச் சேர்ந்த-இடர்ப்பாடு மிகுந்த-ஒரு சிக்கலாகும். அச் சிக்கலின் தொழில்நுணுக்க இயல்புகள் பல்வேறு நாடுகளில் பல்வேறு வகையினவாக இருக்கின்றன. அப்படி இருந்தபோதிலும் அச் சிக்கலைப்பற்றிய சில பொதுவான கருத்துக்களை இந்நூலின் இறுதி அத்தியாயத்தில் தர இருக்கிறேன். இந்த அத்தியாயத்தைப் பொறுத்தவரையில் நாம் முதலாக்கத்திற்குக் கிடைக்கக்கூடிய ஊற்றுக்கால்கள் எவை என்பதைப்பற்றித்தான் கருத்தாய்வு செய்கிறோமே தவிர, அந்த ஊற்றுக்கால்களை அடைவதற்குரிய வழிகளும் முறைகளும் யாவை என்பதைப்பற்றி அன்று. மிகை மக்கள் தொகையுடைய நாடுகளில், வேளாண்மைத் துறையில் மிகையாக உள்ள உழைப்பாளிகள், உள்நாட்டுச் சேமிப்பைப் பெருக்குவதற்குரிய ஒரு வாய்ப்பாக அமைந்து விடுகிறார்கள். குறை மக்கள் தொகை உடைய நாடுகளில், வேளாண்மைத் துறையில் செய்யப்படுகிற முன்னேற்றங்கள் அத்தகைய வாய்ப்பை உண்டாக்குகின்றன. இருவகை நாடுகளிலும் அந்த வாய்ப்பு உடனடியாகப் பயன்படுத்தப்பட வேண்டும். ஏனென்றால், அந்த வாய்ப்பைக் கை நழுவவிடுவது மிகவும் எளிய செயலாக இருக்கிறது.

குறைமக்கள் தொகை உடைய நாடுகளின் நிலையை நான் ஆராய்ந்தது, மிகைமக்கள் தொகை உடைய நாடுகளில் பெரிய அளவில் உள்ள கரந்துறை வேலையின்மை நிலையோடு அதனை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கே ஆகும். இருவகை நிலைகளிலும் ஓர் ஒற்றுமை இருக்கிறது. நாம் ஏற்றுள்ள பாவனைகளின் (Assumptions) அடிப்படையில் பார்த்தால், இரு நிலைகளிலும், மொத்த உற்பத்தியில் ஓர் உயர்வு ஏற்படுகிறது என்பதே அந்த ஒற்றுமை. ஒருவகை நிலையில், அந்த உயர்வானது, முன்னர் வேலையில்லாமல் இருந்த உழைப்பாளிகளுக்கு வேலையைத் தருவதன் வாயிலாக ஏற்படுகிறது. மற்றொரு நிலையிலோ, அந்த உயர்வு, வேளாண்மையில் ஏற்படுத்தப்படுகிற தொழில்நுணுக்க முன்னேற்றங்களால் ஏற்படுகிறது. வேளாண்மையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளிகளின் தலா உற்பத்தி உயர்கிறது என்னும் பொருளில், இரு நிலைகளிலுமே, வேளாண்மையின் உற்பத்தி அளவு பெருகுகிறது. ஆனால் முதல்வகை நிலையில் அந்தப் பெருக்கம், மிகை உழைப்பாளிகளை வேறு துறைக்கு மாற்றுவதால் ஏற்படுகிறதே தவிர வேளாண்மைத்துறையில் முன்னேற்றங்களை உருவாக்குவதால் ஏற்படுவதில்லை. மக்கட் சக்தியின் பெரும் பகுதி உணவு உற்பத்தியிலேயே செலவிடப்படுகிற நாடுகளில் (நம்மால் கருத்தாய்வு செய்யப்படும் இருவகைப் பின்தங்கிய நாடுகளிலும் அப்படித்தான் செலவிடப்படுகிறது), அந்த உற்பத்தியின் ஆற்றலைப் பெருக்குதலே, மூலதனத்தைத் திரட்டுவதற்குரிய அடிப்படை ஊற்றுக்கால் ஆகும். ஆனால் வேளாண்மை உற்பத்தியில் ஏற்படுகிற முன்னேற்றத்தின் பயனை உழவர்கள் தங்களிடமே நிறுத்திக்கொள்ள முடியாது. அப்படி முடியாமலிருப்பது, ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சி ஏற்படும்போது நகரப்பகுதிக்கும் கிராமப்பகுதிக்கும் இடையே ஏற்படுகிற பூசலுக்குரிய ஒரு காரணமாகும். இத்தகைய நிலைமையின் விளைவாகத்தான், கைத்தொழில்கள், பொதுக் கட்டுமான வேலைகள் (Public construction works) ஆகியவற்றை, கிராமப் பொருளியலின்மீது சுமத்தப்படுகிற பளுவின் பயனைச் சுரண்டி வளர்கிற தொழில்கள் என்று, பழமைப்பற்றுடைய நுண்ணறிஞர்கள் விவரிக்க முனைகிறார்கள். இந்தக் குற்றச் சாட்டுக்கு ஓரளவு ஆதாரம் இருக்கிறது என்பது உண்மையே.

நாம் மேலே குறிப்பிட்ட இரண்டு வகை நிலைகளிலும், சேமிப்புச் சிக்கல் என்பது, மொத்த உற்பத்தியின் உயர்வில் எவ்வளவு முடியுமோ அவ்வளவு பகுதியை முதலாக்கப் பணிக்குப் பயன்படுத்துவதுபற்றிய சிக்கலே ஆகும். நுகர்வின் அளவைக் குறைப்பது என்னும் பேச்சே அதில் கிடையாது. உற்பத்தியின் உயர்வால் உருவாகிற சேமிப்பைப் பயன்படுத்துவதுதான்,

கடந்த காலத்தில், முதலாக்கத்திற்குரிய வழக்கமான வழியாக இருந்திருக்கிறது. வாழ்க்கைத் தரத்தின் அளவைக் குறைக்க முயல்வதைவிட அந்த அளவு மேலும் உயராதபடி அதனை உறுதியான முறையில் தடுத்து நிறுத்துவது எளிய செயலே ஆகும். இவ்வாறு ஒப்பீட்டு முறையில் பார்க்கும்போது அஃது எளிய செயலாகக் காணப்படினும், அதன் அளவில் பார்க்கும்போது அது கடினமான செயலாகவே இருக்கிறது. உடனடி நுகர்வை உயர்த்தும்படி வற்புறுத்தும் சக்திகள் பல இருப்பதே இதற்குரிய காரணமாகும்.

இருவகை நிலைகளை ஆராய்ந்து பார்க்கும்போது அவற்றின் இடையே ஒரு வேறுபாடு இருப்பதை அறியலாம். தொழில் வளர்ச்சியே பொதுவான பொருளியல் வளர்ச்சியை அடைவதற்கு உரிய வழியாக இருக்கிறது என்னும் நிலைமை, தொடக்க நிலையிலாவது, குறைமக்கள் தொகையை உடைய நாடுகளைவிட மிகைமக்கள் தொகையை உடைய நாடுகளுக்கே மிகவும் பொருத்தம் உடையதாக இருக்கிறது என்பதே அந்த வேறுபாடு. உள்நாட்டு ஆதாரங்களைக் கொண்டே முதலாக்கம் செய்வதற்குரிய வாய்ப்புகளும் வசதிகளும், குறைந்த மக்கள் தொகையை உடைய நாடுகளைவிடக் கரந்துறை வேலையின்மையைப் பெரிய அளவில் பெற்றுள்ள நாடுகளிலேயே மிகுதியாக இருக்கின்றன என்பது மற்றொரு வேறுபாடு. அஃது அப்படி இருப்பதற்குக் காரணம், இரண்டாம் வகை நாடுகளில், முதலாக்கப் பணியில் ஈடுபடுத்தப்படக்கூடிய உழைப்பாளிகள் ஏராளமான எண்ணிக்கையில் வேலையில்லாத நிலையில் இருப்பதே ஆகும். முதல்வகை நாடுகளில், அவ்வாறு ஈடுபடுத்தப்படக்கூடிய மிகைமக்கள் தொகை எதுவும் இல்லை. அத்தகைய நாடுகளில் முதலாக்கம் நடைபெற வேண்டுமானால், அவை முதலில், வேளாண்மைத் துறையில் முன்னேற்றங்களைச் செய்வதன்மூலம், உபரியாக இருக்கக்கூடிய மக்கள் சக்தி ஒன்றை உருவாக்க வேண்டும்.

மிகைமக்கள் தொகையைப் பெற்றுள்ள வேளாண்மை நாடுகளில் பொருளியல் முன்னேற்றம் ஏற்படவேண்டுமானால், அப்படி ஏற்படுவதற்கு முன்னாலேயே வேளாண்மை முன்னேற்றங்கள் நிகழ்த்தப்பட்டாக வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை என்பது என் கருத்து. வேளாண்மை முன்னேற்றங்களைப் புறக்கணிக்க வேண்டும் என்று நான் கூறுவதாக எண்ணிவிடக் கூடாது. அவற்றைப் புறக்கணித்தல் ஆகாது; நடைமுறையில் அவை மிகவும் இன்றிமையாதவை. கரந்துறை சேமிப்பு ஆற்றலைத் திரட்டும்போது தப்பிவிடுகிற அதன் பகுதிகள், திட்டத்திற்குத் துணையாக இருக்கக்கூடிய சேமிப்புகளைத் திட்டத்திற்கு வெளியே திரட்ட

முடியாமல் இருக்கிற நிலைமை ஆகியவற்றின் விளைவாக ஏற்படுகிற முட்டுக்கட்டையை உடைத்தெறிவதற்கான ஒரே வழியாக அந்த வேளாண்மை முன்னேற்றங்களே அமைந்திருக்கின்றன. இவ்வளவும் உண்மையாக இருந்தபோதிலும், வேளாண்மைத் துறையில் மிகை உழைப்பாளர்களை ஏராளமான அளவில் பெற்றுள்ள ஒரு சமுதாயத்தில், பொருளியல் வளர்ச்சியின் தொடக்க நிலைகளைப் பொறுத்தவரை, அந்த வளர்ச்சி ஏற்படுவதற்குமுன், வேளாண்மை முறைகளில் தீவிர முன்னேற்றம் ஏற்பட்டாக வேண்டும் என்கிற தேவையில்லை என்பதும் உண்மையே.

இதைத் தவிர்த்த பிற கோணங்களிலிருந்து பார்க்கும்போது, குறைந்த மக்கள் தொகையைப் பெற்றுள்ள நாடுகள் அநுகூலமான நிலையில் இருக்கின்றன. அந் நாடுகளிற் பலவற்றின் தலா வருமான அளவு உயரிய நிலையில் இருக்கிறது. அவற்றின் மக்கள் தொகையோடு ஒப்பிடும்போது அவை பெற்றுள்ள நிலங்களின் அளவு மிகுதியாக இருப்பதால், வேளாண்மைத் துறையின் உற்பத்தியைப் பெருக்குவதற்கு அந் நாடுகளுக்கு மிகுந்த வாய்ப்பு இருக்கிறது. எஃது எப்படி இருந்தாலும், மக்கள் தொகையை மிகுதியாகப் பெற்றுள்ள நாடுகளில் உழைப்பாளர்கள் உபரியாக இருக்கிறார்கள் என்பதாலேயே அந்த நாடுகளில் முன்னேற்றம் ஏற்பட்டுவிடாது. அப்படி இருப்பது, அப்படி இருக்கிற மிகை உழைப்பாளர்கள் மெய்ம்முதல் ஆக்கத்திற்குப் பயன்படுத்தப்பட்டால் மட்டுமே, அவர்கள் எந்த அளவுக்குப் பயன்படுத்தப்படுகிறார்களோ அந்த அளவுக்கு மட்டுமே, ஓர் அநுகூலமாக இருக்க முடியும். கோட்பாட்டு அளவில் பார்க்கும்போது, அத்தகைய நாடுகளின் கரந்துறை வேலையின்மையை எவ்வாறு முதலாக்கத்திற்குப் பயன்படுத்த முடியும் என்பதைத்தான் நான் எடுத்துக் காட்டியுள்ளேன். ஆனால் அத் திட்டத்தை நடைமுறையில் கையாள முயலும்போது பல்வேறு இடர்ப்பாடுகள் ஏற்படக்கூடும் என்பதை நான் மறுக்கவில்லை.

## இரண்டாம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. இரண்டாம் உலகப் போரின்போது ட்ரினிடாடில் (Trinidad) ஐக்கிய அமெரிக்காவின் துருப்புகள் படைத் தளங்களை அமைப்பதற்காக அந் நாட்டைச் சேர்ந்த உழைப்பாளிகளை ஏராளமான அளவில் வேலைக்கு அமர்த்திக்கொண்டார்கள் என்னும் எடுத்துக்காட்டை, ஏ. ஆர். ப்ரெஸ்ட் (A. R. Prest) என்பார், அவருடைய War Economics in Primary Producing Countries என்னும் சுவைமிக்க நூலில் (லண்டன், 1948) தந்துள்ளார். அவர்கள் அவ்வாறு அமர்த்திக்கொள்ளப்பட்டதன் விளைவாக, ட்ரினிடாடின் கரும்புப் பண்ணைகள்,

அவற்றில் பணியாற்றிக்கொண்டிருந்தவர்களில் ஒரு பகுதியினரை இழந்துவிட்டன. அதன் விளைவாக அப் பண்ணைகளின் சர்க்கரை உற்பத்தி குறிப்பிடத்தக்க அளவு குறைந்துவிட்டது. அப்படிக் குறைந்துவிட்டதை எண்ணிப் பார்த்தால், ட்ரினிடாடில் கரந்துறை வேலையின்மை காணப்படவில்லை என்கிற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது. ஆனால் அந்தக் குறைவுக்கு இன்னொரு காரணமும் இருக்கக்கூடும். ட்ரினிடாடின் உழைப்பாளிகளுக்கு அமெரிக்கர்கள் உயர்ந்த அளவு ஊதியத்தை அளித்ததால், அவர்கள் முன்னர் உழைத்ததைவிடக் குறைந்த அளவு உழைக்கத் தொடங்கி இருக்கலாம் என்பதே அந்தக் காரணம். உயர்ந்த ஊதியத்தின் விளைவாக உழைப்பாளர்கள் குறைவாக உழைக்கத் தொடங்குவது, அவ்வப்போது நடக்கிற ஒரு நிகழ்ச்சிதான். இந்தச் சூழ்நிலையில், ட்ரினிடாடின் பொருளியல், ஒரு தோட்டத் தொழில்பொருளியல் (Plantation economy) என்பதும் நினைவு கூரத் தக்கது. எகிப்து, இந்தியா முதலிய மக்கட்செறிவு மிகுந்த வேளாண்மை நாடுகளில், கிராமப் பகுதி உழைப்பாளிகளிடையே வேலைக் குறைவு நிலை ஏராளமான அளவில் இருக்கிறது என்னும் உண்மை, போர்க் கால அநுபவத்தால் உறுதி செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த அநுபவத்தை, அறிவியல் முறைக் கட்டுப்பாட்டுடன் நடத்தப்பட்ட ஒரு சோதனை என்று எடுத்துக்கொள்ள முடியாது. போர்க் காலத்தில், போரின் விளைவாக, வழக்கத்திற்கு மாறான பல நிலைமைகளும், இறக்குமதிகளைத் தீவிரமாகக் குறைப்பது உட்பட வாணிபத் துறையில் பல குறுக்கீடுகளும் ஏற்பட்டிருந்தன. எடுத்துக்காட்டாக, இரசாயன உரங்களைப் போதிய அளவு இறக்குமதி செய்ய முடியாமல் எகிப்து கடுமையான துயரத்திற்கு உள்ளாகியது. அதுபோலவே, பர்மா முதலிய நாடுகள் அப்போது ஜப்பானியருடைய ஆட்சியின்கீழ் இருந்ததால், இந்தியா, அதற்குமுன் அந்நாடுகளிலிருந்து அரிசியை இறக்குமதி செய்ததுபோல அப்போது செய்யமுடியாமல், அரிசிப் பற்றுக்குறைக்கு ஆளாகி அல்லல் உற்றது. வழக்கத்திற்கு மாறான இந்த நிலைமைகள் இல்லாமல் இருந்திருந்தால், நாம் மேலே சுட்டிக்காட்டிய போர்க்கால அநுபவமானது, கரந்துறை வேலையின்மையைப் பயன்படுத்தக்கூடிய வாய்ப்புகளை மேலும் தெளிவாக எடுத்துக்காட்டியிருக்க முடியும்.

2. பால் என். ரொசன்ஸ்டீன் - ரொடான் (Paul N. Rosenstein Rodan) என்பார் எழுதியுள்ள ("Problems of Industrialisation of Eastern and South - Eastern Europe" என்னும் நூலையும், கே. மாண்டல்பாம் (K. Mondelbaum) என்பார் எழுதியுள்ள "The Industrialisation of Backward Areas" என்னும் நூலையும் (ஆக்ஸ்போர்ட், 1945) காண்க. டொரீன் வாரினர் (Doreen Warriner) என்பார், தம்முடைய "The Economics of Peasant Farming" என்னும் நூலில் (லண்டன், 1939) பின்வருமாறு தெரிவித்துள்ளார்:- "கிழக்கு ஐரோப்பா முழுவதையும் ஒன்றாக எண்ணிப் பார்த்தால், அங்குள்ள வேளாண்மை மக்கள் தொகையில், நான்கில் ஒரு பங்குமுதல்

மூன்றில் ஒரு பங்கு வரை உள்ளவர்கள், உபரியாக இருக்கிறார்கள். சில மாவட்டங்களில் இந்த உபரி வீதம் இதனினும் உயர்ந்ததாக இருக்கிறது. கலீசியா (Galicia), அத்தகைய மாவட்டங்களில் மிகவும் முதன்மையான ஒன்று.'' (பக்கம் 68) ஆனால் இந்தப் புள்ளி விவரங்கள் யாவும் இரண்டாம் உலகப் போருக்கு முன்னர் இருந்த நிலைமைகளையே எடுத்துக் காட்டுகின்றன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

3. டபள்யூ. டபள்யூ. க்ளிலாண்ட் (W. W. Cleland) என்பார், அவருடைய ''The Population Problem in Egypt'' என்னும் நூலில் (1936) தந்துள்ள புள்ளி விவரங்களைப் பார்த்தால், 40 சத வீதம் என்பதுதான் பொருத்தமான மதிப்பீடு என்று தோன்றுகிறது. அதே ஆசிரியரால் சில ஆண்டுகளுக்குப் பின்னர் மதிப்பீடு செய்யப்பட்டு, டொரீன் வாரினர் (Doreen Warriner) என்பாரால் அவருடைய ''Land and Poverty in the Middle East'' என்னும் நூலில் (லண்டன், 1948) 33ஆம் பக்கத்தில் மேற்கோளாக எடுத்தாளப் பட்டுள்ள புள்ளி விவரப்படிப் பார்த்தால், எகிப்து நாட்டின் வேளாண்மை மக்கள் தொகையில் பாதிப் பேர் உபரியாக இருப்பர் என்று தோன்றுகிறது. அதே வகையான மதிப்பீட்டை, சார்லஸ் இஸ்ஸாவி (Charles Issawi) என்பார் அவருடைய ''Egypt : An Economic and Social Analysis'' என்னும் நூலில் (லண்டன், 1947), 195ஆம் பக்கத்தில், பின்வரும் சொற்களில் தெரிவித்துள்ளார் :—''அமெரிக்கன் கல்லூரியால் கெய்ரோவுக்கு அருகில் நடத்தப்பட்ட ஒரு சோதனையிலிருந்து தற்போது எகிப்தில் வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்களில் ஏறத்தாழப் பாதிப்பேரை மட்டும் வைத்துக்கொண்டு, அந் நாட்டில் தற்போது உற்பத்தியாகிற அதே அளவு உணவுப் பொருளை அல்லது கிட்டத்தட்ட அதே அளவு உணவுப் பொருளை உற்பத்தி செய்ய முடியும் என்று தெரிகிறது.''

4. இந்தக் கருத்தை வற்புறுத்திக் கூறியவர் திரு. பீட்டர். எம். கட்மான் (Peter M. Gutmann) ஆவர். அன்னாருக்கு என் நன்றி உரியது ஆகுக.

5. வேளாண்மைத் துறையில் உள்ள மிகை உழைப்பாளர்களை அங்கிருந்து அகற்றுகிற அதே சமயத்தில், வேளாண்மையின் உற்பத்தி முறைகளில் விரிவான அளவில் தீவிரமான முன்னேற்றங்களைச் செய்வது, இதற்கு உரிய மற்றொரு பரிகாரம் ஆகும். அவ்வாறு செய்தால், வேளாண்மையின் மொத்த உற்பத்தி, முன் இருந்த அளவிலேயே இருப்பதோடு நில்லாமல், குறிப்பிடத் தக்க அளவு உயரவும் இயலும். இந்த வகையான பரிகாரம், நம்மால் தற்போது கருத்தாய்வு செய்யப்படுகிற திட்டத்திற் சேராத - அதற்கு வெளியே உள்ள - ஒன்றுதான் என்றபோதிலும் மிக மிக இன்றியமையாதது; விரைவில் நம்மால் கருத்தாய்வு செய்யப்பட இருப்பது,

6. 1939—45ல் நடைபெற்ற போரின்போது, சூடானில் (Sudan) திறமை வாய்ந்த அரசாங்க நிர்வாகிகளால் செய்து முடிக்கப் பட்ட சாதனையை அறிவதற்கு, ஏ. ஆர். ப்ரெஸ்ட் (A. R. Prest) எழுதியிருப்பதைக் காண்க. (முன்னர்க் குறிப்பிட்ட நூல், பக்கம் 172)

7. பொது நிதி இயலானது (Public finance) எவ்வாறு கட்டாயச் சேமிப்புக்கு உரிய ஒரு கருவியாகத் திகழ முடியும் என்பது, இந்நூலின் ஏழாவது அத்தியாயத்தில் மேலும் சற்று விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

8. தொன்மைப் பொருளியலின் கூலிகள் - நிதிக் கோட்பாட்டில் (Classical wages-fund doctrine) கொள்ளப்பட்டிருப்பதைப் போலவே இங்கும், நிதி (Fund) என்னும் கருத்துக்கு, இருப்பு (Stock) என்னும் பொருளைவிட ஓட்டம் (Flow) என்னும் பொருளையே கொள்க.

9. இந்தக் கருத்தானது, நார்மன் எஸ். புகானன் (Norman S. Buchanan) என்பாரின் ''International investment and Domestic Welfare'' என்னும் நூலில் (நியூ யார்க், 1945) சிறந்த முறையில் வற்புறுத்திக் கூறப்பட்டிருக்கிறது.

10. தி எகானமிஸ்ட் (The Economist) என்னும் பத்திரிகையின் 1952 மே 10 இதழில் வெளியாகியுள்ள ''கொழும்புத் திட்டத் தின் முதல் ஆண்டு'' (Colombo Plan's First Year) என்னும் கட்டுரையைக் காண்க. (பக்கம் 355)

11. இந்த வாக்கியத்தைக் கூறியவர் பெந்தாம் (Bentham) [Quarterly Journal of Economics என்னும் பத்திரிகையின் 1932நவம்பர் இதழில் 125ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள எஃப். ஏ. வான் ஹேயக் (F. A. Von Hayek) என்பாரின் Note on the Development of the Doctrine of Forced Saving என்னும் கட்டுரையில் இந்த வாக்கியம் மேற்கோளாகத் தரப்பட்டிருக்கிறது.] ஆனால் இந்தக் கருத்து, பொருளியல் சிந்தனையின் வரலாற்றில், அடிக்கடிக் காணப்பட்டுள்ள ஒன்றே.

12. ஆஸ்திரேலியா, டென்மார்க், நியூஸிலாந்து ஆகிய நாடுகள் மிகுந்த செழிப்பு வாய்ந்த வேளாண்மை நாடுகளாகத் திகழ் கின்றன என்றும், அவற்றின் இச் செழிப்பு, நம்மால் குறிப் பிடப்பட்ட நேர்முகத் தொடர்பு உண்மையில் இல்லாதது என்பதையே எடுத்துக் காட்டுகிறது என்றும் சிலர் கருது கிறார்கள். அந் நாடுகளின் ஏற்றுமதிகளிற் பெரும் பகுதி வேளாண்மைப் பொருள்களாக இருக்கின்றன என்பது உண்மையே. ஆனால் அவற்றினுடைய உள்நாட்டுப் பொரு ளியல்களை ஆராய்ந்து பார்த்தால், அவற்றினுடைய உழைக் கும் மக்கள்தொகையில் ஒரு சிறு பகுதியினரே - ஏறத்தாழ ஐந்தில் ஒரு பகுதியிலிருந்து மூன்றில் ஒரு பகுதிவரை உள்ள மக்கள் தொகையினரே - வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர் என்பது தெளிவாகத் தெரியும். அந் நாடுகளின் பொருளியல்

நடவடிக்கை முழுவதையும் ஒன்றாக வைத்துப் பார்த்தால், அந் நடவடிக்கையின் பெரும்பகுதி தொழிற் பகுதியே தவிர வேளாண்மைப் பகுதி அன்று என்பது விளங்கும். ஒரு நாட்டினுடைய அயல்நாட்டு வாணிபம் எப்போதுமே அந்த நாட்டினுடைய உள்நாட்டுப் பொருளியலை எடுத்துக் காட்டும் தன்மை உடையதாக இருக்கும் என்று இயம்ப முடியாது. எடுத்துக்காட்டாக, ஆஸ்திரேலியாவின் மக்கள் தொகையில் இருபது சதவீதம் பேரே வேளாண்மையில் ஈடுபட்டிருந்த போதிலும், ஏறத்தாழ அந் நாட்டின் ஏற்றுமதிகள் அனைத்துமே வேளாண்மைப் பொருள்களாக இருக்கின்றன. [முன்னர்க் குறிப்பிட்ட எஃப். ஹில்ஜெர்ட் (F. Hilgerdt) என்பாரின் நூல், பக்கம் 26ஐக் காண்க]. இதற்கு மாறாக, பொலிவியாவின் சுரங்கத் தொழிலில் அந் நாட்டின் மக்கள் தொகையில் 3 சத வீதத்தைவிடக் குறைந்த அளவினரே ஈடுபட்டிருந்தபோதிலும், அந் நாட்டின் மொத்த ஏற்றுமதியில் 90 சத வீதத்திற்கு மேற்பட்ட பகுதி, சுரங்கப் பொருள்களே. அதுபோலவே, அந் நாட்டின் மக்கள் தொகையில் பெரும் பகுதியினர் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தபோதிலும், அந் நாடு பிற நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்கிறது. [எம். எசெக்கியல் (M. Ezekiel) என்பாரைப் பதிப்பாசிரியராகக்கொண்ட Towards World Prosperity என்னும் நூலைக் காண்க. நியூ யார்க், 1947, பக்கம் 431.]

13. முன்னர்க் குறிப்பிடப்பட்ட "Measures for the Economic Development of Underdeveloped Countries" என்னும் நூலைக் காண்க. பக்கம் 59.

# 3. வாழ்க்கைத் தரமும் சேமிப்புத் திறனும்

முதலாக்கச் சிக்கலின் அளிப்புப் பகுதியைப் பொறுத்தவரை வறுமை என்னும் நச்சு வளையமானது, (அ) குறைந்த வருமான அளவு என்பதில் தொடங்கி, (ஆ) குறைந்த சேமிப்புத் திறன் என்பதை அடைந்து, ஆகவே (இ) மூலதனப் பற்றுக்குறை என்னும் கட்டத்தைச் சேர்ந்து, அதிலிருந்து, (ஈ) குறைந்த உற்பத்தித் திறன் என்னும் நிலையை எய்தி, அதிலிருந்து மீண்டும், குறைந்த வருமான அளவு என்னும் தொடக்க நிலையை அடைந்து விடுகிறது. இந் நூலின் இரண்டாவது அத்தியாயமானது, இந்தக் கருத்திற்கு முரண்பட்டதாக இல்லை என்றபோதிலும், வறுமை நிலையிலும், பிழைப்பு நிலையிலும் (Subsistence level) உள்ள ஒரு வேளாண்மைப் பொருளியலானது, எந்தெந்த வழிகளையும் முறைகளையும் கையாண்டால், முதலாக்கப் பணிக்குப் பயன்படக்கூடிய அதனுடைய மெய் வருமான ஓட்டத்தைப் (Flow of real income) பெருக்கிக்கொள்ள முடியும் என்பதை அலசி ஆராய்வதன் வாயிலாக, நமக்கு ஓரளவு நம்பிக்கையை அளித்திருக்கிறது. ஆனால், இந்த அத்தியாயத்தில் நாம், குறைந்த வருமானம் உள்ள நாடுகளின் மூலதனப் பற்றுக்குறை தன்னைத்தானே தொடர்ந்து நிலை நாட்டிக்கொள்ளும் போக்கைச் சிறிதளவும் தளர்த்தாமல் மேலும் ஆற்றல் உடையதாக ஆக்கும் ஒரு சூழ்நிலையைச் சந்திக்கவேண்டியிருக்கிறது.

குறிப்பிடத்தக்க அளவு உள்நாட்டுச் சேமிப்பைத் திரட்ட வேண்டுமானால், உற்பத்தித் திறன், மெய் வருமானம் ஆகியவற்றில் உயர்வு ஏற்படவேண்டும். தொடக்க நிலைகளில் அந்த உயர்வை ஏற்படுத்துவதற்கு, அயல்நாட்டு முதலீடு முதலிய ஏதேனும் ஒருவகை அயல்நாட்டு உதவி இருந்தாகவேண்டும் என்று கூறுவதன்மூலம், மேலே குறிப்பிடப்பட்ட சூழ்நிலையி

லிருந்து தப்புவதற்கு உரிய ஒரு வழியை - கொள்கை அளவிலாவது - சிலர் அடைய முயல்வது இயற்கையே. இந்தக் கருத்தின் படி, அயல்நாட்டு முதலீடானது, குறைந்த வருமானம் உள்ள நாடுகளின் முதலாக்கச் சிக்கலின் அளிப்புப் பகுதியில் காணப்படுகிற நச்சு வளையத்தை உடைத்து எறிவதற்கான மீட்புச் சக்தியாக அமைந்திருக்கிறது. இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், அயல்நாட்டு முதலீடானது, இடைக்காலத்தைக் கடப்பதற்கு உரிய ஒரு பாலமாகத் திகழ்கிறது. இந்தப் பாலத்தின் வாயிலாக உற்பத்தித் திறனில் உயர்வு என்னும் நிலையை அடைந்துவிடுவோமாயின், அந்த நிலையிலிருந்து உருவாகிற மெய் வருமான உயர்விலிருந்து, சேமிப்புப் பெருக்கமானது, தானே நிகழும்: அல்லது அதனை நிகழும்படிச் செய்யமுடியும்.[1]

சேமிப்புத் திறனைத் தீர்மானிக்கும் காரணியாக விளங்குவது, மெய் வருமானத்தின் தன் அளவு (Absolute level) மட்டுமல்ல - தராதர அளவும்கூட (Relative level) என்னும் உண்மையை நாம் உணர்ந்ததும், மேலே குறிப்பிடப்பட்ட கோட்பாடு, ஐயத்திற்கு உரிய ஒன்றாக ஆகிவிடுகிறது. மிகுந்த வறுமை நிலைக்கு உள்ளாகியுள்ள நாடுகளில்கூட மெய் வருமானத் தன் அளவு உயர்ந்திருப்பதாகக் காணப்பட்டபோதிலும், அதன் விளைவாக அந் நாடுகளின் சேமிப்பு ஆற்றல் உயர்ந்திருப்பதாகக் கூற முடியாது. அதற்கு மாறாக, அந் நாடுகளின் மெய் வருமானத் தன் அளவு உயர்ந்திருக்கிற அதே நேரத்தில், பொருளியலில் முன்னேறியுள்ள நாடுகளோடு ஒப்பிடும்போது அவற்றின் மெய் வருமானத் தராதர அளவு குறைந்திருக்கிற காரணத்தால், சேமிக்கும் செயலானது, அந் நாடுகளில், முன்னிலும் கடினமான ஒன்றாக ஆகியிருக்கக்கூடும். இந்தக் கருத்து, பொருத்தம் உள்ள ஒன்றாக எனக்குத் தோன்றுகிறது; குறைந்த அளவு, எண்ணிப் பார்க்கக்கூடிய ஒன்றாகவாவது தோன்றுகிறது. பல்வேறு நாடுகளின் வருமான அளவுகளுக்கு இடையேயும், அவற்றின் விளைவாக அந் நாடுகளின் வாழ்க்கைத் தரங்களுக்கு இடையேயும் வளர்ந்துகொண்டே யிருக்கிற பெரிய வேறுபாடுகள் இருப்பது, அத்தகைய வேறுபாடுகள் இருக்கின்றன என்பதைப்பற்றிய உணர்ச்சி பெருகிக்கொண்டிருப்பது ஆகிய இந்த இரண்டுமாகச் சேர்ந்து, ஏழை நாடுகளின் பொதுவான நுகர்வு நாட்டத்தைப் பெருக்கக்கூடும்; அவற்றின் சேமிப்பு ஆற்றலைச் சுருக்கக்கூடும்; அதே நேரத்தில் அவற்றின் அயல்நாட்டுச் செலுத்தல் நிலையை (Balance of payments) நெருக்கடிக்கு ஆளாக்கவும் கூடும்.

## நுகர்வு, சேமிப்பு ஆகியவைபற்றிய ஒரு புதிய கோட்பாடு

உலகத்தில் உள்ள ஒத்த நிலையற்ற வருமானப் பங்கீடானது (Unequal income distribution), கடந்த காலத்திய பொருளியல் கோட்பாடு, பன்னாட்டுப் பொருளியல் கைக்கோள் ஆகிய இரண்டிலுமே பெரும்பாலும் புறக்கணிக்கப்பட்டிருந்தபோதிலும், அப் பங்கீட்டிலிருந்துதான் நம்முடைய தற்போதைய கருத்தாய்வு தொடங்குகிறது. இந்த இன்றியமையாத உண்மையை அடிப்படையாகக்கொண்டு, நாம், பன்னாட்டுப் பின்னணியில் அமைந்த பொருளியல் வளர்ச்சிச் சிக்கல்களுக்கு ஓரளவு விளக்கம் தரக்கூடிய கோட்பாடு ஒன்றை உருவாக்க முனைவோம். ஜேம்ஸ் எஸ். டியூசன்பெரி (James S. Duesenberry) என்பார், அவரால் அண்மையில் இயற்றப்பட்டு வெளியிடப்பட்ட நூல் ஒன்றில் தந்துள்ள கோட்பாடு ஒன்றை நான் இச் சமயத்தில் பயன்படுத்திக்கொள்ள விழைகிறேன்.[2] இந்தக் கோட்பாடானது, அதனுடைய மூல வடிவத்தில் தனிப்பட்ட நுகர்வோருக்குப் பொருந்தக்கூடியதாகத்தான் இருக்கிறது என்றபோதிலும், பன்னாட்டு அளவிலும் ஓரளவு விளக்கம் தரக்கூடிய சிறப்பியல்பு அதற்கு இருக்கிறது.

நுகர்வோரின் போக்கைக் குறித்த இந்தக் கோட்பாடானது, தனியாரின் நுகர்வுப் பணிகள் (Consumption functions) ஒன்றுடன் ஒன்று தொடர்பு உடையனவே தவிர ஒன்றை ஒன்று சாராத இயல்புடையன அல்ல என்னும் உண்மையைப் பெரிதும் வற்புறுத்துகிறது. அத்தகைய தொடர்பு, முதலில், பகட்டான நுகர்வின் வாயிலாகப் பிறரைப்போல் தாமும் காட்சி அளிக்க வேண்டும் என்று மக்களிடையே காணப்படுகிற சமுதாய உணர்வின்மூலமாக ஏற்படுகிறது. சிறப்பு நிலை பெறுவதற்கான விருப்பம்தான் (Desire of distinction) 'மக்களுடைய ஆர்வங்களிலேயே தலை சிறந்த ஆற்றல் உடையது' என்று நஸ்ஸா சீனியர் (Nassau Senior) என்பார், நூறு ஆண்டுகளுக்கு முன்னரே தெரிவித்துள்ளார். சிறப்பாக, தார்ஸ்டன் வெப்ளென் (Thorsten Veblen) என்பாரால் பலருக்கும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள இந்த உண்மையானது, தனி மனிதர்களுக்கு இடையே உள்ள உறவுகளைப் பொறுத்தவரை முக்கியமானதாக இருக்கிறது என்பதோடு, பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளின் நுகர்வுப் பழக்கங்கள் - சேமிப்புப் பழக்கங்கள் ஆகியவற்றை விளக்குவதற்கும் ஓரளவு பயன்படுகிறது. ஆனால் நம்மால் இப்போது முனைப்பான முறையில் கருத்தாய்வு செய்யப்பட இருக்கிற செய்தி, இஃது அன்று.

இன்னொரு வழியிலும் தனியாரின் நுகர்வுப் பணிகள் ஒன்றோடு ஒன்று தொடர்பு உடையனவாக இருக்கின்றன. இந்த வழிதான் நம்முடைய கருத்தாய்வில் சிறப்பிடம் பெற இருக்கிறது. டியூசன்பெரி அவர்கள் இதனைக் 'காட்சி விளைவு' (Demonstration effect) என்று குறிப்பிட்டுள்ளார்.[3] உயர்வகைப் பண்டங்களோடு அல்லது நுகர்வின் உயர்ந்த வகைகளோடு, புதிய பொருள்களோடு அல்லது பழைய விருப்பங்களை நிறைவேற்றவல்ல புதிய முறைகளோடு மக்கள் தொடர்புகொள்ள நேரிடும்போது, சற்றுக் காலத்திற்குப் பின்னர், ஒருவகையான பரபரப்பையும் மன நிறைவற்ற தன்மையையும் அவர்கள் அடைவது இயல்பு. மேற்படித் தொடர்பின் விளைவாக, அவர்களுடைய அறிவு பெருகுகிறது ; அவர்களுடைய கற்பனை தட்டி எழுப்பப்படுகிறது ; புதிய விருப்பங்கள் எழுகின்றன ; நுகர்வு நாட்டத்தின் (Propensity to consume) அளவும் உயர்வடைகிறது.

ஐக்கிய அமெரிக்காவில் நடத்தப்பட்ட குடும்ப வரவு செலவுத் திட்ட ஆய்வுகளிலிருந்து, எந்த உண்மையை அறிய முடியும் என்று எல்லோரும் எதிர்பார்ப்பார்களோ அந்த உண்மையை நாம் அறிகிறோம் ; அதாவது, உயர்ந்த வருமானப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள், அவர்களுடைய வருமானத்தில், தாழ்ந்த வருமானப் பிரிவினரைவிட, மிகுதியான வீதாசாரத்தைச் சேமிக்கிறார்கள் என்னும் உண்மையை அறிகிறோம். அந் நாட்டின் தனியாரால் செய்யப்படுகிற சேமிப்பு முழுவதுமே, அந் நாட்டின் மக்கள் தொகையில் ஏறத்தாழ 25 சத வீதம் உள்ள உயர் வருவானப் பிரிவினராலேயே செய்யப்படுகிறது. எஞ்சியுள்ள 75 சத வீதம் மக்களின் சேமிப்பு, கிட்டத்தட்ட ஒன்றுமில்லை என்று சொல்லத் தக்க நிலையிலேயே இருக்கிறது.[4] ஒரு குறிப்பிட்ட காலத்தைப் பொறுத்தவரை, வருமான அளவுக்கும் சேமிப்பு வீதத்திற்கும் இடையே இருப்பதாகக் குடும்ப வரவு செலவுத் திட்டம்பற்றிய புள்ளி விவரங்களால் இவ்வளவு தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டுள்ள இந்தத் தொடர்பானது, நீண்ட கால அளவில் ஏற்படுகிற மாறுதல்களைப்பற்றி நாம் ஆராயும்போது இல்லாமற்போவது ஏன் ? இந்த நிலைமை நீண்ட காலமாகவே, பொருளியற் புலவர்களுக்கு ஒரு புதிராக இருந்து வந்திருக்கிறது. நாட்டு வருமானம் முழுவதையும் ஒன்றாகக் கணக்கிலெடுத்துப் பார்த்தால், அதில் இந்தத் தொடர்பு இருப்பதே இல்லை. 1880முதல் உள்ள ஒவ்வொரு பத்தாண்டுக் காலத்திற்கும் செய்யப்பட்டுள்ள குஸ்னெட்ஸ் மதிப்பீடுகள் (The Kuznets estimates), மெய்யான நாட்டு வருமானத்தில் ஒரு பெரிய உயர்வு ஏற்பட்டிருப்பதைக் காட்டியபோதிலும், நாட்டு வருமானத்தில் முதலாக்கத்திற்

காகப் பயன்படுத்தப்பட்ட தொகையின் சத வீதத்தில் எத்தகைய உயர்வையும் காட்ட முடியவில்லை. இதற்கு மாருக, 1890 முதல் 1920 வரை உள்ள பத்தாண்டுகளில், மெய் வருமானம் மூன்று மடங்குக்குமேல் உயர்ந்திருந்தபோதிலும், நாட்டின் சேமிப்பு வீதத்தில் ஓரளவு வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. (1930ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், பொருளியல் மந்த நிலையின் விளைவாக இந்த வீழ்ச்சியின் அளவு மிகுதியாக இருந்திருக்கிறது.)

பல்வேறு காலப் பிரிவுகளுக்கான குடும்ப வரவு செலவுத் திட்டப் புள்ளி விவரங்களை ஆராய்ந்தால், அவற்றில் சில வியக்கத் தக்க இயல்புகள் பொதிந்திருப்பதைக் காணலாம். ஐக்கிய அமெரிக்காவைச் சேர்ந்த ஒரு சராசரி நகரக் குடும்பம், 1917—1919ஆம் ஆண்டுகளில், 1941ஆம் ஆண்டின் விலைகளின் அடிப்படையில், ஆண்டுக்கு 1500 டாலர் வீதம் வருமானத்தைப் பெற்று, அதில் 120 டாலரை, அதாவது 8 சதவீதத்தைச் சேமித்திருக்கிறது. ஆனால் அதே அளவு மெய் வருமானத்தை 1941ல் பெற்ற ஒரு சராசரிக் குடும்பத்தின் சேமிப்பு, ஒன்றுமில்லை என்று சொல்லத்தக்கதாக இருக்கிறது.[5] இந்த வியக்கத்தக்க மாறுதலுக்கு உரிய காரணம் யாது? மேலே சுட்டிக்காட்டப்பட்ட குடும்பத்து மெய்வருமானத்தின் தன் அளவு (Absolute amount), இருவகை ஆண்டுகளிலும் ஒரே அளவினதாக இருந்தபோதிலும், இந்தத் தொகையானது, நாட்டின் வருமான அளவுகோலில் 1919ல் பெற்றிருந்த இடத்தைவிட 1941ல் பெற்றுள்ள இடம் தாழ்ந்த மட்டத்தில் இருக்கிறது என்பதில் ஐயம் இல்லை. இந்த உண்மையின் அடிப்படையில்தான், நுகர்வோரின் போக்கைக் குறித்த புதிய கோட்பாடானது, மேலே எடுத்துக் கூறப்பட்ட மாறுதலுக்கு உரிய காரணத்தை விளக்க முனைகிறது. 1919க்கும் 1941க்கும் இடையே உள்ள காலத்தில் நாட்டின் சராசரித் தலா வருமானம் உயர்ந்திருக்கிறது. ஆகையால், நம்மால் குறிப்பிடப்பட்ட சராசரிக் குடும்பத்தின் நண்பர்களும் அண்டை அயலாரும், மொத்தமாகப் பார்க்கும்போது, 1919ல் இருந்ததைவிட 1941ல் சிறந்த முறையில் வாழ்கிருர்கள் என்பது தெளிவு. அவர்கள் முன்னர்ப் பயன்படுத்தாத பல புதிய பண்டங்களையும் ஊழியங்களையும் இப்போது பயன்படுத்துகிருர்கள். அவர்களுடைய நுகர்வின் அமைப்பு, முன்னிலும் விரிவானதாக, முன்னிலும் பலதிற இயல்புடையதாக மாறிவிட்டிருக்கிறது. இந்த நிலைமைகளையெல்லாம் காண்கிற நம் சராசரிக் குடும்பத்தின் செலவுசெய் விருப்பம் பெரும் அளவில் உயர்வது இயற்கையே அல்லவா? 'உயர்வகை' நுகர்வுப் பொருள்களோடும், 'முன்னேறிய' வாழ்க்கை முறைகளோடும், அக் குடும்பத்திற்கு, 1919க்கும் 1941க்கும் இடைப்

பட்ட ஆண்டுகளில், அடிக்கடி தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. அத் தொடர்பின் விளைவாக, அக் குடும்பத்தில், புதுவகைச் செலவுகளைத் தவிர்த்தற்கு உரிய ஆற்றல் குறைந்திருக்கிறது. எனவேதான் அதன் சேமிப்புத் தொகை, சுன்னம் (Zero) என்கிற நிலையை அடைந்துவிட்டிருக்கிறது[6].

இக் குடும்பத்திலிருந்து சற்று மாறுபட்ட கற்பிதமான எடுத்துக்காட்டு ஒன்றை நாம் உருவாக்கலாம். இந்த எடுத்துக் காட்டானது, நடைமுறைப் புள்ளி விவரங்களைக் கொண்டு உருவாக்கப்பட்டதன்று என்றபோதிலும், உண்மை நிலைமைகளுக் குப் பொருத்தமான ஒன்றே. குறிப்பிட்ட ஒரு மனிதருடைய வருமானம், 1919ல் 1500 டாலராக இருந்தது என்றும், 1941ல் அது 2000 டாலராக உயர்ந்துவிட்டது என்றும் வைத்துக் கொள்வோம். [இந்த எடுத்துக்காட்டில் வருமானமானது நிலை யான விலைகளில் (Constant prices) கணக்கிடப்பட்டிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஏனென்றால், அப்போதுதான் மெய் வருமான மாறுதலை அறிய முடியும்.] 1919ல் அவர், 120 டாலரை, அதாவது அவருடைய வருமானத்தில் 8 சதவீதத்தைச் சேமித்தார் என்றும், நாம் சற்று முன்னர்க் குறிப்பிட்ட காரணங் களின் விளைவாக, 1941ல் அவருடைய சேமிப்பு 100 டாலராக - அதாவது, அவருடைய வருமானத்தில் 5 சதவீதமாகக் குறைந்து விட்டது என்றும் வைத்துக்கொள்வோம். அப்படி வைத்துக் கொண்டால், இந்த எடுத்துக்காட்டில், மெய் வருமானம் உயர்ந் திருந்தபோதிலும், சேமிப்பின் அளவிலும் சதவீதத்திலும் வீழ்ச்சி ஏற்பட்டிருப்பதைக் காணலாம். அப்படி ஏற்பட்டதற்குக் காரணம் யாது? அந்த மனிதருடைய நண்பர்கள், அண்டை அயலார் ஆகியோருடைய வருமானத்தில் ஏற்பட்டுள்ள உயர்வு, அவருடைய வருமானத்தில் ஏற்பட்ட உயர்வைவிடக் கூடுதலாக இருக்கக்கூடும்; பிறரால் பயன்படுத்தப்படுகிற புதிய பண்டங்கள் அவருடைய உள்ளத்தில் புதிய விருப்பங்களைக் கிளர்ந்தெழச் செய்திருக்கக்கூடும்; அல்லது நுகர்வின் உயர்ந்த வடிவங்களைப் பற்றி முன்னிலும் மிகுதியான அறிமுகம் அவருக்கு ஏற் பட்டிருக்கக்கூடும்.

இவ்வாறாக, வெவ்வேறு நுகர்வோரின் விருப்பங்கள் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கும் இந் நிலையானது, நுகர்வுக்கும் சேமிப்புக்கும் இடையே செய்யப்படக்கூடிய தெரிவைக் (Choice) குறிப்பிடத் தக்க அளவு பாதிக்கக்கூடும். ஒரு தனி மனிதரால் செய்யப்படக் கூடிய சேமிப்பின் அளவானது, அந்த மனிதருடைய மெய் வருமானத்தின் தன் அளவைமட்டும் பொறுத்ததாக அல்லது அதைப் பெரிதும் பொறுத்ததாக இல்லை.

அச் சேமிப்பின் அளவானது, அந்த மனிதருடைய வருமானத்திற்கும் அவரோடு தொடர்புடைய பிற மனிதர்களின் உயர் வருமான அளவுக்கும் உள்ள விகிதத்தையும் பொறுத்திருக்கிறது. [இந்த இரு வருமான அளவுகளுக்கும் இடையே உள்ள விகிதமா அல்லது வேறுபாட்டின் தன் அளவா - எது தற்போதைய கருத்தாய்வின் கண்ணோட்டத்தில் முக்கியமானது என்னும் கேள்வி, மேலும் ஆராய்வதற்கு உரிய ஒன்றாகும். பல்வேறு மக்களின் நுகர்வின் அளவுகளுக்கு இடையே உள்ள விகிதத்தைவிட (Ratio) அவற்றிற்கு இடையே உள்ள இடைவெளியின் தன் அளவுதான், (Absolute gap) நுகர்வு நாட்டத்தில் நெருக்கடியையும் மாறுதலையும் உண்டாக்குகிற முக்கியமான காரணியாகத் திகழ்கிறது என்று கூறுவதில் ஓரளவு பொருத்தம் இருக்கிறது. விகிதம், இடைவெளியின் தன் அளவு ஆகிய இந்த இரு காரணிகளில் எதை எடுத்துக்கொண்டாலும், அதில், புள்ளிவிவரக் குறியீட்டுச் சிக்கல் (Statistical index problem) அடங்கியிருக்கிறது. அந்தச் சிக்கலை, ஏதேனும் ஒருவகை ஒருதலை முடிவான மரபின் (Arbitrary convention) வாயிலாகத்தான் தீர்க்கமுடியும். ஆனால் அத்தகைய தீர்வு, பல்வேறு மனிதர்களின் வருமானங்களுக்கு இடையே உள்ள வேறுபாட்டை அளப்பதற்கு, விகித அடிப்படை அல்லது இடைவெளியின் தன் அளவு என்னும் அடிப்படை ஆகிய எந்த வழியைப் பின்பற்றினாலும் ஒன்றாகவே இருக்கும்.]

பல்வேறு நுகர்வோரின் விருப்பங்கள் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன என்னும் நிலைமையை நாம் ஆராய்ந்தால், ஓர் உண்மை தெளிவாக விளங்கும். வருமானப் பங்கீட்டின் ஒத்த நிலையற்ற தன்மை பெருகுவதால் சராசரிச் சேமிப்பு விகிதம் குறையுமே தவிரப் பலரும் நம்புவதுபோல் பெருகாது என்பதே அந்த உண்மை. முன்னர் நம்மால் குறிப்பிடப்பட்ட குஸ்னெட்ஸ் புள்ளி விவரங்களை (Kuznets data) இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், அவற்றில் முரண்பாடு எதுவும் இல்லை என்பது விளங்கும் (ஆனால் அந்தப் புள்ளிவிவரங்களை முழு அளவில் நாம் புரிந்துகொள்ள வேண்டுமானால், வேறு பல காரணிகளையும் நாம் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும் என்பது உண்மையே). அமெரிக்கக் குடும்பங்களில் 75 சதவீத எண்ணிக்கை உள்ளவை சிறிதளவும் சேமிக்காமல் இருப்பதற்குக் காரணம், சேமிக்க முடியாத அளவுக்கு அவை வறுமை நிலையில் உள்ளன என்பது அன்று. உயர் வருமானப் பிரிவில் உள்ள 25 சத வீதக் குடும்பங்கள் கையாள்கிற நுகர்வுப் போக்குகளைக் காண்கிற இக் குடும்பங்கள் தாங்களும் அத்தகைய போக்குகளைக் கையாள முனைவதே, சேமிப்பு எதுவும் செய்யமுடியாமல் இருப்பதற்குரிய காரண

மாகும். இப்படியெல்லாம் நாம் கூறுவது, ஓர் ஊகக் கோட்பாடு அல்லது கற்பிதக் கோட்பாடே (Hypothesis). ஆனால் அந்த ஊகம் அல்லது கற்பிதம், நடைமுறை உண்மைகளோடு பொருந்திய ஒன்றே ஆகும்.

## முன்னேறிய வாழ்க்கைத் தரங்கள்பற்றிய உணர்வின் வளர்ச்சி

இந்த வகையான கற்பிதக் கோட்பாடு ஒன்றைப் பன்னாட்டுப் பொருளியல் தொடர்புகளுக்கும் பயன்படுத்த முடியாதா என்பதுதான் இச் சமயத்தில் நான் கேட்க விரும்புகிற கேள்வி. தனி மனிதர்களின் நுகர்வுப் பணிகள் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டிருப்பதைப் போலவே பல்வேறு நாடுகளின் நுகர்வுப் பணிகளுக்கு இடையேயும் தொடர்பு இராதா? பல்வேறு மனிதர்கள் என்கிற அளவில் பாதிக்கப்படுவதைப் போலவே, பல்வேறு நாடுகள் என்கிற அளவிலும், மக்களுடைய நடத்தையானது, நாம் முன்னர்க் குறிப்பிட்ட சக்திகளால் பாதிக்கப்படக் கூடும். செலவிடும் நாட்டமானது (Propensity to spend) ஓரளவுக்குப் பகட்டான நுகர்வுக்கான (Conspicuous consumption) விருப்பத்தைப் பொறுத்திருக்கிறது என்னும் வெப்ளெனின் (Veblen) கருத்தைத் தற்சமயம் நாம் ஒதுக்கிவிடுவது நல்லது. பன்னாட்டு நிலையைப் பொறுத்தவரை, வாழ்க்கைத் தரங்களுக்கு இடையே உள்ள வேறுபாட்டின் விளைவானது, பகட்டான நுகர்வைப் பொறுத்திருக்கிறது என்று நான் கருதவில்லை. அந்த விளைவானது, பிறருடைய நுகர்வுப் போக்கைக் கண்டு அதனைப் பின்பற்ற முயலும் தன்மையையே பொறுத்திருக்கிறது. புதிய புதிய நுகர்வுப் போக்குகளைப்பற்றிய அறிவு அல்லது அவற்றோடு ஏற்படும் தொடர்பு, இதற்குமுன் கற்பனை செய்துகூடப் பார்த்திராத பலதிறப்பட்ட நுகர்வு விருப்பங்களை உருவாக்கிவிடுகிறது. கற்பனைகள், விருப்பங்கள் ஆகியவற்றின் அரங்கத்தை அது விரிவுபடுத்திவிடுகிறது. இத்தகைய போக்கை வெறும் சமுதாயப் பகட்டுணர்ச்சி (Social snobbishness) என்று கருதுவது, ஒரு பொருந்தாக் கூற்றே ஆகும்.

தொழில்நுணுக்க முன்னேற்றத்தின் விளைவாகப் புதிய புதிய பண்டங்கள் தொடர்ச்சியாக உருவாகிக் கொண்டிருக்கின்றன. இப் பண்டங்கள், தற்போதைய வாழ்க்கை முறைகளை மாற்றி அமைக்கின்றன என்பதோடு, பல சமயங்களில் இன்றியமையாப் பொருள்களாகவும் ஆகிவிடுகின்றன. ஏழை நாடுகளைப் பொறுத்த வரை அத்தகைய பண்டங்கள் பெரும்பாலும் இறக்குமதி செய்யப்படுகின்றனவே தவிர, உள் நாட்டிலேயே உற்பத்தி செய்யப்

படுவதில்லை. ஆனால், ஏற்படுகின்ற இடர்ப்பாடு இஃது ஒன்று மட்டும் அன்று. புதிய பொருள்களும் புதிய உற்பத்தி முறைகளும் இருப்பது அல்லது அவை இருக்கின்றன என்பதுபற்றிய அறிவு, பொதுவான நுகர்வு நாட்டத்தை (General propensity to consume) உயர்த்திவிடுகிறது என்பதுதான், அடிப்படை இடர்ப்பாடு ஆகும். இறக்குமதி செய்யப்பட்டனவாக இருந்தாலும் சரி, புதிய பொருள்கள், வாழ்க்கைத் தரத்தின் ஒரு பகுதியாக அமைந்துவிடுகின்றன; தவிர்க்க முடியாத தன்மையை உடையன வாகவும் ஆகிவிடுகின்றன. குறைந்த அளவில், விரும்பத்தக்க பொருள்களாகவாவது அமைந்துவிடுகின்றன. வாழ்க்கைத் தரம் உயர்கிறபோது, அப் பொருள்கள், விறுவிறுப்பான முறையில் விரும்பப்படுகின்றன. இச் சமயத்தில் நாம், 'வாழ்க்கைத் தரம்' என்னும் சொற்றொடருக்கு வெவ்வேறான இரண்டு பொருள்கள் இருக்கின்றன என்பதை நினைவில் நிறுத்துதல் வேண்டும். நம்மால் விரும்பப்படுகிற ஒரு குறிக்கோள், நாம் அடைய எண்ணுகிற ஓர் அளவுகோல் என்பது அதன் ஒரு பொருளாகும். ஒரு நாடு அல்லது ஒரு சமுதாய மானது, அதனுடைய உற்பத்தி முயற்சிகளின் அடிப்படையில் பார்க்கும்போது, எந்த அளவுள்ள தரத்தைப் பெறமுடியும் என் பது, அச் சொற்றொடரின் மற்றொரு பொருளாகும். ஆடம்பர நுகர்வுக்கு உரிய சில பொருள்கள், ஒரு நாட்டினுடைய வாழ்க் கைத்தரத்தின் ஒரு பகுதியாக இருக்கமுடியும் - அச் சொற்றொட ரின் முதற்பொருளில். ஆனால் அப்படி இருக்கமுடியாது - அச் சொற்றொடரின் இரண்டாவது பொருளில்.

இன்றைய உலகத்தில் அமெரிக்க நுகர்வுக் கோலங்கள் (Consumption patterns) விரிவான அளவில் பின்பற்றப்படு கின்றன. அப்படிப் பின்பற்றப்படுவது, நுகர்வின் அளவுகளில் உள்ள வேறுபாட்டின் விளைவுக்கு உரிய தலைசிறந்த எடுத்துக் காட்டு ஆகும். அவ்வாறு பின்பற்றப்படுவது, ஓரளவுக்கு, அமெ ரிக்க விளம்பர முறைகளின் விளைவாக இருக்கலாம். விளம்பரம் செய்வது என்பது, புதிய விருப்பங்களைத் தோற்றுவிக்கும் கலை யாகும். அமெரிக்கர்களோ அந்தக் கலையில் கைதேர்ந்தவர்கள். நிலைமை இப்படி இருக்கும்போது, அமெரிக்கா தவிர்த்த பிற நாடு களில் டாலர் பற்றுக்குறை காணப்படுவதில் வியப்பென்ன இருக் கிறது? முன்னேற்றமடைந்த உற்பத்தி முறைகளைக் கையாள் வதைவிட உயர்தரமான நுகர்வுப் பழக்கங்களை ஏற்றுக்கொள்வது மிகவும் எளிய செயலாகும். ஆதலால்தான், உற்பத்தி முறை களைவிட நுகர்வுப் புதுமைகள் மிக எளிதில் பரவுகின்றன. அமெ ரிக்க நுகர்வுக் கோலங்கள் மட்டுமல்லாமல் உற்பத்தி முறைகள்

கூட விரிவான அளவில் பின்பற்றப்படுகின்றன என்பதும், சில சமயங்களில் மிக நுணுக்கமான முறையில் பின்பற்றப்படுகின்றன என்பதும் உண்மையே. அமெரிக்காவில் உழைப்பே (உழைப்பாளர்களே) மிகக் கூடுதலான பற்றுக்குறைக்கு ஆளாகியுள்ள உற்பத்திக் காரணியாக (Factor of production) இருக்கும் காரணத்தால் மிக உயர்ந்த அளவுக்குப் பொறிமயமாக்கப் பட்டுள்ள (Mechanised) உற்பத்திமுறைகள், பிற நாடுகளில் இருக்கிற பிறவகை நிலைமைகளுக்கும் பொருத்தமாக இருக்கும் என்று கூறமுடியாது. அஃது ஒரு புறம் இருக்க, அமெரிக்க உற்பத்தி முறைகளைப் பின்பற்றவேண்டுமானால், முதலீடு செய்யப் படக்கூடிய நிதிகள் இருந்தாக வேண்டும். ஆனால் அமெரிக்க நுகர்வுக் கோலங்களைப் பின்பற்றவேண்டும் என்கிற வேட்கையின் விளைவாகச் சேமிப்பு விருப்பம் தடைப்படுகிற காரணத்தால், முதலீட்டுக்கு உரிய நிதிகளின் அளிப்பு குறைந்துவிடுகிறது.

அமெரிக்க நுகர்வுக் கோலங்களின் ஒரு பகுதியாக இருக்கிற பொருள்கள் உயரியவை (Superior) என்று நாம் கூறும்போது, அப் பொருள்கள் தம் அளவிலேயே உயரிய இயல்பைப் பெற்றிருப்பவை என்பது பொருளாகாது. அவை உயரியவையாகக் கருதப் படுகின்றன என்பதுதான் பொருளாகும். துறவு மனப்பான்மை உடைய சிலர், அமெரிக்கப் பொறிகளைப்பற்றியோ கருவிகளைப் பற்றியோ கவலைப்படாமல் இருக்கக்கூடும். ஆனால் பெரும்பாலான மக்கள் அவற்றை விரும்புகிறார்கள். அதோடு, அமெரிக்க நுகர்வுக் கோலங்களில், தேவையற்ற ஆடம்பரப் பொருள்கள் மட்டுமல்லாமல், பிணியைக் குறைத்து வாழ்நாளைப் பெருக்குகின்ற பொருள்களும் அடங்கியிருக்கின்றன என்பதைப் பலரும் உணரத் தொடங்கியிருக்கிறார்கள். இன்றைய உலகத்தில் அமெரிக்க வாழ்க்கைத் தரத்திற்குக் குறிப்பிடத்தக்க அளவு மதிப்பு இருக்கிறது. அப்படி இருப்பது, உலகத்தின் ஏழை நாடுகளுக்கு ஒரு தீவிரமான சிக்கலை உருவாக்கியிருக்கிறது.

புதிய விருப்பங்கள், மக்களை முன்னிலும் மிகுதியாக உழைக்கச் செய்து, முன்னிலும் கூடுதலாக உற்பத்தி செய்யத் தூண்டுகின்றன என்னும் வகையில் அவை முக்கியமானவை என்பது உண்மையே. ஆனால் அஃது உண்மையாக இருந்தபோதிலும், அவ்வாறு செய்யப்படுகிற கூடுதல் உற்பத்தியானது, உடனடியாக நுகரப்படாமல், சேமிக்கப்பட்டு முதலீடு செய்யப்படும் என்பது உறுதியில்லை.

முன்னேறிய நாடுகளின் நுகர்வுத் தரங்களால் ஏற்படுகிற கவர்ச்சியின் தீவிரம், அதாவது பன்னாட்டு அளவில் அமைந்துள்ள

காட்சி விளைவு, இரண்டு காரணிகளால் தீர்மானிக்கப்படுகிறது. மெய்வருமான அளவுகள், நுகர்வின் அளவுகள் ஆகியவற்றில் உள்ள வேறுபாடுகளின் அளவு, ஒரு காரணியாகும். அந்த வேறு பாடுகளை மக்கள் எந்த அளவுக்கு உணர்ந்துள்ளனர் என்பது மற்றொரு காரணியாகும்.

இந்த வேறுபாடுகள் முன்னர் எப்போதும் இருந்ததைவிட இப்போது பெரியனவாக இருக்கின்றன. தன் அளவு இடை வெளிகள் (Absolute gaps) என்னும் பொருளில், அவை பெரியனவாக இருக்கின்றன என்பதில் துளியும் ஐயமில்லை. ஆனால் விகிதங்கள் (Ratios) என்னும் பொருளில் அவை பெரியனவாக இல்லாமல் இருக்கலாம். கடந்த நூறு ஆண்டுகளில், ஏறத்தாழ எல்லா ஏழை நாடுகளிலும், அவற்றின் தலா மெய்வருமான அளவும், தலா நுகர்வு அளவும் ஓரளவு பெருகியிருக்கின்றன. ஆனால் அதே நூறு ஆண்டுகளில், மேலே குறிப்பிடப்பட்ட இடைவெளிகளும் விரிவடைந்திருக்கின்றன.[7] நாம் இப்போது அடைந்திருக்கிற நிலைமையைக் கீழே உள்ள பட்டியல் தெளிவுற எடுத்துக்காட்டு கிறது. இந்தப் பட்டியலானது, ஐக்கிய நாடுகள் மன்றத்தின் செயலாண்மைத் துறையால் (The United Nations Secretariat) தொகுக்கப்பட்டிருப்பது; எழுபது நாடுகளுக்கு உரிய நாட்டு வருமான மதிப்பீடுகளை அடிப்படையாகக் கொண்டிருப்பது. அம் மதிப்பீடுகள், ஐக்கிய நாடுகளின் டாலருக்கு 1949ல் இருந்த வாங்குந்திறனைப் (Purchasing power) பொது அளவுகோலாகக் கொண்டு செய்யப்பட்டிருப்பவை.

## 1949ல் இருந்த உலக வருமானப் பங்கீடு

| | உலக வருமானம் | உலக மக்கள் தொகை | தலா வருமானம் (டாலர்கள்) |
|---|---|---|---|
| உயர்ந்த வருமானம் உள்ள நாடுகள் | 67% | 18% | 915 |
| நடுத்தர வருமானம் உள்ள நாடுகள் | 18% | 15% | 310 |
| குறைந்த வருமானம் உள்ள நாடுகள் | 15% | 67% | 54 |

**ஆதாரம் :** ஐக்கிய நாடுகள் மன்றத்தின் புள்ளிவிவர அலுவலகத்தால் (Statistical Office of the United Nations) *1950*ல் வெளியிடப்பட்ட 'National and per capita incomes in 70 countries, *1949*' என்னும் நூலின் அடிப்படையில் செய்யப்பட்ட ஒரு கணக்கீடு.

உலக மக்கள் தொகையில் 18 சதவீதம் உள்ள மக்களுக்கு உலக வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்கு சென்றுவிடுகிறது

என்னும் உண்மை, இந்தப் பட்டியலிலிருந்து தெரிகிறது. 'உயர்ந்த வருமானம் உள்ள நாடுகள்' என்னும் இப் பிரிவு, ஐக்கிய அமெரிக்கா, கனடா, மேற்கு ஐரோப்பா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகியவற்றைக் கொண்டிருக்கிறது. 'நடுத்தர வருமானம் உள்ள நாடுகள்' என்னும் சிறிய பிரிவில், அர்ஜெண்டிஞு, உருகுவே, தென் ஆப்பிரிக்கா, இஸ்ரேல், சோவியத் ரஷ்யா உட்படக் கிழக்கு ஐரோப்பாவில் உள்ள சில நாடுகள் ஆகியவை அடங்கியுள்ளன. ரஷ்யாவைப் பொறுத்தவரை, இந்தப் பட்டியலைத் தயாரிப்பதற்கு அடிப்படையாக உள்ள புள்ளி விவரங்கள், தனியார் நுகர்வின் மதிப்பைமட்டும் (Value of personal consumption) அளத்தற்கு உரியன அல்ல என்பதையும், இராணுவ நோக்கங்கள் முதலீட்டு நோக்கங்கள் உட்பட எல்லாவகைக் காரணங்களுக்காகவும் உற்பத்தி செய்யப்படுகிற எல்லாவகைப் பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின் மதிப்பையும் அளத்தற்கு உரியன என்பதையும் நினைவில் வைத்துக்கொள்வது இன்றியமையாத செயலாகும்.

இந்தப் பட்டியலில் தரப்பட்டுள்ள குறைந்த வருமானப் பிரிவில், உலக மக்கள் தொகையில் மூன்றில் இரண்டு பங்கு அடங்கியிருக்கிறது. ஆனுல் அம் மக்கள் பெறுகிற வருமானம், உலக வருமானத்தில் ஆறில் ஒரு பங்கைவிடக் குறைவாக இருக்கிறது(அதாவது, அம் மக்களால் உற்பத்தி செய்யப்படுகிற பண்டங்களின் மதிப்பு, உலக உற்பத்தியின் மதிப்பில் ஆறில் ஒரு பங்கைவிடக் குறைவாக இருக்கிறது). இந்தக் குறைந்த வருமானப் பிரிவில், ஆசியாவின் பெரும் பகுதி, ஆப்பிரிக்கா, தென் கிழக்கு ஐரோப்பா, லத்தீன் அமெரிக்கா ஆகியவை அடங்கும். உலகத்தின் பின்தங்கிய நாடுகள் என்று அழைக்கப்படும் பகுதிகளின் மக்கள், மனித இனத்தில் மூன்றில் இரண்டு பங்காக இருக்கிருர்கள் என்னும் செய்தி, அதன் அளவிலேயே என்றும் மறக்கப்படக்கூடாத மாபெரும் உண்மையாகும்.

குறைந்த வருமானப் பிரிவில் ஜப்பான் நாடும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இப்படிச் சேர்க்கப்பட்டிருப்பது, இரண்டாம் உலகப் போருக்குப் பிந்திய காலத்தில் அந் நாட்டில் ஏற்பட்டுள்ள நிலைமைகளின் விளைவே என்பதில் ஐயம் இல்லை. இயல்பான நிலையில், ஜப்பான் நடுத்தர வருமானப் பிரிவில் சேர்க்கப்படும் என்றே எதிர்பார்க்கலாம்.

பட்டியலின் மூன்ருவது தலைப்பின்கீழ், மூவகைப் பிரிவுகளைச் சேர்ந்த நாடுகளின் தலா வருமான அளவுகள் தரப்பட்டிருக்கின்றன. இந்த அளவுகளைப் பார்க்கும்போது, முதற் பிரிவின் தலா வருமானம், மூன்ருவது பிரிவின் தலா வருமானத்தைப் போல

ஏறத்தாழப் பதினேழு மடங்கு கூடுதலாக இருக்கிறது என்பது விளங்கும். இந்தப் பட்டியலில் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களைக் காணும்போது, அவை, இருக்கின்ற நிலைமையை மிகத் துல்லியமாக எடுத்துக்காட்டுவன போலத் தோன்றும். ஆனால் இத் தோற்றம் ஒரு மாயையே தவிர உண்மையன்று. இந்தப் புள்ளி விவரங்களின் அடிப்படையாக அமைந்துள்ள மதிப்பீடுகளிற் பல, திட்டவட்டமான முறையில் அமையாதவை; பலதிறப்பட்ட ஐயப்பாடுகளுக்கு இடம் அளிப்பவை ; முழு மனத்தோடு ஏற்றுக் கொள்ள முடியாதவை. ஆமாம். ஆனால் இந்தப் பட்டியலில் காட்சி அளிக்கிற நிலைமை உண்மைக்கு மாறானது என்று கூறிவிட முடியாது. முன்னேறிய நாடுகள் தங்களுடைய ஆதாயங்களைப் பயன்படுத்துகிற ஒரு முறை, தான் விரும்பிய ஓய்வை (Voluntary leisure) நுகர்வதாகும். அத்தகைய ஓய்வு, இந்தப் பட்டியலின் கணக்கில் சேர்க்கப்படவில்லை என்பது, இச் சமயத்தில் நினைவு கூரத்தக்க உண்மையாகும்.

பல்வேறு நாடுகளின் வாழ்க்கைத் தரங்களுக்கு இடையே உள்ள வேறுபாடுகள் மிகப் பெரிய அளவின என்பது உண்மை தான். ஆனால் உண்மை அந்த அளவோடு நின்றுவிடவில்லை. முன்னர் எந்தக் காலத்திலும் இருந்திராத அளவுக்குச் செய்தித் தொடர்புகள் (Communications) இந்தக் காலத்தில் மிக விரிவாக அமைந்திருக்கின்றன. அப்படி அமைந்திருப்பதால் மேலே குறிப்பிடப்பட்ட வேறுபாடுகளைப்பற்றிய அறிவு பெரிய அளவில் விரிவடைந்திருக்கிறது. அமெரிக்கத் திரைப்படங்கள், வானொலி, வானூர்திப் பயணம் (Aviation) ஆகிய அண்மைக் காலக் கண்டு பிடிப்புகளை நினைவில் வைத்துக்கொண்டாலே போதும்; செய்தித் தொடர்பு வசதிகளில் அண்மைக் காலத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் தெளிவுற விளங்கும். அண்மைக் காலத்தில் கல்வி வசதியும் பெருகியிருக்கிறது. அத்தகைய பெருக்கத்தின் விளைவாகப் பின்னர் உற்பத்தியில் உயர்வு ஏற்படக்கூடும் என்ற போதிலும், தொடக்கத்தில் விருப்பங்களின் எண்ணிக்கையே பெருகக்கூடும். எஃது எப்படி இருந்தபோதிலும், தற்கால உலகத்தின் பல்வேறு நாடுகளுக்கு இடையே உள்ள தொடர்பு, உலகத்தின் சுயேச்சைப் பகுதியைப் பொறுத்த அளவிலாவது, மிக நெருக்கமாக இருக்கிறது என்பது தெளிவு.

முன்னேறிய நாடுகளின் நுகர்வுத் தரங்களின் கவர்ச்சியால் (The attraction of consumption standards) ஏற்படுகிற விளைவானது, வளர்ச்சி குறைந்த நாடுகளின் பல்வேறு வருமானப் பிரிவுகளில் பல்வேறு அளவினதாக இருக்கக்கூடும். நகரங்களில் உள்ள உயர் வருமானப் பிரிவினரிடத்தில் அந்த விளைவு தீவிரமாக

இருக்கக்கூடும். ஆனால் அவர்களிடம் மட்டுமே அந்த விளைவு ஏற்படும் என்று கூறிவிட முடியாது. கல்வியின் பெருக்கம், விரிவான அளவில் உள்ள செய்தித் தொடர்பு ஆகியவற்றின் பயனாக, அந்த விளைவானது, குறைந்த வருமானப் பிரிவினரிடம்கூட ஓரளவுக்கு ஏற்படலாம். சமூகநலச் சட்டங்களுக்கான வேட்கை, தொழில்துறை உழைப்பாளர்களின் வாழ்க்கைத் தரங்கள், நவீன ஆடம்பரப் பொருள்களுக்கான தேவை ஆகியவற்றையும் அந்த விளைவு பாதிக்கக்கூடும். ஆகையால்தான் அந்த விளைவின் அளவானது பல்வேறு வருமானப் பிரிவினரிடையே பல்வேறு நிலையினதாக இருக்கும் என்று திட்டவட்டமாகக் கூற நான் தயங்குகிறேன்.

ஆனால் காட்சி விளைவின் ஆற்றலானது பல்வேறு நாடுகளுக்கு இடையே மிகப் பெரிய அளவில் மாறுபடுகிறது என்பதை நாம் உடனடியாக ஏற்றுக்கொள்ளலாம். அந்தக் காட்சி விளைவானது லத்தீன் அமெரிக்காவின் பெரும்பாலான பகுதிகளில் முதன்மையான ஒரு காரணியாக விளங்குகிறது. ஆனால் இந்தியாவில் அஃது ஆற்றல் அற்ற சக்தியாகவும் முதன்மையற்றதாகவும் இருக்கிறது. ஆனால் நடைமுறையில், தற்போது உள்ள குறைந்த வருமான நாடுகள் அத்தனையுமே, ஏதேனும் ஓர் அளவுக்காவது, பொருளியலில் முன்னேறியுள்ள நாடுகளின் நுகர்வுக் கோலங்களின் கவர்ச்சியால் பாதிக்கப்பட்டுள்ளன என்பது என் கருத்து. உயர்ந்த வருமானமுள்ள நாடுகள் என்னும் பிரிவிலேயேகூட, காட்சி விளைவானது நடைமுறையில் இருக்கிறது என்று நான் கருதுகிறேன். எடுத்துக்காட்டாக, ஐக்கிய அமெரிக்காவின் நுகர்வுக் கோலங்கள் மேற்கு ஐரோப்பாவைப் பாதிக்கின்றன என்று கூறலாம்.

ஆனால் இந்த அத்தியாயத்தின் தற்போதைய கருத்தாய்வில் நாம் குறைந்த வருமானமுள்ள நாடுகளைப்பற்றித்தான் நம் கருத்தைச் செலுத்தவேண்டியிருக்கிறது. 'மாபெரும் எழுச்சி' (The great awakening) என்று குடியரசுத் தலைவர் ட்ரூமன் (President Truman) குறிப்பிடப்பட்ட நிலைமையை இந்த நாடுகளில் உருவாக்கியதில், காட்சி விளைவுக்குச் சிறப்பான பங்கு உண்டு என்பதில் சிறிதளவும் ஐயம் இல்லை. பொருளியல் வளர்ச்சியைப் பெறவேண்டும் என்பதில் இந்த நாடுகளுக்கு ஏற்பட்டுள்ள ஆர்வமே, காட்சி விளைவின் பயனாக ஏற்பட்டதுதான் என்பது வெளிப்படை. உயர் வருமான நாடுகள் இந்த உலகத்தில் இல்லாமல் வேறு ஓர் உலகத்தில் இருந்திருந்தால், குறைந்த வருமான நாடுகளின் இந்த ஆர்வம் இவ்வளவு தீவிரமாக இருந்திராது. ஆனால் நம்முடைய ஆராய்ச்சியை வேறு ஓர் உலகம் என்பது

போன்ற குழப்பமான செய்திகளில் சிக்கவிடாமல், இந்த உலகத்தோடு நிறுத்திக்கொள்ளலாம்! நம்முடைய இந்த உலகத்தில், தற்காலத்தில், முன்னேறிய நாடுகளின் நுகர்வுத் தரங்களின் கவர்ச்சியானது, ஒரே அளவில் என்று இல்லாவிட்டாலும், ஏறத்தாழ விரிவான அளவில், மனித சமுதாயத்தின் மூன்றில் இரண்டு பகுதியாக உள்ள ஏழை நாடுகளில் பரவியிருக்கிறது என்கிற தெளிவான உண்மையைமட்டும் நாம் நினைவில் வைத்துக்கொண்டால் போதுமானது.

## சேமிப்பு நாட்டத்தில் ஏற்படும் விளைவுகள்

நம்மால் மேலே குறிப்பிடப்பட்ட கவர்ச்சியானது, காலந் தாழ்ந்து பொருளியல் வளர்ச்சியைத் தொடங்கியுள்ள நாடுகளுக்கு ஓர் இடர்ப்பாடாக இருக்கிறது. அக் கவர்ச்சியின் விளைவாகத் தனியாரின் 'தான் விரும்பிய சேமிப்புகள்' (Personal voluntary savings) குறைந்துவிடுகின்றன. அதுமட்டுமல்ல. கட்டாயச் சேமிப்பைத் திரட்டுவதற்கு உரிய ஒரு வழியாக வரி விதிப்பைப் (Taxation) பயன்படுத்துவதையும் அது கடினமான ஒன்றாக ஆக்கிவிடுகிறது. நடப்புக் கணக்கில் (On current account) செய்யப்படக்கூடிய அரசாங்கச் செலவுக்கான கோரிக்கைகளைத் தடுத்து நிறுத்துவதையும் அது கடினமான செயலாக மாற்றிவிடுகிறது. தொழில் துறையில் பின்தங்கியுள்ள நாடுகளிற் சில வேளாண்மைத் துறையில் கரந்துறை வேலையின்மைக்கு ஆளாகியுள்ள ஏராளமான மக்களைப் பெற்றிருந்தபோதிலும், நுகர்வின் அளவில் உடனடியாக ஏற்படக்கூடிய உயர்வைத் தடுத்து நிறுத்தக்கூடிய திட்டவட்டமான தடைகளை விதிக்காமல், அந் நாடுகள், அம் மக்களை மெய்ம்முதல் ஆக்கப் பணியில் பயன்படுத்த முடியாது. வேறு சில நாடுகள், வேளாண்மை உற்பத்தி முறைகளில் முன்னேற்றங்களை ஏற்படுத்துவதன் வாயிலாக, அத் துறையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களில் ஒரு பகுதியினரை முதலாக்கப் பணிக்குத் திருப்ப விரும்பலாம். ஆனால் அப்படித் திருப்ப வேண்டுமானால், முன்னேறிய உற்பத்தி முறைகளால் ஏற்படுகிற கூடுதல் உணவு, அதனை உற்பத்தி செய்பவர்களால் உடனடியாக நுகரப்படாமல் தடுக்கப்படவேண்டும். மூலதனத்தைத் திரட்டுவதற்கு உரிய உள்நாட்டு ஊற்றுக்கால்களைப் பயன்படுத்தும் பணியானது, காட்சி விளைவின் பயனாக ஏற்படுகிற பொறுமையின்மை, மனநிறைவின்மை ஆகியவற்றால் மும்முரமான முறையில் தடைப்படக்கூடும் என்பது, இச் சமயத்தில் நம்மால் நினைவில் நிறுத்தப்படவேண்டிய உண்மையாகும்.

சேமிப்புத் திறனனது, மெய் வருமானத்தின் தன் அளவால் (Absolute level) மட்டுமல்லாமல் தராதர அளவாலும் (Relative level) தீர்மானிக்கப்படுகிறது என்னும் உண்மையை நாம் நினைவில் வைத்துக்கொண்டால், நாம் மேலே குறிப்பிட்ட தடையை அகற்றுவது, அயல்நாட்டு உதவி அல்லது அயல்நாட்டு முதலீட்டால் இயலக்கூடிய செயல் அன்று என்பது தெளிவாக விளங்கும். தொழில் துறையில் பின்தங்கிய நாடுகளின் தராதர வருமானத்தை உயர்த்துவது என்பது, அந்த நாடுகளின் உற்பத்தியைமட்டும் உயர்த்துவதால் ஏற்படுத்தப்படக்கூடிய ஒரு நிலைமை அன்று. அஃது, அந்த நாடுகளின் வருமான அளவுக்கும் முன்னேறிய நாடுகளின் வருமான அளவுக்கும் இடையே உள்ள வேறுபாட்டின் அளவைக் குறைப்பதால் ஏற்படுத்தப்படக்கூடிய ஒரு நிலைமை ஆகும். பின் தங்கிய நாடுகளில் செய்யப்படுகிற அயல்நாட்டு முதலீட்டால் இத்தகைய குறைவு ஏற்பட்டுவிடும் என்று உறுதி கூற முடியாது. தொழில் துறையில் முன்னேறிய ஒரு நாட்டின் சேமிப்பு, முதலீடு ஆகியவற்றின் விகிதம், மாருத நிலையில் நிற்பது அன்று. அப்படி நின்ருல்தான், அந் நாட்டால் செய்யப்படுகிற அயல்நாட்டு முதலீட்டின் அளவு பெருகும்போது, அதன் விளைவாக அந் நாட்டின் உள்நாட்டு முதலீடு குறையும். ஆனல் சில சமயங்களில், தொழில் துறையில் முன்னேறிய நாடுகள், வேலைக்குறைவு நிலைமைகட்கு (Conditions of under employment) ஆளாகி இருப்பது உண்டு. அத்தகைய நிலைமைகளில், அந் நாடுகளால் செய்யப்படுகிற அயல் நாட்டு முதலீட்டின் விளைவாக அந் நாடுகளின் உள்நாட்டு முதலீடு குறைந்து விடாது. குறைவதற்கு மாருக, அதன் அளவு பெருகவும் கூடும். அயல்நாட்டு முதலீட்டின் விளைவாக அந்த முதலீட்டைச் செய்கிற நாடுகளுக்குக் கிடைக்கிற வருமானத்தை நாம் கணக்கில் எடுத்துக்கொள்ளாவிட்டால்கூட, அம் முதலீட்டைச் செய்கிற பணக்கார நாடுகளுக்கும் முதலீட்டைப் பெறுகிற ஏழை நாடுகளுக்கும் இடையே வருமான அளவுகளில் உள்ள வேறுபாடு, அம் முதலீட்டின் பயனுகக் குறைந்துவிடும் என்று கூறமுடியாது. அதன் பயனுக அவ் வேறுபாடு கூடுதலாகவும் ஆகக்கூடும்.

அதுமட்டும் அன்று ; மேற்படி வேறுபாடு கூடாமலும் குறையாமலும் ஒரே நிலையில் இருந்தாலும்கூட, ஏழை நாடுகளின் வாழ்க்கைத் தரங்களில் உயர்வு ஏற்பட்டு, அதே நேரத்தில் அதே அளவு உயர்வு பணக்கார நாடுகளின் வாழ்க்கைத் தரங்களிலும் ஏற்படுமானல், அப்படி ஏற்படுவதன் பயனுக, அந்த இருவகை நாடுகளுக்கு இடையே உள்ள செய்தித் தொடர்பு முன்னிலும் அழுத்தமானதாகவும் நெருக்கமானதாகவும் மாறக்கூடும். அப்படி

மாறுமானால், காட்சி விளைவின் ஆற்றலும் பெருகும். தன் அளவுக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, ஒரு நாடு, உலகத்தின் பிற நாடுகளோடு மிகுந்த தொடர்பு கொள்ளமுடியாத அளவுக்கு வறுமை மிகுந்ததாக இருக்கக்கூடும். லத்தீன் அமெரிக்காவில் மிகுந்த செல்வச் செழிப்புள்ள நாடுகளில் ஒன்றாகத் திகழும் உருகுவேயின் (Uruguay) தலா வருமானம், ஈக்வடாரின் (Ecuador) தலா வருமானத்தைவிட எட்டுமடங்கு கூடுதலாக இருக்கிறது என்னும் உண்மை, ஐக்கிய நாடுகள் மன்றத்தின் புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறது. இவ்வாறு இருப்பதாலேயே, ஐக்கிய அமெரிக்க நாட்டின் வாழ்க்கைத் தரங்களால் ஏற்படுகிற காட்சி விளைவானது, உருகுவேயில் இருப்பதைவிட ஈக்வடாரில் மிகுந்த ஆற்றல் உடையதாக இருக்கும் என்று இயம்பிவிட முடியாது. இதற்கு மாறாக, அக் காட்சி விளைவானது, உருகுவே நாட்டில் மிகுந்த ஆற்றல் உடையதாக இருக்கக்கூடும். உருகுவேயில் ஏற்படுகிற அதே அளவு காட்சிவிளைவு ஈக்வடாரில் ஏற்படமுடியாத வகையில் ஈக்வடாரின் மக்கள் மிகுந்த ஏழைகளாக இருக்கக் கூடும் (எடுத்துக்காட்டாக, வானொலிகளையும், திரைப்படங்களையும் பெறமுடியாத அளவுக்கு அவர்கள் வறியவர்களாக இருக்கக்கூடும்). சுருக்கமான முறையில் கூறவேண்டுமானால், காட்சி விளைவின் ஆற்றலானது, ஓரளவுக்கு, மெய் வருமானத்தின் தன் அளவையும் பொறுத்திருக்கிறது. ஏனென்றால், ஒரு நாடு பெறக்கூடிய செய்தித் தொடர்பின் அளவு, ஓரளவுக்கு, அந் நாட்டின் வருமானத்தின் தன் அளவைப் பொறுத்திருக்கிறது. இக் காரணத்தால்தான் அமெரிக்க நுகர்வுப் போக்குகளின் விளைவு, மேற்கு ஐரோப்பாவில் மிகுதியாக இருக்கிறது.

நுகர்வுக்கான விருப்பத்திற்கும் சேமிப்புக்கான தேவைக்கும் இடையேயுள்ள முரண்பாடானது, வளர்ச்சி குறைந்த நாடுகளைப் பொறுத்தவரை, அந் நாடுகளுக்கும் முன்னேறிய நாடுகளுக்கும் இடையே மெய் வருமான அளவுகளில் உள்ள வேறுபாட்டின் விளைவாக, தீவிரம் நிறைந்ததாக மாறிவிட்டிருக்கிறது. ஆனால், இத்தகைய ஒரு முரண்பாடானது, மூலதனத் திரட்சி எனும் செயலில் இயல்பாகவே அமைந்திருக்கிறது என்பதையும், நடப்புக் கால நுகர்வா அல்லது எதிர்காலத்தில் இதனினும் பெரிய அளவில் கிடைக்கக்கூடிய நுகர்வா - எது சிறந்தது என்பதைக் கருத்தளவில் எடை போட்டுப் பார்க்கும் ஒவ்வொரு தனியாளின் உள்ளத்திலும் இஃது இடம் பெற்றிருக்கிறது என்பதையும், நாம் மறந்துவிடக்கூடாது. ரால் ப்ரெபிஷ் (Raul Prebisch) என்பார், தம்மால் இயற்றப்பட்ட சிந்தனையைத் தூண்டும் சிறந்த கட்டுரை ஒன்றில், நமக்கு நன்கு அறிமுகமாகியுள்ள கருத்து ஒன்றை

அழுந்தத் திருத்தமாக எடுத்துக் காட்டியுள்ளார். அதாவது, லத்தீன் அமெரிக்காவின் உற்பத்தி அளவு குறைவாக இருப்ப தற்குக் காரணம் மூலதனப் பற்றுக்குறை என்றும், அப் பற்றுக் குறை இருப்பதற்குக் காரணம் சேமிப்பின் அளவு குறைவாக இருப்பது என்றும், அக் குறைவுக்குக் காரணம் வருமானம், உற் பத்தி ஆகியவற்றின் அளவு குறைவாக இருப்பது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். முன்னேறிய நாடுகளின் நுகர்வுப்போக்கு களால் ஏழை நாடுகளில் ஏற்பட்டுள்ள கவர்ச்சியின் முதன்மை யையும் அவர் ஒப்புக்கொண்டுள்ளார்.[8] அவரால் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ள இந்த இரண்டாவது கருத்தானது அவ ருடைய முதல் கருத்தைக் குறிப்பிடத்தக்க அளவுக்கு மாற்றி அமைத்துவிடுகிறது. பின் தங்கிய நாடுகளின் சேமிப்பு அளவு குறைவாக இருப்பது, அவற்றின் மெய் வருமானத் தன் அளவு குறைவாக இருப்பதால்மட்டும் ஏற்படுவது அன்று; முன்னேறிய நாடுகளின் உயர்தரமான நுகர்வுப் போக்குகளின் கவர்ச்சித் திறனுல் அவற்றில் (பின்தங்கிய நாடுகளில்) ஏற்பட்டுள்ள உயர்ந்த அளவு நுகர்வு நாட்டத்தாலும் ஏற்படுவது ஆகும். ஐக்கிய அமெரிக்க நாட்டில்கூட 75 சதவீத மக்கள் சேமிப்பதில்லை என்றுல், அதற்குக் காரணம், சேமிக்கக்கூடிய ஆற்றல் அவர் களுக்கு இல்லை என்பது அன்று; சேமிப்பதற்கு உரிய விருப்பம் அவர்களுக்கு இல்லை என்பதும் அன்று. புதுப்புது நுகர்வுப் பொருள்களுக்கான வேட்கையை அவர்கள் உள்ளத்தில் எழுப்பி விடுகிற சூழ்நிலையில் அவர்கள் வாழ்கிருர்கள் என்பதுதான் உண்மையான காரணமாகும்.

கடந்த நூண்ருண்டில், ஏழை நாடுகள் பெரும்பாலான வற்றில் - எல்லாவற்றிலும் என்றுகூடச் சொல்லலாம் - தன் அளவுப் பொருளில் (In the absolute sense) மெய் வருமான அளவு களில் உயர்வு ஏற்பட்டிருந்தபோதிலும், இக் கூடுதல் வருமானத் தைக்கொண்டு சேமிப்பைச் செய்வது, இந் நாடுகளுக்கு, முன்னி லும் கடினமான செயலாக அமைந்துவிட்டதே தவிர முன்னிலும் எளிதான செயலாக உருப் பெறவில்லை. இதற்குக் காரணம், தராதரப் பொருளில் (In the relative sense) அவற்றினுடைய மெய் வருமான அளவுகள் குறைந்துவிட்டதே ஆகும். அவற்றி னுடைய சேமிப்புத்திறன் உயர்ந்திருந்தபோதிலும், சேமிப்பு விருப்பம் குறைந்திருக்கிறது. ஆனுல் வருமான நிலையில் தன் அளவைமட்டுமல்லாமல் தராதர அளவையும் இன்றியமையாத காரணியாகக் கருதத் தொடங்கியவுடன், சேமிப்புத்திறன் (Ability to save), சேமிப்பு விருப்பம் (Willingness to save) ஆகிய வற்றிற்கு இடையே இருப்பதாக நெடுங்காலமாகக் கருதப்பட்டு

வரும் வேறுபாடு ஓரளவுக்கு மறைந்துவிடுகிறது. மெய் வருமான நிலைகளின் தராதர அளவுகள் குறைந்துவிட்ட காரணத்தால், பொறுமையின்மை, அமைதியின்மை, பரபரப்புணர்ச்சி ஆகியவற்றில் உயர்வு ஏற்பட்டு, அந்த உயர்வின் விளைவாக நுகர்வின் அளவில் உயர்வும், சேமிக்கக்கூடிய அளவில் குறைவும் ஏற்பட்டுவிட்டன.

நாம் இதுவரை செய்த பகுத்தாய்வானது, பொருளியல் வளர்ச்சிச் சிக்கலை, அதனுடைய பன்னாட்டுப் பின்னணியில் வைத்து ஆராயவேண்டியது எவ்வளவு இன்றியமையாதது என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறது. பன்னாட்டுப் பின்னணியில் அமைந்த பொருளியல் வளர்ச்சிச் சிக்கலானது, 'தூய' பொருளியலின் ('Pure' Economics) ஒரு பகுதியாக இல்லாமல் இருக்கக்கூடும். பன்னாட்டுப் பொருளியலின் தூய கோட்பாடானது (Pure theory of International Economics), அதனுல் இதுவரை புறக்கணிக்கப்பட்டுள்ள நிலைமைகளை ஆராயத் தொடங்கும் வரையிலாவது, அஃது அப்படி இல்லாமல் இருக்கக்கூடும். தற்போதைய கருத்தாய்வில் என்னுல் அறிமுகப்படுத்தப்படுகிற நிலைமைகள் பன்னாட்டு அரசியல் பொருளியலைச் (International Political Economy) சேர்ந்தவை என்றோ, பன்னாட்டுச் சமூக இயலைச் (International Sociology) சேர்ந்தவை என்றோ சொல்லப்படலாம். அப்படிச் சொல்லப்படுவதாலேயே, அந் நிலைமைகள், தற்போதைய நம் கருத்தாய்வுக்கும் பொருத்தமற்றவையாக மாறிவிடமாட்டா. இந் நிலைமைகளைப் புறக்கணிப்பு என்னும் போர்வைக்குள் மறைத்து, இவற்றைப்பற்றி எத்தகைய கருத்தையும் தெரிவிக்காமல் இருப்பதால் ஏற்படக்கூடிய நற்பயன் எதுவும் இல்லை. இந் நிலைமைகள் யாவும் வெட்ட வெளிச்சமான இடத்திற்குக் கொண்டுவரப்பட்டு, நம்மால் பகுத்தாய்வு செய்யப்படுகிற பொருளியல் சிக்கலின் கண்ணேட்டத்தில் விருப்பு வெறுப்பற்ற முறையில் ஆராயப்படுவது இன்றியமையாதது ஆகும்.

ஒரு நாட்டினுடைய உற்பத்தி, மெய் வருமானம் ஆகியவை உயர்ந்த நிலையில் இருப்பதால் பிற நாடுகளுக்கு எத்தகைய கெடுதியும் ஏற்படாது என்பதும், அதற்கு மாருக, ஒரு நாட்டில் காணப்படுகிற செல்வச் செழிப்பு பிற நாடுகளுக்கும் பரவுவதே இயற்கை என்பதும், பன்னுட்டுப் பொருளியல் உறவுகள்பற்றிய வழக்கமான கண்ணேட்டத்தில் பொதிந்து கிடக்கும் கருத்துக்கள் ஆகும். ஒரு நாட்டினுடைய செழுமையானது அதன் அண்டை நாடுகளுக்குப் பல்வேறு முறைகளில் துணை செய்யக்கூடும் என்பது உண்மையே. எடுத்துக்காட்டாக, பொருளியல் வளர்ச்சித்துறை

யில் சற்றுக் காலந்தாழ்ந்து ஈடுபடும் நாடுகள், முதலிலேயே அத் துறையில் ஈடுபட்டுவிட்ட நாடுகளால் செய்யப்பட்டுள்ள அறிவியல் முன்னேற்றத்தைத் தங்களுக்கு நலன் தரும் வகையில் பயன்படுத்திக்கொள்ள முடியும். ஆனால் முன்னேறிய நாடுகளின் உயர்தர நுகர்வால் ஏற்படுகிற காட்சி விளைவைப் பொறுத்தவரை, பின் தங்கிய நாடுகளுக்குத் தீமையே ஏற்படுகிறது. முன்னேறிய நாடு ஒன்றின் வருமானம், நுகர்வு ஆகியவை உயர்ந்த நிலையில் இருப்பதால், வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கத்திற்குப் பயன்படக்கூடிய உள்நாட்டுச் சாதனங்கள் குறைந்து விடுகின்றன. அப்படிக் குறைவதால் அந் நாடுகளுக்குத் தீமை ஏற்படுகிறது. முன்னேறிய நாடுகளின் உயர் வருமான - உயர் நுகர்வுநிலையின் விளைவாக, குறைந்த வருமானம் உடைய நாடுகள், தம் வருமானத்தின் ஒரு பெரும் பகுதியை நுகர்வுக்காகச் செலவிட்டுத் தீரவேண்டிய நெருக்கடிக்கு ஆளாகிவிடுகின்றன.

மத்தியக் கிழக்கில் இருப்பவற்றைப் போன்ற சில நாடுகளில், நெடுங்காலமாக இருந்துவருகின்ற பகட்டான நுகர்வின் உள்நாட்டு முறைகளின் விளைவாகச் சேமிப்பதைப்பற்றிய ஒரு பண்பாட்டு வெறுப்பு நிலவிவருகிறது. இந்த வெறுப்பு, காட்சி விளைவுக்குத் தொடர்பு அற்ற ஒன்றே என்றபோதிலும், இந்த வெறுப்போடுகூடக் காட்சி விளைவும் சேர்ந்துகொள்ளுமானால், சேமிப்பது என்பது மிகவும் கடினமான செயலாக மாறிவிடுகிறது. காட்சி விளைவின் பயனாக, நுகர்வின் அளவு உயராமல், அதன் வடிவங்கள்மட்டும் உள்நாட்டு முறைகளிலிருந்து முன்னேறிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட முறைகளுக்கு மாறுமானால், அத்தகைய நிலையில்மட்டும், காட்சி விளைவின் பயனாகச் சேமிப்புத் திறனுக்கு எத்தகைய புதிய இடையூறும் ஏற்படவில்லை என்று கூறலாம் (இறக்குமதி செய்யப்பட்ட நுகர்வின் முறைகளுக்காகப் பண்டங்களும் இறக்குமதி செய்யப்படவேண்டுமா என்பது ஒரு தனிக் கேள்வியாகும். அதைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம்). நுகர்வின் நெடுங்கால முறைகளும் தற்கால முறைகளும், ஒன்றை ஒன்று, பல்வேறு வழிகளில் பாதிக்க முடியும். சில நாடுகளில் நில உடைமையானது சமுதாயத்தில் ஓர் உயரிய நிலையையும் செல்வாக்கையும் பெறுவதற்குரிய ஒரு வழியாக இருக்கிறது. அத்தகைய நாடுகளில், வணிகர்கள், தொழிலதிபர்கள் ஆகியோரின் சேமிப்புகளில் குறிப்பிடத்தக்க ஒரு பகுதி நிலவுடைமைகளை வாங்குவதற்குப் பயன்படுத்தப்படுவது, வழக்கமாக இருந்துவருகிறது. அந் நாடுகளில், நிலங்களை விற்பவர்களோ, விற்றுக் கிடைத்த பணத்தை நகரங்களைச்

சேர்ந்த நுகர்வு முறைகளுக்காகச் செலவிடுகிறார்கள். அல்லது, தற்கால வாழ்க்கை முறைகளைக் கையாளும் வேட்கைக்கு அவர்கள் முன்னரே இரையாகியிருந்தால், அந்த வேட்கையின் விளைவாக ஏற்பட்ட கடனைத் தீர்ப்பதற்கு அந்தப் பணத்தைப் பயன்படுத்துகிறார்கள்.

தொன்மைப் பொருளியலின் புகழ்மிக்க எடுத்துக்காட்டு ஒன்றின் வாயிலாகக் காட்சி விளைவின் சிறப்பை நாம் அறிந்து கொள்ளலாம். தராதரச் செலவுக் கோட்பாட்டை (The principle of comparative cost) விளக்குவதற்காக ரிகார்டோ (Ricardo) தந்துள்ள புகழ்மிக்க எடுத்துக்காட்டில், போர்ச்சுகல் நாட்டிற்கு, ஒரு காலன் திராட்சை மதுவை உற்பத்தி செய்வதற்கு 80 மணி நேர உழைப்பும், ஒரு கெஜம் துணியை உற்பத்தி செய்வதற்கு 90 மணி நேர உழைப்பும் தேவைப்படுகின்றன. ஆனால் இங்கிலாந்திற்கு அவற்றை உற்பத்தி செய்வதற்கு, முறையே 120 மணி நேர உழைப்பும், 100 மணிநேர உழைப்பும் தேவைப்படுகின்றன. இந்த எடுத்துக்காட்டில், இங்கிலாந்தின் உற்பத்தித் திறனின் தன் அளவு (Absolute level of productivity) போர்ச்சுகலின் தன் அளவைவிட ஓரளவு குறைவாக இருக்கிறது. ஆகவே, இங்கிலாந்து, போர்ச்சுகலைவிடக் குறைந்த மெய்வருமான அளவையே பெறமுடியும். நிலைமை இவ்வாறு இருந்தபோதிலும், தராதரச் செலவுக் கோட்பாட்டின்படி, இந்த இரு நாடுகளுக்கு இடையே வாணிபம் நடைபெறமுடியும் (போர்ச்சுகல் திராட்சை மதுவையும், இங்கிலாந்து துணியையும் ஏற்றுமதி செய்யலாம்). அப்படி நடைபெறும் வாணிபம் ஏன் ஒத்தநிலை அடையக்கூடாது என்பதற்கு எத்தகைய காரணமும் இல்லை. இரு நாடுகளுக்கும் இடையே, இவற்றின் உற்பத்தி, வருமானம் ஆகியவற்றின் அளவுகளில் சிறு வேறுபாடு மட்டுமே இருக்குமானால், இந் நாடுகளின் நுகர்வுப் பணிகள் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கக்கூடும் என்கிற உண்மையை நாம் புறக்கணித்துவிடலாம். இங்கிலாந்தின் உற்பத்தித்திறன் முன்னர் இருந்த நிலையிலேயே இருந்து, போர்ச்சுகலின் உற்பத்தித் திறன்மட்டும், திராட்சை மதுவை உற்பத்தி செய்வதற்கு 8 மணிநேர உழைப்பும், துணியை உற்பத்தி செய்வதற்கு 9 மணி நேர உழைப்பும் போதும் என்று சொல்லத் தக்க அளவுக்கு உயர்ந்துவிடுகிறது என்று வைத்துக்கொள்வோம். அப்போதுகூட, வாணிப அமைப்பானது (Trade model), அதாவது, தராதர நன்மையானது (Comparative advantage), முன்னர் இருந்த அளவிலேயேதான் இருக்கும். ஆனால், இரு நாடுகளின் உற்பத்தித் திறன்களிலும், அதன் விளைவாக அவற்றின் மெய் வருமான அளவுகளிலும் இவ்வளவு பெரிய வேறுபாடு ஏற்பட்டால், போர்ச்சுகலில், முதலாக்கத்திற்குப் பயன்படக்கூடிய

ஏராளமான சேமிப்புகள் உருவாகும்: ஆனால் இங்கிலாந்திலோ, அதன் வருமானத்தில் ஒரு சிறு பகுதியைக்கூடச் சேமிக்கமுடியாத நிலை ஏற்பட்டுவிடும். ஏனென்றால், போர்ச்சுகீசியரின் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தின் ஈர்ப்பு ஆற்றலால் கவரப்பட்டு, ஆங்கிலேயர்கள் முன்னிலும் கூடுதலான நுகர்ச்சியில் ஈடுபட்டிருப்பர். இத்தகைய சூழ்நிலையில், இங்கிலாந்து; தன் அயல்நாட்டு வாணிபக் கணக்கில் ஒத்தநிலையை ஏற்படுத்துவதற்கு மிக்க இடர்ப்பாட்டிற்கு உள்ளாகும் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இந்த உண்மை, இந் நூலில் விரைவில் விளக்கப்பட இருக்கிறது.

பல்வேறு நாடுகளின் நுகர்வுப் பணிகள் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கும் நிலையானது, நுகர்வைச் செய்வதா அல்லது சேமிப்பைச் செய்வதா என்னும் கேள்விக்கான விடையைக் குறிப்பிடத்தக்க அளவுக்குத் தீர்மானிக்கிறது. பல்வேறு நாடுகளுக்கு இடையேயும் சரி, பல்வேறு மனிதர்களுக்கு இடையேயும் சரி, ஓரளவுக்கு இதே நிலைமைதான் இருக்கிறது. நாம் முன்னரே குறிப்பிட்டதைப் போல, பல்வேறு நாடுகளுக்கு இடையே, நுகர்வின் அளவுகளில் உள்ள வேறுபாடுகளின் விளைவாக, தான் விரும்பிய தனியார் சேமிப்புகளின் (Voluntary private savings) அளவு குறையும் என்பதோடு, பொது நிதி இயலை (Public finance) முதலாக்கத்திற்கு உரிய ஒரு கருவியாகப் பயன்படுத்தும் வாய்ப்பும் தடைப்படும். பன்னாட்டு வேறுபாடுகளின் விளைவை மிகைப்படுத்திக் கூற நான் விரும்பவில்லை. மிகுந்த வறுமை நிலைக்கு உள்ளாகியுள்ள ஒரு நாடு, உலகத்தின் பிற நாடுகளில் இருக்கிற உயரிய வாழ்க்கைத் தரங்களைப்பற்றி ஏதுமே அறியாத நிலையில் இருந்தால்கூட, அதனுடைய பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான சேமிப்பைச் செய்வது, அந் நாட்டிற்கு மிகவும் கடினமான ஒரு செயலேயாகும். குறைந்த வருமானம் உள்ள நாடுகளில், மூலதன அளிப்புக்கு உரிய உள்நாட்டு ஊற்றுக்கால்களைக் குறைத்துவிடுகிற நச்சு வளையமானது, அதன் அளவிலேயே தீமை நிறைந்ததுதான். தன் அளவு வறுமையிலிருந்து (Absolute poverty) கிளைத்து எழுகிற சக்திகளோடு தராதர வறுமையிலிருந்து (Relative poverty) பிறந்து வளர்கிற சக்திகளும் சேர்ந்துகொள்வதால், மேற்படித் தீமையின் அளவானது மேலும் பெருகிவிடுகிறது என்பதுதான், நான் சுட்டிக் காட்ட விரும்பும் கருத்தாகும். அஃது எந்த அளவு பெருகுகிறது என்பது, துல்லியமாக முடிவுகட்ட முடியாத ஒரு கேள்வியாகும். அந்த அளவை முடிவுகட்டுவது ஒருவருடைய கருத்துக் கண்ணோட்டத்தைப் பொறுத்த நிலைமையாகும். அதோடு, அது நாட்டுக்கு நாடு மாறுபடும் இயல்புடையது என்பதையும் நாம் நினைவில் நிறுத்துவது நலம்.

## அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஏற்படும் விளைவுகள் (Effects on the Balance of Payments)

செல்வச் செழிப்புள்ள நாடுகளோடு தொடர்புகொள்கிற ஏழை நாடுகள் தங்களுடைய பண வருமானங்கள், செலவுகள் ஆகியவற்றைத் தங்களுடைய உற்பத்தித் திறனுக்கு ஏற்புடைய அளவைவிட உயர்ந்த அளவில் வைத்திருக்கவேண்டும் என்கிற உணர்ச்சிக்கு இடையீடின்றி ஆளாகின்றன. அப்படி ஆளாவதன் விளைவாக, உள்நாட்டில் பணவீக்க அழுத்தமும் (Inflationary pressure), அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஒத்த நிலையின்மை (Disequilibrium) தொடர்ச்சியாக இருக்கிற போக்கும், அந் நாடுகளில் ஏற்பட்டு விடுகின்றன.

இரண்டாம் உலகப் போருக்குப் பிந்திய டாலர் நெருக்கடியைப்பற்றிய - பொதுமக்களால் மிகவும் விரும்பப்படுகிற - ஒரு கோட்பாடானது, அந்த நெருக்கடிக்குக் காரணம், பல்வேறு நாடுகளின் பொது உற்பத்தி அளவுகளுக்கு இடையே உள்ள வேறுபாடே என்று விளக்குகிறது. இந்த விளக்கமானது, பொது அறிவுக்குப் பொருத்தமான ஒன்ருக இருக்கிறது. பொதுவாக எல்லாவகை உற்பத்தித் துறைகளிலும், சிறப்பாகப் பொறிவழித் தொழில்களிலும் (Manufacturing industries), ஐக்கிய அமெரிக்க நாடானது மிக உயர்ந்த நிலையை அடைந்துவிட்டது என்பதும், உலக அங்காடியில் அந் நாடானது பிற நாடுகள் யாவற்றையும் விட மிகக் கூடுதலான அளவில் தன் பண்டங்களை விற்கமுடியும் என்பதும், அப்படி விற்பதன் வாயிலாக ஓர் ஏற்றுமதி உபரியை (Export surplus) உருவாக்க முடியும் என்பதும், ஆனுல் அத்தகைய உபரியானது பிற நாடுகளைப் பொறுத்தவரை ஓர் இறக்குமதி உபரியாகவே (Import surplus) - அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் ஒரு பற்ருக்குறையாகவே-அமைந்து விடுகிறது என்பதுமே, மேலே குறிப்பிடப்பட்ட விளக்கத்தின் உள்ளுறை பொருள்கள் ஆகும். பொருளியலேயே தொழிலாகக் கொண்ட சில அறிஞர்களால் அளிக்கப்பட்ட இந்தக் கோட்பாடானது, மிக விரிவான அளவில் பரவியிருப்பதற்குக் காரணம், பெரும்பாலான பாமர மக்களின் கண்ணோட்டத்தில், தன்னுலே விளங்குகிற - மிக எளிய - ஒரு கோட்பாடாக அது காட்சியளிப்பதே ஆகும்.

பன்னுட்டுப் பொருளியலின் தொன்மை மரபினர் இந்தக் கோட்பாட்டுக்கு அளித்துள்ள விடை இக் கோட்பாட்டையே அழித்துவிடத் தக்கதாக இருக்கிறது. தராதரச் செலவுக் கோட்பாடு என்பதே அந்த விடை. இந்த விடையின் கருத்தின்படி, பன்னுட்டு வாணிபமானது, பல நாடுகளின் உற்பத்தி அளவுகளுக்கு

இடையே உள்ள தன்னளவு வேறுபாடுகளால் அல்லாமல் தராதர வேறுபாடுகளாலேயே, நாணயமாற்று வீதத்திற்கு (Rate of Exchange) ஏற்ற முறையில் பாதிக்கப்படுகிறது. ஒரு நாட்டினுடைய மொத்த உற்பத்தி அளவானது பிற நாடுகளோடு ஒப்பிடும்போது மிகக் குறைந்ததாக இருந்தால்கூட, பொருத்தமான நாணயமாற்று வீதம்மட்டும் இருக்குமானுல், அதனுடைய அயல்நாட்டு வாணிபக் கணக்கில் ஒத்த நிலையை ஏற்படுத்துவது, எப்போதும் இயலக்கூடிய செயலேயாகும். குறிப்பிட்ட ஒரு நாணயமாற்று வீதத்தில், எந்தப் பண்டங்களில் அந்த நாட்டுக்கு உற்பத்தியின் அளவைப் பொறுத்தவரை மிகக் குறைந்த தன்னளவுப் பிரதிகூலம் (The least absolute disadvantage) இருக்கிறதோ அவற்றை ஏற்றுமதி செய்வதும், எந்தப் பண்டங்களில் மிகக் கூடுதலான பிரதிகூலம் இருக்கிறதோ அவற்றை இறக்குமதி செய்வதும், இயலக்கூடிய செயல்களே அன்றே.

நாணயமாற்று வீதத்தை உயர்த்துவதாலோ தாழ்த்துவதாலோ, அயல்நாட்டுச் செலுத்தல் நிலையை ஒத்த நிலைப்படுத்த முடியாத தன்மையில், தேவை, அளிப்பு ஆகியவற்றின் நெகிழ்ச்சிகளைப் பெற்றுள்ள சில புறனடைகளைத் தவிர (Exceptional cases) ஏனைய எல்லா நிலைகளிலும், தொன்மைப் பொருளியலின் மேற்படி விடை பொருத்தமாக இருக்கிறது என்பதே என் கருத்து. விலை அமைப்பால் (Price system) ஒத்த நிலையை ஏற்படுத்த முடியாத நெருக்கடிக் கட்டத்திலேயே, அயல்நாட்டு வாணிபத்தைச் சேர்ந்த பண்டங்கள் அத்தனையின் நெகிழ்ச்சிகளும் இருக்கக்கூடும் என்பது, கோட்பாடு அளவில் பார்த்தால் ஏற்படக்கூடிய ஒன்றே என்றபோதிலும், நடைமுறையில் அவ்வாறு நிகழ்வது அரிதினும் அரிது என்றே கூறவேண்டும். இடையீடின்றி இருந்துவருகிற - அல்லது மீண்டும் மீண்டும் தவருமல் தோன்றிவருகிற - பன்னுட்டு ஒத்த நிலையின்மையை (International disequilibrium), மேற்குறிப்பிட்டவை போன்ற புறனடைகளின் வாயிலாக விளக்க முனைவது, பொருத்தமுடைய செயலாகத் தோன்றவில்லை. அத்தகைய ஒத்த நிலையின்மையானது தொடர்ந்து இருப்பது அல்லது மீண்டும் மீண்டும் தோன்றுவது உண்மையானுல், அதற்கு மிக விரிவான அடிப்படையில் அமைந்த விளக்கத்தையே எவரும் எதிர்பார்ப்பர்.

சில நாடுகள் தங்களுடைய வரவைவிட மிகுதியான அளவில் செலவு செய்வதில் ஈடுபட்டிருப்பதாலும், தங்களுடைய பண வருமான அளவைத் தங்களுடைய உற்பத்தி அளவைவிட மிகுந்த அளவுக்கு உயர்த்தும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டிருப்பதாலும்தான், பன்னுட்டு வாணிபத்தில் ஒத்த நிலையின்மை

யானது தொடர்ந்து இருக்க முடிகிறது என்பது, தொன்மைப் பொருளியலின் கருத்தாகும். இந்தக் கருத்தை நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இக் கருத்தானது நடைமுறை உண்மை ஒன்றை அப்படியே எடுத்துக்காட்டுவதாகத்தான் அமைந்திருக்கிறதேதவிர இஃது ஏன் அப்படி நடைபெறுகிறது என்பதற்குரிய விளக்கமாக இல்லை. அதற்குரிய விளக்கம் யாது ?

சில நாடுகள் தங்களுடைய ''வரவை விட மிகுதியான அளவில் செலவு செய்வதில் ஈடுபட்டிருப்பதற்கு'', ஓர் எளிய பொதுவான விளக்கத்தை நாம் பெற்றிருக்கிறோம். டாலர் பற்றுக்குறையைப்பற்றிய உற்பத்தி அளவுக்கோட்பாட்டின் (The productivity theory of the dollar shortage) எளிய வடிவங்களைப் பொருத்தமற்றவை என்று நாம் தள்ளி விட்டிருக்கிறோம். ஆனால், அந்தக் கோட்பாட்டைப் போலவே பொதுவான உற்பத்தி அளவுகளில் உள்ள வேறுபாடுகளின் அடிப்படையில் அமைந்துள்ள அயல்நாட்டுச் செலுத்தல் நிலையின் ஒத்த நிலையின்மைபற்றிய ஒரு கோட்பாட்டைத்தான், கொல்லைப் புற வழியாக நாம் அடைவதுபோல் தோன்றுகிறது. ஆனால் இந்தக் கோட்பாட்டில் தராதரச் செலவுக் கொள்கையானது முழு அளவில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. உற்பத்தி அளவில் உள்ள வேறுபாடுகள், அவற்றின் அளவில், அயல்நாட்டுச் செலுத்தல் நிலையின் ஒத்த நிலையின்மைக்கு (Balance of payments disequilibrium) உரிய விளக்கமாக அமையவில்லை. அமையாத போதிலும், உற்பத்தி அளவானது மெய் வருமானத்தைத் தீர்மானிக்கிறது என்பது உண்மையே. பல்வேறு நாடுகளின் உற்பத்தி அளவுகளில் உள்ள வேறுபாடுகள், அந் நாடுகளின் மெய் வருமான அளவுகளையும், அவற்றின் வாயிலாக அந் நாடுகளின் நுகர்வு அளவுகளையுங்கூடத் தீர்மானிக்கின்றன. உற்பத்தியின் பொது அளவுகளில் உள்ள வேறுபாடுகள், மறைமுகமான முறையில், அயல்நாட்டுச் செலுத்தல் நிலையின் ஒத்த நிலையின்மையை உருவாக்குகின்றன என்பது உண்மைதான். ஆனால் அதற்குக் காரணம், உற்பத்தியின் அளவால்தான், ஒரு நாட்டினுடைய ஏற்றுமதிச் செலவுகளும் உலக அங்காடியில் அந்நாட்டின் போட்டியிடும் திறனும் தீர்மானிக்கப்படுகின்றன என்பது அன்று; மிகக் கூடுதலாக உற்பத்தியைச் செய்கிற ஒரு நாடு ஏனைய எல்லா நாடுகளையும்விட மிகக் கூடுதலாகப் பண்டங்களை விற்றே தீரும் என்பதும் அன்று. ஒரு நாட்டினுடைய உற்பத்தியின் அளவுதான் அந் நாட்டின் மெய் வருமானம், நுகர்வு ஆகியவற்றின் அளவுகளைத் தீர்மானிக்கிறது என்பதும், பல்வேறு நாடுகளின் வாழ்க்கைத் தரங்களுக்கு இடையே உள்ள வேறுபாடு

கள் மிகப் பெரியனவாகவும் பிற நாடுகளுக்கு நன்கு தெரியக்கூடிய நிலையிலும் இருக்குமானல் அவ் வேறுபாடுகளின் விளைவாக ஏழை நாடுகளின் நுகர்வு நாட்டம் உயர்வடையும் என்பதுமே உண்மையான காரணங்கள் ஆகும்.

பன்னாட்டுப் பணவழி அமைப்பில் (International monetary mechanism) செல்வம், வருமானம் ஆகியவற்றின் ஒத்த நிலையற்ற பங்கீட்டிற்கு உள்ள இன்றியமையாத இடத்தை நான் சிறிது காலமாக நன்கு உணர்ந்திருக்கிறேன். எந்தக் காலத்திலுமே தங்க நாணயத் திட்டம் (Gold Standard) உலகம் முழுவதிலும் நடைமுறையில் இருந்ததில்லை. பல நாடுகள், அவற்றினுடைய அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் வாணிபச் சுழலின் தொடர்பாகவும் பிற வகைகளிலும் ஏற்பட்ட குறுகிய கால ஏற்ற இறக்கங்களைச் (Short term fluctuations) சமாளிப்பதற்குத் தேவையான காப்பிருப்புகளை (Reserves) வைத்திருக்க முடியாத அளவுக்கு வறுமை உடையனவாக இருந்தன. ஆகையால்தான், நிலையானதும் கட்டுப்பாடு அற்றதுமான நாணயமாற்றுத் திட்டத்தைத் தொடர்ந்து வைத்திருப்பதற்கு அந் நாடுகளால் இயலாமற் போய்விட்டது. ஏழை நாடுகள், அயல்நாட்டு வாணிபத்தின் வாயிலாக அவற்றுல் ஈட்டப்பட்ட வருமானத்தை அவற்றிற்கு இன்றியமையாது தேவைப்படுகிற இறக்குமதிப் பண்டங்களை வாங்குவதற்குப் பயன்படுத்துவதில் பேரார்வம் காட்டுவதும், அவற்றின் அயல்நாட்டு நாணயக் காப்பிருப்பை (Foreign exchange reserve) நிலைநாட்டுவதில் அல்லது பெருக்குவதில் அவ்வளவாக ஆர்வம் காட்டாமல் இருப்பதும் இயற்கையே. ஓரளவுக்கு, இந்தச் செய்தியைப் பொறுத்தவரையிற்கூட, பல தனி ஆட்களுக்கு இடையே உள்ள அதே வகையான நிலைமையைப் பல நாடுகளுக்கு இடையேயும் நாம் காணமுடிகிறது. எந்த அளவு பணத்தை ரொக்கமாக வைத்திருப்பது இயல்பானது என்று ஒரு பணக்கார மனிதர் கருதுகிருரோ அந்த அளவை, ஓர் ஏழை மனிதர், வீணன ஓர் ஆடம்பரமாகவே கருதுவார்.[10]

பன்னாட்டுக் கணக்கில் அளவுக்கு மீறிச் செலவிடும் போக்கு ஏழை நாடுகளிடம் தொடர்ந்து காணப்படுவது, பன்னாட்டு ரொக்கக் காப்பிருப்பை (International cash reserves) வைத்திருப்பதில் அவை காட்டுகிற மிகக் குறைந்த ஆர்வத்தின் ஒரு பகுதியே ஆகும். அஃது அவற்றினுடைய தராதர வறுமையின் ஒரு பகுதியும் ஆகும். ஆகவேதான், ஓர் ஏழை நாட்டுக்கும் ஒரு பணக்கார நாட்டுக்கும் இடையே உள்ள அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஒத்த நிலையின்மை ஏற்படுவது ஏறத்தாழ இயற்கையான நிகழ்ச்சியே என்று கூறப்படும் கருத்தில் ஓரளவு உண்மை இருக்கிறது

என்று எனக்குத் தோன்றுகிறது.[11] இஃது இப்படி இருப்பதற்குக் காரணம், பணக்கார நாட்டின் உற்பத்தி அளவு மிகுதியாக இருந்து, அதன் விளைவாக அதன் ஏற்றுமதி விலைகள் குறைவாகவும் போட்டியிடும் ஆற்றல் மிகுதியாகவும் இருப்பது அன்று என்பதையும், ஏழை நாட்டின் செலவிடும் நாட்டம் கூடுதலாக இருப்பதே என்பதையும், மீண்டும் ஒரு முறை எடுத்துக் கூற விழைகிறேன். ஏழை நாட்டின் செலவிடும் நாட்டமானது, முன்னரே எடுத்துக் கூறிய காரணங்களால், அதனுடைய உற்பத்தித் திறனைவிட மிகக் கூடுதலாக இருக்கிறது.

இத்தகைய சூழ்நிலையில், ''பணவீக்கத்தைத் தடுத்து, நாணயமாற்று வீதத்தைத் திருத்தி அமைத்துவிட்டால், அயல் நாட்டுச் செலுத்தல் நிலையில் தோன்றுகிற ஒத்த நிலையின்மையை அகற்றிவிடலாம்'' என்று தொன்மைப் பொருளியல் அறிஞர்களால் தரப்பட்டுள்ள பரிகாரம்,[12] பொருத்தமாக இருப்பதில்லை. இந்தப் பரிகாரத்தைக் கையாள்வது மிகவும் கடினமாக இருப்பதைப் பல நாடுகள் உணர்ந்துள்ளன. நடைமுறையில் இந்தத் திட்டத்தைக் கையாண்டால், தொடக்கத்தில் சிறிது காலத்திற்கு வெற்றி ஏற்படுகிறது. அப்படி ஏற்பட்டபோதிலும் பண வீக்க நிலைமைகள் தொடர்ந்து இருக்கின்றன; அயல்நாட்டுச் செலுத்தல் நிலையின் ஒத்த நிலையின்மை மீண்டும் தோன்றுகிறது அல்லது தோன்ற முயல்கிறது. அதன் தோற்றம், இறக்குமதித் தடைகளாலும் அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடுகளாலும் தடுக்கப்பட்டிருக்கக்கூடும். பன்னாட்டு வருமான வேறுபாடுகள், இறக்குமதி செய்யப்படும் பண்டங்களுக்கான தேவையில் நேர்முக உயர்வை ஏற்படுத்துவதன்மூலம், அயல்நாட்டுச் செலுத்தல் நிலையைப் பாதிக்கக்கூடும். ஆனால், பின்பற்றும் விளைவானது (Imitation effect), பன்னாட்டு வாணிபத்தைச் சேராத பொருள்கள், ஊழியங்கள், ஓய்வு ஆகியவற்றிற்கான தேவையையும் (Demand) பாதித்து, அப்படிப் பாதிப்பதன் விளைவாக, பண்டங்கள் இறக்குமதி செய்யப்படும்போது பாதிப்பதைப் போலவே, அயல்நாட்டுச் செலுத்தல் நிலையை மறைமுகமாகப் பாதிக்க முடியும். நாம் குறிப்பிடும் கோட்பாடானது, முன்னேறிய நாடுகளிலிருந்து பண்டங்களை இறக்குமதி செய்வதற்கான தேவையைப் பொறுத்தது அன்று. ஆனால் அதே சமயத்தில், நடைமுறையில், அத் தேவையானது, முதன்மையான ஒரு காரணியாக விளங்குகிறது என்பதில் ஐயமில்லை. பன்னாட்டு அளவில் அமைந்த காட்சி விளைவானது, அமெரிக்கப் பண்டங்களுக்கான தேவையை ஓரளவுக்கு நேர்முகமாகப் பாதிக்கிறது.[13]

இந்த நூற்றாண்டைப்போலவே, பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், ஒரு குறிப்பிட்ட நாடு, அதாவது பிரிட்டிஷ் பெருநாடு (Great Britain), ஏனைய எல்லா நாடுகளையும்விட மிகக் கூடுதலான உற்பத்தி அளவையும் மெய்வருமான அளவையும் பெற்றிருந்தபோதிலும், இந் நூற்றாண்டில் இருப்பதைப் போன்ற தொடர்ந்து நீடிக்கும் ஒத்த நிலையின்மை ஏன் அப்போது இருக்கவில்லை என்கிற கேள்வியைச் சிலர் கேட்கக்கூடும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிற்சில நேரங்களில் 'ஸ்டர்லிங் பற்றாக்குறை' (Sterling shortage) நிகழ்ச்சிகள் இருந்ததுண்டு என்பது மெய்தான். ஆனால், தொடர்ச்சியான முறையில் ஒத்த நிலையின்மை இருந்ததில்லை ; 'ஸ்டர்லிங் பற்றாக்குறை' என்கிற சொற்றொடரும் பயன்படுத்தப்படவில்லை. அப்படி இல்லாமல் இருந்ததற்கு உரிய காரணங்கள் யாவை? முதலாவதாக, பத்தொன்பதாம் நூற்றாண்டில் பல்வேறு நாடுகளின் மெய்வருமான அளவுகளுக்கு இடையே இருந்த தன்னளவு வேறுபாடுகள் (Absolute discrepancies) மிகவும் சுருங்கிய அளவுடையவை. இங்கிலாந்தில் அந்தக் காலத்தில் புதிதாக வளர்ந்துவந்த தொழில்துறை நடுத்தர வகுப்பினரின் தூய்மை மனப்பான்மையின் (Puritan mentality) விளைவாக அந் நாட்டின் சேமிப்பு நாட்டம் மிகக் கூடுதலாக இருந்த காரணத்தால், அந் நாட்டின் நுகர்வின் அளவுக்கும் பிற நாடுகளின் நுகர்வின் அளவுகளுக்கும் இடையே இருந்த வேறுபாடு சாலவும் சிறியதாக இருந்தது. இரண்டாவதாக, பல்வேறு நாடுகளுக்கு இடையே இப்போது இருக்கின்ற அளவு நெருக்கமான செய்தித் தொடர்பு வாய்ப்புகள் அந் நாளில் இருந்ததில்லை. எடுத்துக்காட்டாக, வானொலி, வானூர்திப் பயணம், திரைப்படம் ஆகியவை அந்தக் காலத்தில் தோன்றக் கூட இல்லை. மூன்றாவதாக, பிரிட்டனிலிருந்து இறக்குமதியாகிற பொருள்களுக்குப் பிற நாடுகள் எத்தகைய சுங்கவரிகளை விதிக்கின்றன என்பதைப்பற்றிச் சிறிதும் எண்ணிப் பாராமல், பிற நாடுகளிலிருந்து பிரிட்டனுக்கு வருகிற பொருள்கள்மீது விதிக்கப்பட்டிருந்த சுங்கவரிகள் யாவற்றையும் அகற்றிவிடுகிற ஒரு வாணிபக் கைக்கோளைப் (Commercial policy) பிரிட்டன் அந் நாளில் பின்பற்றிவந்தது. நான்காவதாக, பிரிட்டன், அந்தக் காலத்தில், ஏறத்தாழத் தொடர்ச்சியாகவும், மாபெரும் அளவிலும் மூலதனத்தைப் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வந்தது.

இந்தக் காரணங்களையெல்லாம் முன்வைத்துப் பார்த்தால், நூறு ஆண்டுகளுக்கு முன்னர், பல்வேறு நாடுகளின் அயல் நாட்டுச் செலுத்தல் நிலையானது ஒத்தநிலை என்னும் இயல்பான

முடிவை நோக்கித்தான் எப்போதுமே சென்றுகொண்டிருக்கும் என்று கருதப்பட்டது, நடைமுறை உண்மையிலிருந்து பெரிதும் மாறுபட்ட ஒரு நிலையாக இருந்திருக்க முடியாது. ஜே. எஸ். மில் (J. S. Mill), 'ஒத்த நிலை என்னும் தன் இயற்கையான நிலைமையில் அயல் நாட்டு வாணிபம்' என்று குறிப்பிட்டுள்ளார்.[14] என்பது இங்கு நினைவுகூரத் தக்கது. இத் தொன்மைப் பொருளியல் கருத்தானது, அண்மைக் காலத்தில் பாரெட் வேல் (Barrett Whale) என்பாரால்[15] பின்வரும் வாக்கியத்தின் வாயிலாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது:—"பன்னாட்டு வாணிபத்தில் ஒத்த நிலையை அடைவது என்னும் போக்கு இயற்கையாகவே அமைந்திருக்கிறது என்னும் கருத்தே, நம்முடைய ஆய்வுப் பொருளின் முழுக் கோட்பாட்டின் மையக் கொள்கையாகும் (Central principle)." ஆனால் இந்த வாக்கியத்தை அடுத்து, பின்வரும் ஐயக் குறிப்பு ஒன்றையும் அவர் சேர்த்துள்ளார்: "ஆனால் அதே சமயத்தில் அந்தக் கொள்கையானது உண்மையாகத்தான் இருந்தாக வேண்டும் என்கிற முடிவுக்கு, போதிய ஆராய்ச்சி இல்லாமல், உடனடியாக நாம் வந்து விடக்கூடாது." அயல்நாட்டுச் செலுத்தல் நிலையை ஒழுங்குபடுத்துவதுபற்றிய வருமானக் கண்ணோட்டம்கூட (Income approach), பெருக்கும் எண் ஏற்பாட்டில் உள்ள சேமிப்புக் குறைவுகளின் (Saving leakages in the multiplier process) விளைவாக ஒத்த நிலையின்மையானது தொடர்ச்சியாக ஏற்படக்கூடும் என்பதை எடுத்துக்காட்டியபோதிலும், எல்லாச் சமயங்களிலும் ஒத்த நிலையை அடைவதற்கான ஒரு போக்கு இருந்து வருகிறது என்பதை அஃது ஏற்றுக்கொள்கிறது. ஆனால் இன்றைய நடைமுறை உலகத்தைப் பொறுத்தவரை, அத்தகைய ஒரு போக்கு இருக்கிறது என்னும் கருத்துக்கு இரண்டாந்தர இடத்தைத்தான் தரமுடியும். இன்றைய உலகத்தில், பன்னாட்டு வாணிபத்தில், ஒத்த நிலையின்மைதான் இயல்பான நிலையாகவும் இயற்கையான போக்காகவும் இருக்கிறது என்று கூறுவது தவறாகாது.

பல்வேறு நாடுகளின் வருமானம், நுகர்வு ஆகியவற்றின் அளவுகளில் உள்ள வேறுபாடுகளின் விளைவாக இக் காலத்தில் ஏற்படுகிற பணவீக்க அழுத்தங்களும் (Inflationary Pressures), அயல்நாட்டுச் செலுத்தல் நிலைபற்றிய இடர்ப்பாடுகளும், அவற்றின் அளவிலேயே, அடிப்படைக் கோளாறுகள் அல்ல. அவை வெறும் அறிகுறிகளே (Symptoms) ஆகும். நுகர்வோரின் செலவு மிகுதியால் ஏற்படாமல் உள்நாட்டு மூலதனச் செலவின் மிகுதியால்கூட அவை ஏற்படக்கூடும். பல்வேறு நாடுகளின் மெய் வருமான அளவுகளில் உள்ள வேறுபாடானது நாளுக்கு நாள்

பெருகி வருகிறது. இப்படிப் பெருகிவரும் வேறுபாட்டின் விளைவாக, ஏழை நாடுகளில், நுகர்வின் அளவு பெருகுகிறது அல்லது பெருகுவதற்கான முயற்சி நடைபெறுகிறதே தவிர முதலீட்டின் பெருக்கம் ஏற்படுவதில்லை என்பதுதான், மூலதன அளிப்பின் (Capital supply) கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், உண்மையான கோளாறாக இருக்கிறது. எஃது எப்படி இருந்தாலும், மெய் வருமான அளவுகளில் உள்ள வேறுபாடானது, வருமானங்கள் பெருகும்போது, சேமிப்பில் பெருக்கம் ஏற்படுவதைத் தடுத்துவிடுகிறது.

இந்தக் காரணத்தால்தான், பன்னாட்டு வருமான வேறுபாடுகளை, பன்னாட்டு வாணிபத்தின் அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் நெருக்கடியை உண்டாக்குகிற ஒரு காரணியாக மட்டுமல்லாமல், ஏழை நாடுகளில் உள்நாட்டுச் சேமிப்பும் மூலதன ஆக்கமும் நடைபெறுவதைத் தடுத்து நிறுத்துகிற ஒரு முட்டுக்கட்டையாகவும் கருதவேண்டியிருக்கிறது.

## தோல்வித் தீர்வு: பொருளியல் தனிமை
## (The Defeatist Solution: Economic Isolation)

முன்னேறிய நாடுகளின் நுகர்வுத் தரங்களின் கவர்ச்சியானது, பொருளியல் வளர்ச்சியைக் காலந்தாழ்ந்து தொடங்கியுள்ள நாடுகளுக்கு ஓர் இடையூறாக இருக்கிறது. இந்த இடையூற்றை நீக்குவது எப்படி? பொருளியல் தனிமையானது இந்த இடையூற்றை அகற்றுவதற்கு உரிய ஒரு வழியாக விளங்குகிறது என்கிற உண்மையையும், இரண்டு முக்கியமான நாடுகளின் வளர்ச்சியில் அத் தனிமைக்குப் பங்கு இருந்திருக்கிறது என்கிற உண்மையையும் நாம் புறக்கணிக்க முடியாது. ஜப்பான் நாடு, அதனுடைய தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில், நுகர்வுப் போக்குகளைத் தவிர்த்த ஏனைய எல்லாவற்றிலும், மேல்நாடுகளைப் பின்பற்றி நடந்தது என்பது, அனைவரும் அறிந்த ஓர் உண்மை.[16] எத்தனையோ நூற்றாண்டுகளாக அந் நாடு உலகத்தின் பிற பகுதிகளிலிருந்து முழுமையாக ஒதுங்கி நின்று தனி வாழ்வு வாழ்ந்து வந்தது. அப்படி வாழ்ந்துவந்த காரணத்தால், தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலையில், நுகர்வுப் போக்குகளைப் பொறுத்தவரை இத் தனிமையைத் தொடர்வது, அந் நாட்டுக்கு ஓர் எளிய செயலாக அமைந்தது. உள்நாட்டு மூலதன ஆக்கம், தொழில் வளர்ச்சி ஆகிய துறைகளில் அந் நாடு பெற்ற வெற்றிக்கு உரிய இரகசியத்தின் ஒரு பகுதி இஃது என்பதில் சிறிதும் ஐயமில்லை. நமக்குக் கிடைத்

துள்ள மதிப்பீடுகளின்படி,[17] ஜப்பான், இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில், தன்னுடைய நாட்டு வருமானத்தில் (National income) 12 முதல் 17 சதவீதம் வரை சேமிக்க முடிந்திருக்கிறது. 1920ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளுக்குமுன், அந் நாட்டு அரசாங்கத்தால் அயல் நாடுகளிலிருந்து பெறப்பட்ட கடன் தொகை மிகச் சிறிதாக இருந்தது. அக் காலத்தில் அந் நாட்டில் அயல்நாட்டு வாணிப முதலீடுகள் எவையும் செய்யப்படவில்லை என்றே சொல்லிவிடலாம். கிட்டத்தட்ட தன்னுடைய முதலாக்கம் முழுவதையும், ஜப்பான், பிற நாடுகளின் துணையின்றித் தானுகவே செய்திருக்கிறது.

தீவிரமான பொருளியல் தனிமைக்கு உரிய மற்றோர் எடுத்துக் காட்டு, சோவியத் ரஷ்யாவின் இரும்புத் திரை ஆகும் (அந்த இரும்புத் திரையானது உலக அரசியலில் தற்போது உள்ள நெருக்கடியின் விளைவாக ஏற்பட்டது அன்று; இரண்டாம் உலகப் போருக்கு முன்னரே அஃது அழுத்தந் திருத்தமான முறையில் ஏற்பட்டுவிட்டது). அந்த இரும்புத் திரை இருப்பதற்கு வேறு பல காரணங்கள் உண்டு என்பதில் ஐயம் இல்லை என்ற போதிலும், அதன் பொருளியல் பணியும் முதன்மையானது என்பது என் கருத்து. வேறு சொற்களில் கூறுவதானல், இரும்புத் திரையின் 'பருப்பொருள் உரை விளக்கமும்' ('Materialist interpretation') இன்றியமையாதது என்று நான் கருதுகிறேன். இரும்புத் திரையின் பொருளியல் பகுதி மட்டும்தான் - அதுவும், நம்மால் தற்போது பகுத்தாய்வு செய்யப்படுகிற கோட்பாட்டின் கண்ணேட்டத்தில் மட்டும்தான் - தற்போதைய ஆராய்ச்சியில் நமக்குத் தொடர்புடைய ஒன்றுகும். சோவியத் ரஷ்யாவின் சேமிப்பு, முதலீடு ஆகியவற்றை உயர்ந்த அளவில் வைத்திருப்பதற்கு இரும்புத் திரை தேவைப்படுகிறது போலும். அண்மை ஆண்டுகளில் சோவியத் ரஷ்யாவின் நாட்டு வருமானத்தில் ஏறத்தாழ 25 சதவீதம் இராணுவச் செலவல்லாத முதலாக்கத்திற்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பது, இதுவரை செய்யப்பட்ட மதிப்பீடுகளிலிருந்து புலனுகிறது.[18] இந்த மதிப்பீடுகள் ஐயத்திற்கு உரியனவாக இருக்கக்கூடும். சோவியத் ரஷ்யாவை மேற்கு நாடுகளிலிருந்து தனிமைப்படுத்தாமல் முதலீட்டு வீதத்தை இத்துணை உயர்ந்த அளவில் வைத்திருப்பது இயலாத செயலாகும். சோவியத் மக்கள், மேற்கு நாடுகளின் உயரிய வாழ்க்கைத் தரங்களைத் தங்கு தடையற்ற முறையிலும் தெள்ளத் தெளிவாகவும் காணக்கூடிய நிலை இருக்குமாளுல், அவ்வாழ்க்கைத் தரங்களுக்கும் அவர்களுடைய வாழ்க்கைத் தரங்களுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை அம் மக்களின்

உள்ளங்களால் பொறுத்துக்கொள்ள முடியாது. அதுமட்டு மன்று. அவ் வேறுபாட்டால் அரசியல் துறையில் சோவியத் ரஷ்யாவின் புகழுக்கு ஊறு நேரிடவும் கூடும் (இரும்புத் திரையின் முதன்மையான பணி, சோவியத் ரஷ்யாவில் இருப்பவர்கள் பிற நாடுகளில் நிகழ்பவற்றை அறியாவண்ணம் தடுப்பதே என்ற போதிலும், அதன் துணைப் பணி, பிற நாடுகளில் இருப்பவர்கள் சோவியத் ரஷ்யாவில் நடப்பவற்றை அறியாவண்ணம் தடுப்பது ஆகும். ஏனென்றால், அப்படித் தடுத்தால்தான் சோவியத் ரஷ்யா தொழிலாளர்களின் சொர்க்க பூமியாகத் திகழ்கிறது என்னும் கற்பனையைக் காப்பாற்றமுடியும்).

பொருளியல் தனிமையால்மட்டும் பொருளியல் வளர்ச்சியை உருவாக்கிவிட முடியும் என்று நாம் கூறவில்லை. ஜப்பான் எத்தனையோ நூற்றாண்டுகள் பொருளியல் தனிமையைப் பெற்றிருந்தது என்றபோதிலும் அப்போதெல்லாம் அந் நாட்டில் குறிப்பிடத்தக்க அளவில் பொருளியல் முன்னேற்றம் எதுவும் நிகழவில்லை. தனிமை நிலை, அதன் அளவில் பார்க்கும்போது, தேக்க நிலையைத்தான் உருவாக்குகிறதே தவிர வளர்ச்சி நிலையை அன்று. இஃது உண்மைதான் என்றாலும், பல்வேறு நாடுகளின் வாழ்க்கைத் தரங்களுக்கு இடையே மாபெரும் வேறுபாடுகள் உள்ள இன்றைய உலகத்தில், அந் நாடுகளுக்கு இடையே இருக்கக் கூடிய செய்தித் தொடர்பையும் நெருக்கத்தையும் அகற்றுவதன் வாயிலாக, பொருளியல் தனிமையானது, முதலாக்கம் செய்வது என்னும் பொருளியல் சிக்கலுக்கு உரிய ஒரு தீர்வாக விளங்கக் கூடும். இந்த உண்மையை, ஜப்பான், சோவியத் ரஷ்யா ஆகிய இரண்டு நாடுகளின் வரலாறுகளும் தெளிவுபடுத்துகின்றன. பல்வேறு நாடுகளின் வாழ்க்கைத் தரங்களில் உள்ள வேறுபாடுகள் எவ்வளவுதான் மிகுதியாக இருந்தபோதிலும், அந் நாடுகளுக்கு இடையே செய்தித் தொடர்புகள் இல்லாவிட்டால், அவ்வேறுபாடுகளால் எத்தகைய விளைவும் ஏற்படுவதில்லை. அத்தகைய நிலையில், அவ் வேறுபாடுகள், மக்களுடைய விருப்பங்கள், வேட்கைகள், நடவடிக்கைகள் ஆகியவற்றைப் பாதிப்பதில்லை; நுகர்வோரின் நினைவிலும் கற்பனையிலும் நுழைய முடிவதில்லை. இவ் வகையில் காட்சி விளைவானது, அதன் ஆற்றலில் ஒரு பகுதியையாவது இழந்துவிடுகிறது என்பது தெளிவு.

பொருளியல் தனிமையானது இத்தகைய ஒரு தீர்வாக இருக்கக்கூடும் என்கிற நிலைமையானது நம் மன அமைதியைக் குலைக்கவல்லதாகும். அரசியல் தொடர்புகள் என்கிற கண்ணோட்டத்தில் மட்டுமல்ல, தூய பொருளியல் என்கிற கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால்கூட, தனிமையின் செலவு, மாபெரும்

அளவினதாகவே இருக்கும். தனிமையின் பொருளியல் செலவு (Economic cost)மட்டுமேகூட, எந்த ஒரு சிறிய நாட்டாலும் தாங்க முடியாத அளவுக்குப் பெரியதாக இருக்கும். தனிமை என்பது ஒரு தோல்வித் தீர்வே ஆகும். எனவே, நாம் முதலில் குறிப்பிட்ட இடையூற்றை அகற்றுவதற்கு வேறு வழிகளைத்தான் நாடவேண்டும்.

## பன்னாட்டு வருமான மாற்றல்களும் பல வட்டார வருமான மாற்றல்களும்

பணக்கார நாடுகள், ஏழை நாடுகளுக்குத் தேவைப்படுகிற மூலதனத்தின் ஒரு பகுதியைத் தர முந்துவது, அத்தகைய ஒரு வழியாக இருக்க முடியுமா என்பதைக் கவனிப்போம். இதுவரையில் நாம், பன்னாட்டு வருமான வேறுபாடுகளையும் அவற்றின் விளைவுகளையும் ஒரு கோணத்திலிருந்து ஆராய்ந்தோம். மற்றொரு கோணத்தில், பணக்கார நாடுகளிலிருந்து ஏழைநாடுகளுக்கு ஒரு வழி வருமான மாற்றல்களைச் (Unilateral income transfers) செய்யத் தூண்டுகிற ஆழமான சில சக்திகள் இருக்கக்கூடும். அத்தகைய மாற்றல்கள், உலக வருமானத்தை, தற்போது உள்ள நிலையிலேயே வைத்திருக்கும்வரை, முடியுமானால் அதனை மேலும் உயர்த்தும்வரை, அவை விரும்பத் தக்கனவே என்பதில் ஐயம் இல்லை. அதுமட்டுமன்று. அத்தகைய மாற்றல்களின் அளவு மிகப் பெரியதாக இருக்குமோ என்கிற ஐயமும் நமக்குத் தேவையில்லை. எடுத்துக்காட்டாக, ஐக்கிய அமெரிக்காவின் நாட்டு வருமானத்தில் 2 சதவீதத் தொகையானது, சோவியத் வட்டத்திற்கு (Soviet orbit) வெளியே உள்ள குறைந்த வருமான நாடுகள் அனைத்தின் மொத்த நாட்டு வருமானத்தில் 7 சதவீதத் தொகைக்கு ஈடாக இருக்கும் என்பது மட்டுமன்று; இந்த நாடுகள் தற்போது முதலீட்டுச் செயல்களுக்காகப் பிற நாடுகளிலிருந்து ஏற்றுக்கொள்ளக் கூடிய தொகைக்கு ஈடாகவும் இருக்கும்; அல்லது அதைவிடக் கூடுதலாகவும் இருக்கும்.

ஐக்கிய அமெரிக்காவின் அயல்நாட்டு உதவித் திட்டங்கள், மரபார்ந்த முறைகளிலிருந்து மாறியிருக்கின்றன என்பது மறுக்கவொண்ணாத உண்மை. பன்னாட்டு வருமான மாற்றல்கள் என்னும் முறையின் தொடக்கநிலையை இம் மாறுதலில் நாம் காண்கிறோம் என்று கூறலாம். இத்தகைய முறையின் இன்றியமையாமையை வற்புறுத்தும் சக்திகள், குறைந்த வருமான நாடுகளில் மட்டுமல்லாமல் வளர்ச்சியடைந்த நாடுகளிலும் அமைந்துள்ளன. பல்வேறு நாடுகளிடையே அண்மைக் காலத்தில்

நெருக்கமான செய்தித் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. அதன் ஒரு பகுதி, உலகப் போரின் விளைவாக உருவாகியிருப்பதாகும். இத்தகைய நெருக்கத்தின் பயனாக, பல்வேறு நாடுகளின் வாழ்கைத் தரங்களில் உள்ள வேறுபாடுகளைப்பற்றி ஐக்கிய அமெரிக்க மக்கள் முன்னிலும் மிகுதியாக உணரத் தொடங்கியிருக்கிறார்கள். பொருளியலில் பின்தங்கியவர்களையும், அரசியல் - சமய இயல் ஆகியவற்றில் ஒதுக்கப்பட்டவர்களையும் நெடுங்காலமாகவே அரவணைத்து ஆதரிக்கும் மரபை உடைய ஐக்கிய அமெரிக்க மக்களை, நான்கு பிரிவுத் திட்டத்தின் (Point Four Programme) மனித அபிமானப் பகுதிகள் பெரும் அளவுக்குக் கவர்வதில் வியப்பு எதுவும் இல்லை. இத்தகைய சிக்கல்களைப்பற்றிய ஐக்கிய அமெரிக்க அறிக்கைகளிலும் அரசினர் வெளியீடுகளிலும், உலகத்தின் மூன்றில் இரு பகுதிகளில் காணப்படுகிற பசி, பிணி, வறுமை, எழுத்தறிவின்மை ஆகியவைபற்றி அடிக்கடிச் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. அந்த அறிக்கைகளிலும் வெளியீடுகளிலும் இச் செய்திகள் யாவும் உணர்ச்சிவயப்பட்ட சொற்களின் வாயிலாகத் தரப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்க உண்மையாகும். 1950 நவம்பரில் வெளியிடப்பட்ட கிரே அறிக்கை (Gray Report),[19] 1951 மார்ச்சில் வெளியிடப்பட்ட ராக்ஃபெல்லர் அறிக்கை (Rockefeller Report)[20] ஆகிய இரண்டுமே, உலகத்தின் குறைந்த வருமான நாடுகளுக்கு, ஐக்கிய அமெரிக்காவிலிருந்து குறிப்பிடத் தக்க அளவில் அரசாங்க மானியங்கள் தரப்படவேண்டும் என்பதைத் தெளிவாக எடுத்துக் கூறிப் பரிந்துரை செய்துள்ளன.

ஆனால், பிற நாடுகளைப் போலவே, ஐக்கிய அமெரிக்க நாட்டிலும், பொருளியல் தனிமையை ஏற்றுப் போற்றுபவர்கள் இருக்கிறார்கள். உண்மையிலேயே அந்த வழியானது, பல்வேறு நாடுகளின் வருமான அளவுகளில், பெரிய வேறுபாடுகள் அமைந்துள்ள இன்றைய உலகில், எண்ணிப் பார்த்தற்கு உரிய ஒரு மாற்றுத் திட்டமாக இருக்கிறது என்பதை நாம் முன்னரே சுட்டிக் காட்டியுள்ளோம்.

குறிப்பிட்ட ஒரு நாட்டின் பணக்காரப் பகுதிகளிலிருந்து ஏழைப் பகுதிகளுக்கு வருமான மாற்றல்களைத் தானாகவே செய்யக்கூடிய ஓர் அமைப்பு முறை இருக்கிறது. மக்களின் நல்வாழ்வு, பொதுப் பணிகள் ஆகியவற்றிற்காக அரசாங்கம் செலவிடும் தொகையின் தலா அளவானது நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் ஒரே நிலையில் இருக்கிறது என்றும், ஆனால் ஒவ்வொருவர் மீதும் விதிக்கப்படும் வரி அவருடைய வீதாசாரமாக இருக்கிறது (Proportional to income) என்றும் வைத்துக்கொள்வோம். வரி விதிப்பானது வளர் வீத முறையைச் சேர்ந்ததாக இருந்தால்

(Progressive taxation) நாம் குறிப்பிட விரும்பும் கருத்து மேலும் தெளிவாக இருக்கும். ஆனால் நம்முடைய தற்போதைய கருத்தாய்வுக்கு, தலா வரிவிதிப்பானது (Taxation per head) தலா வருமானத்தின் (Income per head) வீதாசாரமாக இருந்தாற் போதும். அப்படி இருப்பதன் விளைவாக, அரசாங்க நிதிகள், பணக்காரப் பகுதிகளிலிருந்து ஏழைப் பகுதிகளுக்குத் தாமாகவே மாற்றலாகி விடுகின்றன. இந்த உண்மையை நடைமுறையில் சோதித்துப் பார்ப்பது கடினமான செயல்தான் என்ற போதிலும், கூட்டாட்சி அமைப்பைப் பெற்றுள்ள நாடுகளில் இந்த உண்மை அடிக்கடி நடைமுறையில் காணப்படுகிறது. ஐக்கிய அமெரிக்காவில் கூட்டாட்சிக் கருவூலத்தின் வாயிலாக (Federal Treasury), நிதிகள், அந் நாட்டின் வடக்கு மற்றும் கிழக்குப் பகுதிகளிலிருந்து தெற்கு மற்றும் மேற்குப் பகுதிகளுக்கு மாற்றப்படுகிற போக்கு, தொடர்ந்து இருப்பதைக் காண்கிறோம். பிரேசில் நாட்டில் (Brazil) அத்தகைய மாற்றல்கள், ஓரளவு செல்வச் செழிப்பு மிகுந்த தெற்கு மாநிலங்களிலிருந்து வளர்ச்சியடையாத - வெப்பம் நிறைந்த - வடக்கு மாநிலங்களுக்கு, குறிப்பிடத்தக்க அளவில் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. நிதித் துறையின் வாயிலாகப் பல்வேறு பகுதிகளுக்கிடையே வருமான மாற்றல்கள் நடைபெறும் நிலையில் உள்ள மற்றொரு கூட்டாட்சி நாடு, கனடா ஆகும்.

இந்த நிதித்துறை அமைப்பு முறையை நான் இங்கு எடுத்துக் காட்டுவதற்குக் காரணம், பல நாடுகளுக்கு இடையே நடைபெறுவதைப்போல ஒரே நாட்டின் பல பகுதிகளுக்கு இடையேயும் வருமான மாற்றல்கள் நடைபெறுகின்றன என்கிற ஒப்புமையைச் சுட்டிக்காட்டுவது மட்டுமல்ல ; ஒரு நாட்டின் ஏழைப் பகுதிகளின் பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான நிதிகளைப் பெறுவதற்குரிய குறிப்பிடத் தக்க வழியாக அது திகழ்கிறது என்பது தான் ஆகும். ஆனால் இந்த வழி கையாளப்பட வேண்டுமானால், வரி விதிப்பானது, நாட்டு மக்களில் ஒவ்வொருவர்மீதும் ஒரே அளவில் விதிக்கப்படுவதாக இல்லாமல், அவரவர்களுடைய வருமானத்திற்கு ஏற்ப மாறுகிற அளவுடையதாக இருக்கவேண்டும்.[21] ஒவ்வொருவர்மீதும் விதிக்கப்படுகிற வரியானது ஒரே அளவுடையதாக இருப்பதால்மட்டும் அல்லது ஒவ்வொருவரின் வருமானத்தின்மீதும் குறிப்பிட்ட ஒரே அளவு வீதாசாரத்தில் வரி விதிக்கப்படுவதால்மட்டும், செலுத்தும் திறன்பற்றிய அல்லது ஒத்த நிலைத் தன்மறுப்புப்பற்றிய கோட்பாடு (The principle of ability to pay or equal sacrifice) நிறைவேற்றப்பட்டதாகக் கருதமுடியாது. அக் கோட்பாடு நிறைவேற்றப்பட

வேண்டுமானுல் வளர்வீத வரிமுறை இருந்தாகவேண்டும் என்பது, பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு பழைய கருத்தாக இப்போது ஆகிவிட்டது. வரி விதிப்பின் விளைவாக நாட்டின் பணக்காரப் பகுதிகளிலிருந்து ஏழைப் பகுதிகளுக்கு வருமான மாற்றல்கள் ஏற்படுவதை அந்த இரு பகுதிகளில் உள்ள மக்களும் ஏற்றுக்கொள்கிருர்கள். அத்தகைய மாற்றங்கள், செலுத்தும் திறன்பற்றிய கோட்பாட்டின் ஓர் இயற்கையான விளைவு என்கிற முறையிலும், இந்தக் கோட்பாட்டைத் தன்னகத்தே பெற்றுள்ள நிதி அமைப்பின் ஒரு பகுதி என்கிற வகையிலும், ஏற்றுக்கொள்ளப் படுகின்றன. பண்பாட்டுத் துறையிலும் அரசியல் துறையிலும் ஒரு நாட்டிலுள்ள பல்வேறு மக்களுக்கு இடையே நெருங்கிய தொடர்பு இருக்கின்ற காரணத்தாலும், அவர்கள் அனைவருடைய நலன்களும் பொதுவானவை என்கிற உணர்வு அவர்களுக்கு இருக்கின்ற காரணத்தாலும், முதலீட்டுக்காகவும் மக்கள்நல மேம்பாட்டுக்காகவும் அரசாங்கம் செய்யும் செலவின் சுமையானது நாட்டின் பல பகுதிகளாலும் நேர்மையான முறையில் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும் என்பதை அவர்கள் பெரும்பாலும் ஒப்புக்கொள்கிற காரணத்தாலும் அம் மாற்றல்கள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

பல நாடுகளுக்கு இடையே நடைபெறுகிற ஒரு வழி வருமான மாற்றல்கள் (Unilateral income transfers), ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு இடையே தாஞகவே நடைபெறுகிற வருமான மாற்றல்களையும், உலக நாடுகள் அத்தனையும் உலக அரசாங்கம் ஒன்றின்கீழ் இருந்திருந்தால் அவற்றிற்கு இடையே ஏற்பட்டிருக்கக்கூடிய வருமான மாற்றல்களையும், முழு அளவுக்கு இல்லாவிட்டாலும் ஓரளவுக்கு ஒத்திருக்கின்றன என்று சொல்லலாம் அல்லவா? ஒரு நாட்டின் பல பகுதிகளுக்கு இடையே வருமான மாற்றல்களை ஏற்படுத்துகிற நிதி அமைப்போடு கூடியிருக்கிற செலுத்தும் திறன்பற்றிய கோட்பாடானது (The principle of ability to pay), பல்வேறு நாடுகளுக்கு இடையேயும் கையாளப்படுவதற்காகக் காத்துக்கொண்டிருக்கிறது என்று கருதலாம் அல்லவா? ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு இடையே, விகிதாசார முறையின் (Proportional taxation) அல்லது வளர்வீத வரிமுறையின் (Progressive taxation) வாயிலாக வருமான மாற்றல்களைச் செய்யும்படித் தூண்டுகிற சக்திகள், ஓரளவுக்கு, பல்வேறு நாடுகளுக்கு இடையேயும் காணப்படுகின்றன. தங்கள் வாழ்க்கைத் தரங்களில் மிகுந்த வேறுபாடுகளை உடையவர்களாக வாழ்கிற பலதிற மக்கள், ஒரே காலத்திலும், ஒரு சாராரோடு மற்ருெரு சாரார் நெருங்கிய தொடர்பு உடையவர்

களாகவும் வாழ்கின்ற காரணத்தாலேயே அத்தகைய சக்திகள் உருவாகியுள்ளன.

கடந்த காலத்தில், பன்னாட்டு ஒருவழி வருமான மாற்றல்கள் ஓரளவுக்கு அயல்நாட்டு முதலீடு என்னும் வடிவத்தில் நடைபெற்றிருக்கக்கூடும். கடந்த காலத்தில் செய்யப்பட்ட அயல்நாட்டு முதலீட்டில் ஒரு பகுதி, அந்த முதலீட்டைப் பெற்ற நாடுகளால் திரும்பித் தரப்படாத காரணத்தால், தாறுமாறான முறையில் வழங்கப்பட்ட கொடையாக (Haphazardly distributed gift) அமைந்துவிட்டது என்பது சிலருடைய கருத்து.[22] திருப்பித் தரத் தவறுதலின் விளைவாகப் பன்னாட்டு வருமான மாற்றலின் ஓட்டம் தடைப்படுகிற காரணத்தால், அத் தவறுகையானது வெறுப்பூட்டத்தக்க ஒரு தீர்வாகவே அமைகிறது. ஆகவே, தவறுகை என்பது (Default), அறிவீனமான ஒருமுறை மட்டுமன்று; பண்பற்ற ஒரு முறையும் ஆகும்.

பொருளியலில் முன்னேறிய நாடுகள், குடியேற்ற நாடுகள் (Colonies) என்னும் முறையில் அமைந்த பொருளியலில் பின்தங்கிய நாடுகளோடு தொடர்புகொள்ளும்போது, பணக்கார நாடுகளிலிருந்து ஏழை நாடுகளுக்கு வருமான மாற்றல்களைச் செய்யத் தூண்டுகிற அடிப்படைச் சக்திகள் தோன்றுவதைக் காண்கிறோம். குடியேற்ற நாடுகளால் (அவற்றை ஆளும் நாடுகளுக்கு) ஆதாயம் இருக்கிறதா என்னும் கேள்வி, கடந்த இருபது அல்லது முப்பது ஆண்டுகளாக, மேற்கு ஐரோப்பிய நாடுகளில் அடிக்கடிக் கேட்கப்பட்டு வருகிறது. பொருளியல் வல்லுநர்கள் பெரும்பாலும் 'இல்லை' என்கிற முடிவையே இக் கேள்விக்கு உரிய விடையாகத் தந்துள்ளார்கள். மொத்தமாகப் பார்க்கும் போது, குடியேற்ற நாடுகளின் அண்மைக் கால வரலாறு, இந்த முடிவை ஆதரிப்பதாக அமைந்துள்ளது என்றே கூறலாம். எடுத்துக்காட்டாக, வட ஆப்பிரிக்காவில் இந்தச் சிக்கலைப்பற்றி ஆராய்ச்சி நடத்தியுள்ள அமெரிக்கப் பொருளியல் வரலாற்று ஆசிரியராகிய எம். எம். நைட் (M. M. Knight) என்பார், அல்ஜீரியாவில் அந்த நாட்டு அரசாங்கத்தின் வரவு செலவுத்திட்டப் பற்றுக்குறைகள் நேரடியாகப் பிரெஞ்சுநாட்டுக் கருவூலத்தாலேயே நிறைசெய்யப்பட்டிருக்கின்றன என்றும், "அல்ஜீரியாவின் இருப்புப் பாதைகள், சாலைகள், துறைமுகங்கள் ஆகியவற்றின் அமைப்பு, பிரெஞ்சுநாட்டு வரி செலுத்துவோரால் அல்ஜீரியாவுக்குத் தரப்பட்ட ஒரு நேரடி நன்கொடையாகவே அமைந்திருக்கிறது" என்றும் தெரிவித்துள்ளார்.[23] ஆளும் நாடானது அதனால் ஆளப்படுகிற குடியேற்ற நாடுகளின் செலவை ஏற்றுக்கொள்ளும் போக்கானது, போர்ச்சுகலைப் பொறுத்த

அளவில்கூட, 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் ஏற்பட்டிருக்கிறது.[24] முந்திய நூற்றுண்டுகளில், குடியேற்ற நாடுகள், அவற்றை ஆண்ட நாடுகளால் சுரண்டப்பட்டிருக்கின்றன என்பதில் ஐயம் இல்லை என்றபோதிலும், அண்மை ஆண்டுகளில், குடியேற்ற நாடுகளிலிருந்து அவற்றை ஆளும் நாடுகளுக்கு ஆதாயம் எதுவும் கிடைக்கவில்லை. ஆனுல் அப்படிக் கிடைக்க வேண்டும் என்கிற அவசியமும் இல்லை. தலைமை நாடுகளின் நடப்பு வருமானத்தில் ஒரு பகுதி அவற்றில் சார்பு நாடுகளுக்குத் திருப்பிவிடப்படுவதானது, நாகரிகமுள்ள எந்த ஒரு நாட்டிலும் அதன் பல்வேறு பகுதிகளுக்கு இடையே கையாளப்படுகிற - நெடுங்காலமாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள - கோட்பாடுகள், பன்னுட்டு அளவிலும் கையாளப்படுகின்றன என்பதையே எடுத்துக்காட்டுகிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் கருவூலத்திலிருந்து பியூர்டோ ரிகோ (Puerto Rico) மானியங்களைப் பெற்று வருகிற நிலைமையானது, மேலே கூறப்பட்ட பன்னுட்டு உறவு முறை எவ்வாறு தொடர்ச்சியான முறையிலும் ஒழுங்கான வகையிலும் அமைந்திருக்கிறது என்பதற்கான ஓர் எடுத்துக்காட்டு ஆகும்.

பொதுவாக, பல்வேறு நாடுகளுக்கு இடையே மேலும் மேலும் வளர்ந்துவருகிற நெருக்கமான உறவு ஏற்பட்டு, தங்களுக்கிடையே பொதுவான நலன்கள் பல இருப்பதை அவை உணரத் தொடங்கியதும், ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு இடையே ஏற்படுவதைப் போலவே, அப் பல்வேறு நாடுகளுக்கு இடையேயும், தங்கள் பொருளியல் மூலவளங்களை ஒன்றுதிரட்டி அவற்றைத் தங்களுக்கிடையே மறுபங்கீடு செய்துகொள்ளுகிற சிக்கல் ஏற்படுகிறது.[25] நாம் யாவரும் ஓர் உலக அரசாங்கத்தால் ஆளப்படுகிற நிலையில் இருந்திருந்தால், உலகத்தின் பணக்காரப் பகுதிகளின் வருமானத்தில் ஒரு பகுதி, நிதி அமைப்பு முறையின் வாயிலாக, உலகத்தின் ஏழைப் பகுதிகளுக்குத் தானுகவே மாற்றலாகிற நிலைமை இயல்பாக ஏற்பட்டிருக்கும். ஆனுல் உலக அரசாங்கம் எதுவும் இப்போது இல்லை. இப்போது உள்ள நிலையில், தானுக இயங்கும் அங்காடி அமைப்பின் (Automatic market mechanism) வாயிலாகத் தனியாரின் மூலதன இயக்கங்கள் நடைபெறுவது என்கிற முறையிலிருந்து நாம் விலகிச் சென்றுல், அல்லது இந்த முறையானது பணியாற்றத் தவறிவிட்டால், பல நாடுகளுக்கு இடையே நடைபெறக்கூடிய நிதிகளின் ஓட்டத்தை ஒழுங்குபடுத்தக்கூடிய - அரசியல் சார்பற்ற - நடுநிலையான அமைப்பு முறைகள் வேறு எவையும் இல்லை. பன்னுட்டு மானியங்கள் (International grants) அளிக்கப்படுவதற்கான

முறை ஒன்றை வகுக்கும் சிக்கலானது, ஓர் அரசியல் சிக்கலே யாகும். இத்தகைய நிலையில், அரசியல் கண்ணோட்டத்தை அச் சிக்கலிலிருந்து அப்புறப்படுத்துவது இயலாத செயலே. பன்னாட்டு மானிய உதவித் திட்டமானது, அங்காடியின் பொருளியல் அமைப்பிலிருந்து தோன்றுவது அன்று. அவ்வாறே, வளர்வீத வரிமுறையும், அதிலிருந்து பிறப்பது அன்று. இரண்டும், அர சியல் மதிப்புத் தீர்ப்புகளின் (Political value judgments) அடிப் படையில் எழுவனவே.

பன்னாட்டு அரசாங்கங்கள் ஒன்றிற்கு ஒன்று தருகின்ற மானி யங்கள், பன்னாட்டு அரசியற் பொருளியலைச் (International political economy) சேர்ந்த ஒரு பொருளாக இருப்பது, தடுக்க முடியாத ஒரு நிலைமையாகும். வேண்டுமென்றே கையாளப் படுகிற அயல்நாட்டுக் கொள்கையின் கருவிகளாக அவை இல்லா விட்டாலும், ஒரு நாட்டிற்கும் பிற நாடுகளுக்கும் இடையே உள்ள மொத்த உறவுகளின் அடிப்படையிலேயே அவை உரு வாக்கப்படுகின்றன. நாம் நடைமுறையாளர்களாக (Realists) இருந்தால், பன்னாட்டு வருமான மாற்றங்கள், தூய, தானே இயங்குகிற, அரசியலைச் சாராத ஓர் அமைப்பின் வாயிலாகத் தான் நடைபெற வேண்டும் என்று எதிர்பார்க்கமுடியாது. பன்னாட்டு வருமான மாற்றங்கள் எவையேனும் நிகழுமானால், அவை ஓரளவுக்காவது, அவ்வப்போது மாறக்கூடிய இயல் புடைய அரசியல் காரணங்களின் அடிப்படையில் அமைந்திருக்கும் என்பது, தவிர்க்க முடியாதது ஆகும். 1929க்கு முந்திய ஆண்டு களில் நடைபெற்ற தனியாரின் மூலதன இயக்கங்களைவிடப் பல அரசாங்கங்களுக்கு இடையே நடைபெறக்கூடிய மூலதன மாற் றல்கள், மிகுதியான நிலைத்த தன்மையும் நம்பக்கூடிய இயல்பும் உடையனவாக இருக்கும் என்று சில பொருளியற் புலவர்கள் கொண்டுள்ள கருத்துகளுக்குச் சிறிதளவும் அடிப்படை இல்லை என்பது என் கருத்து.

பன்னாட்டுக் கொடைகள் (Gifts), மானியங்கள் (Grants) ஆகியவற்றில் அடங்கியுள்ள இடர்ப்பாடு மிகுந்த - ஆனால் தவிர்க்க முடியாத - அரசியல் தன்மைகள் ஒரு புறம் இருக்கட்டும். அத்தகைய வருமான மாற்றங்கள், வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கலுக்கு, போதுமான மனநிறைவு அளிக்கத்தக்க ஒரு தீர்வாக அமைந்துள்ளனவா? குறைந்த வருமான நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் உள்ள இடைவெளிகளை அவை நிரப்புகின்றன என்று வைத்துக்கொண்டாலும், காட்சி விளைவின் பயனாக இந் நாடுகளின் உள்நாட்டுச் சேமிப்பு ஆற்றலுக்கு ஏற் படுகிற தடைகளை அவற்றால் அகற்ற முடியுமா? பொதுவான

அடிப்படையில் பார்க்கும்போது அந்த வருமான மாற்றல்கள் விரும்பத்தக்கனவாக இருக்கக்கூடும். அவை, ஓரளவுக்கு, பன்னாட்டு வாழ்க்கைத் தரங்களின் வேறுபாடுகளால் ஏற்பட்ட நெருக்கடியின் விளைவாக உருவானவை என்பதும், அந்த வேறுபாடுகளைக் குறைப்பதற்கு அவை பயன்படுகின்றன என்பதும் உண்மையே. ஆனால் அவை மூலதன வளர்ச்சிக்கான தேவைகளை நிறைவேற்றுகின்றனவா? இஃது அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்பட இருக்கிற கேள்விகளில் ஒன்றாகும்.

## மூன்றாவது அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. எடுத்துக்காட்டாக, ரால் பிரெபிஷ் (Raul Prebisch) என்பாரின் "The Economic Development of Latin America and its Principal Problems" என்னும் நூலின் 5ஆம் பாகத்தையும் (இந் நூல், ஐக்கிய நாடுகள் மன்றத்தால் 1950ல் வெளியிடப்பட்டது), டொனல்ட் பி. மார்ஷ் (Donald B. Marsh) என்பாரின் "World Trade and Investment" (நியூ யார்க், 1951) என்னும் நூலின் 75ஆம் பக்கத்தையும் காண்க.

2. "Income, Saving and the Theory of Consumer Behavior" என்னும் நூலைக் (கேம்ப்ரிட்ஜ், 1949) காண்க.

3. மேற்படி நூல், பக்கம் 27.

4. மேற்படி நூல், பக்கம் 39.

5. மேற்படி நூல், பக்கங்கள் 26, 80.

6. தலையாய காரணியாகக் கருதப்படுவதை - அதாவது, தராதர வருமான அளவில் ஏற்படும் குறைவை அடிப்படையாகக் கொண்டதாக இந்த விளக்கம் அமைந்துள்ளது. ஆனால் இந்த விளைவை ஏற்படுத்துவதில் வேறு காரணிகளுக்கும் பங்கிருக்கக்கூடும் என்பது, மறுக்க முடியாத ஓர் உண்மை. எடுத்துக்காட்டாக, 1917-19ல் இருந்ததைவிட 1941ல் சேமிப்பு நாட்டம் குறைவாக இருந்ததற்குச் சமுதாயப் பாதுகாப்புத் திட்டமும் (Social security system) ஒரு காரணமாகும். 1917-19ல் சேமிப்பு வீதம் மிகக் கூடுதலாக இருந்ததற்குக் காரணம் போர்க் காலத் தடைகளே என்று சிலர் கருதக்கூடும். ஆனால் இந்தக் காரணம் முதன்மையான ஒன்றாக இருந்ததாகத் தெரியவில்லை. குடும்ப வரவுசெலவுத் திட்டப் புள்ளிவிவரங்களின் வாயிலாக, 1917 முதல் 1941வரை உள்ள காலத்தைவிட நீண்டகால அளவில், அதாவது 1901 முதல் 1941வரை உள்ள கால அளவில், ஒப்பீட்டைச் செய்ய முடிகிறது. அத்தகைய ஒப்பீட்டின் பயனாக, எடுத்துக்காட்டாக, 1941ல் இருந்த விலைகளின் அடிப்படையில் ஆண்டுக்கு 2000 டாலர் வருமானத்தை உடைய ஒரு சராசரிக் குடும்பம், 1901ல் தன் வருமானத்தில் 18 சத வீதத்தைச் சேமித்திருக்கிறது; ஆனால் 1941ல் 3 சத வீதத்தைமட்டுமே சேமித்துள்ளது. [டியூசன்பெரியின்

(Duesenberry) நூலின் 80ஆம் பக்கத்தில் தரப்பட்டுள்ள படத்தைக் காண்க.]

7. "International Affairs" என்னும் பத்திரிகையின் 1944 ஏப்ரல் இதழின் 158ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள பி. என். ரொசன்ஸ்டீன் - ரொடான் (P. N. Rosenstein - Rodan) என்பாரின் "The International Development of Economically Backward Areas" என்னும் கட்டுரையைக் காண்க (பக்கம் 158). கோலின் கிளார்க் (Colin Clark) என்பாரின் "Conditions of Economic Progress" என்னும் நூலில், இந்தப் பொது விதிக்கு ஆதரவான சில சான்றுகள் உள்ளன.

8. முன்னர்க் குறிப்பிடப்பட்ட "The Economic Development of Latin America and its Principal Problems" என்னும் நூலின் 5, 6, 37 ஆகிய பக்கங்களைக் காண்க.

9. டாலர் பற்றுக்குறைச் சிக்கலைப் (Dollar shortage problem) பொறுத்தவரை இந்தக் கோட்பாடானது அண்மைக் காலத்தில் எவ்வாறு கையாளப்பட்டிருக்கிறது என்பதை அறிய வேண்டின், எடுத்துக்காட்டாக, சேமூர் இ. ஹாரிஸ் (Seymour E. Harris) என்பாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு நியூ யார்க்கிலிருந்து 1948ல் வெளியிடப்பட்ட "Foreign Economic Policy for the United States)" என்னும் நூலில், காட்ஃப்ரீட் ஹெபர்லர் (Gottfried Haberler) என்பாரால் எழுதப்பட்டுள்ள கட்டுரையையும், அயல்நாட்டு உறவுகள்பற்றிய மன்றத்தால் (The Council on Foreign Relations) நியூ யார்க்கிலிருந்து 1950ல் வெளியிடப்பட்ட ஹாவேர்ட் எஸ். எல்லிஸ் (Howard S. Ellis) என்பாரின் "Economics of Freedom" என்னும் நூலையும் (பக்கங்கள் 69 - 71) காண்க.

10. 1945ல் பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தால் (Princeton University) வெளியிடப்பட்ட "Essays in International Finance" என்னும் நூலில் என்னால் எழுதப்பட்டுள்ள "Conditions of International Monetary Equilibrium" என்னும் கட்டுரையைக் காண்க (முன்னர்க் குறிப்பிட்ட "Readings in the Theory of International Trade" என்னும் நூலில் இக் கட்டுரை இணைக்கப்பட்டுள்ளது). பன்னாட்டுக் கழகத்தால் (League of Nations) 1944ல் வெளியிடப்பட்ட "International Currency Experience" என்னும் நூலிலும் பல இடங்களில் இக் கருத்து விளக்கப்பட்டிருக்கிறது.

11. முன்னர்க் குறிப்பிடப்பட்ட "Foreign Economic Policy for the United States" என்னும் நூலின் 408ஆம் பக்கத்தில் உள்ள பால் ஏ. சாமுவேல்சன் (Paul A. Samuelson) என்பாரின் "Disparity in Postwar Exchange Rates" என்னும் கட்டுரையைக் காண்க.

12. இந்த முறையில்தான், சார்லஸ் பி. கிண்டில்பெர்கர் (Charles P. Kindleberger) என்பார், "The Dollar Shortage" என்னும்

தம்முடைய நூலில் (நியூ யார்க், 1950) தொன்மைப் பொருளியலின் தீர்வை விவரித்துள்ளார். உண்மையில், தொன்மைப் பொருளியற் கருத்தை ஏற்றுக்கொள்வோரிற் பெரும்பாலோர், நடைமுறையில் ஏற்படும் பல்வேறு இடர்ப்பாடுகளுக்கும் சிக்கலான நிலைமைகளுக்கும் ஏற்ப அக்கருத்தில் மாறுதல்களைச் செய்ய ஆயத்தமாக இருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக, ஹெபர்லர் (Haberler) பின்வருமாறு எழுதியுள்ளார்: "இந்தச் சிக்கலை ஒரு சிறிய வாய்பாடாக (Formula) நாம் அமைத்துவிட்ட காரணத்தால், இந்தச் சிக்கல் எளியது என்றோ, எளிதில் தீர்க்கப்படக்கூடியது என்றோ கருதுவது, பெரியதொரு தவறாகும்." (முன்னர்க் குறிப்பிட்ட நூல், பக்கம் 444).

13. அமெரிக்க ஏற்றுமதிகள், உலகத்தின் பிற பகுதிகளில் தேவையின் வருமான நெகிழ்ச்சி (Income elasticity of demand) உயர்ந்த அளவில் இருப்பதைச் சந்திக்க வேண்டியிருக்கிறது என்றும், அந் நாடுகளின் வருமானத்தில் உயர்வு ஏற்படும் போது, அமெரிக்கப் பண்டங்களுக்கான அவற்றின் தேவை, வருமான உயர்வின் விகிதத்தைவிட மிகுதியான அளவில் ஏற்பட்டுவிடுவது, மேற் குறிப்பிட்ட நெகிழ்ச்சி நிலையின் விளைவு என்றும் கிண்டில்பெர்கர் தெரிவித்துள்ள கருத்துக்கும் (முன்னர்க் குறிப்பிடப்பட்ட நூல், பக்கம் 14), நாம் குறிப்பிடும் இக் கருத்துக்கும் தொடர்பு இல்லை. இங்கு நம்மால் விவரிக்கப்பட்டுள்ள கோட்பாட்டின்படி, அமெரிக்க ஏற்றுமதிகளுக்கான தேவை ஏழை நாடுகளில் பெருகுவதற்குக் காரணம், அந் நாடுகளின் வருமான அளவில் ஏற்படுகிற உயர்வு அன்று; அந் நாடுகளின் மெய் வருமான அளவுக்கும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் மெய் வருமான அளவுக்கும் இடையே உள்ள வேறுபாட்டின் அளவு பெருகுவதே ஆகும் (அல்லது, அந்த வேறுபாடு இருப்பதுபற்றிய உணர்வு பெருகுவதே ஆகும்). கிண்டில்பெர்கருடைய நூலில் பல கருத்தலைகள் காணப்படுகின்றன; ஆனால் இந்தக் கோட்பாட்டைப்பற்றிய தெளிவான பகுத்தாய்வு எதுவும் அதில் இல்லை. ஆனால், இந் நூலுக்கு முன்னர் அவரால் எழுதப்பட்ட "International Monetary Stabilisation" என்னும் கட்டுரையின் இறுதிப் பகுதியில் (சேமூர் இ. ஹாரிஸ் என்பாரைப் பதிப்பாசிரியராகக்கொண்டு, நியூ யார்க்கிலிருந்து 1943ல் வெளியிடப்பட்ட "Postwar Economic Problems" என்னும் நூலில் இக் கட்டுரை இணைக்கப்பட்டுள்ளது.) இக் கோட்பாட்டை ஏறத்தாழ ஒத்துள்ள ஒரு கருத்து, தரப்பட்டிருக்கிறது. தாமஸ் பலோ (Thomas Balogh) என்பார், அவரால் இயற்றப்பட்டு, ஆக்ஸ்போர்டிலிருந்து 1949ல் வெளியாகியுள்ள "The Dollar Crisis" என்னும் நூலில், சிற்சில இடங்களில், ஐக்கிய அமெரிக்காவின் வாழ்க்கைத் தரம், உற்பத்தி அளவு, ஆகியவற்றிற்கும், பிற நாடுகளின் வாழ்க்கைத் தரம், உற்பத்தி அளவு ஆகியவற்றிற்கும் இடையே உள்ள - நாளுக்கு நாள் விரிவடைகிற வேறுபாட்டால், டாலர் சிக்கல் உண்டாகிறது என்னும் கருத்தைத் தெரிவித்துள்ளார் (எடுத்துக்

காட்டாக, அந் நூலின் 149ஆம் பக்கத்தைக் காண்க). 'காட்சி விளைவைப்'ப்பற்றிய கருத்து அவருடைய உள்ளத்தில் இருந்திருக்கக்கூடும். ஆனால் அவ் விளைவைப்பற்றிய தெளிவான விளக்கம் எதுவும் அந் நூலில் இல்லை.

14. இந் நூலின் ஆறுவது அத்தியாயத்தின் அடிக்குறிப்பு எண் 3ல் மேற்கோளாகத் தரப்பட்டுள்ள கருத்துரையைக் காண்க.

15. 'International Trade' (லண்டன், 1934) பக்கம் 86ஐக் காண்க.

16. மில்பாங்க் நினைவு நிதியால் (Milbank Memorial Fund) நியூ யார்க்கில் 1950ல் வெளியிடப்பட்ட "Modernization Programs in Relation to Human Resources and Population Problems" என்னும் நூலில் உள்ள இ. பி. ரியூபென்ஸ் (E. P. Reubens) என்பாரின் "Foreign Capital in Economic Development: a Case Study of Japan" என்னும் கட்டுரையின் 118ஆம் பக்கம் காண்க.

17. எடுத்துக்காட்டாக, பன்னாட்டுத் தொழிலாளர் அலுவலகத்தால் (International Labour Office) 1945ல் வெளியிடப்பட்ட இ. ஸ்டாலி (E. Staley) என்பாரின் "World Economic Development" என்னும் நூலைக் காண்க (பக்கம் 72).

18. எடுத்துக்காட்டாக, ஹாவார்ட் எஸ். எல்லிஸ் என்பாரின் "The Economics of Freedom" என்னும் நூலின் 18ஆம் பக்கம் காண்க.

19. ஐக்கிய அமெரிக்க அரசாங்க அச்சக அலுவலகத்தால் (U. S. Government Printing Office) 1950ல் வெளியிடப்பட்ட "Report of the President on Foreign Economic Policies" என்னும் அறிக்கையைக் காண்க.

20. மேற்படி அலுவலகத்தால் 1951ல் வெளியிடப்பட்ட "Partners in Progress" என்னும் பன்னாட்டு வளர்ச்சி அறிவுரைக் கழகத்தின் அறிக்கையைக் (Report of the International Development Advisory Board) காண்க.

21. இது, வருமான வரியை மட்டுமல்லாமல், அரசாங்க வரிகள் அனைத்தினுடைய கூட்டு விளைவைக் குறிப்பதாகும்.

22. Quarterly Journal of Economics என்னும் பத்திரிகையின் 1951 பிப்ரவரி இதழின் 61ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள ஏ. இ. கான் (A. E. Kahn) என்பாரின் "Investment Criteria in Development Programs" என்னும் கட்டுரையைக் காண்க. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரிட்டனால் செய்யப்பட்ட அயல்நாட்டு முதலீடுகளில் பல, திட்டமிடப்படாத நன்கொடைகளே என்னும் வெளிப்படையான குற்றச்சாட்டைப்பற்றி அறிய, "Economic Journal" என்னும் பத்திரிகையின் 1930ஆம் ஆண்டு இதழில் வெளியாகியுள்ள ஏ. எம். சாமுவேல் (A. M. Samuel) என்பாரின் "Has Foreign Investment Paid?" என்னும் கட்டுரையைக்

காண்க. முன்னர்க் குறிப்பிடப்பட்ட டி. பாலோ (T. Balogh) என்பாரின் நூலில் 166ஆம் பக்கத்தைக் காணலாம்.

23. எம். எம். நைட் (M. M. Knight) என்பாரின் "Morocco as a French Economic Venture" என்னும் நூலைக் (நியூயார்க், 1937) காண்க. பக்கம் 16.

24. பன்னாட்டுக் கழகத்தால் (League of Nations) 1946ல் வெளியிடப்பட்ட "The Course and Control of Inflation: A Review of Monetary Experience in Europe after World War I" என்னும் நூலைக் காண்க. பக்கம் 41.

25. Review of Economics and Statistics" என்னும் பத்திரிகையின் 1951 பிப்ரவரி இதழில் வெளியாகியுள்ள எச். மென்டர்ஷாசென் (H. Mendershausen) என்பாரின் "Foreign Aid with and without Dollar Shortage" என்னும் கட்டுரையைக் காண்க. பக்கங்கள் 41-42.

# 4. மூலதனத்திற்கான அயல்நாட்டு ஊற்றுக்கால்கள்

## (EXTERNAL SOURCES OF CAPITAL)

### நேர்முக வாணிப முதலீடுகள்

அமெரிக்க வாணிப நிறுவனங்களால் செய்யப்படுகிற நேர்முக அயல்நாட்டு முதலீடே, வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு மூலதனத்தை அளிப்பதில் தலைசிறந்த இடத்தைப் பெற வேண்டும் என்று, ஐக்கிய அமெரிக்காவின் நான்கு பிரிவுத் திட்டமானது (The Point Four Programme) தொடக்க காலத்தில் வற்புறுத்திக் கூறி வந்தது. இந்த வகையான முதலீட்டில் சில சிறப்பான நன்மைகள் இருக்கின்றன என்பது, மறுக்க முடியாத உண்மை. அத்தகைய முதலீடானது தனியாரின் ஆதாய நோக்கங்களுக்கும் (Private profit motives) வாணிபக் கணக்கீடுகளுக்கும் உட்பட்டிருப்பதால், உற்பத்திப் பெருக்கத்திற்கு உகந்த முறையில் அது பயன்படுத்தப்படும் என்று எதிர்பார்க்கலாம். தற்காலத் தொழில்நுணுக்க முறைகளையும் திறமைமிக்க நிர்வாக முறைகளையும் பரப்புவதில் அது பெருந் துணையாக விளங்கும். அம்முதலீட்டைப் பொறுத்தவரை, பன்னாட்டுக் கடன்களைப் பாதிக்கிற - தளர்த்தப்பட முடியாத - வட்டி நிபந்தனைகளோ, அசல் கடன் தீர்வு (Amortization) நிபந்தனைகளோ இல்லை.

நான்கு பிரிவுத் திட்டத்தின் தொடர்பாக முன்னரெல்லாம் தரப்பட்ட அறிக்கைகளில் நேர்முக வாணிப முதலீட்டிற்குக் கிட்டத்தட்ட முழுமுதல் இடம் தரப்பட்டிருந்தபோதிலும், அண்மைக் காலத்தில் வெளியிடப்பட்ட அறிக்கைகளில் [சிறப்பாக, கிரே அறிக்கையிலும் (Gray Report), ராக்ஃபெல்லர்

அறிக்கையிலும் (Rockefeller Report) அந்த அளவு முதன்மை அளிக்கப்படவில்லை. எடுத்துக்காட்டாக, கிரே அறிக்கையானது, அயல்நாடுகளில் செய்யப்படக்கூடிய அமெரிக்க நேர்முக மூதலீடானது எந்த அளவுடையதாக இருக்கக்கூடும் என்பதை அலசி ஆராய்ந்த பிறகு அதன் 63ஆம் பக்கத்தில் பின்வருமாறு தெரிவித்திருக்கிறது : ''(பின் தங்கிய நாடுகளின்) வளர்ச்சிக்குத் தேவையான நிதியை அளிக்கும் சிக்கலானது, தனியார் முதலீட்டால் மட்டும் தீர்க்கப்பட்டுவிடும் என்று எதிர்பார்க்க முடியாது என்பதை ஒளிவு மறைவின்றி ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்.'' பொருளியலில் பின் தங்கியுள்ள நாடுகளின் வளர்ச்சியை உருவாக்குவதில் நேர்முக வாணிப முதலீடு ஆற்றக்கூடிய பணியை நுணுக்கமான முறையில் ஆராய்ந்து பார்க்க எவரும், அத்தகைய பணியில் இருக்கக்கூடிய சில இடர்ப்பாடுகளை உணராமல் இருக்க முடியாது. அயல்நாட்டு முதலீட்டைக் கட்டுப்படுத்தக்கூடிய வகையில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் காணப்படுகிற சட்டங்களாலும் கட்டுப்பாடுகளாலும் ஏற்படுகிற இடர்ப்பாடுகளையும், அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடு, இரட்டை வரி விதிப்பு முறை (Double taxation), நாட்டு உடைமையாக்கக் கூடிய ஆபத்து (Risk of nationalisation) ஆகியவற்றால் ஏற்படுகிற இடர்ப்பாடுகளையும் நான் தற்போது ஆராயப்போவதில்லை. மிகத் தெளிவாகத் தெரிகிற - அடிப்படையான - பொருளியல் இடர்ப்பாடு ஒன்றின்மீது மட்டுமே நம்முடைய பார்வையைச் செலுத்த விழைகிறேன்.

1947, 48, 49 ஆகிய மூன்று ஆண்டுகளில் அயல்நாடுகளில் செய்யப்பட்டுள்ள அமெரிக்கத் தனியார் முதலீட்டைப்பற்றிக் கிரே அறிக்கையின் 61, 121 ஆகிய பக்கங்களில் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்களை ஆராய்ந்து பார்த்தால், முதலாவதாக அந்த முதலீட்டில் 92 சதவீதம் நேர்முக வாணிப முதலீடாக இருந்திருக்கிறது என்கிற உண்மையையும், இரண்டாவதாக, இந்த நேர்முக வாணிப முதலீட்டில் 78 சதவீதம் உள்ள தொகை, வளர்ச்சி குறைந்த நாடுகளுக்குச் சென்றிருக்கிறது என்கிற உண்மையையும் தெரிந்துகொள்ளலாம். இந்த இரண்டு உண்மைகளும் மிகவும் வரவேற்கத் தக்கவையே. ஆனால் மூன்றாவதாக, வளர்ச்சி குறைந்த நாடுகளில் செய்யப்பட்டுள்ள நேர்முக முதலீட்டில் 90 சதவீதத்திற்குமேல், பெட்ரோலிய உற்பத்தித் துறையிலேயே செய்யப்பட்டிருக்கிறது என்கிற உண்மையும் புலனாகிறது. அமெரிக்கத் தனியாரின் அயல்நாட்டு முதலீடு மிகக் குறைந்த அளவினதாக இருந்தது என்பதும், இப்போதும் அப்படித்தான் இருக்கிறது என்பதும் மிக முதன்மை

யான உண்மைகளாக இருக்கலாம். ஆனால் நான் இங்கே எடுத்துக் காட்ட விழைவது, அம் முதலீட்டின் அளவைப்பற்றி அன்று; அதன் இயல்பைப்பற்றியே ஆகும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் செய்யப்படுகிற அயல்நாட்டு முதலீட்டிற் பெரும்பகுதி, முன்னேறிய தொழில்துறை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்குத் தேவைப்படுகிற பண்டங்களை உற்பத்தி செய்யும் விளைவுப்பறித் தொழில்களிலேயே செய்யப் பட்டுள்ளது. நாணயமாற்றுக் கட்டுப்பாடு (Exchange control) ஏற்படக்கூடும் என்கிற அச்சமும், வளர்ச்சி குறைந்த நாடுகளின் உள்நாட்டு அங்காடிக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் செய்யப்படுகிற முதலீட்டை மாற்றல் செய்வதில் இடர்ப்பாடுகள் ஏற்படக்கூடும் (Transfer difficulties) என்கிற அச்சமுமே இந்த நிலைமைக்குக் காரணம் என்று சிலர் கருதக்கூடும். ஆனால் நேர்முக வாணிப முதலீடானது இந் நாடுகளின் ஏற்றுமதித் தொழில்களிலேயே போடப்படும் போக்கு, தொடக்க காலங்களிலும் எடுப்பாகக் காணப்பட்டது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரிட்டனால் பிற நாடுகளில் செய்யப்பட்ட முதலீட்டைப் பொறுத்த அளவில்கூட இதே வகையான போக்குத்தான் காணப் பட்டது. 1920ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் பிற நாடுகளில் செய்யப்பட்ட அமெரிக்க முதலீட்டிலும் இந்தப் போக்கு, தலையாய இடத்தைப் பெற்றிருந்தது. ஆனால், அந்தக் காலத்தில், நாணயமாற்றுக் கட்டுப்பாடு என்பதே கிடையாது. அது மட்டும் அன்று; தனியாரின் அயல்நாட்டு முதலீட்டைப் பொறுத்தவரை மாற்றல்பற்றிய சிக்கல்கள் ஏற்படக்கூடும் என் கிற அச்சம் எவருக்கும் எழாத காலம் அது. என்றபோதிலும், அந்த ஆண்டுகளில் குறைந்த வருமான நாடுகளில் செய்யப்பட்ட நேர்முக முதலீட்டிற் பெரும்பகுதி, ஏற்றுமதித் தொழில்களி லேயே செய்யப்பட்டது. அம் முதலீட்டின் மிகச் சிறு பகுதியே, உள்நாட்டு அங்காடிக்கான தொழில்களில் ஈடுபடுத்தப் பட்டது.[1]

1948ன் இறுதியில் பிற நாடுகளில் காணப்பட்ட அமெரிக்க நேர்முக முதலீட்டின் மொத்தத் தொகையை ஆராய்ந்து பார்த் தால், ஏறத்தாழ அதன் ஒரு பாதி, வளர்ச்சி குறைந்த நாடு களிலும், மற்றொரு பாதி வளர்ச்சியுடைந்த நாடுகளிலும் செய்யப் பட்டிருந்தது என்பது புலனாகும். இந்த இரு பிரிவு நாடுகளிலும் செய்யப்பட்டிருந்த முதலீட்டின் அளவு, ஒவ்வொரு பிரிவிலும், 5000 மில்லியன் டாலரைவிடச் சற்றுக் கூடுதலாக இருக்கிறது (மேற்கு ஐரோப்பா, கனடா ஆகியுவை வளர்ச்சியுடைந்த நாடுகள்

என்னும் பிரிவில் சேர்க்கப்பட்டுள்ளன). இந்த இரண்டு பிரிவுகளைச் சேர்ந்த நாடுகளுக்கு இடையே, அமெரிக்க வாணிப முதலீட்டின் தொழில்வழிப் பங்கீட்டில் (Occupational distribution) திட்ட வட்டமான வேறுபாடு இருப்பதைக் கீழே தரப்பட்ட அட்டவணையிலிருந்து தெரிந்துகொள்ளலாம். வளர்ச்சி குறைந்த நாடுகளைப் பொறுத்தவரை, அம் முதலீட்டிற் பெரும் பகுதி (59 சத வீதம்), பெரும்பாலும் ஏற்றுமதி செய்வதற்கே உற்பத்தி செய்கிற பெட்ரோலியம், சுரங்கம், வேளாண்மை முதலிய விளைவுப்பறித் தொழில்களில் செய்யப்பட்டுள்ளது. ஆனால் வளர்ச்சியடைந்த நாடுகளிலோ, அதன் பெரும்பகுதி (இதுவும் 59 சதவீதம்தான்), பொறிவழித் தொழில்களிலும் பங்கீட்டுத் தொழில்களிலுமே - அதாவது, இந் நாடுகளின் உள் நாட்டு அங்காடிக்காகவே பெரும்பாலும் உற்பத்தி செய்யும் தொழில்களில் செய்யப்பட்டுள்ளது.[2]

## 1948ல் இருந்த ஐக்கிய அமெரிக்காவின் நேர்முக முதலீடுகளின் சதவீதப் பங்கீடு

| | வளர்ச்சி குறைந்த நாடுகள் | வளர்ச்சி அடைந்த நாடுகள் |
|---|---|---|
| விளைவுப் பறித் தொழில்கள் (Extractive industries) | 59 | 23 |
| பொறிவழித் தொழில்களும் பங்கீட்டுத் தொழில்களும் (Manufacturing and distribution) | 22 | 59 |
| பொதுப் பயன்பாட்டுத் தொழில்கள் (Public Utilities) | 16 | 7 |
| பலவகைத் தொழில்கள் | 3 | 11 |
| | 100 | 100 |

ஆதாரம் : ஐக்கிய அமெரிக்காவின் வாணிபத் துறையால் (U. S. Department of Commerce) வெளியிடப்பட்டுள்ள "The Balance of International Payments of the United States *1946-1948*" என்னும் நூல் (வாஷிங்டன், *1950*), பக்கங்கள் *162—165*.

கடந்த காலத்தில் தனியாரின் அயல்நாட்டு முதலீடானது, பொருளியலில் பின்தங்கியுள்ள வேளாண்மை நாடுகளின் தொழில்

துறை வளர்ச்சியைப் பெருக்குவதற்குக் குறிப்பிடத்தக்க அளவு துணை புரியவில்லை என்றும், அதற்கு மாறாக, முன்னேறிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கு உரிய முதன்மைப் பொருள்களின் (Primary goods) உற்பத்தியிலேயே தலையாய ஆர்வத்தைக் காட்டியது என்றும் சிங்கர் (Singer) அவர்களால் தெரிவிக்கப் பட்டுள்ள கோட்பாடானது, நேர்முக வாணிப அயல்நாட்டு முதலீட்டைப் பொறுத்தவரை, சிறப்பான முறையில் பொருந்துவதாக அமைந்திருக்கிறது. அயல்நாட்டு முதலீடானது, குறைந்த வருமான நாடுகளின் உள்நாட்டுப் பொருளியல்களை வளர்ச்சியடையச் செய்வதற்கு மாறாக, எந்த அமைப்பு முறையின் கீழ் இந்த நாடுகள் ஏற்றுமதி செய்வதற்கான மூலப் பொருள்களையும் உணவுப் பொருள்களையும் உற்பத்தி செய்வதில் சிறப்புத் தேர்ச்சி பெற்றிருந்தனவோ அந்த அமைப்பு முறையையே மேலும் உற்பத்தியுடையதாகவும் ஆற்றல் உடையதாகவும் ஆக்குவதற்கே பயன்பட்டிருக்கிறது. இந்தக் கருத்தின்படி, அயல்நாட்டு முதலீடானது, பன்னாட்டு வாணிபத்தில், தராதர அநுகூலம்பற்றிய ஒரு நிலையியல் ஏற்பாட்டின் (A static scheme of comparative advantage) அடிப்படையில் அமைந்த ஒரு சிறப்புத் தேர்ச்சி முறையை வளர்ப்பதாகவே அமைந்திருக்கிறது. அயல்நாட்டு முதலீடானது ஏற்றுமதிக்கான விளைவுப்பறித் தொழில்களிலேயே பேரார்வம் காட்டும் இந்த நிலையின் விளைவாக அயல்நாட்டு ஆதாயத்திற்கான சுரண்டல் ஏற்பட்டே தீரும் என்று கூற முடியாமல் இருக்கலாம். அல்லது பரந்த அரசியல் பொருளிலும் சுரண்டல் ஏற்படாமல் இருக்கலாம். ஆனால், அயல்நாட்டு முதலீடானது, கடன் வழங்கும் தொழில்துறை நாடுகளின் நலன்களைப் பேணி வளர்ப்பதற்கே பெரிதும் பயன்பட்டிருக்கிறது என்பதையும், அதன் விளைவாக ஏற்பட்டிருக்கிற பொருளியல் வளர்ச்சியானது ஓரளவுக்கு ஒத்த நிலையற்றதாக இருக்கிறது என்பதையும் மறுக்கமுடியாது.

ஆனால் இப்படியெல்லாம் ஏற்பட்டிருப்பது, கடன் வழங்கும் தொழில்துறை நாடுகளால் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது அன்று; அவற்றின் ஒருங்கிணைந்த நடவடிக்கையால் அல்லது அவற்றால் தோற்றுவிக்கப்பட்ட அரசியல் செல்வாக்கால் உண்டானதும் அன்று. அது, தனியாரின் ஆதாய நோக்கங்கள் நடைமுறைக்கு வருவதால் ஏற்பட்டுள்ள - முற்றிலும் இயற்கையான - ஒரு விளைவே ஆகும். அங்காடியின் போக்குக்கு ஏற்ற முறையில் தனியாரின் முதலீட்டுப் போக்கு அமைவது இயற்கை. கடந்த காலத்தில் பெரிய அங்காடிகள் யாவும் தொழில்துறை நாடுகளிலேயே இருந்திருக்கின்றன. எனவேதான், வளர்ச்சி

குறைந்த நாடுகளில் செய்யப்பட்ட அயல்நாட்டு முதலீடானது, வாங்கும் திறனை (Purchasing Power) மிகக் குறைந்த அளவில் பெற்றிருந்த அந் நாடுகளின் நுகர்வோருக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்வதைவிடத் தொழில்துறை நாடுகளின் பெரிய அங்காடிகளுக்காக உற்பத்தி செய்யவதையே ஆதாயம் மிகுந்த பணியாகக் கருதி வரவேற்றது. இந் நூலின் முதல் அத்தியாயத்தில் நம்மால் பகுத்தாய்வு செய்யப்பட்ட அங்காடிச் சிக்கல்தான் இந்தப் போக்குக்கு உரிய காரணமாகும். குறைந்த வருமானம் உள்ள ஒரு நாட்டின் உள்நாட்டுப் பொருளியலில், முதலீட்டுக்கான தூண்டுதல் ஆற்றல் அற்றதாக இருப்பதற்குக் காரணம், அந் நாட்டின் உள்நாட்டு அங்காடி சிறியதாக இருப்பதே ஆகும். இந்த நச்சு வளையத்தை முறியடிப்பதற்கான தூண்டுதலோ அல்லது வசதிகளோ தனிப்பட்ட அயல்நாட்டுத் தொழில் துணிவோருக்கு இல்லை.

பொதுப் பயன்பாட்டு ஒட்டுமொத்த முதற்பொருள் (Public overhead capital) போதிய அளவில் இல்லாமலிருப்பதும், தனியாரின் அயல்நாட்டு முதலீட்டை, உள்நாட்டு அங்காடிக்கான உற்பத்தியில் இறங்காதவண்ணம் தடுக்கிற முட்டுக்கட்டையாக விளங்குகிறது என்று சில சமயங்களில் சொல்லப்படுகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில், சாலைகள், இருப்புப் பாதைகள் தண்ணீர்த் திட்டங்கள் மின்சார உற்பத்தி நிலையங்கள் முதலிய பொது வசதிகள் போதிய அளவில் இருப்பதில்லை; சில சமயங்களில் இருப்பதே இல்லை. அத்தகைய நிலையில் புதிய தொழிலைத் தொடங்கும் ஒருவர், தம்முடைய நிதிகளிலிருந்துதான் இந்த வசதிகளிற் சிலவற்றை உருவாக்கிக்கொள்ளவேண்டிய இன்றியமையாமை இருக்கிறது. உள்நாட்டு அங்காடிக்காகப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு உரிய தூண்டுதல் அயல்நாட்டு மூலதனத்திற்கு இல்லாமலிருப்பதற்கு, மேற்படிப் பொது வசதிகள் இல்லாமலிருப்பது, ஓரளவுக்குக் காரணமாக இருக்கக்கூடும்.

ஆனால் ஏற்றுமதிக்கான தொழில்களுக்கும் உள்நாட்டு அங்காடிக்கான தொழில்களுக்கும் இடையே காணப்படுகிற மாபெரும் வேறுபாட்டிற்கு இதுமட்டுமே பொருத்தமான காரணமாக இருக்கமுடியாது. பொதுப் பயன்பாட்டு வசதிகளும் ஏற்பாடுகளும் இல்லாததால் ஏற்படுகிற இடர்ப்பாடு, இந்த இரு வகைத் தொழில்களையும், ஏறத்தாழ ஒத்த அளவில்தான் பாதிக்க முடியும். ஆனால் ஏற்றுமதிக்கான தொழில்களில் முதலீடு செய்வது போதிய ஆதாயத்தை அளிப்பதாக இருக்குமானால் - பெரும்பாலும் அப்படித்தான் இருக்கிறது - மேலே குறிப்பிடப்பட்ட

இடர்ப்பாட்டால் அந்த முதலீடு தடுக்கப்படுவதில்லை. இத்தகைய முதலீட்டைப் பொறுத்தவரை, அயல்நாட்டு முதலீட்டாளர், இன்றியமையாத பொதுப் பயன்பாட்டு வசதிகளைத் தாமே உருவாக்கிக் கொள்கிறார். அப்படி உருவாக்கிக்கொள்வதைத் தம்முடைய முதலீட்டுத் திட்டத்தின் ஒரு பகுதியாகவே அவர் கருதுகிறார். அப்படி உருவாக்கிக்கொள்வது, அவருக்கு ஆதாயத்தை அளிக்கும் செயலாகவும் இருக்கிறது. ஆனால் உள்நாட்டு அங்காடிக்கான தொழில்களில் செய்யப்படும் முதலீட்டைப் பொறுத்தவரை அவ்வாறு உருவாக்கிக்கொள்வது, ஆதாயத்தை அளிப்பதில்லை என்பதுதான், பெரும்பாலான சமயங்களில் இருக்கும் நிலை. ஏன் ஆதாயத்தை அளிப்பதில்லை என்பதற்கான காரணம், வெளிப்படையாகத் தெரிகிற ஒன்று.

இவ்வாறாக, வளர்ச்சி குறைந்த நாடுகளைப் பொறுத்தவரை உள்நாட்டு அங்காடிக்கான தொழில்துறையில் மிகச் சிறிய அளவில்தான் அயல்நாட்டு வாணிபமுதலீடு செய்யப்படுகிறது என்பது, அதற்கு மாறாகக் கனடாவைப் போன்ற வளர்ச்சியடைந்த ஒரு நாட்டில் (நாம் மேலே தந்த அட்டவணையில், வளர்ச்சியடைந்த நாடுகள் என்று குறிப்பிடப்பட்டுள்ள பிரிவில் செய்யப்படுகிற அமெரிக்க முதலீட்டில், பாதிக்குமேல் கனடாவில்தான் செய்யப் பட்டுள்ளது.) அமெரிக்க நேர்முக முதலீடானது, உள்நாட்டு அங்காடியின் தேவையை நிறைவேற்றுவதற்கான பொறிவழித் தொழில்களிலும் பங்கீட்டுத் தொழில்களிலுமே மிகப் பெரிய அளவில் செய்யப்படுகிறது என்பதும், அப்படிச் செய்யப்படு வதற்குக் காரணம், வளர்ச்சியடைந்த நாடுகளின் உள்நாட்டு அங்காடியானது, உற்பத்தி அளவு, வாங்கும் திறன் ஆகிய வற்றை மிக உயர்ந்த அளவில் பெற்றிருப்பதே என்பதும் தெளிவாக விளங்குகின்றன. பிரேசில் (Brazil) போன்ற ஒரு நாடு, இந்த இரு பிரிவு நாடுகளுக்கும் இடைப்பட்ட ஒரு நிலையில் நிற்கிறது என்று நவிலலாம். பிரேசிலின் தென்பகுதியில் உள்ள உள்நாட்டு அங்காடியானது, ஓரளவுக்கு அயல்நாட்டு முதலீட்டைப் பெற்றுள்ள பெரிய தொழில்துறை ஒன்றை ஆதரிக்கக் கூடிய அளவுக்குப் பெரியதாக இருக்கிறது என்பதில் ஐயம் இல்லை. ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகள் என்று திட்டவட்டமான முறையில் அழைக்கப்படக்கூடிய நாடுகளைப் பொறுத்தவரை, அவற்றின் உள்நாட்டு அங்காடிக்கான தொழில்களில் அயல்நாட்டு வாணிப முதலீடு செய்யப்பட முடியாத அளவுக்கு, அவற்றின் உள்நாட்டு வாங்கும் திறன் மிகச் சிறியதாக இருக்கிறது. அத்தகைய நாடுகளுக்கு அயல்நாட்டு வாணிப முதலீடு வருவதே இல்லை; ஒருவேளை வந்தாலும், ஏற்றுமதிக்கான தொழில்களி

லேயே ஈடுபடுகிறது. இந்தப் போக்கு, வியப்பை அளிக்கத்தக்க ஒன்று அன்று.

ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சிக்கு ஓர் அயல்நாட்டு வாணிபத் தொழில் துணிவு (Business enterprise) எந்த அளவுக்குத் துணைபுரிகிறது என்பது, அந்தத் தொழில் துணிவானது ஏற்றுமதிக் கான பொருள்களை உற்பத்தி செய்கிறதா அல்லது உள்நாட்டு நுகர்வுக்கான பொருள்களை உற்பத்தி செய்கிறதா என்பதைப் பொறுத்த ஒன்று அன்று. அஃது உள்நாட்டு உழைப்புக்கும் (Labour) ஏனைய உள்நாட்டுக் காரணிகளுக்குமான தேவையை அத் தொழில் துணிவானது எந்த அளவு பெருக்குகிறது என்பதை யும், அதனுடைய ஆதாயத்தில் எவ்வளவு பகுதியை அது மீண்டும் அந்த நாட்டிலேயே முதலீடு செய்கிறது என்பதையும், பல்வேறு வகைப்பட்ட பிற காரணிகளையும் பொறுத்திருக்கிறது. அயல் நாட்டு முதலீடானது, ஏற்றுமதிக்கான தொழில்களில் ஈடுபட் டிருக்கிறது என்ற காரணத்திற்காக அதை வெறுக்கவேண்டிய தேவையில்லை. அம் முதலீட்டின் விளைவாக, முதலீட்டைப் பெறுகிற நாட்டின் ஏற்றுமதித் திறனும் இறக்குமதித் திறனும் பெருகுகின்றன என்பதுமட்டுமன்று; உழைப்பாளரின் திறன், பொதுப் பயன்பாட்டு வசதிகள் முதலிய புறச் சிக்கன நலன்களும் பெருகுகின்றன. புறச் சிக்கன நலன்களின் பெருக்கம் மிகக் குறைந்த வேகத்தில் ஏற்படுகிறது என்றபோதிலும், அது ஏற்படுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. அத்தகைய நலன்களின் விளைவாக, உடனடியாகவோ அல்லது சற்றுப் பொறுத்தோ, உள்நாட்டுப் பொருளியலுக்கு நன்மை ஏற்படும் என்பது உறுதி.

இப் புறச் சிக்கன நலன்கள், குறிப்பிட்ட தொழில்கள் அல்லது திட்டங்களின் தொழில்நுணுக்கத் தன்மையையும் தற்செயலாக அமைகிற இயல்புகளையும் பொறுத்தனவாக இருக்கின்றன. அப்படி இருப்பதால், பல்வேறு தொழில்கள் அல்லது திட்டங் களால் ஏற்படுகிற புறச் சிக்கன நலன்களின் இயல்பும் பயனும், மிகப் பெரிய வேறுபாட்டை உடையனவாக இருப்பது இயற்கை. எடுத்துக்காட்டாக, சௌதி அரேபியாவிலிருந்து (Saudi Arabia) மத்தியதரைப் பகுதிக்கு (Mediterranean area) எண்ணெயை எடுத்துச் செல்வதற்காகப் பெருஞ் செலவில் அமைக்கப்பட்டுள்ள குழாய்கள், அதைத் தவிர்த்த வேறு விரிவான பணி எதற்கும் பயன்படா. ஆனால் அதே நேரத்தில், பெரு நாட்டின் (Peru) உட்புறப் பகுதிகளிலிருந்து துறைமுகப் பகுதிகளுக்குச் செம்பை ஏராளமான அளவில் கொண்டு வருவதற்காக அமைக்கப்பட்

டுள்ள இருப்புப் பாதையானது, பிற பொருள்களைக் கொண்டு வருவதற்கும் பயன்படும்; அப்படிப் பயன்படுகிற காரணத்தால் நாட்டின் பொதுவான வளர்ச்சிக்கு நேர்முகத் துணைபுரியவும் முடியும். 1914க்கு முந்திய அறுபது ஆண்டுகளில், அயல்நாடு களில் இருப்புப் பாதையை அமைப்பதற்காகப் பிரிட்டனால் செய்யப்பட்ட முதலீடுகள், கோதுமை, ஆட்டு மயிர், இறைச்சி முதலிய பொருள்களுக்குப் பிரிட்டனில் இருந்த தேவை, மிகப் பெரிதாகவும் நாளுக்கு நாள் பெருகிவரும் இயல்புடையதாகவும் இருந்த நிலைமையால் தூண்டப்பட்டுச் செய்யப்பட்டனவே என் பதில் துளியும் ஐயமில்லை. அவ்வாறு அமைக்கப்பட்ட இருப்புப் பாதைகள், தொடக்கத்தில், முதன்மைப் பொருள்களை உற்பத்தி செய்கிற நாடுகளின் ஏற்றுமதி வாணிபத்தைப் பெருக்குவதற்கு உகந்த முறையில்தான் அமைக்கப்பட்டன; துறைமுகப் பகுதிகளை மையமாகக் கொண்டு, அவற்றைச் சூழ்ந்த பகுதிகளுக்குத்தான் அமைக்கப்பட்டன; அந் நாடுகளின் உட்புறப் பகுதிகளை ஒன்றோடு ஒன்று தொடர்புபடுத்துகிற முறையில் அமைக்கப்படவில்லை. இவ்வளவும் உண்மைதான் என்றபோதிலும், கனடா, ஐக்கிய அமெரிக்கா, அர்ஜென்டீனா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளின் ''மாபெரும் திறந்த வெளிகளின்'' ஒட்டுமொத்தப் பொரு ளியல் வளர்ச்சிக்குத் தேவைப்பட்ட - இன்றியமையாத - விலை உயர்ந்த ஓர் அடிப்படையை அந்த இருப்புப் பாதைகள் அமைத் துக் கொடுத்துவிட்டன என்பதும் உண்மை.[3] ''அர்ஜென்டீனாவில் இருப்புப் பாதையானது மந்திரவாதியின் கோல்போல் பணி யாற்றுகிறது. நாட்டின் எந்தப் பகுதியில் அஃது அமைக்கப்பட்டா லும் சரி, நாட்டின் பொருளியல் நிலைமைகளையும், உற்பத்தி நிலை மைகளையும் அஃது அடியோடு மாற்றி அமைத்துவிடுகிறது'' என்று அர்ஜென்டீனாவைப்பற்றித் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்து,[4] இந்த உண்மையை எழிலுற எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

ஆகவே, மரபுவழியில் அமைந்த அயல்நாட்டு முதலீடானது - அதாவது, ஏற்றுமதி செய்வதற்காக முதன்மைப் பொருள்களை உற்பத்தி செய்யும் துறையில் ஈடுபடும் முதலீடானது - வெறுத்து ஒதுக்கத்தக்கது அன்று என்பது தெளிவாகிறது. ஆனால் வளர்ச்சி குறைந்த நாடுகளில் செய்யப்படும் இந்த வகை முதலீடுகூடத் தற் போது மிகக் குறைந்த அளவினதாகவே இருக்கிறது. ஏன் அஃது இதனினும் பெரிய அளவில் நடைபெறவில்லை? உண்மையாகவே பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளின் உள்நாட்டு அங்காடிக் கான உற்பத்தியில் அயல்நாட்டு வாணிப முதலீடு ஈடுபடாததற்கு உரிய காரணத்தை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அஃது ஏற்றுமதி அங்காடிக்கான உற்பத்தியில் ஆர்வம் காட்டாமல் இருப்பதற்கு உரிய காரணம் யாது?

அயல்நாட்டு முதலீட்டின் ஓட்டத்தைத் தெளிவாகத் தெரிகிற சில அரசியல் முட்டுக்கட்டைகள் தடுத்து நிறுத்தக்கூடும். தற்போது, தனியாரின் அயல்நாட்டு முதலீடு, கிட்டத்தட்ட ஒன்றுமில்லை என்று சொல்லத்தக்க நிலையில் இருப்பதற்கு இந்த முட்டுக்கட்டைகள்மட்டுமே போதிய காரணமாக இருக்கக்கூடும். மூலப் பொருள்கள், உணவுப் பொருள்கள் ஆகியவற்றிற்கான ஏற்றுமதி அங்காடிகள், பத்தொன்பதாம் நூற்றுண்டில் பெற்றிருந்த அதே அளவு பெருக்க வீதத்தைத் (The rate of expansion) தற்போது பெறமுடியாமல் இருப்பது, அயல்நாட்டு முதலீட்டின் ஓட்டம் தடைப்பட்டிருப்பதற்கு உரிய மற்றொரு காரணமாகும். மேற்கத்தியத் தொழில்துறை நாடுகளின் மக்கள்தொகை, உற்பத்தி அளவு ஆகிய இரண்டும் வியக்கத்தக்க வேகத்தில் பெருகி வந்ததும், பன்னாட்டு உழைப்புப் பிரிப்பின் (International division of labour) தேவைகளை முன்னிட்டுப் பிரிட்டன் தன்னுடைய வேளாண்மையின் நலன்களை விட்டுக்கொடுக்க முன் வந்ததும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஏற்றுமதி அங்காடிகள் பெற்றிருந்த மிக உயர்ந்த பெருக்கத்திற்குரிய காரணங்கள் ஆகும். பத்தொன்பதாம் நூற்றுண்டில் பிரிட்டிஷ் பெருநாடு பெற்றிருந்த இறக்குமதி நாட்டத்திற்கும் இறக்குமதிக் கைக்கோளுக்கும், தற்போது ஐக்கிய அமெரிக்க நாடு பெற்றுள்ள இறக்குமதி நாட்டத்திற்கும் இறக்குமதிக் கைக்கோளுக்கும் இடையே வேறுபாடு இருக்கிறது. இருபதாம் நூற்றுண்டில், மூலப் பொருள்களையும் உணவுப் பொருள்களையும் வாங்குவதற்கு உரிய மேற்கு ஐரோப்பிய நாடுகளின் ஆற்றல், அழிவுத் திறன் மிக்க இரண்டு உலகப் போர்களின் விளைவாக மிகவும் குறைந்து விட்டது. நைட்ரேட்டுகள் (Nitrates), பட்டு, இயற்கை ரப்பர் முதலிய மூலப்பொருள்களுக்கான தேவை, அண்மைக் காலத்தில், அப்பொருள்களுக்குப் பதிலிகளாகக் (Substitutes) கண்டுபிடிக்கப் பட்டுள்ள சில செயற்கைப் பொருள்களின் விளைவாகக் குறைந்து விட்டிருக்கிறது. அப்படிக் குறையும் போக்கு நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டும் இருக்கிறது. கொரியாமேல் நடைபெற்ற படையெடுப்புக்குப் (Korean invasion) பின்னர் ஏற்பட்ட மூலப் பொருளின் தேவைப் பெருக்கம், தாற்காலிகமான சில சிறப்புச் சூழ்நிலைகளின் விளைவாக உருவானதே என்னும் கருத்து, மிகப் பலரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அந்தத் தேவைப் பெருக்கத்தின் ஆற்றலிற் பெரும் பகுதி, இதற்குள்ளாகவே* அழிந்து விட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல. இத் தேவைப் பெருக்கத்தின்

*இதற்குள்ளாகவே என்பது இந்த நூல் (மூல நூல்) இயற்றப் பட்ட காலத்தை - 1952ஆம் ஆண்டைக் குறிப்பிடுகிறது. — [மொழிபெயர்ப்பு ஆசிரியர்.]

பயனுக, பின் தங்கிய நாடுகளிற் செய்யப்படுகிற அமெரிக்க நேர் முக முதலீட்டில் குறிப்பிடத்தக்க உயர்வு ஏதும் ஏற்படவில்லை. பின் தங்கிய நாடுகளுக்குச் சென்று, ஏற்றுமதி செய்வதற்கான முதன்மைப் பொருள்களின் உற்பத்தியில் ஈடுபடும்படித் தனியாரின் அயல்நாட்டு முதலீட்டைத் தூண்ட வேண்டுமானுல், மூலப் பொருள்களின் தேவையில் ஒரு தாற்காலிகப் பெருக்கம்மட்டும் ஏற்பட்டால் போதாது ; நீண்ட காலப் பெருக்கம் தோன்றியாக வேண்டும்.

இவை யாவும், 'மரபு வழி'யில் அமைந்த அயல்நாட்டு முதலீடுகூட, தற்காலத்தில், இல்லையென்று சொல்லத்தக்க நிலையில் இருப்பதற்கு உரிய பொருளியற் காரணங்கள் ஆகும். பொருளியற் காரணங்களைமட்டுமே நாம் இதுவரை விரிவாக ஆராய்ந்திருந்தபோதிலும், சட்டம், அரசியல், பண்பாடு ஆகிய துறைகளைச் சேர்ந்த தடைகளும் இருக்கின்றன என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

சுருக்கமாகக் கூறவேண்டுமானுல், பின்தங்கிய நாடுகளின் பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான நிதியை அயல்நாட்டு நேர்முக வாணிப முதலீட்டிலிருந்து பெறமுடியும் என்று கொள்ளப்பட்டிருந்த நம்பிக்கையானது, பொதுப்படையான பொருளியல்தன்மை படைத்த இரண்டு காரணங்களால், ஏமாற் றத்திற்கு ஆளாகிவிடுகிறது. குறைந்த வருமான நாடுகளின் உள் நாட்டுப் பொருளியலின் பெருக்கத்திற்காக உழைக்க வேண்டும் என்கிற தூண்டுதலைத் தனியாரின் அயல்நாட்டு வாணிப மூல தனத்திற்கு ஏற்படுத்தவல்ல காரணி எதுவும் இல்லை என்பது, ஒரு காரணம். ஏற்றுமதிக்கான மூலப் பொருள்களை உற்பத்தி செய்யும் துறையைப் பொறுத்தவரையிற்கூட, அத்தகைய பொருள் களுக்கான தேவை தொடர்ச்சியாகவும் போதிய அளவிலும் பெரு கிக்கொண்டிருக்கும் என்கிற உறுதியான நம்பிக்கை இருந்தா லொழிய, அயல்நாட்டுத் தனியார் வாணிப நிதிகள், அந்தத் துறையில் தொடர்ச்சியாகவும் குறிப்பிடத்தக்க அளவிலும் ஈடு படமாட்டா என்பது, இரண்டாவது காரணம். இத்தகைய சூழ் நிலையில், தனியாரின் வாணிப நிதிகளால் நடைபெறுகிற பன் னுட்டு முதலீடுபற்றிய கோட்பாடானது, மூலதன ஓட்டம் நிகழ் வது ஏன் என்பதைப்பற்றிய ஒரு விளக்கமாக அமையாமல், அது நிகழாமல் இருப்பது ஏன் என்பதைப்பற்றிய ஒரு விளக்கமாகவே அமைந்துவிடுகிறது.

அயல்நாட்டு நேர்முக வாணிப முதலீடானது, முதலீடு செய்யப்படுகிற நாட்டின் உள்நாட்டு வளர்ச்சிக்கான முதலாக்

கத்தில் நேரடியாக ஈடுபடாவிட்டாலும், அந் நாட்டின் முதலாக்கத்தில் நேரடியாக ஈடுபடுகிறது என்னும் உண்மையை - அம் முதலீட்டின் சார்பாக அமைந்துள்ள உண்மையை-இங்கு மீண்டும் ஒரு முறை எடுத்துக்காட்டுவது, முற்றிலும் பொருத்தமான செயலே ஆகும். பொதுவாகவும், தவிர்க்கமுடியாத வகையிலும், அயல்நாட்டுத் தொழில் துணிவோரின் முதலீடானது, முதன்மைப் பொருள்களை (Primary products) உற்பத்தி செய்யும் ஒரு நாட்டின் உற்பத்தித் திறனில் மெய்யாகவே ஓர் உயர்வை ஏற்படுத்திவிடுகிறது. இத்த உண்மையை நான் இந்த அளவு வற்புறுத்திக் கூறுவதற்குக் காரணம், எல்லா வகையான அயல்நாட்டு மூலதன ஊற்றுக்கால்களுக்கும் இந்த உண்மை பொருந்துவதில்லை என்பதுதான்.

அயல்நாட்டு நேர்முக வாணிப முதலீட்டிலிருந்து கிடைப்பதாகச் சொல்லப்படுகிற மற்றொரு நன்மை, அதாவது அந்த முதலீடு வரும்போது தற்காலத் தொழில்நுணுக்க அறிவையும் பொருள் உற்பத்தி முறையையும் உடன் கொண்டு வருகிறது என்கிற கருத்து, ஓரளவு ஐயத்திற்கு உரிய ஒன்றாக அமைந்திருக்கிறது. பின்தங்கிய நாடுகளின் மக்கள், முன்னேறிய தொழில் நுணுக்க முறைகளைத் தாங்களே கையாள்வது எப்படி என்பதைத் தெரிந்து கொண்டு, தங்களுடைய தேவைகளுக்கும் நிலைமைகளுக்கும் ஏற்ப அவற்றை மாற்றி அமைத்துக்கொள்ளவும் அறிந்துகொண்டால் தான், அம்முறைகளின் விளைவாகப் பின்தங்கிய நாடுகளுக்கு நிலையான நன்மை ஏற்படும். வளர்ச்சி குறைந்த நாடுகளின் அரசாங்க விதிகளால் கட்டாயப்படுத்தப்பட்டாலொழிய, அந் நாடுகளில் முதலீடு செய்யும் அயல்நாட்டு வாணிப நிறுவனங்கள், தொழில் நுணுக்க அறிவையும் நிர்வாக அறிவையும் அந் நாடுகளின் மக்களுக்குக் கற்றுத் தருவதில் ஆர்வம் காட்டுவதில்லை என்பது, அந் நிறுவனங்களைப்பற்றி அந் நாடுகளில் இடையீடின்றி எழுப்பப்பட்டுவரும் குற்றச்சாட்டாக இருந்துவருகிறது. பின்தங்கிய நாடுகளின் மக்களுடைய கல்வி, தொழில் நுணுக்கப் பயிற்சி ஆகியவற்றை வளர்க்கும் செயலில் பணத்தை முதலீடு செய்வது - அதுவும் அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் பெறுகிற மக்கள் அப் பயிற்சியைத் தருகிற வாணிப நிறுவனத்திலேயே தொடர்ந்து பணியாற்ற வேண்டும் என்கிற கட்டுப்பாடு இல்லாமல், எப்போது வேண்டுமானாலும் அவர்கள் வேறு எந்த நிறுவனத்திலும் வேலைக்குச் சேர்ந்துவிடக்கூடும் என்கிற நிலைமை இருக்கும்போது, அயல்நாட்டு வாணிப நிறுவனத்திற்கு ஆதாயம் அளிக்கும் செயலாக இருப்பதில்லை. ஜப்பானின் பொருளியல் வளர்ச்சியை நாம் ஆராய்ந்து பார்த்தால், அவ் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில்,

அயல்நாட்டு நேர்முக முதலீடே இருந்ததில்லை என்பதை அறிகிறோம். அப்படி இல்லாமலிருந்தும், ஜப்பான், தன் பொருளியல் வளர்ச்சிக்குத் தேவைப்பட்ட தொழில் நுணுக்க அறிவையும் உற்பத்திமுறை விளக்கத்தையும், அயல்நாட்டுத் தொழில் நுணுக்க வல்லுநர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்வதன் வாயிலாகவும், தன்னுடைய மக்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி அங்குள்ள தொழில் நுணுக்க முறைகளை உற்றுநோக்கியும் கற்றுத் தெளிந்தும் வரச் செய்ததன் வாயிலாகவும் பெற்றிருக்கிறது. மூலதனமும் தொழில்நுணுக்க அறிவும் நெருங்கிய தொடர்பு உடையன என்றபோதிலும், அவை இரண்டும் கூட்டாகவே அளிக்கப்படவேண்டும் (Joint supply) என்கிற கட்டாயமில்லை. மூலதன இயக்கங்களோடு (Movements of capital) தொடர்புஅற்ற முறையில், ஏராளமான அளவுடைய தொழில்நுணுக்க உதவியானது, நாட்டு அமைப்புகளின் வாயிலாகவும் பன்னாட்டு அமைப்புகளின் மூலமாகவும், குறைந்த வளர்ச்சியுள்ள நாடுகளுக்குத் தற்காலத்தில் சென்றுகொண்டிருக்கிறது.

## பன்னாட்டுக் கடன்களும் மானியங்களும்

வளர்ச்சி குறைந்த நாடுகளின் அரசாங்கங்களின் மூலதனச் செலவுக்காகத் தரப்படுகிற அயல்நாட்டுக் கடன்களில் ஒரு நன்மை இருக்கிறது. மொத்தப் பொருளியலையும் மனத்திற் கொண்டு ஒருங்கிணைந்த முறையில் அமைக்கப்பட்ட ஒரு திட்டத்திற்கு ஏற்ற வகையில் - உள்நாட்டுப் பொருளியலின் வளர்ச்சிக்காக அக் கடன்களைப் பயன்படுத்தமுடியும் என்பதே அந் நன்மை. அயல்நாட்டுத் தனியார் வாணிப முதலீடானது, கடன்பெறும் நாட்டின் உள்நாட்டுப் பொருளியலைப் புறக்கணித்துவிட்டுக் கடன் வழங்கும் நாட்டின் தேவைகளை நிறைவேற்றும் பணியில்தான் முதன்மையான ஆர்வம் செலுத்துகிறது என்று சொல்லப்படும் குற்றச்சாட்டானது, அரசாங்கங்களின் மூலதனச் செலவுக்காகத் தரப்படுகிற அயல்நாட்டுக் கடன்களுக்குப் பொருந்தாது; ஒரு வேளை பொருந்தினாலும், அதே அளவுக்குப் பொருந்தாது. தனியாரின் பன்னாட்டு முதலீட்டின் பொற்காலம் என்று சொல்லப்படும் காலத்திற்கூட, பன்னாட்டு முதலீட்டின் பெரும் பகுதி, இந்த வகைக் கடன்களாகத்தான் இருந்தது என்பது நினைவில் நிறுத்தத் தக்கதாகும்.[5] பிரான்சு, ஜெர்மனி ஆகிய நாடுகளால் பிற நாடுகளில் செய்யப்பட்டு 1914ல் நிலுவையாக இருந்த முதலீடுகளில் (Investments outstanding in 1914) பாதிக்கு மேற்பட்டவை (மைய, மாநில, நகராட்சி) அரசாங்கங்கட்குக் கடனாகத் தரப்பட்டவையே. பிரிட்டனால் பிற நாடுகளில் செய்யப்பட்டு, அதே

ஆண்டில் நிலுவையாக இருந்த முதலீடுகளில் 30 சதவீதம், அரசாங்கங்கட்கு அளிக்கப்பட்டவையாகும். பிரிட்டனின் அயல்நாட்டு முதலீட்டின் மொத்தத் தொகையில் 40 சதவீதம் என்கிற அளவுடையதாக இருந்ததால் முதல் இடத்தைப் பெற்றிருந்த தனியாரின் இருப்புப் பாதைப் பத்திரங்கள் (Private railway securities), இந்த 30 சதவீதத்தில் சேர்க்கப்படவில்லை. அதுபோலவே, ஏனைய பொதுப் பயன்பாட்டுத் தொழில்களில் செய்யப்பட்ட முதலீடுகளும் - அயல்நாட்டு முதலீட்டின் மொத்தத் தொகையில் இவற்றின் அளவு 5 சதவீதம் - இந்த 30 சதவீதத்தில் சேர்க்கப்படவில்லை. பிரிட்டனின் அயல்நாட்டு முதலீட்டின் மொத்தத் தொகையாக இங்குத் தரப்பட்டிருப்பது, முழுமை உடையது அன்று. பிற நாடுகளிற் செய்யப்பட்டிருந்த பிரிட்டிஷ் வாணிப முதலீடுகளிற் சில இதில் சேர்க்கப்படவில்லை.[6] அவற்றைச் சேர்த்துப் பார்த்தாலும், இங்கே தரப்பட்டுள்ள சதவீதங்களின் அளவு, குறிப்பிடத்தக்க முறையில், குறைந்து விடாது. 1930லும் நிலைமை இதே முறையில்தான் இருந்தது. முதன்மைப் பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகளில் பிரிட்டனால் செய்யப்பட்டு, அந்த ஆண்டில் நிலுவையாக இருந்த முதலீடுகளிற் பெரும் பகுதி, ''அந் நாடுகளின் அரசாங்கங்களாலும் பொதுப் பயன்பாட்டுத் தொழில்களாலும் பெறப்பட்ட கடன்களின் விளைவே'' என்றும், அத்தகைய நாடுகளில் பயன்படுத்தப்பட்ட பிரிட்டனின் நீண்டகால மூலதனத்தில் (Long term capital) ஏறத்தாழ 70 சதவீதம் இத்தகைய கடன் பத்திரங்களின் வடிவத்தில் இருப்பதே என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.[7] இந்தப் புள்ளிவிவரங்களைப் பார்க்கும்போது, குடியேற்ற முறையில் அமைந்த (Colonial kind) அயல்நாட்டு முதலீடு மிகுதியாக இருக்க முடியாது என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆப்பிரிக்காவின் சுரங்கத் தொழில், அயல்நாட்டு வாணிப முதலீட்டைப் பெரும் அளவில் ஈர்த்திருக்கிறது. ஆனால் அந்த நிலப் பகுதியில் கூட, அரசாங்கத்தின் வாயிலாக நடைபெற்றிருக்கிற முதலீடு மிகப் பெரும் அளவினதாக இருக்கிறது என்னும் உண்மை, ஃப்ராங்கெல் (Frankel) என்பாரின் அதிகாரபூர்வமான ஆராய்ச்சியிலிருந்து தெரிகிற சிறப்பான உண்மைகளில் ஒன்றாகும்.[8]

நேர்முக அயல்நாட்டு முதலீட்டை அயல்நாட்டுக் கடன்களோடு ஒப்பிடுகையில், சீனா, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கு இடையே உள்ள மாறுபாட்டைத் தெளிந்தறிவது, பயன் தரத்தக்க செயலாகும். உலகம் முழுவதற்குமான தனியாரின் புன்னாட்டு முதலீடுகளின் மொத்தத்தொகை உச்ச கட்டத்தை

அடைந்த 1930ஆம் ஆண்டை நாம் எடுத்துக்கொள்வோம். சீன நாட்டில் அப்போது செய்யப்பட்டிருந்த அயல்நாட்டு முதலீட்டில் ஏறத்தாழ 80 சதவீதம், நேர்முக வாணிப முதலீடு என்னும் வடிவத்தைச் சேர்ந்ததாக இருந்தது.[9] இந்த முதலீடுகள், பெரும்பாலும் கடற்கரைப் பகுதிகளிலேயே, ஷாங்காய் (Shanghai) முதலிய இடங்களிலேயே செய்யப்பட்டிருந்தன; ஏறத்தாழ நேர்முகமாகவே ஏற்றுமதித் தொழில்களில் பயன்படுத்தப்பட்டிருந்தன.[10] இம் முதலீடுகள், சீனநாட்டுப் பொருளியலில் கிட்டத்தட்ட ஒரு புறவாயில் பணியையே (A peripheral part) ஆற்றிக்கொண்டிருந்தன. ஆனால் அதே ஆண்டில் ஜப்பானில் பயன்படுத்தப்பட்டிருந்த அயல்நாட்டு மூலதனத்தில், நேர்முக வாணிப முதலீட்டின் பங்கு 26 சதவீதம் என்கிற மிகக் குறைந்த அளவுடையதாக இருந்தது. அந்த ஆண்டில் ஜப்பானில் செய்யப்பட்டிருந்த அயல்நாட்டு முதலீட்டில் ஏறத்தாழ நான்கில் மூன்று பங்கு, ஜப்பானிய அரசாங்கத்திற்குத் தரப்பட்ட கடன்களாகவே இருந்தது. இந்தக் கடன்கள் பெரும்பாலும் ஜப்பானியத் தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் - அதாவது, 1895 முதல் 1914வரை உள்ள ஆண்டுகளில், அதற்கும் முந்திய ஆண்டுகளிற்கூட, பெறப்பட்டவை ஆகும். இவ்வாறாக ஜப்பானிய அரசாங்கம் அயல்நாடுகளில் எழுப்பிய கடன்களின் வாயிலாகவே அந்த நாடு தன்னுடைய அயல்நாட்டு மூலதனத்திற் பெரும் பகுதியைப் பெற்றிருக்கிறது. எனவேதான் ஜப்பானிய அரசாங்கம், அந் நாட்டின் பொருளியல் வளர்ச்சி எவ்வாறு நிகழவேண்டும் என்று அந் நாட்டில் கருதப்பட்டதோ அதற்கு ஏற்ற முறையில், அயல்நாட்டு மூலதனத்தைப் பயன்படுத்த முடிந்தது.[11] ஆனால் அதே சமயத்தில், ஜப்பானியப் பொருளியல் முழுமைக்கும் தேவைப்பட்ட மூலதனத்தில், ஒரு பெரும் பகுதியாக அல்ல, ஒரு சிறு பகுதியாகத்தான் அயல்நாட்டுக் கடன்கள் அமைந்தன என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. ஜப்பானிய அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட்ட பல்வேறு உள்நாட்டு ஏற்பாடுகளின் பயனாக, அந்த நாட்டின் வருமானத்தில் 12 முதல் 17 சதவீதம் உள்ள ஒரு தொகையை, அந்தக் காலத்தில், அந்த நாட்டில், முதலாக்கத்திற்காகப் பயன்படுத்த முடிந்தது. லத்தீன் அமெரிக்காவின் தற்போதைய தலா மெய் வருமானத்தைவிட ஜப்பானின் அந்தக் காலத்துத் தலா மெய் வருமானம் குறைவாக இருந்தது என்பதை நினைவில் நிறுத்திப் பார்த்தால், ஜப்பான் நாட்டில் அந்தக் காலத்தில் செய்யப்பட்ட இந்தச் சேமிப்பின் வீதம் பெரியது என்பது தெளிவாக விளங்கும்.

1920க்குப் பின்னரே ஜப்பான் நாட்டில் அயல்நாட்டு நேர்முக முதலீடுகள் குறிப்பிடத்தக்க அளவில் செய்யப்படலாயின,

ஆனால், அதே சமயத்தில், ஜப்பானிய அரசாங்கத்தால் பிற நாடுகளில் வாங்கப்பட்ட கடன்களின் அளவு, ஏறத்தாழ ஒன்று மில்லை என்று சொல்லத்தக்க நிலையை அடைந்துவிட்டது. இந்த நிகழ்ச்சி வரிசை நம் கவனத்தைக் கவரத்தக்கதாக இருக்கிறது. நாட்டின் பொருளியல் வளர்ச்சியின் தொடக்க நிலையில், ஓரளவுக்கு அயல்நாட்டுக் கடன்கள் வாயிலாக நிதிகளைப் பெற்ற அரசாங்க முதலீடுகள், தலையாய இடத்தைப் பெற்றிருந்தன. மிகப் பல ஆண்டுகளுக்குப் பிறகு, 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளில்தான், நேர்முக அயல்நாட்டு முதலீடுகள், ஜப்பானின் பொருளியல் வளர்ச்சிக்குத் துணைபுரியலாயின. அந்தக் காலத்திற்குள், அங்காடியின் அளவு பெருகிவிட்டது; பொதுவான ஒட்டு மொத்த வசதிகள் (Public overhead facilities) ஏற்பட்டுவிட்டன; அவற்றின் விளைவாகத் தனியார் தொழில் துணிவோரின் முதலீடுகளுக்கான தூண்டுதல், குறிப்பிடத்தக்க அளவில் ஏற்பட்டுவிட்டது.

இதே வகையான நிகழ்ச்சி வரிசை, குறிப்பிடத்தக்க வளர்ச்சியைப் பெற்றுள்ள வேறு சில நாடுகளிலும் ஏற்பட்டிருக்கிறது. ஆஸ்திரேலியாவில், "முதன்மைப் பொருள்களை உற்பத்தி செய்யும் எல்லாத் தொழில்களும் [மேய்ச்சல் தொழிலைத் (Pastoral industry) தவிர], ஓரளவுக்கு, அரசாங்க நடவடிக்கையின் விளைவாகவும், திட்டமிட்டு உருவாக்கப்பட்ட ஏதேனும் ஒருவகை ஆதரவின் பயனாகவுமே வளர்க்கப்பட்டிருக்கின்றன......இருப்புப் பாதைகளை அமைப்பது, நீர்ப்பாசன வசதிகளைத் தருவது, குடியேறுபவர்களுக்கு (Settlers) மூலதனத்தை அளிப்பது ஆகிய செயல்களை அரசாங்கம் மேற்கொண்டு, அப்படி மேற்கொள்வதன் வாயிலாகக் குடியேறுபவர்களுக்கு ஊக்கம் அளித்திருக்கிறது."[12] ஆஸ்திரேலிய அரசாங்கங்கள் அயல்நாடுகளிலிருந்து கடன் வாங்குவது, 1930க்கு முன்னர், மிகப் பெரிய அளவிலும் ஏறத்தாழத் தொடர்ச்சியாகவும் நடைபெற்றுவந்தது. ஆனால் அந்த ஆண்டில் அது திடீரென்று நின்றுவிட்டது. அந்த ஆண்டில் ஆஸ்திரேலியாவில் போடப்பட்டிருந்த அயல்நாட்டு மூலதனத்தின் மொத்தத் தொகையில் ஏறத்தாழ முக்காற் பகுதி, ஆஸ்திரேலிய அரசாங்கங்களால் அயல் நாடுகளில் எழுப்பப்பட்ட கடன் வடிவிலேயே இருந்தது.[13] ஆனால் அந்த ஆண்டுக்குப் பின்னர், 1935 முதல் 1938வரை உள்ள ஆண்டுகளில் ஒரு முறையும், 1945க்குப் பிந்திய ஆண்டுகளில் மற்றொரு முறையுமாக, இரு முறை, தனியார் அயல்நாட்டு மூலதனத்தின் நேர்முக வாணிப முதலீடுகள், மாபெரும் அளவில் ஆஸ்திரேலியாவில் செய்யப்பட்டிருக்கின்றன.

பொது ஊழியங்கள், சமுதாய ஒட்டு மொத்த முதற்பொருள் ஆகிய வடிவங்களில் ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சிக்கான அடிப்படையை அமைப்பதற்கு, அயல்நாட்டுக் கடன்களின்மூலம் நிதிகளைப் பெற்று நடத்தப்படுகிற அரசாங்க முதலீடானது ஒரு பொருத்தமான கருவியாக இருக்க முடியும் என்பதைக் கடந்த கால அநுபவம் எடுத்துக் காட்டுகிறது. வேளாண்மையில் செய்யப்பட வேண்டிய முதலீட்டுக்கான நிதிகளையும் அரசாங்கங்களே பெரும்பாலான சமயங்களில் தரவேண்டியிருக்கிறது என்பதையும், அப்படித் தருவது இயற்கையானதே என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. தங்கள் பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான நிதிகளை அயல் நாடுகளிலிருந்து கடனுகப் பெறுகிற நாடுகள், முழுப் பொருளியலுக்குமான ஒரு வளர்ச்சித் திட்டத்திற்கு ஏற்ற முறையில் அந் நிதிகளைப் பயன்படுத்த முடியும். ஜப்பானில் இப்படித்தான் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

ஆனுல் ஒன்று: அயல்நாட்டு நிதிகளை ஓரளவுக்கு உள்நாட்டுச் சேமிப்புக்குப் பதிலாகப் பயன்படுத்திக்கொள்ளும் போக்கும், அப்படிப் பயன்படுத்துவதன் விளைவாக நுகர்வின் அளவு உயர்ந்து, மூலதனத் திரட்சி வீதத்தில் எத்தகைய உயர்வும் ஏற்படாமல் போகிற நிலையும், ஏற்படக்கூடும். ஒவ்வோர் அயல் நாட்டுக் கடனும், குறிப்பிட்ட ஓர் உற்பத்தித் திட்டத்திற்கு மட்டுமே செலவிடப்பட வேண்டும் என்கிற திட்டவட்டமான கட்டுப்பாட்டோடு தரப்படுகிற நிலையில்கூட இவ்வாறு நடைபெறக்கூடும். அயல்நாட்டு மூலதனத்தின் வரவு நடைபெறுகிற அதே நேரத்தில் உள்நாட்டுச் சேமிப்பு முயற்சிகளில் தளர்ச்சி ஏற்படுமானுல், முதலாக்கத்தின் மொத்த வீதத்தில் எத்தகைய உயர்வும் ஏற்படாமற் போய்விடும். பல்வேறு நாடுகளின் மெய் வருமானம், நுகர்வு ஆகியவற்றின் அளவுகளில் உள்ள வேறுபாட்டின் விளைவாக, இத்தகைய தளர்ச்சிக்கான தூண்டுதல், ஆற்றல் வாய்ந்த முறையிலும் தொடர்ச்சியாகவும் தற்காலத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானுல், நேர்முக வாணிப முதலீடுகள், நம் நூலின் முதல் அத்தியாயத்தில் ஆராயப்பட்ட அங்காடி இடர்ப்பாட்டில் (Market difficulty) சிக்குண்டு தத்தளிக்கின்றன என்ருல், பன்னுட்டுக் கடன்களைப் பயன்படுத்தும் நிலையானது, நம் நூலின் மூன்ருவது அத்தியாயத்தில் ஆராயப்பட்ட இடர்ப்பாட்டால் அல்லல் உறுகிறது. பல்வேறு நாடுகளின் தலா வருமானம், நுகர்வு ஆகிய அளவுகளுக்கு இடையே உள்ள - நாளுக்கு நாள் தளர்ந்துவருகிற பெரிய வேறுபாடுகளின் விளைவாக, ஏழை நாடுகளின் நுகர்வு நாட்டமானது, பெரிய அளவுடையதாகவும் நாளுக்கு நாள்

வளர்ந்து பெருகும் இயல்பு உடையதாகவும் மாறுவதே அந்த இடர்ப்பாடு ஆகும். நேர்முக வாணிப முதலீட்டின் விளைவாக ஏற்றத் தாழ்வுள்ள பொருளியல் வளர்ச்சி ஏற்படுகிறது என்ற போதிலும், அந்த முதலீட்டால் திட்டவட்டமான ஒரு நன்மை ஏற்படுகிறது. முதலீட்டுக்கு உள்ளாகிற நாட்டின் எல்லைகளுக்குள் அமைந்துள்ள மெய்ம் முதற் பொருளின் தொகையில், ஏறத்தாழத் தவிர்க்க முடியாத வகையில் ஒரு நிகர உயர்வை அம் முதலீடு ஏற்படுத்திவிடுகிறது என்பதே அந்த நன்மை. ஆனால், 'தன்னுரிமையுள்ள' பன்னாட்டு முதலீட்டால் ('Autonomous' international investment), அத்தகைய நன்மை எதுவும் தவிர்க்க முடியாத வகையில் ஏற்படுகிறது என்று கூற முடியாது. அத்தகைய முதலீட்டால் மெய்ம் முதற் பொருளில் ஏற்படக்கூடிய உயர்வானது, நேர்முகப் பதிலீடு அல்லது மறைமுகப் பதிலீட்டின் (Direct or indirect substitution) விளைவாக அழிக்கப்பட்டுவிடுகிறது. தன்னுரிமையுள்ள அயல்நாட்டு முதலீட்டால் எந்த அளவுக்கு முதலாக்கம் ஏற்பட முடியும் என்பது, அந்த முதலீட்டைப் பெறுகிற நாட்டில் அந்த முதலீட்டிற்குத் துணை செய்கிற முறையில் எந்த அளவுக்கு உள்நாட்டு நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன என்பதையே பொறுத்திருக்கிறது.

இந்த உண்மையானது, வளர்ச்சி குறைந்த நாடுகளின் அரசாங்கங்களுக்குப் பிற நாடுகளின் அரசாங்கங்கள் அல்லது தனிப்பட்ட முதலீட்டாளர்கள் தருகிற கடன்களுக்கு எந்த அளவு பொருந்துமோ அதைவிட மிகுதியான அளவுக்கு, ஓர் அரசாங்கம் இன்னோர் அரசாங்கத்திற்கு அளிக்கிற மானியங்களுக்குப் பொருந்தும். பன்னாட்டுக் கடன்களைப்போலவே பன்னாட்டு மானியங்களையும் முதலாக்கப் பணிக்குப் பயன்படுத்த முடியும் என்பது உண்மையே. கடன்களைப் பொறுத்தவரையில், பின்னர் அவற்றின் வட்டிகளைச் செலுத்துவதும் அசலைத் திருப்பித் தருவதும் எளிதில் நடக்கக் கூடியனவாக இருப்பதற்காக, அவற்றைக் குறிப்பிட்ட உற்பத்தித் திட்டங்களுக்கே பயன்படுத்த வேண்டும் என்கிற ஒரு வகைக் கட்டாயம் பொதுவாக இருக்கிறது. ஆனால் மானியங்களைப் பொறுத்தோ இந்த வகைக் கட்டாயம்கூட இல்லை. மானியங்களை நேர்முகமாகவோ மறைமுகமாகவோ நுகர்வுக்காகப் பயன்படுத்த முடியும். அப்படிப் பயன்படுத்துவதால் பின்னர் எத்தகைய இடர்ப்பாடும் ஏற்படாது.

இந்த உண்மைகள் சென்ற அத்தியாயத்தின் இறுதியில் எழுப்பப்பட்ட கேள்விகளையே மீண்டும் நமக்கு நினைவூட்டுகின்றன. பொருளியல் தனிமை ஒரு சிறந்த தீர்வு அன்று என்று நாம் கருதியதால், பன்னாட்டு வருமான மாற்றங்கள் ஒரு

மாற்றுத் தீர்வாக இருக்க முடியுமா என்பதைப்பற்றிக் கருத்தாய்வு செய்யலானோம். நம்மால் கருத்தாய்வு செய்யப்பட்ட நிலைமையில், ஒரு புறம், பன்னாட்டு வருமான வேறுபாடுகளின் விளைவாக அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் இடைவெளிகள் ஏற்படுகின்றன என்பதையும், மற்றொரு புறம், இந்த இடைவெளிகளை நிரப்புவதற்காகப் பன்னாட்டு வருமான மாற்றல்கள் நிகழ்கின்றன என்பதையும் நாம் தெளிந்து அறிந்தோம்.

இந்த நிகழ்ச்சி வரிசையின் முதற் பகுதியானது, அதாவது, முன்னேறிய நாடுகளின் வாழ்க்கைத் தரங்களின் கவர்ச்சியின் விளைவாகப் பன்னாட்டுச் செலுத்தல் நிலையில் ஒத்த நிலையின்மை ஏற்படுவது, அவ் வரிசையின் இரண்டாம் பகுதியைவிடக் கூடுதலான உறுதி உடையதாகும். அது முற்றிலும் ஏற்புடைய ஒரு கருத்தாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆனால் இரண்டாம் பகுதியோ வெறும் கானல் நீராக மாறிவிடும் இயல்புடையது ஆகும். பன்னாட்டு வருமான மாற்றல்களை ஏற்படுத்த முயல்கிற சக்திகள் இருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால் அம் மாற்றல்கள் தாமாகவே நிகழக்கூடிய வகையில் அமைந்த அமைப்பு முறை எதுவும் இல்லை என்பதைத்தான் நான் எடுத்துக் காட்ட விழைகிறேன். அம் மாற்றல்கள், பன்னாட்டு அரசியற் பொருளியலால் (International political economy) தீர்மானிக்கப் படவேண்டியவையாக இருக்கின்றன என்பது, தவிர்க்க முடியாதது ஆகும்.

பன்னாட்டு வருமான மாற்றல்கள் உண்மையில் ஏற்படுமானால், அவற்றின் விளைவாக அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஒத்த நிலை ஏற்படும் என்பது மெய்தான். பன்னாட்டு வருமான வேறுபாடுகளின் பயனாக அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஏற்படுகிற இடைவெளிகளை நிரப்ப அரசாங்க வருமான மாற்றல்கள் முன்வராவிட்டால், தனியாரின் மூலதன இயக்கங்கள் அப் பணியை நிறைவேற்ற முன்வரும் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. அதற்கு மாறாக, அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் காணப்படுகிற தீவிரமான அல்லது திரும்பத் திரும்பத் தோன்றுகிற இடர்ப்பாடுகளின் பயனாகத் தனியாரின் நிதிகள், குறைந்த வருமான நாடுகளுக்குச் செல்ல அஞ்சி ஒதுங்கிவிடக் கூடும்; அல்லது தவறான திசைகளில் செல்லவும் கூடும். நாணய மாற்றுக் கட்டுப்பாட்டின் (Exchange control) பயனாக வருமான மாற்றல்களுக்கு ஏற்படுகிற இடையூறுகள், அரசாங்க உறுதிகளின் (Guarantees) விளைவாகக் குறைக்கப்படக்கூடும் என்றபோதிலும், அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் காணப்படுகிற ஒத்த நிலையின்மையானது, தற்போது உள்ள சூழ்நிலையில், தனியாரின்

அயல்நாட்டு முதலீட்டுக்கான ஒரு தூண்டுதலாக இல்லை; அதனைத் தடுத்து நிறுத்தும் ஓர் இடையூறாகவே இருக்கிறது. இந்த உண்மையை மறுக்க முடியாது.

நாம் மேலே குறிப்பிட்ட நிகழ்ச்சி வரிசைகளின் இரண்டு பகுதிகளும் நடைமுறை வாழ்க்கையில் காணப்படுவன என கற்பனை செய்துகொண்டாலும், பொருளியல் வளர்ச்சிக்கான முதலாக்கத்திற்கு அவை எந்த அளவு துணை புரியும் என்பதை நாம் எண்ணிப் பாராமல் இருக்க முடியாது. பன்னாட்டு வருமான வேறுபாடுகளின் விளைவாக அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஏற்படுகிற இடைவெளிகளைப் பன்னாட்டு வருமான மாற்றல்கள் நிரப்பிவிடுகின்றன. அயல்நாட்டு நிதி உதவியின் பயனாக, டாலர் பற்றாக்குறையின் அளவு குறையும் என்பதில் ஐயம் இல்லை; ஆனால் மூலதனப் பற்றாக்குறையின் அளவு குறையுமா? பன்னாட்டு வருமான மாற்றல்கள் ஏற்பட்டபோதிலும் முதலாக்கச் சிக்கல் சிறிதளவும் தீர்க்கப்படாமல் இருக்கக்கூடும். இயற்கையானது அதனுடைய பாதை வழியே செல்ல அனுமதிக்கப்பட்டால், ஏழை நாடுகளால் பெறப்படுகிற உதவித் தொகைகள், பன்னாட்டு மெய் வருமான அளவுகளில் உள்ள வேறுபாட்டின் பயனாக ஏழை நாடுகளில் ஏற்படுகிற உயர்ந்த அளவு நுகர்வு நாட்டத்தைத் திருப்திப்படுத்துவதற்கே பயன்படுத்தப்படும். எதிர் காலத்தில் உயர்ந்த வாழ்க்கைத் தரங்களைப் பெறுவதற்கான நிலையான அடிப்படை எதுவும் இந்த நாடுகளில் ஏற்படமாட்டா.

பன்னாட்டு வருமான மாற்றல்களால் ஏற்படுகிற உயர்ந்த அளவு நுகர்வு, அதன் அளவிலேயே தீமை மிகுந்தது என்று நான் கூறவில்லை. நுகர்வுக்கு உரிய நிதிகள் பணக்கார நாடுகளிலிருந்து ஏழை நாடுகளுக்கு மாற்றலாவதால், உலக மக்களுடைய மகிழ்ச்சியின் மொத்த அளவு பெருகக்கூடும். அத்தகைய மாற்றல், நல்வாழ்வுப் பொருளியலின் (Welfare Economics) கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது விரும்பத்தக்க ஒன்றாக இருக்கலாம். ஆனால் அந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போதுகூட அம் மாற்றலில் சில குறைபாடுகள் இருக்கக்கூடும்.[14] நான் இங்கே எடுத்துக் காட்ட விரும்புவதெல்லாம், அம் மாற்றலானது, வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கலுக்குத் தானே இயங்கும் ஒரு தீர்வாக (Automatic solution) அமையவில்லை என்பதுதான்.

தன் நடப்பு நுகர்வுக்காக அயல்நாட்டுப் பண உதவியை ஏற்றுக்கொள்வதில் ஒரு நாட்டுக்கு உள்ள ஆற்றல் அளவற்றதாக இருக்கலாம். ஆனால் அந்த உதவியானது முதலாக்கப் பணிக்குப்

பயன்படுத்தப்படும்போது, அந்த உதவியை ஏற்றுக்கொள்வதற்கான ஆற்றலுக்குத் திட்டவட்டமான ஒரு வரையறை இருக்கிறது. ஒரு நாட்டினுடைய பின்தங்கிய நிலைமை, பொருளியல் வளர்ச்சியின் தொடக்கநிலைகளில் பல்வேறு ஒட்டு மொத்த வசதிகள் இல்லாமலிருப்பது ஆகியவற்றின் விளைவாகவே அந்த வரையறை எழுகிறது. முதற்பொருள் வளர்ச்சித் திட்டங்கள் நிறைவேறவேண்டுமானால், மக்களின் இடப் பெயர்ச்சி (Mobility), பருப் பொருள்களின் இடப் பெயர்ச்சி ஆகியவை, பொதுவாக ஏராளமான அளவில் நடைபெற்றாக வேண்டும். வளர்ச்சியற்ற நாடுகளில், போக்குவரத்து அமைப்புகள், வீடுகள், பலதிறப்பட்ட பொதுப் பயன்பாட்டு வசதிகள் ஆகியவை போதிய அளவில் இல்லாத காரணத்தால், இடப் பெயர்ச்சியானது தடைப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஓர் ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டம் நிறைவேற வேண்டுமானால், எத்தனையோ மக்கள், தங்களுக்குப் பழக்கமான தொழில்களையும் வாழும் இடங்களையும் விட்டு அகன்று, புதிய தொழில்களையும் இடங்களையும் ஏற்றாக வேண்டும்; பள்ளத்தாக்குப் பணிக்குத் தேவைப்படுகிற மக்களையும் பண்டங்களையும் அங்குக் கொண்டு செல்வதற்குத் தேவையான சாலைகள் அமைக்கப்படவேண்டும்; பள்ளத்தாக்குத் திட்டப் பணி தொடங்குவதற்கும் முன்னரே, அங்குப் பணியாற்றவிருக்கும் தொழிலாளர்களுக்காக அப் பகுதியில் வீடுகள் கட்டப்பட வேண்டும். இவ்வளவு பணிகளையும் செய்து முடிக்கக் குறிப்பிடத்தக்க காலம் பிடிக்கும். அது மட்டுமன்று; இவற்றின் விளைவாக, அயல்நாட்டு உதவியை முதலாக்கத்திற்காகத் தக்க முறையில் பயன்படுத்தக்கூடிய அளவுக்கு ஓர் உண்மையான வரையறையும் ஏற்பட்டுவிடுகிறது.[15] பத்தொன்பதாம் நூற்றாண்டில், குறைந்த மக்கள்தொகை உடைய நாடுகளுக்கு, அயல்நாட்டு முதலீட்டின் பெரும் பகுதியும் ஏராளமான மக்களும் சென்றபோது அந் நாடுகளில் இருந்ததைப் போன்ற நெகிழ்ச்சியான நிலைமை தற்காலத்தில் இல்லை.

உள்நாட்டு முட்டுக்கட்டைகளை அகற்றுவதற்காகத் திட்டமிட்டு முயற்சிகளை மேற்கொள்ளாத நிலையில் கிடைக்கிற அயல்நாட்டு நிதி உதவி எதுவும், தொடக்கத்தில் முதலீட்டுத் துறையிலேயே பயன்படுத்தப்பட்டால்கூட, மறைமுகமான முறையில், அது நுகர்வைப் பெருக்கும் பணியில்தான் ஈடுபட்டுவிடும். இப்படி நேரிடுவது, அதன் அளவில், தீமை நிறைந்தது என்பது அன்று நம்முடைய கருத்து. இப்படி நேரிட்டால், அயல்நாட்டு நிதி உதவியால், நீடித்த பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான உள்நாட்டு அடிப்படைகளை அமைக்க முடியாமற் போகும் என்பதைத்

தான் நாம் எடுத்துக்காட்ட விரும்புகிறோம். இரண்டாம் உலகப் போருக்குப் பிந்திய காலத்தில் பிலிப்பைன்சுக்கு (Philippines) அமெரிக்கா தந்துள்ள உதவி, அத்தகைய தோல்விக்கு ஓர் எடுத்துக்காட்டு என்று, அமெரிக்காவில் உள்ள சிலரால் சில சமயங்களில் சுட்டிக் காட்டப்படுகிறது. இந்தக் கூற்றில் ஓரளவு உண்மை இருக்கிறது என்றே கருதுகிறேன். [அமெரிக்காவிடமிருந்து பிலிப்பைன்ஸ், ஆறு ஆண்டுகளில் பெற்றுள்ள தொகை 760 மில்லியன் டாலராகும், இதைத் தவிர, அந் நாடு, ஏறத்தாழ இதே அளவுள்ள ஒரு தொகையை, ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தின் நடப்புக் கணக்குச் செலுத்தல்களாகப் (Payments on current account) பெற்றிருக்கிறது.]

முதலீட்டை ஏற்றுக்கொள்வதில் ஒரு நாட்டில் உள்ள இடர்ப்பாடுகள், அயல்நாட்டு நிதி உதவிகளைப் பயன் தரத்தக்க முறையில் கையாள்வதில் உள்ள பொதுவான இடர்ப்பாடுகள் ஆகிய இரண்டு இடர்ப்பாடுகள் கருத்தளவில் வேறு வேறானவையாக இருந்தபோதிலும், முதல் வகை இடர்ப்பாடுகளால் இரண்டாம் வகை இடர்ப்பாடுகள் கூடுதலாகின்றன என்பது உண்மையே. பன்னாட்டு வருமான வேறுபாடுகளின் காட்சிவிளைவால் எந்த அளவுக்குப் பொது இடர்ப்பாடு ஏற்படுகிறது என்பது கருத்து வேற்றுமைக்கு உரிய ஒரு செய்தியாகும். அக் காட்சிவிளைவால் மிகக் கூடுதலான இடர்ப்பாடு ஏற்படும் என்று சிலரும், மிகக் குறைந்த இடர்ப்பாடே ஏற்படும் என்று சிலரும் கருதக்கூடும். என்னைப் பொறுத்த வரையில், முன்னேறிய வாழ்க்கைத் தரங்களின் கவர்ச்சியானது, உள்நாட்டுச் சேமிப்புகளைத் திரட்டும் பணியைத் தீவிரமாகப் பாதிக்கிறது என்பதோடு, பொருளியல் வளர்ச்சிக்காக அயல்நாட்டு உதவிகளைப் பயன்படுத்தும் பணியையும் தீவிரமாகப் பாதிக்கிறது என்று கருதுகிறேன். இந்தக் கவர்ச்சி இயற்கையானது. இஃது ஏன் ஏற்படுகிறது என்பதையும் நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் இந்தக் கவர்ச்சியின் விளைவாக, குறைந்த வருமானத்தை உடைய ஒரு நாடு, தன் நுகர்வு நாட்டத்தில் உயர்வு ஏற்படாமல் இருப்பதற்காகத் திட்ட வட்டமான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வது மிக இன்றியமையாத செயலாக ஆகிவிடுகிறது. தற்கால உலகத்தில் காட்சிவிளைவின் ஆற்றல் மிகக் கூடுதலாக இருப்பதால், அயல்நாட்டு உதவியை முதலாக்கத்திற்குப் பயன்படுத்த வேண்டுமானால், உள்நாட்டு முனையில் இத்தகைய நடவடிக்கைகளை எடுத்தே ஆகவேண்டும். அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் இடைவெளிகள் ஏற்படுவதும், அந்த இடைவெளிகளை நிரப்பப் பன்னாட்டுக் கடன்கள் அல்லது மானியங்கள் பயன்படு

வதும் ஆகிய ஒருவகைச் சூழ்நிலையில் குறைந்த வருமானமுள்ள ஒரு நாடு சிக்கிக்கொள்வது, எளிதில் நிகழக்கூடியதாகும். அத்தகைய சூழ்நிலையில், மூலதன வளர்ச்சியின் தேவைகள் முற்றிலும் புறக்கணிக்கப்படும் நிலைமை எளிதில் ஏற்படக்கூடியதே.

குறிப்பிட்ட அயல்நாட்டுக் கடன்களை அல்லது மானியங்களைக் குறிப்பிட்ட முதலீட்டுப் பணிகளுக்கே பயன்படுத்த வேண்டும் என்கிற திட்டவட்டமான அடிப்படையில் தருவது, அக் கடன்களும் மானியங்களும் பொருள் உற்பத்திக்கு ஏற்ற முறையில் கையாளப்படுவதை ஓரளவு உறுதி செய்யக்கூடும். ஆனால் நாம் மேலே குறிப்பிட்ட சிக்கலுக்கு உரிய ஓர் அடிப்படையான தீர்வாக இஃது இருக்கமுடியாது. தொடக்க நிலையில் உள்நாட்டுச் சேமிப்பே இல்லாமல் இருக்கிற ஒரு சூழ்நிலையில்தான், இந்த ஏற்பாடு, முழுப் பயன் அளிக்கவல்லதாக இருக்கும். ஏனைய சூழ்நிலைகளில், முதலீட்டு வீதத்தைத் தவறாமல் உயர்த்தவல்ல ஒரு முறையாக அஃது இருக்கமுடியாது. ஏனென்றால், உள்நாட்டு நிதி மூலங்களுக்குப் (Domestic Sources of finance) பதிலாக அயல்நாட்டு நிதி மூலங்கள் பயன்படுத்தப்படுவதை அந்த முறையால் தடுக்க முடியாது. ஐரோப்பிய மீட்சித் திட்டத்தில் (European Recovery Programme), மறுபுற நிதிகளைச் (Counterpart funds) சீரமைப்பு மற்றும் புதிய முதலீட்டுப் பணிகளுக்காக வழங்குவதில், குறிப்பிட்ட நிதிகளைக் குறிப்பிட்ட திட்டங்களோடு பிணைப்பது என்னும் இந்த முறை ஓரளவுக்குக் கையாளப்பட்டது. நான் கேள்விப்பட்டு இப்போது இங்கே தர இருக்கிற 'கதை' (நிகழ்ச்சி) ஆதாரமற்றது என்பதில் சிறிதும் ஐயமில்லை என்றபோதிலும், மேற்படி முறை எப்படிப் பயனற்றதாக இருக்கிறது என்னும் உண்மை இக் 'கதை'யிலிருந்து தெளிவாக விளங்கும். இந்தக் 'கதை'யின்படி, ஆஸ்திரிய அரசாங்கம், வியன்னாவில் உள்ள இசை நாடக அரங்கைத் திருத்தி அமைப்பதற்காக மறுபுற நிதிகளை வழங்கும்படி கேட்டுக்கொண்டதாம். இஃது உற்பத்தியைப் பெருக்கும் ஒரு முதலீடாக இல்லை என்றும், எனவே இந்தப் பணிக்காக நிதிகளை வழங்க முடியாது என்றும் ஈ.சி.ஏ. (E.C.A.) விடை அளித்துவிட்டதாம். அந்த விடை கிடைத்ததும், தன் நாட்டு மலைப் பகுதியில் மின்பொறி நிலையம் ஒன்றைத் தான் தன் நிதிகளைக் கொண்டு நிறுவிக்கொண்டிருப்பது, ஆஸ்திரிய அரசாங்கத்திற்கு நினைவு வந்ததாம். மீண்டும் அந்த அரசாங்கம் ஈ.சி.ஏ.விடம் சென்று, இந்த நிறுவனப்பணிக்கு மறுபுற நிதிகளை வழங்கும்படி கேட்டுக்கொள்ள, ஈ.சி.ஏ.வும் அதற்கு இணங்கியதாம். இந்த நிகழ்ச்சிக் கோவையில் ஆஸ்திரியர்கள் தந்திரமான முறையில்

தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறார்கள். மின் பொறி நிலையத்திற்கான நிதிப்பொறுப்பை ஈ.சி.ஏ. ஏற்கும்படி செய்துவிட்டு, அப்படிச் செய்ததால் மிச்சமாகிற தங்கள் நிதிகளைக் கொண்டு இசை நாடக அரங்கைத் திருத்தி அமைக்கலாயினர்.

கடன் அளிக்கும் அல்லது நிதி வழங்கும் ஒரு நாடு ஏன் தன்னுடைய நிதி உதவியைக் குறிப்பிட்ட முதலீட்டுத் திட்டத்தோடு பிணைக்க விரும்புகிறது என்பது நமக்குப் புரிகிறது. ஆனால் இந்த முறையைக் கையாள்வதால்மட்டும் எதிர்பார்க்கிற பயன் விளைந்து விடாது. உதவி பெறும் நாட்டின் பொருளியல் வளங்கள் அனைத்தையும் எவ்வாறு பயன்படுத்துவது என்பதைப்பற்றி விரிவான முறையில் திட்டமிடாமல் நம் நோக்கத்தை நிறைவேற்ற முடியாது. ஐரோப்பிய மீட்சித் திட்டத்தில் ஈ.சி.ஏ.வின் பொதுவான ஆதரவோடு, அப்படித்தான் திட்டமிடப்பட்டது. பருப்பொருள் கட்டுப்பாடுகளின் வாயிலாகச் செய்யப்படுகிற திட்டமிடுதலைவிட நிதிவழிக் கைக்கோள்கள் (Fiscal policies) பணவழிக் கைக்கோள்கள் (Monetary policies) ஆகியவற்றின் வாயிலாகச் செய்யப்படுகிற திட்டமிடுதலையே ஐக்கிய அமெரிக்கா விரும்பியது. திட்டமிடுகிற முறை எதுவாக இருந்த போதிலும், திட்டமிடுவது என்கிற கோட்பாடு ஏற்றுக்கொள்ளப் பட்டது என்பதுதான் நம்மால் இங்குக் கவனிக்கப்பட வேண்டிய உண்மை. "தடையிலாத் தொழில் துணிவின் (Free enterprise) சார்பாக இருப்பதாகக் கருதப்படும் ஒரு நாடு, அதாவது 'முதலாளித்துவ' அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளின் மையத் திட்டமிடும் பணியை (Central planning) வன்மையாக ஆதரித்தது என்பது, நம் காலத்துப் புதுமைகளில் ஒன்றாகும்."[16] இந் நிலைமை புதிர்போலக் காணப்பட்டாலும், சூழ்நிலையின் தேவைகளுக்கு உண்மையிலேயே பொருத்தமானதாக இருந்திருக்கிறது. ஐரோப்பிய மீட்சித் திட்டம், முதலாவதாகவும் முக்கியமானதாகவும், ஒரு முதலீட்டு இயக்கமே ஆகும். முதலாக்கத்திற்காகப் பன்னாட்டு நிதிகளைப் பயன்படுத்துவதுபற்றிய பல உண்மைகளை அதிலிருந்து தெரிந்துகொள்ளலாம் என்றபோதிலும், உள் நாட்டு நிதி வசதிகளையும் அயல்நாட்டு நிதி வசதிகளையும் பல்வேறு செலவினங்களுக்கு ஒதுக்கீடு செய்வதில் முதலாக்கத்திற்குத் தலை சிறந்த இடம் கிடைப்பதற்கு ஏற்ற வகையில் திட்டங்களும் கைக்கோள்களும் வகுக்கப்படுவது மிகமிக இன்றியமையாதது என்பதுதான், அது நமக்குக் கற்பிக்கிற முதற் பெரும் பாடமாகும். அமெரிக்க நிதி உதவியைப் பெறுகிற நாடுகள், அந்த உதவிக்கு ஈடான அளவு தொகையைத் தங்கள் உள்நாட்டு மூலங்களிலிருந்து திரட்ட வேண்டும் என்பதை, அமெரிக்க ஈ.சி.ஏ. தொடக்கத்தி

விருந்தே வற்புறுத்தி வந்திருக்கிறது. உண்மையைச் சொல்வதானல், இந்தத் திட்டத்தின்படி மேற்கு ஐரோப்பாவில் முதலாக்கத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட உள்நாட்டு நிதிகள், அமெரிக்காவினுல் அளிக்கப்பட்ட நிதிகளைவிடப் பல மடங்கு கூடுதலாக இருந்திருக்கின்றன.[17]

## வாணிப மாற்றுவீதத்தின் சிறப்பு

1950 ஆம் ஆண்டு ஜூன் திங்களில் தென் கொரியாவின்மீது ஏற்பட்ட படையெடுப்பின் பயனுக, பொருளியல் வளர்ச்சிக்கான அமெரிக்க உதவி, ஓரளவுக்குப் பின்னணிக்குத் தள்ளப்பட்டு விட்டது. அதற்கு மாருக, பாதுகாப்பு முயற்சி முதலிடம் பெற்று விட்டது. ஆனுல் அதே சமயத்தில், குறைந்த வருமான நாடுகளுக்கு வேண்டுமென்றே செய்யப்பட்ட உதவிக்குப் பதிலாக, அந் நாடுகளின் முதலாக்கத்திற்கான மற்ருேர் அயல்நாட்டு ஊற்றுக்கால் முன்னணியில் இடம் பெறலாயிற்று. அந் நாடுகளின் வாணிப மாற்று வீதங்களில் (Terms of trade) ஏற்பட்ட மாபெரும் உயர்வே அந்த ஊற்றுக்கால் ஆகும். இந்த உயர்விற் பெரும்பகுதி 1951ஆம் ஆண்டில் மறைந்துவிட்டது என்ற போதிலும் ஒரு பகுதி இன்னமும் இருக்கிறது. 1950ன் இறுதியில் நிலவிய மூலப் பொருள்களின் விலைகளை அடிப்படையாகக்கொண்டு பார்த்தால், முதன்மைப்பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகள், 1950ல் ஏற்றுமதி செய்த அதே அளவு பண்டங்களுக்கு, 1951ல், 1950ல் பெற்றதைவிட 3000 அல்லது 4000 மில்லியன் டாலர் கூடுதல் தொகையைப் பெறமுடியும் என்று கணக்கிடப்பட்டது. ஆனுல் 1951ல் மூலப் பொருள்களின் விலைகள் குறையலாயின; தொழில்துறைப் பொருள்களின் விலைகள் உயர்ந்தன. இவற்றின் விளைவாக, கூடுதல் வருமானத்தின் அளவு, ஏறத்தாழ 2000 மில்லியன் டாலராகக் குறைந்துவிட்டது. ஆனுல், 2000 மில்லியன் டாலர் என்பதும் பெரிய தொகையே அல்லவா? (அது, செலவிட முடியாத டாலர்களின் திரட்சியாகமட்டும் இருந்திருந்தால், அதனுல் பெரும் பயன் விளைந்திராது. ஆனுல் அஃது அப்படி இல்லை. பலதிறப்பட்ட முதற்பொருள்களை ஏற்றுமதி செய்யக்கூடிய நிலையில் ஐக்கிய அமெரிக்கா இருந்தது. மேற்கு ஜெர்மனி, பெல்ஜியம், இத்தாலி ஆகிய நாடுகளின் பொறி செய் தொழில்களில் ஓரளவுக்கு வேலையின்மை நிலை இருந்ததால், அந் நாடுகளிலிருந்தும் ஓரளவுக்கு முதற் பொருள்களை இறக்குமதி செய்து கொள்ள முடிந்தது.)

வாணிப மாற்று வீதங்களில் ஏற்பட்ட இந்த மாறுதல், தொழில்துறை நாடுகளிலிருந்து முதன்மைப் பொருள்களை

உற்பத்தி செய்யும் நாடுகளுக்குப் பன்னாட்டு வருமான மாற்றல்கள் ஏற்படுவதற்கு ஈடானதாகும். ஐக்கிய நாடுகள் மன்றத்தின் அண்மைக் கால அறிக்கைகள், பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான நிதிகளை இந்த முறையின்மூலமும் பெறலாம் என்கிற உண்மையை உலகத்தின் பார்வைக்குக் கொண்டுவந்திருப்பதோடு, உலகத்தின் ஏழை நாடுகளின் முதலாக்கத்திற்கு வாணிப மாற்று வீதங்களின் வாயிலாகக் கிடைக்கக்கூடிய நிதி வசதிகளைப் பற்றி அழுத்தந் திருத்தமாக எடுத்துக் கூறியுள்ளன. இந் நாடுகளின் ஏற்றுமதி விலைகளில் ஏற்படுகிற உயர்வின் விளைவாக, ஏற்றுமதிகளால் இவற்றிற்குக் கிடைக்கிற தொகை உயர்கிறது. அப்படி உயர்வதால், அவற்றின் பொருளியல் முன்னேற்றத்திற்குத் தேவைப்படுகிற முதற் பொருள்களை மிகுதியான அளவில் அவற்றால் இறக்குமதி செய்ய முடிகிறது. 1947ன் வாணிப மாற்று வீதத்தை 1913க்கு வைத்துப்பார்த்தால், "பன்னாட்டு வாணிபத்தின் வாயிலாக, வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளியல் வளர்ச்சிக்கு 2500 மில்லியன் டாலர்முதல் 3000 மில்லியன் டாலர்வரை கிடைக்கும்" என்றும் (பக்கம் 17), "பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான பொருள்களை விரும்பியபடி இறக்குமதி செய்வதற்கு வசதியான வடிவத்தில் அந்தத் தொகை இருக்கும்" என்றும் (பக்கம் 18), ஐ. நா. மன்றத்தால் 1949ல் வெளியிடப்பட்டுள்ள "வளர்ச்சி குறைந்த நாடுகளின் ஏற்றுமதிகள், இறக்குமதிகள் ஆகியவற்றின் தராதர விலைகள்" (Relative Prices of Exports and Imports of Underdeveloped Countries) என்னும் நூல் தெரிவிக்கிறது. கோலின் கிளார்க் (Colin Clark) முன்னறிந்து தெரிவித்திருப்பதுபோல, முதன்மைப் பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகளின் வாணிப மாற்று வீதங்கள் எதிர்காலத்தில் மேலும் மேலும் சிறந்த நிலையை அடையுமானால், அதன் விளைவாக ஏழை நாடுகளின் பொருளியல் வளர்ச்சிக்குக் கூடுதல் நிதி கிடைக்கும் என்பதுமட்டும் அன்று; இந்தப் புத்தகத்தில் ஆராயப்படுகிற தலையாய சிக்கல் முழுவதுமே தீர்க்கப்பட்டுவிடும்.

முதலாக்கத்திற்கு உரிய இந்தச் சாதனத்தின் விளைவாக அயல்நாட்டுக் கடன்சுமை ஏற்படுவதில்லை என்பதோடு, பன்னாட்டுக் கடன்கள், மானியங்கள் ஆகியவற்றின் பயனாக ஏற்படுகிற பல்வேறு இடர்ப்பாடுகளும் ஏற்படுவதில்லை என்பது, இச் சாதனத்தின் தலையாய நன்மை ஆகும். ஆனால் இதனால் விளைகிற நலன் பல்வேறு வளர்ச்சி குறைந்த நாடுகளிடையே ஒத்த நிலையில் வழங்கப்படுவதில்லை என்பதும், தாறுமாறான முறையில் அஃது அவற்றை அடைகிறது என்பதும் இதன் தீமைகளாகும். எடுத்துக்காட்

டாக, 1950-51ல் ஏற்பட்ட மூலப் பொருள் விலை வீக்கத்தின் பயனாக, இந்தியாவுக்கு அதன் வாணிப மாற்று வீதத்தில் எத்தகைய நன்மையும் ஏற்படவில்லை; ஆனால் மலேயாவுக்கோ மிகப் பெரிய நலன் விளைந்தது. முதலாக்கத்திற்கான இந்தச் சாதனத்தின் பங்கீடு, பல்வேறு நாடுகளின் தேவைகளுக்கு ஏற்ற முறையில் இல்லாமல், உலக அங்காடியில் சிறப்பாகத் தேவைப்படுகிற பொருள்களை வழங்குதற்கு உரிய திறனையே பொறுத்திருக்கிறது.

முதன்மைப் பொருள்களின் தராதர விலை உயர்வால் விளைகிற நலன் பல்வேறு நாடுகளுக்கிடையே ஒத்த முறையில் பங்கிடப்படவில்லை என்னும் உண்மை, பொதுவாக உணரப்பட்டிருக்கிறது. ஆனால் வாணிப மாற்று வீதத்தில் முன்னேற்றம் ஏற்படுவதன் விளைவாக, உள்நாட்டில் முதற்பொருள்களை அமைக்கிற வடிவத்திலோ, அயல் நாடுகளிலிருந்து முதற் பொருள்களைக் கூடுதலான அளவில் இறக்குமதி செய்கிற வடிவத்திலோ முதலாக்கமானது தானாக ஏற்பட்டுவிடாது என்னும் உண்மை, அந்த அளவுக்குப் பொதுவாக உணரப்படவில்லை. குறைந்த வருமான நாடுகளுக்கு நலன் தரும் முறையில் வாணிப மாற்றுவீதங்கள் மாறிவிட்டால் போதும், அந் நாடுகளின் பொருளியல் வளர்ச்சிக்குத் தேவையான நிதிகளை அந்த மாற்றம் தந்துவிடும் என்று கற்பனை செய்து கொள்ளும் போக்கு, பரவலான அளவில் காணப்படுகிறது. இந்தக் கற்பனை எந்த அளவுக்கு உண்மை நிலையோடு பொருந்தியிருக்கிறது என்பது கேள்விக்கு உரிய ஒரு செய்தியாகும்.

முன்னிலும் உயர்ந்த ஏற்றுமதி விலைகளின் விளைவாக, ஏற்றுமதிகளிலிருந்து கிடைக்கிற தொகையில் ஏற்படும் உயர்வு, நாட்டின் பண வருமான ஓட்டத்தில் இணைகிறது; அப்படி இணைவதால், அந்த ஓட்டத்தைப் பெருக்குகிறது. இக் கூடுதல் வருமானத்தின் ஒரு பகுதி சேமிக்கப்படக்கூடும் என்றபோதிலும், அதன் மற்றொரு பகுதி, அநேகமாக மிகப் பெரும் பகுதி, உள்நாட்டுப் பண்டங்கள், இறக்குமதி செய்யப்படும் பண்டங்கள் ஆகியவற்றின்மீதான கூடுதல் நுகர்வுக்குச் செலவிடப்படும். குறுகிய காலத்தில் நெகிழ்ச்சியற்ற அளிப்பு நிலையையே (Inelastic supply condition) பொதுவாகப் பெற்றிருக்கக்கூடிய ஒரு வேளாண்மை நாட்டைப்பற்றியே நாம் இப்போது கருத்தாய்வு செய்கிறோம். எத்தகைய ஒரு நாட்டில், உள்நாட்டுப் பொருள்களுக்காக நுகர்வார் செலவிடும் தொகை கூடுதலாவதால், அப் பொருள்களின் விலைகள் பெரும்பாலும் உயரக்கூடும். அப்படி உயர்வதன் விளைவாக இறக்குமதிகளின் அளவு பெருகும். அவ்வாறு பெருகுகிற கூடுதல் இறக்குமதி முழுவதுமோ அல்லது அதன் குறிப்பிடத் தக்க

பகுதியோ மூலதனப் பொருள்களாகத்தான் இருக்கும் என்பதற்கு எத்தகைய உறுதியும் இல்லை. வாணிப மாற்றுவீதத்தில் ஏற்படுகிற முன்னேற்றத்தால் முன்னிலும் மிகுதியான அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கிறது என்பது உண்மையே. ஆனால் தேவையான நடவடிக்கை எதுவும் எடுக்கப்படாவிட்டால், இந்த நிலைமையின் விளைவாக, உள்நாட்டு வருமான ஓட்டம் பாதிக்கப்படும்; உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள், இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் ஆகிய இருவகைப் பொருள்களின்மீதும் நுகர்வோர் செலவிடும் தொகை, கூடுதலாகும். ஆகவே, வாணிப மாற்றுவீதத்தில் ஏற்படுகிற முன்னேற்றமானது, முதலாக்கத்தைத் தானாகவே ஏற்படுத்திவிடுகிற ஒரு முறையாக இருக்கமுடியாது என்பது தெளிவு.

கூடுதலாகக் கிடைக்கிற இறக்குமதித் திறன் (Import capacity) முழுவதும் முதற் பொருள்களை இறக்குமதி செய்வதற்கு மட்டுமே பயன்படுத்தப்படவேண்டுமானால், ஏற்றுமதி விலைகளின் உயர்வால் ஏற்படுகிற கூடுதல் வருமானம் முழுவதும் சேமிப்புத் துறைக்கே திருப்பிவிடப்படவேண்டும். கூடுதல் சேமிப்பானது தானாக உருவாகாவிட்டால் - நாம் இதுவரை செய்துள்ள கருத்தாய்விலிருந்து அது பெரும்பாலும் அப்படி உருவாகாது என்றே தோன்றுகிறது - அதனை உருவாக்குவதற்குத் தேவையான திட்டவட்டமான நடவடிக்கைகளை, நிதித்துறை மற்றும் பணத்துறை அதிகாரிகள், தாமாக முன்வந்து எடுத்தாக வேண்டும். வாணிப மாற்றுவீதத்தில் ஏற்படுகிற முன்னேற்றத்தின் வாயிலாக முதலாக்கத்திற்குத் தேவையான நிதிகளைப் பெறுவது எவ்வளவு முக்கியம் என்பதை அழுத்தந் திருத்தமாக எடுத்துக் கூறுவோர், பெருகுகிற வருமான ஓட்டத்திலிருந்து சேமிப்பை உருவாக்குவது என்கிற இந்தச் சிறிய செய்தியை எப்படி அடிக்கடி மறந்து விடுகிறார்கள் என்பது வியப்பாகவே இருக்கிறது. ஏற்றுமதி வரவுகளில் ஏற்படுகிற உயர்வுக்கு ஈடான அளவு முதற் பொருள்களின் இறக்குமதியில் உயர்வு ஏற்படவேண்டுமானால், ஏற்றுமதி வரவுகளின் உயர்வால் கிடைக்கிற கூடுதல் வருமானம், சேமிக்கப்பட்டாக வேண்டும். இந்தச் சேமிப்பு, தானாக ஏற்படாவிட்டால், வரிவிதிப்பின் வாயிலாக ஏற்படுத்தப்பட வேண்டியிருக்கிறது.

இத்தகைய வரி விதிப்பானது சிறப்பு அல்லது பொது என்னும் இரண்டு வகைகளைச் சேர்ந்ததாக இருக்கலாம். ஏற்றுமதிக்கு உரிய பொருள்களை, அவற்றின் உற்பத்தியாளர்களிடமிருந்து, ஓர் அரசாங்க நிறுவனமானது ஒரு குறிப்பிட்ட விலைக்கு வாங்கி, ஆதாயத்தோடு அவற்றை வெளிநாடுகளில் விற்கிற ஓர் ஏற்பாட்டைத்

தான், நான் சிறப்பு வரி விதிப்பு என்று குறிப்பிடுகிறேன். இத்தகைய ஒரு முறையை, நியூசிலாந்து, 1936ல் கையாளத் தொடங்கியது. தற்காலத்தில் இத்தகைய முறையைக் கையாளும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக அர்ஜன்டீனு திகழ்கிறது. இந்த முறையானது, ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்பவர்கள்மீது ஒரு வரி விதிக்கப்படுவதற்கு ஈடாக அமைகிறது. இந்த முறையானது, இன்னும் வெளிப்படையாக, உள்நாட்டு உற்பத்தியாளருக்குக் கிடைக்கக்கூடிய விலையைக் கிட்டத்தட்ட ஒரே நிலையில் நிறுத்தக் கூடிய வகையில் அமைந்த - மாறக்கூடிய - ஓர் ஏற்றுமதி வரி (A variable export tax) என்னும் வடிவத்திலும் அமைக்கப்படலாம். இது தேவையான பயனைத் தவறுமல் அளிக்கவல்ல ஒரு முறை என்பதில் ஐயமில்லை. ஆனுல் இது நியாயமற்ற ஒரு முறை என்பது என் கருத்து. ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியாளர்களை மட்டும் எதற்காக இவ்வாறு தண்டிக்க வேண்டும்? இந்தப் பொருள்களின் அளிப்பானது குறுகிய காலத்தில் ஒரே அளவில் மாருமல் இருக்கக்கூடும். ஆனுல் நீண்ட காலம் கடப்பதற்கு முன்னரே, இவற்றின் உற்பத்தியாளர்கள், பிற உற்பத்தித் துறைகளை நாடிச் சென்றுவிடக் கூடும். இவ்வாருக, ஒரு நாடு அயல்நாட்டுச் செலாவணியைப் பெறுவதற்கு உரிய மிகச் சிறந்த ஊற்றுக்கால் ஒன்றிற்கு மாபெரும் இடையூறு ஏற்பட்டு விடக்கூடும்.

சிறப்பு வரி விதிப்புக்கு மாற்று முறையாக இருப்பது, பொது வரி விதிப்பு ஆகும். பொது வரி விதிப்பு முறை கையாளப் பட்டால், ஏற்றுமதி வரவுகளில் உயர்வு ஏற்படும்போது, உடனடியாக அல்லது கூடிய விரைவில், அந்த உயர்வுக்கு ஈடான அளவு, அரசாங்க வரிகளிலும் அரசாங்க வரி வருவாயிலும் உயர்வு ஏற்பட்டுவிடும். செலுத்தும் திறன்பற்றிய கோட்பாட்டிற்கு (The principle of ability to pay) ஏற்ற வகையில் இந்தக் கூடுதல் வரிவிதிப்பானது விதிக்கப்பட முடியும். அப்படி விதிக்கப்படுவதன் விளைவாக, மக்களில் ஒரு சாராருடைய செலவிடற்குரிய வருமானம் (Disposable income) குறைந்து விடலாம்; அதே சமயத்தில், ஏற்றுமதிப் பயிர்களின் உற்பத்தியாளர்கள் உள்ளிட்ட பிற மக்களுடைய செலவிடற்குரிய வருமானம் உயரக்கூடும். அப்படிக் குறைவதும் உயர்வதும், நிதித் துறை நேர்மையின் (Fiscal fairness) பொதுவான தரத்தைப் பொறுத்திருக்கின்றன. எஃது எப்படி இருந்தாலும், இந்த முறையில், அயல்நாட்டுச் செலாவணி வரவில் ஏற்படும் உயர்வுக்கு ஈடான அளவு கட்டாயச் சேமிப்பு ஏற்பட்டுவிடுகிறது. உள்நாட்டுப் பொருளியலில் ஏற்படக்கூடிய பண வீக்கம், ஏற்றுமதி வரவுகளில் ஏற்படும் உயர்வானது நடப்பு நுகர்வுக்கான பொருள்களை

இறக்குமதி செய்வதில் சிதறடிக்கப்படும் நிலைமை ஆகிய இரண்டும், இந்த முறையைக் கையாள்வதன்மூலம்தான் தடுக்கப்படமுடியும். ஏற்றுமதி வரவுகளில் ஏற்படுகிற உயர்வு முழுவதையும், இந்த முறையின் மூலமாகத்தான், முதற் பொருள்களின் இறக்குமதிக் காகப் பயன்படுத்த முடியும் ; அல்லது, சுழல் எதிர்ப்பு ஏற்பாடு (Counter cyclical measure) என்னும் முறையில், நாட்டின் தங்கக் காப்பிருப்பை அல்லது அயல்நாட்டுச் செலாவணிக் காப்பிருப்பைக் கூடுதலாக்கப் பயன்படுத்த முடியும்.

இந்த இடத்தில், நாம், இந்தக் கொள்கையை ஒரு சுழல் எதிர்ப்புத் திட்டம் என்னும் கண்ணோட்டத்திலிருந்து ஆராய் வதில் ஆர்வம் கொள்ளவில்லை. முதலாக்கத்திற்குப் பயன் படுத்தப்படக்கூடிய ஓர் ஏற்பாடு என்னும் அளவில்தான் இந்தக் கொள்கையைப்பற்றி நாம் இங்கு அக்கறை கொண்டுள்ளோம். ஆனால் இந்த இரண்டில் எந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்த போதிலும், **பணத்துறைப் பொருளியல் கோட்பாடுகள்** (Principles of Monetary Economics)[18] என்னும் அவருடைய நூலில் யூஜெனியோ கூடின் (Eugenio Gudin) அவர்களால் அழுத்தமான முறையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ள நேர்முக நடவடிக்கைப் பணம் (Money of direct action), மறைமுக நடவடிக்கைப் பணம் (Money of indirect action) ஆகிய இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாடு, பொருத்தம் உள்ளதாகவே இருக்கிறது. குறுகிய கால நிதிகளின் தனியார் இயக்கங்களைப் பொறுத்தவரை (Private movements of short term funds), 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில், நாணய மாற்று ஒத்தநிலைக் காப்பு நிதிகளால் (Exchange equalisation funds) கையாளப்பட்ட திறனழித்தல் முறையானது (Neutralisation), பொருத்தமானதாகவும் போது மானதாகவும் இருக்கிறது. அந்த முறையானது, அடிப்படையில், வெளி அங்காடிக் கைக்கோளின் (Open market policy) ஒரு வகை வடிவமேயாகும். அந்த முறையில் நிகழ்வதெல்லாம், ஆளா ரொக்க இருப்புகளின் (Idle cash balances) (மறைமுக நடவடிக் கைப் பணத்தின்) வெறும் மாற்றமே ஆகும். ஆனால் ஏற்றுமதி வரவுகளில் ஏற்படுகிற உயர்வைப் பொறுத்தவரை, இந்த வகைத் திறனழித்தல் முறையானது போதிய பயனைத் தராது. ஏனென்றால், இந்த உயர்வைப் பொறுத்தவரை, நம்முடைய நடவடிக்கை, பணம் அல்லது செலாவணியை (Money or credit) மட்டும் பாதிப்பது அன்று; நாம் சற்றுமுன் எடுத்துக்காட்டியதைப் போல, உள்நாட்டு வருமான ஓட்டத்தை நேர்முகமாகப் பாதிப் பது ஆகும்.

வாணிபக் கைக்கோள்(Commercial policy)பற்றிய கேள்விகள், பின்னர்த் தனியாக ஆராயப்படுவதற்காகத் தற்போது ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளன. ஆனால் ஒன்றைமட்டும் உடனடியாகத் தெரிவித்துவிட விரும்புகிறேன். இந்தச் சூழ்நிலையில், தனியார் நுகர்வுக்கான இறக்குமதிகளில் உயர்வு ஏற்படுவதைத் தடுப்பதற்காகப் புதிய இறக்குமதிக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவது, பொதுவாகப் பார்க்கும்போது, ஓர் உண்மையான - பயன் அளிக்கத்தக்க-தீர்வாகஇருக்கமுடியாது என்பது என் கருத்தாகும். நடவடிக்கை எடுக்கப்படவேண்டியது, உள்நாட்டு வருமானப் புழக்கத்தின்மீதே (Domestic income circulation) ஆகும். முதற்பொருள்களின் இறக்குமதிகளில் ஏற்படுகிற உயர்வு, ஒரு முதலீட்டு நடவடிக்கை ஆகும். அந்த நடவடிக்கை நிகழவேண்டுமானால், நடப்புக் காலத்தில் கிடைக்கிற வருமானத்திலிருந்து, மேற்படி உயர்வுக்கு ஈடான சேமிப்பு செய்யப்பட்டாக வேண்டும்.

ஏற்படுத்தப்பட வேண்டிய சேமிப்பு முழுவதும் வரிவிதிப்பின் வாயிலாக ஏற்படுத்தப்பட்டுவிட்டது என்று இப்போது நாம் பாவித்துக்கொள்வோம். அப்படிப் பாவித்துக்கொண்டால், வரி வருவாயில் ஏற்படுகிற உயர்வு, தேவைப்படுகிற புதிய சேமிப்பு நடவடிக்கையாக அமைந்துவிடுகிறது.[19] ஏற்றுமதி வரவுகளில் ஏற்படுகிற உயர்வை முதலீட்டுப் பொருள்களை இறக்குமதி செய்வதற்காகப் பயன்படுத்தக்கூடிய நிலைமையை, இந்தக் கூடுதல் வரி விதிப்பானது, ஏற்படுத்திவிடுகிறது. (அல்லது, நாட்டின் தங்கக் காப்பிருப்பை அல்லது அயல்நாட்டுச் செலாவணிக் காப்பிருப்பைக் கூடுதலாக்கக்கூடிய நிலைமையை இந்தக் கூடுதல் வரி விதிப்பானது ஏற்படுத்திவிடுகிறது.) இந்தக் கட்டாயச் சேமிப்பானது, உள்நாட்டு முதலீட்டுச் செலவுக்குத் தேவையான காரணிகள் எவற்றையும் விடுவிக்கவில்லை என்பதை நாம் இங்கு நினைவிற் கொள்வது நல்லது. அதனால் ''விடுவிக்கப்படுவது'', ஏற்றுமதி விலைகளில் ஏற்பட்ட உயர்வின் விளைவாக ஏற்றுமதி வரவுகளில் ஏற்படுகிற உயர்வுமட்டுமே ஆகும். கூடுதல் வரி வருவாயின் ஒரு பகுதியாவது உள்நாட்டு முதலீட்டிற்கான உள்நாட்டுக் காரணிகளுக்குச் செலவிடப்படுமானால், அதன் விளைவாகப் பணவீக்க நிலைமையே உருவாகும். அப்படி உருவானால் நுகர்வுப் பொருள்களின் இறக்குமதியில் உயர்வு ஏற்படும்; கூடுதல் ஏற்றுமதி வரவுகளிலிருந்து கிடைத்த அயல்நாட்டுச் செலாவணி அந்த இறக்குமதிக்குச் செலவாகிவிடும். உழைப்பாளர்களின் எண்ணிக்கை ஒரு குறிப்பிட்ட அளவிலும், உற்பத்தித் திறன் மாறுமலும் இருக்கும் நிலையில், பணவீக்க விளைவுகளை

ஏற்படுத்தாமல் உள்நாட்டு முதலீட்டுச் செலவுமட்டும் பெருக வேண்டுமானுல், அது பெருகுகிற அதே அளவுக்கு ஏனைய உள்நாட்டுச் செலவுகள் குறைந்தாகவேண்டும். அதாவது, உள்நாட்டுப் பொருள்கள் மற்றும் ஊழியங்களின் மீதான நுகர்வோரின் செலவு, ஏற்றுமதி விலைகளில் உயர்வு ஏற்படுவதற்கு முன்னர் இருந்த அளவைவிடக் குறைவான ஓர் அளவை அடைந்தாகவேண்டும். நுகர்வோரின் செலவில் அத்தகைய குறைவை ஏற்படுத்துவதற்கான ஒரு வழி, இறக்குமதிக் கட்டுப் பாடுகளைத் தளர்த்துவது ஆகும். அப்படித் தளர்த்திஞல், உள்நாட்டுப் பொருள்களை வாங்குவதற்குச் செய்யப்படும் செலவின் ஒரு பகுதி, இறக்குமதிப் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தப்படும். அதன் விளைவாக உள்நாட்டு முதலீட்டுச் செலவில் உயர்வு ஏற்படுவதற்கு வழி பிறக்கும். இறக்குமதி செய்யப்படும் நுகர்வுப் பொருள்களின் அளவில் ஏற்படுகிற உயர்வானது, இவ்வாருக, உள்நாட்டுக் காரணிகளை உள்நாட்டு முதற்பொருள் உற்பத்திக்காக விடுவிக்கமுடியும்.

இந்தப் பகுத்தாய்வை, இதே வழியில் - ஆனுல், இன்னும் விரிவான முறையில் - நாம் தொடர்ந்து செய்யமுடியும். ஆனுல் அப்படிச் செய்யாமலே, இந்தப் பகுத்தாய்வால் கிடைக்கக்கூடிய பொதுவான முடிவு யாது என்பது தெளிவாகத் தெரிகிறது. ஏற்றுமதி வரவுகளில் ஏற்படுகிற உயர்வும், அதன் விளைவாக மக்களின் வருமானத்தில் ஏற்படுகிற உயர்வும், தானே எழுகிற அல்லது கட்டாயத்தால் உருவாக்கப் படுகிற சேமிப்பாக மாற்றப்பட்டாலொழிய, வாணிப மாற்று வீதத்தில் ஏற்படுகிற முன்னேற்றத்தால்மட்டும் குறிப்பிடத்தக்க அளவுக்கு முதலாக்கம் ஏற்பட்டு விடாது என்பதே அந்த முடிவு. மேலே குறிப்பிட்டபடிச் சேமிப்பாக மாற்றப்படாவிட்டால் என்ன நேரிடும்? 1950-51ல் பெரிய அளவில் ஏற்பட்ட மூலப் பொருள் வீக்கத்தின்போது (Raw material boom) இந்தத் துறை யில் எத்தகைய நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அப்படி எடுக்கப்படாததால் நடந்தது என்ன என்பதை நாம் பார்த்தோம் அல்லவா? ஏற்றுமதி விலைகளில் ஏற்படுகிற உயர்வின் விளைவாக உள்நாட்டுப் பண வருமானங்களிலும் செலவுகளிலும் ஓர் உயர்வு ஏற்படுகிறது. வேலை நிறைவு (Full employment) இருக்கும் நிலை யில் - அஃது எப்படி இருந்தாலும், ஒரு வேளாண்மைப் பொருளிய லில் உள்நாட்டு அளிப்புநிலை நெகிழ்ச்சி அற்றதாக இருக்கும் நிலையில் - மேற்படி உயர்வின் விளைவாக விலைகளின் பொது அளவில் ஓர் உயர்வு (விலை வீக்கம்) ஏற்படுவது இயல்பு. அந் நிலை யில், ஓரளவுக்குக் கூடுதல் பண வருமானத்தின் நேர்முக விளை

வாகவும், ஓரளவுக்கு இறக்குமதிப் பொருள்களின் விலைகளோடு ஒப்பிடும்போது உள்நாட்டுப் பொருள்களின் விலைகளில் உயர்வு ஏற்பட்டிருப்பதன் விளைவாகவும், இறக்குமதிப் பொருள்களுக் கான தேவை (Demand) பெரிதும் உயர்ந்துவிடுகிறது. அதன் பயனாக நுகர்வுப் பொருள்களின் இறக்குமதியில் ஏற்படுகிற உயர்வு, வாங்கும் திறனின் (Purchasing power) ஒரு பகுதியை விழுங்கிவிடுகிறது. அப்படி விழுங்கிவிடுவதால், உள்நாட்டுப் பண வீக்க அழுத்தத்தின் ஒரு பகுதி குறைந்துவிடுகிறது. அதே சம யத்தில், இறக்குமதியில் ஏற்படுகிற அந்த உயர்வு, கூடுதலாகக் கிடைத்த அயல்நாட்டுச் செலாவணியை விழுங்கிவிடுகிறது. இந்த நடைமுறையின் பயனாக முதலாக்கத்திற்கு எத்தகைய குறிப்பிடத் தக்க நன்மையும் விளைவதாக எனக்குத் தெரியவில்லை. இந்த நடைமுறையை ஒட்டி வருகிற பண வீக்கமானது, வருமானப் பங் கீட்டில் மாறுதல்களை ஏற்படுத்துவதன் வாயிலாக ஓரளவுக்குக் கட்டாயச் சேமிப்பை உருவாக்குகிற தன்மை படைத்ததாக இருக்கக்கூடும். ஆனால் அத்தகைய பண வீக்கத்தைப் பெறு வதற்கு வாணிப மாற்றுவீதத்தில் முன்னேற்றம் இருந்தாக வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. வேறு வகைகளில் பண வீக்கத்தை எப்போது வேண்டுமானாலும் நாம் உருவாக்கிக் கொள்ளமுடியும்.

நாம் மேலே குறிப்பிட்ட நிகழ்ச்சி வரிசை நடைமுறைக்கு வந்துவிட்டது என்றும், முன்னிலும் சிறந்த வாணிப மாற்று வீதங்களை முதலாக்கத்திற்கான ஊற்றுக்காலாகப் பயன்படுத்து வதற்கு உரிய முயற்சி எதுவும் செய்யப்படவில்லை என்றும் வைத் துக்கொள்வோம். ஆனால் அந்த நிகழ்ச்சி வரிசை நடைமுறைக்கு வந்த பின்னர், பண வீக்கத்தைப்பற்றிய உணர்வு அரசாங்கத் திற்கு ஏற்பட்டுவிட்டது என்றும், ஏற்றுமதி விலைகளின் உயர்வி லிருந்து தானாக எழுந்த ஒரு துணைவிளைவாகிய பண வீக்கத்தைத் தடுத்து நிறுத்தவேண்டும் என்கிற விழைவு அரசாங்கத்திற்கு ஏற்பட்டிருக்கிறது என்றும் வைத்துக்கொள்வோம். இந் நிலையில் பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு அரசாங்கத்திற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன: வரிகளை உயர்த்துவது ஒரு வழி; அர சாங்கச் செலவுகளைக் குறைப்பது மற்றொரு வழி; 1950-51ல் ஏற்பட்ட பண்டங்களின் விலை வீக்கத்தின்போது சில அரசாங்கங் கள் முதல் வழியைக் கையாண்டன; பிற அரசாங்கங்கள் இரண் டாம் வழியை ஏற்றுக்கொண்டன. பண வீக்கத்தைக் கட்டுப் படுத்துவது என்னும் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, இரண்டு வழிகளும் ஒத்த அளவு சிறப்புடையனவாக இருக் கின்றன. ஆனால் முதலாக்கத்திற்கு அவை எந்த அளவு பயன்

படுகின்றன என்பதை ஆராயும்போது அவற்றின் இடையே மாபெரும் வேறுபாடு இருக்கிறது.

கூடுதல் வரிவிதிப்பு என்னும் முதல் முறையானது, முதலாக்கம் செய்வதற்குரிய பொருத்தமான பாதை என்று நாம் முன்னர் எடுத்துக்காட்டிய வழியை, ஓரளவு காலங்கடந்த பிறகு அடைகிறது. அந்த வழியானது, வாணிப மாற்றுவீத முன்னேற்றத்தின் விளைவாக ஏற்பட்ட கூடுதல் வரவின் பெரும்பகுதியை, நுகர்வுக்காகச் செலவிடப்படும் நிலையிலிருந்து விலக்கி, முதலீட்டுக்காகச் செலவிடப்படும் நிலையை உறுதிப்படுத்துகிறது. அல்லது அந்த வழியைக்கொண்டு அத்தகைய உறுதியை ஏற்படுத்த முடியும்.

பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கான இரண்டாவது வழி, அரசாங்கச் செலவைத் தீவிரமாகக் குறைப்பதாகும். அப்படிக் குறைப்பதால் பொதுப் பணிகளும் (Public works) ஏனைய வளர்ச்சித் திட்டங்களும் பாதிக்கப்படுமானால், முதலீடு மற்றும் அடிப்படை ஊழியங்களுக்கான (Basic services) தன்னுடைய செலவைக் குறைப்பதன்மூலம் அரசாங்கம் கூடுதல் நுகர்வுச் செலவுக்கு வழி வகுக்கிறது என்றே பொருள்படும். அரசாங்கச் செலவைக் குறைக்கும் இந்த முறையானது, பணவீக்க எதிர்ப்புக் கைக்கோள் என்னும் அளவில் பார்க்கும்போது, கூடுதல் வரி விதிப்பு முறை எந்த அளவுக்கு நல்லதோ அதே அளவுக்கு நல்லது தான். ஆனால் பொருளியல் வளர்ச்சிக்கு அஃது எந்த அளவு துணை செய்யும் என்பதைப் பார்க்கும்போது அஃது பின்வாங்கும் ஒரு கொள்கையாகவே அமைந்திருக்கிறது.

அஃது அப்படித்தான் அமையும் என்பதை விளக்கவல்ல எடுத்துக்காட்டுகள் பலவற்றை அண்மைக்கால அநுபவத்திலிருந்து நாம் சுட்டிக் காட்ட முடியும். ஆனால் நம்முடைய கருத்தாய்வைப் பொறுத்தவரை எடுத்துக்காட்டுகளைவிட முடிவுதான் முக்கியமானதாகும். வாணிப மாற்றுவீதத்தில் ஏற்படுகிற முன்னேற்றத்தின் விளைவாக, முதலாக்கத்தில் உயர்வு ஏற்படுவதற்கு மாறாக, நாட்டின் முதலீட்டு நடவடிக்கையில் ஒரு குறைவு ஏற்படக்கூடும் என்பது நன்கு புலனாகிறது. இந்த உண்மை வியப்பூட்டுவது போலக் காணப்பட்டாலும் உண்மையில் அத்துணை வியப்பானதன்று. ஒரு பணவீக்க நிலைமையில், அரசாங்க முதலீட்டுச் செலவில் ஏற்படுகிற குறைவானது, தனியார் முதலீட்டுச் செலவில் ஏற்படுகிற குறைவைப் போலவே, பண வீக்க அழுத்தத்தைக் குறைப்பதில் பயன்மிக்க ஒரு முறையாகவே இருக்கிறது. இது தானாகத் தெரிகிற ஓர் உண்மை. ஆனால் முதல் திரட்சி

யானது ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது என்னும் கருத்து ஏற்கப்படுமானல், கூடுதல் சேமிப்பின் மூலமாக நுகர்வுச் செலவைக் குறைப்பதுதான், பணவீக்க அழுத்தத்தைக் குறைப்பதற்குரிய சிறந்த முறையாகும். இந்நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக, கூடுதல் சேமிப்பை, தேவைப்பட்டால் நிதிக் கைக்கோளின் (Fiscal policy) வாயிலாகக் கட்டாய முறையில் உருவாக்கலாம்.

கரந்துறை வேலையின்மையைப் பயன்படுத்துதல், வேளாண்மை முறைகளில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவதன் வாயிலாக விடுவிக்கப்பட்ட தொழிலாளர்களைப் பயன்படுத்துதல் ஆகியவற்றிற்போலவே, வாணிப மாற்றுவீதத்தின் முன்னேற்றத்தைப் பயன்படுத்துவதிலும், மொத்தமாகப் பார்க்கும்போது தனியார் நுகர்வைக் குறைக்கவேண்டிய தேவை எதுவும் இல்லை. தேவைப்படுவன எல்லாம், வாணிப மாற்றுவீத முன்னேற்றத்தின் பயனை நாட்டு வருமானத்தில் ஏற்படுகிற உயர்வை முதலாக்கப் பணிக்குத் திருப்பிவிடுவதும், உடனடியாக நுகர்வில் உயர்வு ஏற்படாவண்ணம் தடுப்பதுமே ஆகும். எதிர்கால வாழ்க்கைத் தரத்தில் நிலையான முறையில் ஏற்படக்கூடிய உயர்வை முன்னிட்டு வாழ்க்கைத் தரத்தில் உடனடியாக ஏற்படக்கூடிய உயர்வை விட்டுக்கொடுப்பதைத் தவிர வேறு எந்த விதமான துன்பமும் இதில் இல்லை. ஆனல் அப்படி விட்டுக்கொடுப்பது, முதலாக்கப் பணியில் இயல்பாகவே பொதிந்துள்ள ஒரு துன்பம் என்பது, நன்கு அறியப்பட்ட ஒரு செய்தி.

## நான்காம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. ஐக்கிய நாடுகள் மன்றத்தால் 1949ல் வெளியிடப்பட்ட "International Capital Movements in the Interwar Period" என்னும் நூலைக் காண்க. பக்கம் 32.

2. "Harvard Business Review" என்னும் பத்திரிகையின் 1950 ஜூலை இதழின் 42ஆம் பக்கத்தில் எச். ஜே. டெர்ன்பர்க் (H. J. Dernburg) என்பாரால் எழுதப்பட்டுள்ள "நீண்டகால அயல்நாட்டு முதலீட்டிற்கான வாய்ப்புகள்" ("Prospects for Long-Term Foreign Investment") என்னும் கட்டுரையைக் காண்க.

3. "Columbia Journal of International Affairs" என்னும் பத்திரிகையின் 1950 வசந்தகால இதழின் 41ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள ஏ. ஜே. பிரௌன் (A. J. Brown) என்பாரின் "பொருளியல் வளர்ச்சியும் உலக வாணிபமும்" ("Economic Development and World Trade") என்னும் கட்டுரையைக் காண்க.

4. ஏ. பி. மார்டினேஸ் (A. B. Martinez), எம். லெவான்டௌஸ்கி (M. Lewandowski) ஆகியோரால் இயற்றப்பட்ட "The Argentine in the Twentieth Century" என்னும் நூல் (லண்டன், 1911), அத்தியாயம் 2, பக்கம் 108.

5. நியூ ஹேவனிலிருந்து (New Haven) 1930ல் வெளியிடப்பட்ட ஹெர்பர்ட் ஃபீஸ் (Herbert Feis) என்பாரின் "Europe, the World's Banker, 1870 - 1914" என்னும் நூலைக் காண்க.

6. நியூயார்க்கிலிருந்து 1935ல் வெளியிடப்பட்ட யூஜின் ஸ்டாலி (Eugene Staley) என்பாரின் "War and the Private Investor" என்னும் நூலைக் காண்க. பக்கம் 525.

7. Royal Institute of International Affairs என்னும் நிறுவனத்தால் லண்டனிலிருந்து 1937ல் வெளியிடப்பட்ட "The Problem of International Investment" என்னும் நூலின் 19ஆம் பக்கத்தைக் காண்க.

8. எஸ். ஹெர்பர்ட் ஃபிரான்கெல் (S. Herbert Frankel) என்பாரால் இயற்றப்பட்டு, லண்டனில் 1938ல் வெளியிடப்பட்ட "Capital Investment in Africa" என்னும் நூல், பக்கங்கள் 169, மற்றும் 214.

9. சி. எஃப். ரெமர் (C. F. Remer) என்பாரின் "Foreign Investment in China" என்னும் நூல் (நியூயார்க், 1933), பக்கங்கள் 68ம் 86ம்.

10. முன்னர்க் குறிப்பிட்ட "The Problem of International Investment" என்னும் நூல், பக்கங்கள் 264 - 265.

11. முன்னர்க் குறிப்பிட்ட ஈ. பி. ரூபென்ஸ் (E. P. Reubens), பக்கம் 112.

12. டக்ளாஸ் பி. கப்லண்ட் (Douglas B. Copland) என்பாரின் சொற்கள் இவை. எஸ். ஹெர்பர்ட் ஃபிரான்கெல் என்பாரால் எழுதப்பட்டு, லண்டனில் 1938ல் வெளியிடப்பட்ட "Capital Investment in Africa" என்னும் நூலின் 14ஆம் பக்கத்தில் இவை மேற்கோளாகத் தரப்பட்டுள்ளன.

13. சி. பி. ஹாடன் - கேவ் (C. P. Haddon - Cave) என்பாரின் "தனியாரின் பன்னாட்டு முதலீடுகளின் சில தன்மைகள் - சிறப்பாக ஆஸ்திரேலியாபற்றி" ("Some Aspects of Private International Investments with Special Reference to Australia") என்னும் சொற்பொழிவு.

[அறிவியல் முன்னேற்றத்திற்கான ஆஸ்திரேலியா மற்றும் நியூசிலாந்து கழகம் (Australian and New Zealand Association for the Advancement of Science), பெர்த் மாநாடு (Perth Conference), 1947. இம் மாநாட்டு நடவடிக்கைகள், மிமியோகிராப் (Mimeograph) என்னும் கருவியின்மூலம் படிகள் எடுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன.] பக்கம் 9.

14. அரசாங்கங்களுக்கு இடையே நிலையான அடிப்படையில் வழங்கப்படும் மானியங்களைப்பற்றிய ஜேகப் வைனரின் (Jacob Viner) கண்டனங்களை, அன்னாரின் ''International Economics'' என்னும் நூலில் (கிளென்கோ, இல்லினாய்ஸ், 1951) காண்க. பக்கங்கள் 371 - 372. அத்தகைய மானிய ஏற்பாட்டின் விளைவாக, உதவி செய்யும் அரசாங்கத்திடம் கவர்ச்சியற்ற ஒருவகை உயர்வு மனப்பான்மையும் உதவி பெறும் அரசாங்கத்திடம் பிச்சையேற்கும் மனப்பான்மையும் ஏற்பட்டு, அதன் பயனாகப் பன்னாட்டு உறவுகளில் கசப் புணர்ச்சி ஏற்படக்கூடும்.

15. இந்தக் கருத்துகள், 1951 மே திங்களில் கூடிய வருமானம் மற்றும் செல்வம்பற்றிய ஆராய்ச்சி மாநாட்டிற்காக (The Conference on Research in Income and Wealth) ஜே. ஜே. போலக் (J. J. Polak) என்பாரால் தயாரிக்கப்பட்ட ''Projections of the International Sector of Gross National Product'' என்னும் ஆராய்ச்சிக் கட்டுரையில் நன்கு விளக்கப் பட்டுள்ளன. நியூ யார்க்கில் உள்ள ''பொருளியல் ஆராய்ச் சிக்கான நாட்டு மன்றத்''தால் (National Bureau of Economic Research) ''Studies in Income and Wealth'' என்னும் தலைப்பில் வெளியிடப்படுகிற நூல்களின் வரிசை யில் இக் கட்டுரை வெளியிடப்படவிருக்கிறது. இத்தகைய கருத்துகளிலிருந்துதான், ஐக்கிய அமெரிக்க நாட்டு வரு மானத்தில் 2 சதவீதம் உள்ள ஒரு தொகை, சோவியத் வட்டத்திற்கு வெளியே உள்ள குறைந்த வருமான நாடுகளின் தற்போதைய மொத்த நாட்டு வருமானத்தில் 7 சதவீதத் திற்கு ஈடாக இருப்பதால், அந்த அளவு தொகையை அந் நாடுகள் ஏற்பது, பயன்தரும் முதலீட்டுக்காகப் பிற நாடு களின் உதவியை ஏற்பதற்குரிய அவற்றின் திறமையைச் சோதனைக்கு உள்ளாக்குவது உறுதி என்றும், அந்தத் திறமைக்கு மீறிய ஒரு தொகையாகக்கூட அஃது இருக்கக்கூடும் என்றும் நாம் உய்த்து உணரமுடிகிறது.

16. ''American Economic Review'' என்னும் பத்திரிகையின் 1948 செப்டம்பர் இதழில் வெளியாகியுள்ள காட்ஃப்ரீட் ஹெபர்லர் (Gottfried Haberler) என்பாரின் ''ஐரோப்பிய மீட்சித் திட்டத்தின் சில பொருளியல் சிக்கல்கள்'' (''Some Economic Problems of the European Recovery Program'') என்னும் கட்டுரையைக் காண்க. பக்கங்கள் 517 - 518.

17. முன்னர்க் குறிப்பிட்ட ஹோவேர்ட் எஸ். எல்லிஸ் (Howard S. Ellis) என்பாரின் ''The Economics of Freedom'' என்னும் நூல், பக்கங்கள் 22, 34.

18. ''Principios de Economia Monetaria'' என்னும் நூல், பாகம் 2 (ரியோ டி ஜனிரோ, 1952), பக்கங்கள் 42 முதல்.

19. அரசாங்க வரி விதிப்பின் வாயிலாகக் கட்டாயச் சேமிப்பு செய்யப்படுவதால், முதலீட்டுப் பணியையும் அரசாங்கமே

தான் செய்தாகவேண்டும் என்னும் இன்றியமையாமை இல்லை என்னும் உண்மை, நம் கவனத்திற்கு உரியது. முதலீட்டுப் பணி முழுவதும் தனியார் பொறுப்பில் விடப்படலாம். முதலீட்டிற்குரிய நிதிகள் பாங்கு முறையிலிருந்து (Banking system) கிடைப்பதுபோலத் தோன்றலாம். ஆனால் உண்மையில் பணவீக்க விளைவுகளைத் தோற்றுவிக்காமல் அந் நிதிகளை அவ்வாறு கிடைக்கும்படி செய்வது, வரி விதிப்பின் வாயிலாக உருவாக்கப்படும் கட்டாயச் சேமிப்பே ஆகும். தற்போதைய கருத்தாய்வில், முதலீடானது, முதற் பொருள்களின் இறக்குமதி என்னும் வடிவத்தைப் பெறுகிறது. ஆனால் அது வேறு வடிவங்களைப் பெறுகிறபோதும் இந்தப் பொதுக் கோட்பாடு மாறுவதில்லை.

# 5. வாணிபக் கைக்கோளும் முதலாக்கமும்

வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கத்தைப் பெருக்குவதற்கு வாணிபக் கைக்கோள் (Commercial Policy) எந்த அளவு துணை செய்ய முடியும்? முதலீட்டுக்கான தூண்டுதலைக் கூடுதல் ஆக்குவதன்மூலம், இறக்குமதித் தடைகள் முதலாக்கத்தைப் பெருக்க முடியுமா? அயல்நாட்டு வாணிபத்தின் வாயிலாக மூலதன அளிப்பின் அளவைக் காட்டமுடியுமா? முடியுமானால், அதற்குக் கையாளப்பட வேண்டிய முறை யாது? நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துவதன்மூலம் முதலாக்கத்தைப் பெருக்க முடியுமா? இந்தக் கேள்விகள் யாவும் தாம் இந்த அத்தியாயத்தில் ஆராயப்படவிருக்கின்றன.

தூய கோட்பாட்டு அளவில் பார்க்கும்போது, வாணிபக் கைக்கோள், முதலாக்கம் ஆகிய இரண்டு பொருள்களுக்கும் இடையே எத்தகைய தொடர்பும் இல்லை என்றே தோன்றுகிறது. ஆனால் நடைமுறை உலகத்தில் இந்த இரண்டும் பெரும்பாலும் இணைந்தே காணப்படுகின்றன. ஆனால் இந்தத் தொடர்பின் திட்டவட்டமான இயல்பு சில சமயங்களில் தெளிவாகத் தெரிவதில்லை. இந்தத் தொடர்பானது, கடந்த காலத்தில், சுங்கப் பாதுகாப்புக்கான குழந்தைத்தொழில் வாதம் (Infant industry argument for tariff protection) என்னும் வடிவத்தில் விரிவாக ஆராயப்பட்டிருக்கிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கலை இந்த வாதத்தோடு பொருத்திப் பார்ப்பதன் மூலம் இந்த அத்தியாயத்தின் பகுத்தாய்வைத் தொடங்க விரும்புகிறேன்.

## குழந்தைப் பாதுகாப்பும் குழந்தைப் படைப்பும் (Infant Protection and Infant Creation)

குழந்தைத் தொழில்களுக்கான சுங்கப் பாதுகாப்பு (Tariff protection for infant industries) என்னும் கோட்பாடு, தேசிய

இயக்கங்கள், வேட்கைகள் ஆகியவற்ருேடு தொடர்புகொண்ட தாக இருந்துவருகிறது. அலெக்சாண்டர் ஹாமில்டன் (Alexander Hamilton), ஃபிரெட்ரிக் லிஸ்ட் (Friedrich List) ஆகியோரைப் பொருளியல் தேசீயவாதிகள் (Economic nationalists) என்று நாம் தாராளமாக அழைக்கலாம். உலகநலன் என்னும் பரந்த கண்ணுேட்டத்திலிருந்து பார்த்தால்கூட இறக்குமதித் தடைகளை விதிப்பதற்கு ஆதரவாக எழுப்பப்படக்கூடிய ஒரே வாதம் இது வாக இருப்பதால், நிலைமை ஓரளவுக்குப் புதிர் நிறைந்ததாக இருக்கிறது. வாணிபச் சுயேச்சையில் (Freedom of trade) தாற் காலிகமாகச் செய்யப்படுகிற தலையீட்டின் விளைவாகப் புதிய திறன்களும் மனப்போக்குகளும் பெருகுகின்றன என்பதும், உறங்கிக் கிடக்கும் வளங்கள் நடைமுறையில் பயன்படுத்தப்படும் நிலைமை ஏற்படுகிறது என்பதும், அவற்றின் பயனுகப் பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின் உற்பத்தியில் பெரிய தோர் உயர்வு உருவாகிறது என்பதும் உண்மையானுல், அத்தகைய தலையீட்டின் பயனுக இறுதியில் எல்லா நாடுகளுக்கும் நலன் விளையக்கூடிய வாய்ப்பு, திட்டவட்டமான முறையில் இருக் கிறது என்பது தெளிவு.

பொருளியல் வளர்ச்சி ஏற்படுவதற்குத் தேவைப்படுவதெல் லாம் சுங்கப் பாதுகாப்புமட்டுமே என்பது உண்மையாக இருந்திருந் தால், சிக்கல் மிக எளியதாக இருந்திருக்கும். ஆனுல், வளர்ச்சி குறைந்த நாடுகளில் குறிப்பிடத்தக்க அளவுக்குச் சுங்கப் பாது காப்பு இருந்திருந்தும், பொருளியல் வளர்ச்சி ஏற்படவில்லை. இந்த உண்மையை எடுத்துக்கூறுவதால், மேலே கூறப்பட்ட வாதமே தவறு என்று ஆகிவிடாது; பொருளியல் வளர்ச்சியை உருவாக்குவதற்குச் சுங்கப் பாதுகாப்புமட்டுமே போதுமானது அன்று என்பதுதான் கருத்து.

அஃது ஏன் போதுமானதாக இல்லை? ஏனென்ருல், குழந்தைத் தொழிற் பாதுகாப்பு, மூலதன அளிப்பு என்னும் சிக்கலைப் புறக்கணித்திருக்கிறது. குழந்தைத் தொழிற் பாதுகாப்பின் நோக்கம் நிறைவேறவேண்டுமானுல், வெளிப்படையாகவோ அல்லது ஒளிவுமறைவாகவோ இருக்கக்கூடிய - மூலதனத் திரட்சிக்கான - ஊற்றுக்கால்களைக் கண்டுபிடிக்கவேண்டும். அதோடு, அவற்றை உற்பத்தியைப் பெருக்குவதற்கு உரிய வடிவங்களைப் பெறும்படி செய்யவேண்டும். குழந்தைப் பாது காப்பு நடைபெறுவதற்குக் குழந்தைப் படைப்பு நடைபெற்ருக வேண்டும். தொழில் துறையிலும் சரி, மக்கள் வாழ்விலும் சரி, குழந்தைகளைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகள் எவ்வளவுதான்

சிறந்த முறையில் செய்யப்பட்டாலும், அந்த ஏற்பாடுகளால் மட்டுமே குழந்தைகளைப் பிறக்கும்படி செய்துவிடமுடியுமா? தொழில்கள் பிறக்கவேண்டுமானால், முதலில் செய்யப்பட வேண்டிய சில இன்றியமையா ஏற்பாடுகள் செய்யப்பட்டாகவேண்டும். குழந்தைத் தொழில்களுக்கான சுங்கப் பாதுகாப்பு, தன் நோக்கத்தை நிறைவேற்றத் தவறியதற்குக் காரணம், தொழில் வளர்ச்சிக்குத் தேவையான மூலதனத்தை அஃது உருவாக்கத் தவறியதே ஆகும்.

குழந்தைத் தொழிலின் சுங்கப் பாதுகாப்பால் முதலாக்கத்திற்குத் துணை செய்யமுடியும் என்றால், அஃது எந்த வகையில்? மூலதன அளிப்பைப் (Supply of capital) பெருக்குவதற்கு அத்தகைய பாதுகாப்பால் நேரடியாக எத்தகைய துணையும் செய்ய முடியாமல் இருந்தாலும், உள்நாட்டுத் தொழில்களில் முதலீடு செய்வதற்கான தூண்டுதலைப் பெருக்குவதன் வாயிலாக மூலதனத்திற்கான தேவையை (Demand for capital) அதனால் பெருக்கமுடியும் என்று சிலர் கருதக்கூடும். சிறிய அளவில் உள்ள உள்நாட்டு அங்காடியை உள்நாட்டு முதலீட்டுக்குமட்டும் பயன்படும்படி செய்வதும், அப்படிச் செய்வதன்மூலமாக முதலீட்டுத் தூண்டுதல்களின் பலவீனத்தை ஓரளவுக்காவது குறைப்பதும், சுங்கப் பாதுகாப்பின் முதன்மையான - உள்ளீடான - நோக்கங்களில் ஒன்றாக இருக்கிறது என்பதில் ஐயம் இல்லை. ஆனால் இப்படிச் செய்வதால்மட்டும் உள்நாட்டுப் பொருளியலில் ''ஒத்தநிலை வளர்ச்சி''யை ("Balanced growth") உடைய ஓர் ஏற்பாடு உருவாகிவிடுமா என்பது பெரிதும் ஐயத்திற்கு உரிய ஒரு கேள்வியாகும். அத்தகைய ஒத்தநிலை வளர்ச்சி இல்லாத நிலையில், சுங்க வரிகளால் பாதுகாக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட தொழிலில் மட்டும் ஏற்படுகிற முதலீட்டுத் தூண்டுதல், அத் தொழிலால் உற்பத்தி செய்யப்படுகிற அதே பொருளின் இறக்குமதிகளை நிறுத்துகிற அளவுக்குத்தான் தொடர்ந்து இருக்கும். அந்த இறக்குமதிகளை நிறுத்துவதற்குத் தேவையான அளவுக்கு அத் தொழிலின் உற்பத்தி பெருகிவிட்டதும், அத் தொழிலின் வளர்ச்சி நின்றுவிடும். அப்படி நின்றுவிடுவதால், முதலீட்டுக்கான நிலையான தூண்டுதல் எதுவும் ஏற்படாமற் போய்விட்டது என்பது தெளிவு. சுங்கப் பாதுகாப்பின் இந்தக் குறைபாடு, எடுத்துக்காட்டாக இந்தியாவில், பருத்தித் துணி, சர்க்கரை முதலிய குறிப்பிட்ட சில தொழில்களைப் பொறுத்தவரை, தெளிவாகத் தெரிந்திருக்கிறது.

குழந்தைத் தொழில்களின் சுங்கப் பாதுகாப்பால் மூலதனத்திற்கான தேவை பெருகக்கூடும் என்னும் கருத்தை நாம் ஏற்றுக்

கொண்டாலகூட, அத்தகைய பெருக்கத்தால், மூலதனத்தின் திரட்சிவீதத்தில் (Rate of accumalation) உயர்வு ஏற்படும் என்பதற்கு உறுதி எங்கே இருக்கிறது? தேவைப்படுகிற மூலதனத்தை அளிப்பவர் யார்? ஆதாய வாய்ப்புகளில் (Profit prospects) ஏற்படுகிற உயர்வு, அதன் அளவிலேயே, வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டில் தானுக எழுகிற உள்நாட்டுச் சேமிப்பின் அளவைப் பெருக்கிவிடாது. சுங்கப் பாதுகாப்பின் பயனுக முதலீட்டுக்கான தூண்டுதலில் ஏற்படும் உயர்வால் உள்நாட்டு மூலதன அளிப்பில் எத்தகைய விளைவும் ஏற்படாமல் இருக்கலாம். தனியாட்களின் சேமிப்பு விகிதமானது மூலதனத்தின் ஆதாய விளைவின் விகிதத்தோடு (The rate of return from capital) தொடர்பற்றது என்றும், பிந்திய விகிதத்தில் ஏற்படுகிற மாறு தலால் முந்திய விகிதத்தில் எத்தகைய மாறுதலும் ஏற்படுவ தில்லை என்றும் கருதப்படுவது, பொருளியல் கோட்பாட்டில் ஒரு வழக்கமாக இருந்துவருகிறது. ஆதாயவிளைவின் விகிதத்தில் ஏற்படுகிற உயர்வானது, மக்களிற் சிலரை, முன்னிலும் மிகுதி யாகச் சேமிக்கத் தூண்டும். ஆனுல் அதே சமயத்தில், அந்த உயர்வானது, மூலதனத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட அளவுடைய எதிர்கால வருமானத்தைப் பெறுவதற்காகச் சேமிப்போரை, முன்னிலும் குறைவாக சேமிக்கும்படிச் செய்யும்.

சுங்கப் பாதுகாப்புக்கு உள்ளாகிய தொழில்களில் முதலீட்டுக் கான தூண்டுதலில் ஏற்படும் உயர்வின் விளைவாக இத் தொழில் களின் வளர்ச்சிக்காகச் செலாவணிப் பெருக்கம் ஏற்படக்கூடும் என்பதும், உருவாகும் பண வீக்கத்திலிருந்து கட்டாயச் சேமிப்பு ஏற்படும் என்பதும் நடக்கக்கூடிய செயல்களே. இப்படி நடக்கக் கூடும் என்பது, நடைமுறையில் முக்கியத்துவம் நிறைந்தது என் பதில் ஐயமில்லை. ஆனுல் பணவீக்கத்திலிருந்து கட்டாயச் சேமிப்பைப் பெறமுடியுமானுல், சுங்கப் பாதுகாப்பு இல்லாமலே அத்தகைய சேமிப்பைப் பெறமுடியும். எடுத்துக்காட்டாக, பணப் பெருக்கத்தின் வாயிலாகச் செய்யப்படுகிற அரசாங்கச் செலவுகளால் அத்தகைய சேமிப்பை உருவாக்கமுடியும்.

இறக்குமதித் தடைகளால் ஏற்படக்கூடிய மற்ெெருரு விளைவு, முதலீட்டுக்கான தூண்டுதலில் ஏற்படுகிற உயர்வால் ஈர்க்கப் பட்டு, அயல்நாட்டு மூலதனம், வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு வந்து, சுங்கப் பாதுகாப்புக்கு உள்ளாகிய தொழில்களைத் தொடங்கி, உள்நாட்டு அங்காடிக்காக உற்பத்தியில் ஈடுபடும் என்பதாகும். ஆனுல் நடைமுறையில், கடந்த காலத்தில்,

தனியாரின் வாணிப மூலதனமானது, உள்நாட்டு அங்காடிக்கான உற்பத்தியில் ஈடுபடுவதற்காக அத்தகைய நாடுகளை நோக்கிப் பெரிய அளவில் வரவில்லை என்பது உண்மையாகும். அப்படி வராததற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கக்கூடும் என்ற போதிலும், இந் நாடுகளில் உள்ள அங்காடியின் அளவு சிறியதாக இருப்பதே தலையாய காரணமாகும். சுங்கப் பாதுகாப்பானது, அயல்நாட்டு மூலதனத்தை வரவழைப்பதற்கான ஒரு பெரிய தூண்டுகோலாக இருக்கமுடியுமா என்று பார்த்தால், பெரும் பாலும் இருக்கமுடியாது என்றே சொல்லவேண்டியிருக்கிறது. பாதுகாப்பதற்கு உரிய பெரிய அங்காடி எதுவும் இல்லாதபோது, சுங்கப் பாதுகாப்பால் எதைப் பாதுகாக்கமுடியும்? குறிப்பிடத் தக்க அளவுடைய உள்நாட்டு அங்காடி ஒன்று இருந்தா லொழிய, சுங்கப் பாதுகாப்பால், அயல்நாட்டு வாணிப முத லீட்டை ஈர்ப்பதில் வெற்றி பெறமுடியாது என்றே சொல்லி விடலாம். வெளிப்படையாகக் கூறுவதானுல், இதுதான் உண்மை: சுங்கப் பாதுகாப்பால் துணைசெய்ய முடியுமானுல், அது பலம் நிறைந்த நாடுகளுக்குத்தான் துணை செய்யமுடியும்; பலவீனமான நாடுகளுக்கு அன்று.

இந்த உண்மையை விளக்கவல்ல ஓர் எடுத்துக்காட்டைக் காணலாமா? பிற நாடுகளில் செய்யப்பட்டுள்ள அமெரிக்க வாணிப முதலீடுகளின் மொத்தத் தொகையில் ஏறத்தாழ 30 சத வீதம் கனடாவில் செய்யப்பட்டுள்ளது. கனடாவில் செய்யப் பட்டுள்ள முதலீட்டில் பாதிக்கு மேற்பட்ட தொகை, பொறி வழித் தொழில்களிலும் (Manufacturing industries) பங்கீட்டுத் துறையிலும் (Distribution) செய்யப்பட்டுள்ளது. கனடாவில் உள்நாட்டு அங்காடிக்காக உற்பத்தி செய்யும் பணியில் ஈடுபடுவது ஆதாயமுள்ள தொழில் என்று அமெரிக்க மூலதனம் கருதுகிறது போலும்! அப்படி அது கருதுவதற்குக் காரணம், கனடா மிக்க செழிப்புள்ள நாடாகவும் உற்பத்தித் திறன் நிறைந்த நாடாகவும் இருப்பதே ஆகும். அத்தகைய கருத்து எழுவதற்குக் கனடாவில் விதிக்கப்பட்டுள்ள சுங்கவரிகளும் ஓரளவுக்குக் காரணமாக இருக்கலாம். ஆனுல் எந்த அளவுக்கு என்பதைத் துல்லியமான முறையில் கண்டறிவது இயலாத செயல் என்றே இயம்ப வேண்டும். கனடாவின் மக்கள் அளவுகடந்த வறுமைக்கு ஆளான வர்களாக இருந்திருந்தால், கனடாவின் சுங்க வரிகளால்மட்டும், அயல்நாட்டு மூலதனத்தைக் கனடாவுக்குள் ஈர்த்திருக்கமுடியாது என்னும் உண்மையை நாம் திட்டவட்டமான முறையில் எடுத்துக் கூறமுடியும் என்று கருதுகிறேன்.

1932ல் ஏற்படுத்தப்பட்ட ஏகாதிபத்தியச் சலுகை முறையானது (The imperial preference system), பிரிட்டனிலும் பிரிட்டிஷ் காமன்வெல்த்திலும் உள்ள அங்காடிகளுக்குப் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலைகளைக் கனடாவில் நிறுவுவதற்கு உரிய தூண்டுதலை அமெரிக்க வாணிப நிறுவனங்களுக்கு அளித்தது என்று சில சமயங்களில் சொல்லப்படுகிறது. இஃது ஒரு முதன்மையான காரணியாக இருந்திருந்தால், இதன் விளைவுகளைக் கனடாவின் ஏற்றுமதிப் பொருள்களில் நாம் கண்டிருக்க முடியும். ஆனால் நடைமுறையில் அத்தகைய விளைவு எதுவும் குறிப்பிடத்தக்க அளவுக்கு ஏற்படவில்லை. 1932க்கு முன்னர் இருந்ததைப்போலவே அதற்குப் பின்னரும், கனடாவின் ஏற்றுமதிகள், பெரும்பாலும் உணவுப் பண்டங்கள், மூலப் பொருள்கள் ஆகியவற்றையே கொண்டிருந்தன.

கனடாவின் பொறிவழித் தொழில்களில் செய்யப்பட்டுள்ள அமெரிக்க வாணிப முதலீடுகள், பெரும் அளவுக்குக் கனடாவின் உள்நாட்டு அங்காடிக்காகவே உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன என்று தோன்றுகிறது. ஆனால் அம் முதலீடுகள், குறைந்த வருமான நாடுகளைப் பொறுத்தவரை, அந் நாடுகளின் உள்நாட்டு அங்காடிகளுக்குச் சுங்க வரிகளின் பாதுகாப்பு இருந்துங்கூட, ஏற்றுமதிக்கான உற்பத்தியிலேயே முழுமூச்சுடன் ஈடுபட்டுள்ளன. அரசியல் இடர்ப்பாடுகளைக் கணக்கில் எடுக்காமல் பார்த்தாற்கூட, சீனாவைப் போன்ற குறைந்த வருமானமுள்ள ஒரு நாட்டில், எவ்வளவு உயர்ந்த அளவில் சுங்க வரிகள் விதிக்கப்பட்டாலும், அச் சுங்கப் பாதுகாப்பால், அந் நாட்டின் உள்நாட்டு அங்காடிக்காக உற்பத்தியில் ஈடுபடும்படி அயல்நாட்டு வாணிப மூலதனத்தை ஈர்க்க முடியுமா என்பது ஐயத்திற்கு உரிய கேள்வியே. பிரேசிலைப் (Brazil) போன்ற ஒரு நாடு, இந்த இருவகை நாடுகளுக்கும் இடைப்பட்ட ஒரு நிலையில் இருக்கிறது. அத்தகைய ஒரு நாட்டால், பண்டங்களின் இறக்குமதிமீது கட்டுப்பாடுகளை விதிப்பதன் வாயிலாக அயல்நாட்டு மூலதனத்தை ஓரளவுக்கு ஈர்க்க முடியலாம். ஆனால் வளர்ச்சி குறைந்த நாடுகள் அனைத்தையும் மொத்தமாக எண்ணிப் பார்க்கும்போது, இறக்குமதித் தடைகளின் வாயிலாக அயல்நாட்டு மூலதனம் குறிப்பிடத்தக்க அளவுக்கு அந் நாடுகளுக்கு ஈர்க்கப்பட்டிருப்பதாகச் சென்ற அத்தியாயத்தில் தரப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து தெரியவில்லை.

ஆகவே, முதலாக்கத்தின் தேவைப் பகுதியைப் (Demand side) பொறுத்தவரையிற்கூட, முதலீட்டுக்கான தூண்டுதலைப் பெருக்குவதன்மூலம் இறக்குமதிக் கட்டுப்பாடுகளாற் செய்யப்படக்கூடிய

பணியானது, மூலதனத்தின் அளிப்பை எந்த அளவுக்குப் பெருக்க முடியும் என்பது ஐயத்திற்கு உரிய ஒன்றே. எதிர்பார்க்கப்படுகிற ஆதாய விளைவு விகிதத்தில் (The prospective rate of return) உயர்வு ஏற்படுவதன் பயனாக உள்நாட்டுச் சேமிப்பு பெருகுகிற ஒரு நிலைமையை நம்மால் எண்ணிப் பார்க்கமுடியும் என்பது உண்மையே. ஆனால் எல்லாச் சமயங்களிலும் அத்தகைய நிலைமை ஏற்படும் என்று கூறமுடியாது. பிழைப்பு மட்டத்திற்கு (Subsistence level) மிக அருகில் வாழ்கிற ஏழை நாடுகளைப் பொறுத்தவரை அத்தகைய நிலைமை ஏற்படுவது மிக அரிது என்றே இயம்ப வேண்டும். சுங்கப் பாதுகாப்பின் பயனாகப் பண வீக்க நிலையை ஒட்டிய கட்டாயச் சேமிப்பு ஏற்படக்கூடும். ஆனால் குழந்தைத் தொழில்களைப் படைப்பதற்கான ஒரு முறை என்னும் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இந்த ஏற்பாடானது, வேதனை மிகுந்தது; கண்டிக்கப்படத் தக்கது. உள்நாட்டு அங்காடியின் அளவு சிறியதாக இருக்கும் காரணத்தால் முதலீட்டுத் தூண்டுதலுக்கு ஏற்படுகிற பலவீனம், சுங்கப் பாதுகாப்பால் குறையக்கூடும் என்பதும், அப்படிக் குறைவதால் அயல்நாட்டு வாணிப மூலதனம் ஈர்க்கப்படக்கூடும் என்பதும் உண்மையே. ஆனால் நடைமுறையில் அப்படி ஈர்க்கப்படக்கூடிய மூலதனத்தின் அளவு மிகக் குறைந்த ஒன்றாகவே இருந்துவருகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளுக்குச் சென்றுள்ள அயல்நாட்டு மூலதனமானது, ஏற்றுமதிக்கான தொழில்களில் ஈடுபட்டுள்ளதே அன்றி, உள்நாட்டு அங்காடிகளுக்கான தொழில்களில் ஈடுபடவில்லை.

வேளாண்மைத் துறையில் உபரியாக உள்ள உழைப்பாளர்கள், சுங்க வரிகளால் பாதுகாக்கப்பட்ட ஒரு புதிய தொழிலில் பயன்படுத்தப்படுகிற நிலைமையில், சுங்கப் பாதுகாப்பானது, மெய்யான நாட்டுவருமானத்தில் நேரடியான முறையில் உயர்வை ஏற்படுத்த முடியும் என்று சிலர் கருதுகிறார்கள். புதிய தொழிலுக்கு மாற்றப்பட்ட உழைப்பாளர்களின் உற்பத்தித் திறன், முன்னர் மிகக் குறைவாக இருந்தது என்றும், ஆனால் இப்போதோ மிகக் கூடுதலாக ஆகிவிட்டது என்றும் அவர்கள் எண்ணுகிறார்கள். இந்த வாதத்தின்படிப் பார்த்தால், சுங்கப் பாதுகாப்பின் பயனாக நாட்டின் பொருள் உற்பத்தியில் திட்டவட்டமான உயர்வு ஏற்படும் என்பது தெளிவு.

இந்த வாதத்தை ஏற்றுக்கொள்வதன்முன், மூன்று உண்மைகளை நாம் நினைவில் நிறுத்தவேண்டும். முதலாவதாக, நாட்டின் பொருள் உற்பத்தியில் ஏற்படுவதாகத் தோன்றுகிற உயர்விலிருந்து, குறிப்பிட்ட பண்டங்களை நுகர்வோர் அவற்

றிற்குக் கூடுதலான விலையைத் தருகிற காரணத்தால் அவர்களுடைய மெய் வருமானத்தில் ஏற்படுகிற இழப்பைக் கழித்துவிடவேண்டும். [வேளாண்மைத் துறையிலிருந்து மாற்றப்பட்ட உழைப்பாளர்களின் உற்பத்தித் திறனில் ஏற்படுகிற உயர்வைவிட இந்தக் கழிவானது (Deduction) கூடுதலாக இருக்குமானல்—அஃது அப்படி இருக்கக்கூடும் - அந்த உழைப்பாளர்களை ஏற்கிற புதிய தொழிலானது ஆதாயம் அற்றதாக ஆகிறது. அப்படி ஆவதால், மெய்யான நாட்டு வருமானத்தில் ஒரு நிகர இழப்பே (Net loss) ஏற்படுகிறது என்பது வெளிப்படை.

இரண்டாவதாக, பாதுகாக்கப்பட்ட தொழிலுக்கு ஓர் உதவிக் கொடையாகவும் (Subsidy), அத் தொழிலால் உற்பத்தி செய்யப்படும் பொருளை நுகரும் மக்கள்மீது விதிக்கப்பட்ட ஒரு வரியாகவும் ஒரே சமயத்தில் அமைந்துள்ள மேற்படி கழிவானது, இருக்கவேண்டியதைவிடக் கூடுதலான அளவை உடையதாக இருக்கிறது. உதவிக் கொடைக்கு உரிய நிதியை இந்த முறையிற் பெறுவது, செலுத்தும் திறன் என்னும் கோட்பரட்டிற்கு ஏற்றவகையில் பொதுவான வரி விதிப்பிலிருந்து நிதியைப் பெறுகிற முறையோடு ஒப்பிட்டுப் பார்த்தால், கூடுதலான சுமையை உருவாக்குகிறது. பிந்திய முறை கையாளப்பட்டால், சுங்கப் பாதுகாப்புக்கான தேவை இல்லாமற் போவதோடு, அதற்குப் பதிலாக ஒரு நேர்முக உதவிக் கொடை (A direct subsidy) தரப்படுகிற ஏற்பாடு உருவாகிறது.

மூன்ருவதாகச் சொல்லப்படவேண்டிய உண்மையே, மிக முதன்மையானது; மிகத் தெளிவாகத் தெரிவது. மேற் குறிப்பிட்ட கழிவைச் செய்த பின்னரும் நாட்டு உற்பத்தியில் ஒரு நிகர உயர்வு ஏற்படுவதாக வைத்துக்கொண்டாலும், சுங்கப் பாதுகாப்பால்தான் இந்த உயர்வு ஏற்பட்டது என்று இயம்பமுடியாது. பாதுகாக்கப்பட்ட புதிய தொழிலில் பொதிந்துள்ள மூலதனத்தின் பயனுக இந்த உயர்வு ஏற்பட்டது என்று கூறுவதே முறை. சுங்கப் பாதுகாப்பால் அன்று; மூலதனத்தைப் பயன்படுத்தியதால்தான் நாட்டின் மெய் வருமானத்தில் உயர்வு ஏற்பட்டிருக்கிறது. சுங்கப் பாதுகாப்பை அதன் அளவில் பார்க்கும்போது, அதனுல் மெய் வருமானம் குறைகிறது என்பதே உண்மை. மூலதனத்தைப் பயன்படுத்துவதால் உற்பத்தியில் ஏற்படுகிற உயர்வைக் குறைக்கிற ஓர் எதிர்மறைச் சக்தியாகவே சுங்கப் பாதுகாப்பை நாம் மதிக்கவேண்டும். பாதுகாக்கப்பட்ட தொழிலுக்குத் தொடக்கத்தில் எந்தத் தராதரப் பிரதிகூலம் (Comparative disadvantage) இருப்பதால் அத் தொழிலுக்குப் பாதுகாப்பானது

தேவைப்படுகிறதோ அந்தப் பிரதிகூலம் நாளடைவில் இல்லாமற் போய்விடும் என்றும், அப்படி இல்லாமற்போவதால் மேலே குறிப்பிட்ட எதிர்மறைச் சக்தியும் நாளடைவில் மறைந்துவிடும் என்றும் தெரிவிக்கப்படுகிற கருத்தின் ஆற்றலைப் பொறுத்துத் தான் குழந்தைத் தொழில் வாதத்தின் (Infant industry argument) ஆற்றல் அமைந்திருக்கிறது.

பாதுகாக்கப்பட்ட தொழிலில் தற்போது பொதிந்துள்ள மூல தனம் எங்கிருந்து வந்திருக்கிறது? நாம் திரும்பிப் பார்த்து, ''வரவு செலவுக்கணக்''கைப் போட்டு, நடந்தது என்ன என்பதை விளக்க முனையும்போது, நாம் கேட்கவேண்டிய கேள்வி இதுதான்: எதிர்காலத்தை நோக்குவதாயினும், மேலே குறிப் பிடப்பட்ட கொள்கையை நாம் கையாள்வதாக இருந்தால், ''மூலதனத்தை எங்கிருந்து பெறுவது?'' என்கிற கேள்வியைத் தான் நாம் கேட்கவேண்டியிருக்கிறது. சுங்கப் பாதுகாப்பானது, அதன் அளவில், மூலதனத்தைத் தருவதில்லை. குழந்தைத் தொழிற் பாதுகாப்புப்பற்றிய எல்லாக் கருத்தாய்வுகளிலும், பாதுகாக்கப்படுகிற புதிய தொழிலுக்குத் தேவையான மூலதனம் தானுகக் கிடைக்கிறது என்று பாவித்துக் கொள்ளப்படுகிறது. ஆனுல் குறைந்த வருமான நாடுகளைப் பொறுத்தவரை, தற்காலத் தில், அவ்வாறு மூலதனம் கிடைக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. பெரிய அளவிலும் வெற்றி பொருந்திய முறையிலும் கடந்த காலத்தில் குழந்தைத் தொழில் பாதுகாப்புக் கொள்கை யைக் கையாண்ட நாடுகளைப் பொறுத்தவரை, அப்படி எதிர் பார்ப்பது பொருத்தமாக இருக்கலாம். கடந்த காலத்தில் ஐரோப்பாவிலிருந்து மூலதனத்தையும் உழைப்பாளர்களையும் மாபெரும் அளவில் பெற்ற ஐக்கிய அமெரிக்காவும், ஆஸ்திரே லியாவும் அத்தகைய நாடுகளாகும். இத்தகைய நாடுகளில், இத்தகைய நிலைமைகளில், குழந்தைத் தொழிற் பாதுகாப்பானது, மிகுந்த பயன் விளைக்கவல்ல கைக்கோளாக இருந்திருக்கலாம். பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகளில் இக் காலத்தில் காணப் படுகின்ற முற்றிலும் மாறுன நிலைமைகளில், சுங்கப் பாதுகாப் பால்மட்டும் குறிப்பிடத்தக்க பயன் விளையாது. முதலாக்கம் என்னும் கண்ணேட்டத்திலிருந்து பார்க்கும்போது, சுங்கப் பாதுகாப்பை இரண்டாந்தர முதன்மை உடையதாகவே கருத வேண்டும்.

என்னுடைய கருத்து, தவறுன முறையில் புரிந்துகொள்ளப் படமாட்டாது என்று நம்புகிறேன். குழந்தைத் தொழிற் பாதுகாப்பு கூடாது என்று நான் கூறவில்லை. குழந்தைப் பாது

காப்புக்கு முன்னதாகக் குழந்தைப் படைப்பு நடைபெற்ருக வேண்டும் என்பதைத்தான் நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

## இறக்குமதித் தடைகளால் பண வருமானம், சேமிப்பு ஆகியவற்றில் ஏற்படும் விளைவுகள்

இப்போது நாம் ஆராய இருக்கிற கருத்து வேறு ஒரு வகையைச் சேர்ந்ததாகும். இந்தக் கருத்தாய்வில், பன்னுட்டு மூலதன இயக்கங்கள் சிறிதளவும் இடம் பெறமாட்டா என்பதோடு, அயல்நாட்டு உதவியோ அயல்நாட்டு முதலீடோ செய்யப்படவில்லை என்றும் பாவித்துக்கொள்ளப்படும். ஒரு நாட்டின் அயல்நாட்டு வாணிபத்தால் அந் நாட்டின் முதற் பொருள் தொகுதியைப் பெருக்கமுடியுமா என்பதையும், முடியுமானல் எந்த வழியில் என்பதையும், இத் துறையில் வாணிபக் கைக்கோளால் ஏதேனும் துணை புரியமுடியுமா என்பதையும், முடியுமானல் எவ்வகைத் துணை என்பதையும் ஆராய்ந்து பார்ப்பதே இக் கருத்தாய்வின் நோக்கமாகும். குழந்தைப் பாதுகாப்பு வாதம், பெரும்பாலும் முதலீட்டுக்கான தூண்டுதல்களைப் பற்றியதாகவே - அதாவது, மூலதனச் சிக்கலின் தேவைப் பகுதியைப் (Demand side of the capital problem) பொறுத்ததாகவே இருக்கிறது. ஆனல் இப்போது நாம் செய்ய இருக்கிற கருத்தாய்வு, பெரிதும் அளிப்புப் பகுதியைப் (Supply side) பொறுத்ததாக இருக்கிறது.

அயல்நாட்டு வாணிபமானது, முன்னேறிய நாடுகளிலிருந்து முதற் பொருள்களைப் பெறுவதற்கான ஒரு கருவியாகும். ஒரு நாடானது நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துவதன்மூலம் முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகளைப் பெருக்கமுடியும் என்று நம்புவது, கவர்ச்சிமிக்கச் செயலாக இருக்கிறது. வளர்ச்சியடையாத ஒரு நாடு, பன்னுட்டு வாணிபத்தின் வாயிலாகப் பொறிகளையும் பிற கருவிகளையும் பெறமுடியும் என்பது, வாணிபத்தின் மூலமாகக் கிடைக்கக்கூடிய பெரிய நன்மைகளில் ஒன்ருகும். ரஷ்யாவின் தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில், குறிப்பாக 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில், இந்த நன்மையை அந்த நாடு பெற்றுப் பயனடைந்தது. அக் காலத்தில் அந்த நாடு தன் முதன்மைப் பொருள்களைப் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவிட்டு, அவற்றிற்கு ஈடாக அந் நாடுகளிலிருந்து ஏராளமான தற்காலக் கருவிகளையும் பொறிகளையும் இறக்குமதி செய்துவந்தது. ஆனல் தொழில் வளர்ச்சித் துறையில் முதன்முதலில் ஈடுபட்ட நாடாகிய பிரிட்டிஷ்

பெருநாட்டுக்கு அப்படி ஈடுபட்டபோது இந்த நன்மை கிடைக்க வில்லை. அந்த நாளில் அந்த நாடு, தனக்குத் தேவையான முதற் பொருள் உற்பத்தியில், தொடக்க நிலையிலிருந்து தானே ஈடுபட வேண்டிருந்தது. ரஷ்யாவைப் பொறுத்தவரை, அந் நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களுக்கு மாற்றாக முதற்பொருள்களை இறக்கு மதி செய்துகொள்ள முடிந்தது என்றபோதிலும், சேமிப்புச் செயலில் ஈடுபடாமல் அவ்வாறு செய்ய முடியவில்லை.

எந்த நாட்டிலாவது முதற் பொருள்கள் இறக்குமதி செய்யப் படவேண்டுமானால், அப்படிச் செய்யப்படுவதற்குமுன்னர் அந்த நாட்டில் சேமிப்புச் செயல் நடைபெற்றாகவேண்டும். தேய்மானம் அடைந்த முதற்பொருள்களை ஈடு செய்வதற்காக (Replacement) முதற்பொருள்கள் இறக்குமதி செய்யப்படுமானால், மேற் குறிப் பிட்ட சேமிப்பானது, தேய்மான ஒதுக்கீடு (Depreciation allowance), வழக்கிழத்தல் ஒதுக்கீடு (Obsolescence allowance) ஆகிய வடிவங்களில் அமைந்த 'நிறுத்திவைத்த' சேமிப்பாக ('Retained' saving) மட்டும் அமையும். அவ்வாறின்றித் தற் போதுள்ள பொறிகள், கருவிகள் ஆகியவற்றோடு மேலும் பல பொறிகளையும் கருவிகளையும் சேர்ப்பதற்காக அவை இறக்குமதி செய்யப்படுமானால், புதிய சேமிப்பு தேவைப்படும்.

தொடர்புடைய எல்லாச் செய்திகளையும் ஒன்றாக வைத்துப் பார்க்கும்போது, முதற்பொருள்களை இறக்குமதி செய்கிற ஒரு நாடு சேமிப்பில் ஈடுபடுகிறது என்பது தெளிவு. ஏனென்றால், அப்படி இறக்குமதி செய்வதற்காக அந்த நாடு, அம் முதற் பொருள்களுக்குப் பதிலாக இறக்குமதி செய்திருக்கக்கூடிய நுகர்வோர் பொருள்களை நுகரும் மகிழ்ச்சியை விட்டுக் கொடுத் திருக்கிறது; அல்லது, இறக்குமதி செய்யப்படுகிற முதற் பொருள்களுக்கு ஈடாக அந்த நாடு இப்போது ஏற்றுமதி செய்கிற பொருள்களை நுகர்ந்திருக்கக்கூடிய மகிழ்ச்சியை விட்டுக் கொடுத் திருக்கிறது.

முற்றிலும் திட்டமிடப்பட்ட ஒரு பொருளியலைப் பொறுத்த வரை, இதற்குமேல் கூறுவதற்கு எதுவும் இல்லை. அத்தகைய பொருளியலை உடைய ஒரு நாட்டில், அரசு, மக்களின்மீது கூடு தலான சேமிப்பைத் திணிப்பது என்று முடிவு செய்துவிடுகிறது. அவ்வாறு செய்யப்பட்ட சேமிப்பை அந்த அரசு முதற் பொருள் களை இறக்குமதி செய்வதில் முதலீடு செய்கிறது. இத்தகைய ஒரு நாட்டில், சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டும் அரசின் (The State) ஒரே நடவடிக்கையின் இரு பகுதிகளாக அமைந்து விடுவதால் இந்த இரண்டையும் தனித் தனியே பிரித்துக் காண முடியாமல் இருக்கலாம்.

ஒரு பணவழி அமைப்பில் (A monetary system) இயங்குகின்ற விலே, ஆதாயம், வருமானத் தூண்டுதல்கள் ஆகியவற்றை ஓரளவுக்காவது தன் அடிப்படையாகக் கொண்டுள்ள தனியாள் மாற்றுப் பொருளியலேப் (Individual exchange economy) பொறுத்தவரை, மேலும் சில கருத்துக்களேத் தெரிவிக்கவேண்டியிருக்கிறது. சோவியத் வட்டத்திற்கு வெளியே உள்ள வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு (அவ் வட்டத்திற்கு உள்ளே உள்ள சில நாடுகளுக்கு) இக் கருத்துகள் பொருந்தும். இத்தகைய நாடுகளேப் பொறுத்தவரை, இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் எவை என்பதை மாற்றுவதும், முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகளேப் பெருக்குவதும், நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளேக் குறைப்பதும் அரசுக்கு எளிய செயல்கள் என்று நம்புவது பொருத்தமுடையது ஆகாது. செய்யப்படவேண்டியன இவை மட்டுமே என்று கருதுவதும் பொருந்தாது.

விலேத் தூண்டுதல், வருமானத் தூண்டுதல் ஆகியவற்றையே பெரும் அளவுக்கு இப்போதும் அடிப்படையாகக் கொண்டுள்ள நாடுகளிற்கூட, அரசானது, முதலாக்கப் பணியை முன்னிலும் கூடுதலான அளவுக்கு இயற்றத் தொடங்கியிருக்கிறது என்பதும், நாட்டின் வருமானத்தில் முதலீட்டிற்குப் பயன்படுத்தப்படும் பகுதியைப்பற்றி முன்னிலும் விறுவிறுப்பான அக்கறை காட்டத் தொடங்கியிருக்கிறது என்பதும் உண்மையே. பெரும்பாலும் தனியாரின் வாணிபத்தாலேயே நடத்தப்படுகிற பொருளியலில் கூட, நாட்டின் நுகர்வுக்கும் நாட்டின் சேமிப்புக்கும் இடையே செய்யப்படும் தெரிவு (Choice), நாளுக்கு நாள் முன்னிலும் மிகுதியான அளவுக்கு அரசாலேயே முடிவு செய்யப்படக்கூடும்.

நடப்பு நுகர்வுக்கான இறக்குமதிகளேத் தடுத்து, அவற்றிற்கு மாறுக முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகளே மிகுவிக்கும் முறையில் அரசாங்கம் கட்டளேயிடுகின்றபோது, இத்தகைய ஒரு முடிவு எடுக்கப்படுகின்றது என்று நாம் கருதலாமா? நேர்முகக் கட்டுப்பாடுகள் அல்லது செய்யவல்ல வரிகள் ஆகியவற்றின் மூலமாக நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளேக் குறைத்தால், ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சிக்கு, முதற் பொருள்களின் இறக்குமதிகள் என்னும் வடிவத்தில், முன்னிலும் கூடுதலான மெய்ம் மூலதனம் கிடைக்கும் என்னும் கருத்து பரவலாக இருந்து வருகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லே. அரசாங்கங்கள் அவற்றினுடைய வாணிபக் கைக்கோளின் வாயிலாகப் பொறிகள், கருவிகள் முதலிய முதற்பொருள்களின் இறக்குமதிகளேப் பெருக்குவதற்காக நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளேத் தடை செய்கிறபோதெல்லாம், 'முதற்பொருள் திரட்சியை

நாம் கூடுதலாக்குகிறோம்' என்று அவை உறுதியாக நம்புவதாகத் தெரிகிறது. ஆகவேதான், இந்த வகையான வாணிபக் கைக்கோள் — ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதித் தடைகள் (Luxury import restrictions) என்று இந்தக் கைக்கோளை நாம் அழைக்கலாம் — இக் காலத்தில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் மிகப் பரவலாகக் காணப்படுகிறது.

இந்த வகையான இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் விளைவுகளைப் பிற காரணிகளிலிருந்து முடிந்த அளவுக்குத் தனிமைப் படுத்திப் பார்க்கவேண்டுமானால், இறக்குமதிகளும் ஏற்றுமதிகளும் ஒத்தநிலையில் இருப்பதும், பணவீக்கம் அற்ற வேலை நிறைவு நிலைக்கு (Full employment without inflation) ஏற்புடைய அளவில் நாட்டு வருமானம் இருப்பதும் ஆகிய ஒத்தநிலையையே (Equilibrium) நம்முடைய கருத்தாய்வின் தொடக்கமாக வைத்துக்கொள்வது, சாலச் சிறந்தது ஆகும். முதற் பொருள்களை முன்னிலும் மிகுதியான அளவுக்கு இறக்குமதி செய்ய வேண்டும் என்கிற நோக்கத்தை நிறைவேற்றவே, நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகள்மீது, குறிப்பாக ஆடம்பரத் தன்மையை (Luxury character) அல்லது ஓரளவு ஆடம்பரத் தன்மையை (Semi-luxury character) உடைய பொருள்களின் இறக்குமதிகள்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. சுங்கத் தீர்வைகள் (Customs revenues) அல்லது பங்கு அளவு ஆதாயங்கள் (Quota profits) முதலிய முதன்மையல்லாத சிக்கல்களை நம் கருத்தாய்விலிருந்து அகற்றிவிடலாம். அப்படி அகற்றுவதற்காக, இறக்குமதிக் கட்டுப்பாடுகள், உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படாத சில குறிப்பிட்ட பண்டங்களின் இறக்குமதிகளை அடியோடு தடைசெய்கின்ற வடிவத்தில் அமைந்துள்ளன என்று வைத்துக் கொள்வோம். நாட்டின் ஏற்றுமதிகளிலிருந்து கிடைக்கிற விற்பனைத் தொகை மாறுமல் ஒரே நிலையில் இருக்கிறது என்று அல்லது இந்த நாட்டால் கட்டுப்படுத்தமுடியாத நிலையில் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம்.

இந்த நிலையில், நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகள் குறைக்கப்பட்டு, முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகள் கூட்டப்படமுடியும். ஆனால் இது, நிகழ்ச்சி வரிசையின் முதல் கட்டம் மட்டுமே. பண வருமானத்தின் உள் நாட்டு ஓட்டம் (Domestic flow), சேமிப்புக்கும் முதலீட்டுக்கும், இடையே உள்ள ஒத்தநிலை ஆகியவற்றில் மேற்படி நடவடிக்கையால் ஏற்படுகிற விளைவுகள் யாவை? மக்கள், தங்களுடைய வருமானத்தின் ஒரு பகுதியை, இறக்குமதி செய்யப்பட்ட நுகர்வுப் பொருள்களை வாங்குவதற்காக முன்பு பயன்படுத்தி வந்தார்கள் அல்லவா?

அவர்கள் அந்த வருமானப் பகுதியை இப்போது என்ன செய்கிறார்கள் என்னும் கேள்விக்கு உரிய விடையைப் பொறுத்துத் தான் மேற்படி விளைவுகள் அமையும். வெவ்வேறு வகைப்பட்ட இரண்டு பாவனைகளைச் (Assumptions) செய்து, ஒவ்வொரு பாவனையின் போதும் எத்தகைய விளைவுகள் ஏற்படுகின்றன என்பதை இப்போது நாம் ஆராய்ந்து அறியலாம்.

முதலில், மேற்குறிப்பிட்ட வருமானப் பகுதி முழுவதையும் இப்போது மக்கள் சேமிக்கிறார்கள் என்று பாவித்துக் கொள்வோம். அவர்களால் அயல்நாட்டுப் பண்டங்கள் எவற்றையும் பெற முடியவில்லை; தங்கள் பணத்தை வேறு எதன் மீதாவது செலவிடலாம் என்கிற எண்ணமும் அவர்களுக்கு ஏற்படவில்லை. எனவே, இறக்குமதிப் பண்டங்களின்மீது முன்னர் அவர்கள் செலவிட்ட வருமானப் பகுதியை இப்போது சேமித்துவிடுகிறார்கள். நாம் விரும்பினால் அதைக் கட்டாயச் சேமிப்பு என்று அழைக்கலாம்; ஆனால் சேமிப்பு உண்மையில் நடைபெற்றிருக்கிறது என்பதை மறுக்க முடியாது. நடைமுறையில் பெரும்பாலும் இப்படி நிகழாது என்றபோதிலும், இத்தகைய பாவனை செய்யப்படக் கூடிய ஒன்றே. இறக்குமதி செய்யப்படும் முதலீட்டுப் பொருள்களின் அளவில் ஏற்படும் பெருக்கத்திற்கு ஈடான அளவு பெருக்கம், உள்நாட்டுச் சேமிப்பில் ஏற்படுகிறது. உள்நாட்டுப் பணத்துறை ஒத்தநிலை எத்தகைய மாறுதலுக்கும் ஆளாகாமல் முன் இருந்தபடியே இருக்கிறது. [பெருக்கும் எண் பகுத்தாய்வின்படி (Multiplier analysis) ''ஒழுக்கல்கள்'' ("Leakages") ஏற்படும் என்று நாம் கருதினால், இறக்குமதிகளின்மீது செலவிடப்பட்ட வருமானத்தின் ஒழுக்கலில் ஏற்படும் செயற்கையான ஒரு குறைவு, உள்நாட்டுச் சேமிப்பில் சேர்ந்து விடுகிற வருமான ஒழுக்கலில் அதே அளவில் ஏற்படுகிற உயர்வால் சரிக்கட்டுப்பட்டுவிடுகிறது என்பதை நினைவு கூர்தல் வேண்டும்.] முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிப் பெருக்கம், முதலாக்க விகிதத்தில் உண்மையிலேயே ஓர் உயர்வு ஏற்படுவதைக் குறிக்கிறது என்பதில் ஐயமில்லை.

இரண்டாவதாக, இறக்குமதி செய்யப்படும் நுகர்வுப் பொருள்களின்மீது செலவிட முடியாத வருமானம் முழுவதையும் மக்கள் உள்நாட்டு நுகர்வுப் பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின்மீது செலவிடுகிறார்கள் என்று நாம் பாவித்துக்கொள்ள முடியும். வேறு சொற்களிற் கூறுவதானால், இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் விளைவாக நுகர்வோரின் செலவுத் தொகையில் எத்தகைய மாறுதலும் ஏற்படவில்லை என்றும், இறக்குமதிப் பொருள்கள்மீது செலவிடப்படுவதற்கு மாறாக அதே தொகை இப்போது உள்நாட்டுப் பொருள்கள்மீது செலவிடப்படுகிறது

என்றும் நாம் கற்பித்துக் கொள்கிறோம். இந்தப் பாவனையின் படிக்கூட முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகள் உயர்த்தப் பட முடியும் என்பது உண்மையே. ஏனென்றால், ஏற்றுமதிகளால் கிடைக்கிற விற்பனைத் தொகை முன் இருந்தபடியே இருக்கிறது; ஆனால் நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளுக்கு முன்பு செலவு செய்யப்பட்டதைவிடக் குறைந்த தொகையே இப்போது செல விடப்படுகிறது. நாட்டின் அயல்நாட்டு வாணிபக் கணக்கை, அதன் அளவில் பார்க்கும்போது, இறக்குமதி செய்யப்படும் முதற் பொருள்களின் வடிவத்தில் முன்னிலும் கூடுதலான முதலாக்கம் செய்வதற்கு அதில் இப்போது இடம் ஏற்பட்டிருப்பதாகத் தோன்றும். ஆனால் உள் நாட்டுச் செலாவணிக் கண்ணோட் டத்தில் பார்த்தால், இம் முதற் பொருள்களை வாங்குவதற்கு உள்நாட்டுச் செலாவணிப் பெருக்கத்தின் வாயிலாக நிதிகளை ஏற்படுத்தவேண்டியிருக்கும்.

இந்த நிலைமையின் அடிப்படையான சிக்கல், தங்களுடைய நுகர்வின் அளவைக் குறைத்துக்கொள்ள நாட்டு மக்கள் தங்கள் ஒப்புதலைத் தரவில்லை என்பதுதான். அவர்கள் பயன்படுத்திவந்த இறக்குமதிப் பொருள்களின் அளவில் இப்போது ஏற்பட்டுள்ள குறைவை உள்நாட்டுப் பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின் மீதான அவர்களுடைய செலவை உயர்த்துவதன்மூலம் நிறை செய்ய அவர்கள் முயல்வர். அதன் விளைவாகப் பணத்துறை ஒத்த நிலையில் (Monetary equilibrium) ஒரு சீர்குலைவு ஏற்படும்; அதாவது, பண வழி உற்பத்திச் செலவுகள், விலைகள் ஆகிய வற்றில் ஒரு பணவீக்க அழுத்தம் ஏற்படும். நுகர்வுக்கு உரிய இறக்குமதிகள் தடுக்கப்படுவதால் உள்நாட்டுப் பொருளியலில் உள்ள அழுத்தம் பெருகும். உள்நாட்டுப் பொருள்களுக்கான தேவை (Demand) அவற்றின் அளிப்பைவிட (Supply) மிகக் கூடுதலாக இருக்கும். அப்படி இருப்பதன் விளைவாக அப் பொருள் களின் விலைகள் உயரும்.

இதுவரை நாம் பணத்துறை இயல்பை மட்டும் ஆராய்ந் தோம். முதலாக்கத்தின் மெய்யான அளவில் (Real volume) எத்தகைய மாறுதல் ஏற்படுகிறது என்பதை இனிப் பார்ப்போம். முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகள் பெருகியிருக்கின்றன. ஆனால் அதோடு கதை முடிந்துவிடவில்லை. உள்நாட்டு அங்காடி யில் நடைபெறும் நுகர்வுச் செலவு கூடுதலாகியிருக்கிற காரணத் தால் உள்நாட்டு முதலீட்டு நடவடிக்கைகளில் குறைவு ஏற்படக் கூடும். வறுமை மிகுந்த ஒரு நாட்டில் கூட, சில உற்பத்திக் காரணிகள் முதற் பொருள் உற்பத்தியில் எப்போதும் பயன் படுத்தப்பட்டு வருகின்றன. புதிய முதலீட்டுக்காக இல்லாவிட்

டாலும், தேய்மானம் அடைந்த முதற்பொருள்களை ஈடு செய்வதற்காகவும், இருக்கின்ற முதற் பொருள்களைப் பராமரிப்பதற்காகவும் அந்த உற்பத்திக் காரணிகள் பயன்படுத்தப் படுகின்றன. முதற் பொருள்களின் இறக்குமதிகள், வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டின் முதல் திரட்சியில் பொதுவாகச் சிறிய பங்காகத்தான்,- மூன்றில் ஒரு பங்கு அல்லது அதைவிடச் சிறிய பங்காகத்தான் அமைந்துள்ளன. அம் முதல் திரட்சியின் பெரும் பகுதி, சாலைகள், கட்டிடங்கள், பொதுப் பணிகள் (Public works), நில முன்னேற்றங்கள் முதலிய — பன்னாட்டு வாணிபத்தைச் சாராத முதற் பொருள்களாகவே அமைந்துள்ளது. நுகர்வுச் செலவில் ஏற்படும் உயர்வானது, உற்பத்திக் காரணிகளை, உள்நாட்டு முதலீடு மற்றும் பராமரிப்பிலிருந்து அகற்றி, நடப்பு நுகர்வுக்கான உற்பத்தியில் ஈடுபடச் செய்யும். இந் நிலையில், உள்நாட்டு முதற் பொருள் உற்பத்தியானது, பெருகிவிட்ட உள்நாட்டு நுகர்வுச் செலவுக்கு இடம் தந்து ஒதுங்கிவிடவேண்டியிருக்கிறது. நுகர்வோர், அவர்களுடைய மொத்த நுகர்வில் எத்தகைய குறைவும் ஏற்படுவதை ஏற்றுக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக, அவர்களுடைய செலவின் பயனாக, உள்நாட்டு மெய்ம் முதற் பொருளின் பெருக்கத்திற்கு அல்லது பராமரிப்புக்குப் பயன்படுத்தப்பட்டு வந்த தொகையில் குறைவு ஏற்படுகிறது. இந்த முறையில், முதலீட்டுப் பொருள்களின் இறக்குமதிகளில் ஏற்படுகிற உயர்வுக்கு ஈடான அளவு உள்நாட்டு முதலீட்டு நடவடிக்கைகளில் ஏற்படுகிற குறைவானது, அல்லது தேய்மானம் அடைகிற முதற் பொருளைப் பராமரிக்கவும் ஈடு செய்யவும் தவறிவிடுகிற காரணத்தால் ஏற்படுகிற உள்நாட்டு முதலீட்டு இழப்பானது (Disinvestment) அமைந்துவிடுகிறது. சேமிப்பில் உயர்வு ஏற்படாதவரையில், மொத்த நிகர முதலாக்கத்தில் எத்தகைய உயர்வும் ஏற்பட முடியாது.

நம்மால் கருத்தாய்வு செய்யப்படும் தற்போதைய நிலைமையைப் பொறுத்தவரை, பண வீக்கத்தின் விளைவாக ஏற்படும் கட்டாயச் சேமிப்பின் வடிவத்தில்மட்டுமே சேமிப்பில் உயர்வு ஏற்படமுடியும். ஆனால் பண வீக்கத்தின் விளைவு, விலைகள் உயர்கின்ற வேகத்தையும், விலை உயர்வின் ஏனைய இயல்புகளையும், மக்களின் உளவியல் போக்கையும் (Psychological attitude) பொறுத்திருக்கின்ற காரணத்தால், இத்தகைய விளைவுதான் ஏற்படும் என்று முன்கூட்டியே திட்டவட்டமாக முடிவு செய்வது இயலாத செயல். பொதுப்படையான சில சாத்தியக் கூறுகளை மட்டுமே நாம் சுட்டிக்காட்ட முடியும். பண வீக்கத்தின் வேகம் நடுத்தரமானதாக இருந்தால், சமுதாயத்தின்மீது ஓரளவு

கட்டாயச் சேமிப்பு சுமத்தப்படும் என்பதற்கான வாய்ப்பு சற்றுத் தெளிவாகவே இருக்கிறது. அத்தகைய சேமிப்பானது, கூலிகளும் ஊதியங்களும் பின்தங்கி நிற்பதாலும், வருமானப் பங்கீடானது செல்வம் உடையவர்கள் சார்பாக மாறுவதாலும் ஏற்படுகிறது (செல்வர்களின் இறுதிநிலைச் சேமிப்பு விகிதம் ஏழைகளின் அவ் விகிதத்தைவிடக் கூடுதலாக இருக்கும்போதுமட்டுமே இவ்வாறு நிகழும்). நுகர்வுப் பொருள்களின்மீது விதிக்கப்படுகிற இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் விளைவாக முதற்பொருள்களின் இறக்குமதிகளில் ஓர் உயர்வு ஏற்படுகிறது அல்லவா? அந்த உயர்வின் வடிவத்தில் ஏற்படுகிற மெய்ம் முதலீட்டின் (Real investment) பெருக்கத்திற்குத் தேவையான நிதியைத் தருகிற மெய்யான சேமிப்பை (Real saving) அளிக்கவல்ல புதிய ஓர் ஊற்றுக்காலாக இக் கட்டாயச் சேமிப்பு அமைகிறது. ஆனால் இந்த வழி, சமுதாயத்திற்குத் துயரத்தை அளிக்கவல்ல வழியாக இருப்பதோடு, நிலையற்ற - நம்பமுடியாத - வழியாகவும் இருக்கிறது என்பது, வருந்தத்தக்க ஓர் உண்மையாகும். விலைகளில் ஏற்படுகிற பொதுவான உயர்வானது, சிறிது காலத்திற்குப் பின்னர், பணச் சேமிப்பைச் செய்வதற்கு உரிய மக்களின் விருப்பத்தைக் குறைத்துவிடக்கூடும். அப்போது, மதிப்பைச் (Value) சேர்த்து வைப்பதற்காகப் பணச் சேமிப்பில் ஈடுபடவோ, அல்லது தன் சேமிப்பைப் பணவழியில் அமைந்த சொத்துகளின் (Assets) வடிவத்தில் வைத்திருக்கவோ, எவருக்கும் விருப்பம் இராது. அந்த நிலையில் சேமிப்பு நிகழுமானால், அச் சேமிப்பானது உடனடியாக உறைவிடக் கட்டிடங்கள் போன்ற மெய் வடிவங்களை (Real forms) அடைய முயலும். அது எந்த அளவுக்கு அவ் வடிவங்களை அடைகிறதோ அந்த அளவுக்கு முதற்பொருள்களின் கூடுதல் இறக்குமதிகளைப் பெறுவதற்குப் பயன்படாது போய் விடும். பண வீக்கமானது மூலதன வளங்களைத் தவறான திசைகளில் திருப்பிவிடக்கூடும். பண வீக்கத்தின் விளைவாக முதலீட்டின் மொத்த அளவில் ஒரு குறைவு ஏற்படாமல் இருக்கலாம்; ஆனால் தவறான வகையில் முதலீடு செய்யப்படுகிற நிலை ஏற்படக் கூடும். ஈடுசெய் செலவுகளுக்குப் (Replacement costs) போதிய அளவு பணம் ஒதுக்கப்படாததன் விளைவாகப் பொருள் இருப்புக்கள் (Inventories), நிலை முதற் பொருள்கள் (Fixed capital) ஆகியவை ஈடு செய்யப்படாத ஒரு நிலையைப் பண வீக்கமானது ஏற்படுத்தும்போது, அதன் பயனாக முதலாக்கத்தில் ஒரு குறைவு ஏற்படக்கூடும்.

மிகத் தீவிரமான இரண்டு பாவனைகளையும் எடுத்துக் கொண்டு, ஒவ்வொரு பாவனையின்போதும் ஏற்படக்கூடிய விளைவு

களை இதுவரை நாம் கருத்தாய்வு செய்தோம். ஆனால் நடைமுறை உலகத்தில், இந்த இரு நிலைகளும் கலந்த ஒருவகை நிலையே பெரும்பாலும் ஏற்படக்கூடும். அத்தகைய நிலையில், முன்பு இறக்குமதிகளுக்காகச் செலவிடப்பட்ட பண வருமானத்தின் ஒரு பகுதி சேமிக்கப்படக்கூடும்; மற்றொரு பகுதி, உள் நாட்டுப் பொருள்கள், ஊழியங்கள் ஆகியவற்றின்மீது செலவிடப்படக் கூடும். இத்தகைய கலப்பு நிலையில் உருவாகிற பண வீக்கம் சிறிய அளவினதாகவே இருக்கும். இந் நிலையில் ஏற்படுகிற விளைவுகளின் தன்மை, முன்னர் இறக்குமதிகளுக்காகச் செலவிடப்பட்ட பண வருமானத்தின் எவ்வளவு பகுதி சேமிக்கப்படுகிறது என்பதையும், எவ்வளவு பகுதி உள்நாட்டுப் பொருள்களின்மீது செலவிடப்படுகிறது என்பதையும் பொறுத்திருக்கிறது. இந்த அளவுகளைத் தீர்மானிக்கிற சக்திகளைப்பற்றிச் சற்றுக் கவனிப் போம்:

முதலாவதாக, ஆடம்பரப் பொருள்கள்மீது விதிக்கப்படுகிற கட்டுப்பாடுகளின் பயனாக ஓரளவுக்குப் புதிய சேமிப்பு ஏற்படக் கூடும். ஆடம்பரப் பொருள்களின்மீது செலவு செய்யப்பட முடியாத நிலை ஏற்படும்போது, அதற்குரிய பணத்தை வேறு எச் செலவுக்கும் பயன்படுத்தாமல் விட்டுவைப்பதே பெரும்பாலும் வழக்கமாக இருக்கிறது.

இரண்டாவதாக, மேலே குறிப்பிடப்பட்ட அளவுகள், ஒரு நாட்டில் இறக்குமதி செய்யப்படும் பண்டங்கள் எத் தன்மையவை என்பதையும் பொறுத்திருக்கின்றன. ஒரு நாட்டில் நுகரப்படுகிற - இன்றியமையாதன அல்லாத - நுகர்வுப் பொருள்களே இறக்குமதிப் பொருள்களாக இருக்குமானால், அத்தகைய பொருள்கள் மிகப் பலவற்றின்மீது இறக்குமதிக் கட்டுப்பாடுகளை விதிப்பதன் வாயிலாக, அரசாங்கமானது, சேமிப்பு விகிதத்தைக் குறிப்பிடத்தக்க அளவு உயர்த்தமுடியும் என்று கூறலாம்.

மூன்றாவதாக, இறக்குமதிக் கட்டுப்பாடுகள் சிறிது காலத்திற்கு மட்டுமே இருக்கும் என்று அறிவிக்கப்படுமானால், அல்லது விரைவிலோ அல்லது சற்றுப் பொறுத்தோ அவை அகற்றப்பட்டு விடும் என்கிற நம்பிக்கை பரவலாக இருக்குமானால், அத்தகைய நிலையில், நுகர்வோர், அடக்கிவைக்கப்படும் தங்களுடைய தேவைகளைத் தாற்காலிகச் சேமிப்பு என்னும் வடிவத்தில் வைத்திருக்க ஒப்புக்கொள்ளக்கூடும். அவர்கள், இறக்குமதிப் பொருள்களின் மீதான தங்களுடைய செலவை ஒத்திவைப்பர். ஆனால் ஒன்று; அச் செலவு, ஒத்திவைக்கப்படுமே தவிர, நிலையான அடிப்படையில் கைவிடப்பட்டுவிடாது. இத் தாற்காலிகச்

சேமிப்பை முதலாக்கத்திற்கு உரிய நிதியாகப் பயன்படுத்த முடியாது. இஃது எதிர்காலச் செலவுக்காகச் சேர்த்துவைக்கப்படும் ஒரு சேமிப்பே ஆகும். இச் சேமிப்பைத் தொடர்ந்து, சேமிப்பு அழிப்பு (Dissaving) நிகழக்கூடும். இறக்குமதிக் கட்டுப்பாடுகள் அகற்றப்படும் என்கிற நம்பிக்கை தளர்ந்துவிடுமானால், இச் சேமிப்பானது, உள்நாட்டு நுகர்வுப் பொருள்கள்மீது செலவிடப் படக்கூடும்.

இந் நிலைமையிலிருந்து பொதுவான ஓர் உண்மை தெளிவாகத் தெரிகிறது. நாட்கள் செல்லச் செல்லச் சேமிப்பின் விகிதம் குறையக்கூடும் என்பதே அந்த உண்மை. நுகர்வோரின் செலவுக் கோலமானது (Spending pattern), குறுகிய காலத்தைத் தவிர ஏனைய காலங்களில் மாறிக்கொண்டேயிருக்கும் இயல்புடையது. ஆகவே, நுகர்வோர், நாளடைவில் தங்கள் செலவுக் கோலத்தைச் சிறிது சிறிதாக மாற்றி அமைத்துக்கொள்வர். நீண்டகாலக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, நுகர்வோர், முன்னர் இறக்குமதிப் பொருள்களுக்காகச் செலவிட்ட தொகையை உள்நாட்டுப் பொருள்களுக்காகச் செலவிடத் தொடங்குவர். காலம் செல்லச் செல்ல, மக்களின் நுகர்வுப் பழக்கங்கள் மாறி, முன்னர் இறக்குமதிப் பொருள்களுக்காகச் செலவிடப்பட்ட வருமானத்தில் தற்போது சேமிக்கப்படும் தொகையின் விகிதம் குறையும் என்பது தெளிவு.

இந்தப் பகுத்தாய்விலிருந்து திட்டவட்டமான முடிவை எடுப்பது அத்துணை எளிதன்று. அம் முடிவின் இயல்பு பல்வேறு சூழ்நிலைகளைப் பொறுத்திருக்கிறது. ஆனால் கோட்பாட்டு அடிப்படையில் அமைந்த சில உண்மைகள் இப்போது தெளிவாக விளங்குகின்றன. அரசாங்கமானது, முதலீடு, நுகர்வு ஆகியவை பற்றிய தன் முடிவை, எந்த வகையான பண்டங்கள் இறக்குமதி செய்யப்படவேண்டும் என்பதைப் பொறுத்தவரையில்மட்டும் திணிக்க முயல்வதால், குறிப்பிடத்தக்க பயன் எதுவும் விளைந்து விடாது. இந்தத் துறையில் முதற் பொருள்களைப் பெருக்குவதற்காக அரசாங்கத்தால் எடுக்கப்படுகிற எந்த முடிவும், உள்நாட்டுத் துறையில் அதற்கு நேர்மாறாக ஏற்படுகிற விளைவுகளால் பயனற்றுப் போய்விடும். ஒரு நாட்டின் அயல்நாட்டு வாணிபத் துறையில் அந் நாட்டு அரசாங்கத்தால் செய்யப்படுகிற சில குறுக்கீடுகளால்மட்டுமே அந் நாட்டுக்குக் கூடுதலான மூலதனத்தைப் பெற்றுவிடமுடியும் என்கிற எளிய கருத்து, திட்டவட்டமான முடிவுக்கு வரவேண்டும் என்பதற்காகத் தவறான முடிவுக்கு வரும் நடைமுறைக்கு ஓர் எடுத்துக்காட்டு என்பது என் கருத்து.

அயல் நாட்டு வாணிபத் துறையானது எப்படி உள்நாட்டு வருமான வட்டச் சுழற்சியின் ஒரு பகுதியாக இருக்கிறது என் பதை நாம் நினைவில் வைத்துக்கொண்டால், இறக்குமதி செய்யப் படுகிற முதற்பொருள் ஒவ்வொன்றும் ஒரு முதலீட்டுச் செயலாக அமைந்துள்ளது என்பதையும், அயல்நாட்டு நிதி உதவி இல்லாத நிலையில் அம் முதலீட்டை ஒத்த அளவு சேமிப்பு உள் நாட்டில் நடைபெற்ருக வேண்டும் என்பதையும், எளிதில் புரிந்துகொள்ள முடியும். இந்தச் சேமிப்பு நடைபெருமல் இருந்து, முன்னர் இறக்குமதி செய்யப்பட்ட நுகர்வுப் பொருள்கள்மீது செலவிடப் பட்ட வருமானமானது, இப்போது, முதற் பொருள் கட்டு மானத்தில் அல்லது பராமரிப்பில் ஈடுபட்டுள்ள உள்நாட்டு உற்பத்திக் காரணிகளை வேறு துறைக்குத் திருப்பிவிடும் செயலில் ஈடுபடுமாளுல், முதற் பொருள்களின் இறக்குமதியால் முதற் பொருள்களின் தொகையில் ஏற்படும் உயர்வை, உள்நாட்டுப் பொருளியலில் ஏற்படும் முதலீட்டுக் குறைவு அல்லது முதலீட்டு அழிப்பானது இல்லாமற் செய்துவிடும் என்பதை நாம் முன்னரே அறிந்தோம். மேற் குறிப்பிடப்பட்ட வருமானம் செலவிடப் படாமல் இருந்தால்தான், தேவையான சேமிப்பு ஓரளவுக்குத் தாளுகவே உருவாகும். ஆளுல் தேவையான சேமிப்பு முழுவதும் இந்த முறையில் உருவாகிவிடும் என்று நாம் எதிர்பார்க்க முடியாது.

ஏற்படுகிற உண்மையான சிக்கல், அயல்நாட்டு வாணிபத் திலிருந்து கூடுதலான முதற் பொருள்களைப் பெறுவது எப்படி என்பது அன்று; நாட்டு வருமானத்திலிருந்து கூடுதலான சேமிப்பைப் பெறுவது எப்படி என்பதுதான். ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிகள்மீது விதிக்கப்படுகிற கட்டுப்பாடு கள், இறக்குமதியாகும் கருவிகளின் வடிவத்தில் மூலதன அளிப்பில் (Supply of capital) ஒரு நிகர உயர்வை முழு அளவில் ஏற்படுத்தவேண்டுமாளுல், அந்த இறக்குமதிக் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகிற அதே சமயத்தில், அவற்றிற்குத் துணைசெய்கிற முறையில், தான் விரும்பிய சேமிப்பை அல்லது கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்தவல்ல ஓர் உள்நாட்டுக் கைக்கோள் கையாளப்படவேண்டும். இந்தக் கைக்கோளில் பொது நிதி (Public finance) ஓர் அடிப்படையான பங்கை ஏற்கவேண்டும் என்று கூற லாம். இத்தகைய நிலையில்கூட, முதற்பொருளில் ஏற்படுகிற உயர்வு, கூடுதல் சேமிப்பால் ஏற்பட்டது என்று கூறுவதுதான், இறக்குமதிக் கட்டுப்பாடுகளால் ஏற்பட்டது என்று கூறுவதை விடப் பொருத்தமானது ஆகும்.

மேலே குறிப்பிடப்பட்டதைப் போன்ற உள்நாட்டுக் கைக் கோள் கையாளப்படாத நிலையில், முதற் பொருள்களின் கூடுதல் இறக்குமதியின் விளைவாக ஏதேனும் நிகர முதலீடு ஏற்படுமானால், அம் முதலீட்டிற்குத் தேவையான நிதிகள், சமுதாயத்தின்மீது பண வீக்கத்தால் கட்டாயமான முறையிலும் தாறுமாறான வகையிலும் சுமத்தப்பட்டுள்ள சேமிப்பின் வாயிலாகவே பெரும் பாலும் கிடைக்கும் என்று கூறலாம். ஆனால் அப்படிக் கிடைக் கின்ற நிலையும், பண வீக்கமானது, கட்டாயச் சேமிப்புக்கான ஒரு கருவியாக இருக்கின்ற கட்டம் வரையில்தான் தொடர்ந்து இருக்கும். ஆகவே, உள்நாட்டுச் சேமிப்பைப் பெருக்கவல்ல துணைசெய் கைக்கோள் (Complementary policy) கையாளப்படாத நிலையில்கூட, ஆடம்பரப் பொருள்களின்மீது விதிக்கப்படுகிற இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் விளைவாக, வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டின் முதலாக்க விகிதத்தில் ஓரளவு உயர்வு ஏற்படக்கூடும் என்னும் உண்மையை நாம் மறுக்கமுடியாது.

## முதலீட்டுக் கோலத்தில் ஏற்படும் விளைவுகள்

முதலீட்டின் அளவைப்பற்றி மட்டுமல்லாமல் அதன் தன்மையைப்பற்றியும் நாம் ஆராயவேண்டியிருக்கிறது. இறக்கு மதிக் கட்டுப்பாடுகளால், பணவருமானம், சேமிப்பு ஆகியவற்றில் ஏற்படும் விளைவுகளில் சிலவற்றைத் தனிமைப்படுத்தி ஆராய் வதற்காக, இதுவரையில் அக் கட்டுப்பாடுகளின் பாதுகாப்பு விளைவை (Protective effect) நாம் புறக்கணித்திருந்தோம். இனி அவ் விளைவைப்பற்றி நாம் ஆராயலாம்.[1]

இதுவரை நம்மால் கருத்தாய்வு செய்யப்பட்ட இறக்குமதிக் கட்டுப்பாடுகள், ஆடம்பரப் பொருள்கள் அல்லது ஓரளவு ஆடம்பரத் தன்மையுடைய பொருள்களையே பாதிக்கின்றன. ஒரு நாட்டின் ஏற்றுமதி வருமானங்கள் இத்தகைய ஆடம்பரப் பொருள்களை வாங்குவதற்காக வீணாக்கப்படக்கூடாது என்பதும், பொறிகள் - கருவிகள் முதலிய முதற் பொருள்களை வாங்கு வதற்கே பயன் படுத்தப்படவேண்டும் என்பதுமே, அத்தகைய இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் நியாயத்தை எடுத்துக்காட்டும் வாதங்களாக அடிக்கடிச் சுட்டிக்காட்டப்படுகின்றன. ஆனால் ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிகள்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகிற அதே நேரத்தில், அதே பொருள்களின் உள்நாட்டு உற்பத்தியின்மீதும், வரிகள், உரிமை ஆணைகள் (Licences), அல்லது தடைகள் (Prohibitions) ஆகிய வடிவத்தில் கட்டுப்பாடு கள் விதிக்கப்படாவிட்டால், உள்நாட்டுப் வசதிகள் ஆடம்பர நுகர்வின்மீது வீணாக்கப்படுவதைத் தடுக்கமுடியாது.

இறக்குமதிக் கட்டுப்பாடுகள் விதிக்கப்படும்போது பெரும்பாலும் அவற்றிற்கு ஈடான உள்நாட்டுக் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதில்லை. அப்படி விதிக்கப்படாத நிலையில், அந்த இறக்குமதிக் கட்டுப்பாடுகள், அவற்ருல் தடுக்கப்படுகிற பொருள்களை, அல்லது அப் பொருள்களுக்கு ஈடாகப் பயன்படுத்தப்படக் கூடிய பொருள்களை உற்பத்தி செய்யும் உள்நாட்டுத் தொழில்களில் முதலீடு செய்யத் தூண்டும் ஒரு சக்தியாக அமைந்துவிடும். அத்தகைய தொழில்களைத் தொடங்கி நடத்துவதற்குத் தேவையான அளவுடையதாக உள்நாட்டு அங்காடி இருக்குமாளுல், அந்தத் தூண்டுதலால், ஆற்றல் மிக்க பயன் விளையும். ஆளுல், இறக்குமதிக் கட்டுப்பாடுகள் நிலையான அடிப்படையில் தொடர்ந்து இருக்கும் என்கிற நம்பிக்கை இருந்தாலொழிய அந்தத் தூண்டுதல் முழுப் பயனை அளிக்காது, அல்லது பயனே அளிக்காது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. ஆகவே, முதலீட்டுக்கான தூண்டுதலை மிகப் பெரிதாக ஆக்கவல்ல காரணி, இறக்குமதிப் பொருள்களின்மீது மக்கள் முன்பு செலவிட்டுவந்த வருமானத்தை இப்போது சேமித்தற்குரிய அவர்களுடைய விருப்பத்தை மிகக் குறைந்ததாக ஆக்கவல்ல அதே காரணிதான் என்பது வெள்ளிடைமலை. நிலைமை இவ்வாறு இருப்பதால், முதலீடு நடைபெறவேண்டுமானுல், செலாவணிப் பெருக்கம் (Credit expansion) ஏற்படவேண்டியிருக்கும் என்று கூறலாம்.

இவ்வாருக மறுபடியும் பண வீக்கப் பொறியானது, முதற்பொருள்களின் இறக்குமதிப் பெருக்கத்தில் செய்யப்படும் முதலீட்டிற்குத் தேவையான நிதிகளைப் பெறுவதற்கு மட்டுமல்லாமல், பாதுகாக்கப்பட்ட புதிய தொழில்களை அமைப்பதற்குத் தேவையான உள்நாட்டு வசதிகளைப் பெறுவதற்காகவும், சுழல வேண்டியிருக்கிறது. எத்தகைய தொழில்கள் அவ்வாறு அமைக்கப்படும் என்பது, எத்தகைய பொருள்களின் இறக்குமதிகள்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன என்பதைப் பொறுத்திருக்கிறது. நாட்டின் மூலதன அளிப்பானது, கிடைத்தற்கு அரியதாகவும், துன்பம் மிகுந்த முறையில் உருவாக்கப்பட்டதாகவும் இருந்த போதிலும், இறக்குமதிக் கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகின்ற பொருள்கள், ஆடம்பரப் பொருள்களாக அல்லது ஓரளவு ஆடம்பரத்தன்மை உடைய பொருள்களாக இருக்கின்ற காரணத்தால், அத்தகைய பொருள்களின் உள்நாட்டு உற்பத்திக்கே அம் மூலதனம் பயன்படுத்தப்படும். அதே சமயத்தில், அடிப்படைத் தன்மையுடைய - ஒட்டு மொத்த - முதற் பொருள்கள் (The basic overhead capital goods), அவற்றிற்குத் தேவை

யான உற்பத்திக் காரணிகளைப் பெறமுடியாமல் இருக்கலாம் ஏற்கெனவே பெற்றுள்ள உற்பத்திக் காரணிகளில் ஒரு பகுதியை இழக்கவேண்டியும் இருக்கலாம். இத்தகைய நிலைமையின் விளைவாக, நாம் முன்னரே எடுத்துக்காட்டியிருப்பதற்கு இணங்க, அம் முதற் பொருள்கள் வீணாகி அழியக்கூடும்.

இத்தகைய நிலைமையைப் பெற்றுள்ள பகுதிகளில் ஒன்றாக லத்தீன் அமெரிக்கா அமைந்துள்ளது. லத்தீன் அமெரிக்கக் குடியரசுகள் பலவற்றில், உள்நாட்டு முதலாக்க விகிதம், குறிப்பிடத்தக்க அளவில் இருக்கிறது.[2] ஆனால் மொத்த முதலீட்டின் அளவை மட்டுமல்லாமல் அதன் தன்மையையும் நாம் ஆய்ந்தறிவது நல்லது. பணவீக்கம், ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிக் கட்டுப்பாடுகள் ஆகிய இரண்டும் லத்தீன் அமெரிக்காவில் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்த இரண்டு காரணிகளின் விளைவாக, லத்தீன் அமெரிக்காவில் அண்மை ஆண்டுகளில் முதலீடானது, பெரிதும் உயர் வருமானப் பிரிவினருக்கான உறைவிடக் கட்டுமானத் தொழிலிலும் (Residential construction), ஆடம்பரப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களிலுமே செய்யப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில், இருப்புப் பாதைகள், துறைமுகங்கள் முதலிய இன்றியமையாத பொது அமைப்புகளிற் சில பழுது பார்க்கப்படாமல்கூட விடப்பட்டுள்ளன. லத்தீன் அமெரிக்காவில் பொருளியல் வளர்ச்சி ஏற்பட்டுக் கொண்டுள்ளது என்பது மறுக்கமுடியாத உண்மை. ஆனால் அவ் வளர்ச்சி, தேவையில்லாத துன்பம் நிறைந்ததாகவும் சிதைந்த வடிவம் உடையதாகவும் இருக்கிறது.

## ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிக் கட்டுப்பாடுகளுக்கு உரிய காரணம்

பன்னாட்டு வருமான வேறுபாடுகள், குறைந்த வருமான நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்தல் நிலை - உள்நாட்டுச் சேமிப்புத் திறன் ஆகியவற்றில் அந்த வேறுபாடுகளின் விளைவாக ஏற்படும் மாறுதல்கள் ஆகியவைபற்றி இந் நூலின் மூன்றாவது அத்தியாயத்தில் நாம் கருத்தாய்வு செய்துள்ள கற்பிதக் கோட்பாட்டின் (Hypothesis) கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, இக் காலத்தில் பரவலாகக் காணப்படுகிற 'ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தும் போக்கைப்'பற்றிய பொதுவான ஒரு விளக்கம் தானாக எழுகிறது. 'முன்னேற்றமடைந்த' நுகர்வுப் பொருள்கள் ('Advanced' consumer goods) பின்தங்கிய நாடுகளில் நுழைவதைத் தடுக்கும் வகையில் அந்த நாடுகளில் விதிக்கப்

படுகிற கட்டுப்பாடுகளை, மேற்குறிப்பிட்ட விரும்பத்தகாத விளைவுகளிலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்வதற்காக அந்த நாடுகள் மேற்கொள்ளும் முயற்சிகள் என்று நாம் கருதலாம். இப் பாதுகாப்பு முயற்சிகள், அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஏற்படுகிற ஒத்த நிலையின்மையைக் குறைப்பதற்கும், அதைவிட முக்கியமாக, அயல்நாட்டு நுகர்வுக் கோலங்களால் உள்நாட்டு முதலாக்கத்திற்கு ஏற்படுகிற இடையூற்றை அகற்றுவதற்குமே மேற்கொள்ளப்படுகின்றன. இன்றைய உலகத்தில் வளர்ச்சி குறைந்த நாடுகளால் ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிகளின்மீது விதிக்கப்படுகிற கட்டுப்பாடுகள், இறுதியாகப் பார்த்தால், அந்த நாடுகளில் காட்சி விளைவின் (Demonstration effect) பயனாக ஏற்படுகிற இடையூற்றைத் தடுப்பதற்கான ஒரு முயற்சியே என்பது தெளிவாகும். அதாவது, அக் கட்டுப்பாடுகள், முன்னேறிய நாடுகளின் நுகர்வுக் கோலத்திலிருந்து வளர்ச்சி குறைந்த நாடுகளின் நுகர்வுக் கோலத்தைத் தனிமைப்படுத்தி, தனிமைப்படுத்துவதன்மூலம் கூடுதலான உள்நாட்டுச் சேமிப்பையும் முதலாக்கத்தையும் செய்தற்குரிய நிலையை ஏற்படுத்தும் முயற்சியே ஆகும்.

இந்த முயற்சி நம்மால் ஆதரிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். முன்னேறிய வாழ்க்கைத் தரங்களின் கவர்ச்சி, பொருளியல் வளர்ச்சியில் காலந் தாழ்ந்து ஈடுபட்டுள்ள நாடுகளுக்கு ஒரு முட்டுக்கட்டையாக இருக்கிறது. இந்த இடையூற்றை அகற்றுவதற்கான எந்த முயற்சியும் எளிதில் கண்டிக்கப்படல் ஆகாது.

ஆனால் ஒன்று: இறக்குமதிக் கட்டுப்பாட்டு முறையானது, சிக்கலின் புறத் தோற்றத்தை மட்டும்தான் தீர்க்க முயல்கிறது. நுகர்வு நாட்டத்தின் ஒரு பகுதியை மட்டும்தான்—இறக்குமதி செய்யப்படும் பொருள்களின்மீது நேர்முகச் செலவில் ஈடுபடுகிற அந்தப் பகுதியை மட்டும்தான் அது தாக்குகிறது. ஆனால் காட்சி விளைவானது, இறக்குமதி நுகர்வுப் பணியில் (Import consumption function) மட்டுமல்லாமல் பொதுவான நுகர்வுப் பணியில் (General consumption function) ஓர் உயர்வை ஏற்படுத்துவதன் மூலமாகவே செயலாற்றுகிறது. நுகர்வின் அளவுகளில் உள்ள பன்னாட்டு வேறுபாடுகளின் மறைமுகமான — பரவும் இயல்புடைய—இந்தச் செல்வாக்கை, ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிக் கட்டுப்பாட்டால் தடுக்கமுடிவதில்லை.

பொது நிதியின் (Public finance) வாயிலாகச் செய்யப்படுகிற கட்டாயச் சேமிப்பே, இறக்குமதிக் கட்டுப்பாட்டினும் கூடுதலான அடிப்படைத் தன்மை வாய்ந்த தாக்குதல் என்பது என் கருத்து.

ஆனால் ஏழை நாடுகளில், பல்வேறு மக்களின் வாழ்க்கைத் தரங்களுக்கு இடையே உள்ள மாபெரும் வேறுபாடுகளின் விளைவாக, இத்தகைய கட்டாயச் சேமிப்பைச் செய்வது, அரசியல் துறையில் கடினமான செயலாக இருக்கிறது. கட்டாயச் சேமிப்பு முறையை விட வாணிபக் கைக்கோள் முறை எளிதில் கையாளப்படக்கூடியதாக இருக்கிறது. பல்வேறு நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு உரிய எளிய முறையாக அஃது எப்போதும் தோற்றம் அளிக்கிறது. ஒரு தொழில் துறைப் பொருளியலில் வேலை வாய்ப்புகளைப் பெருக்கவேண்டுமானால், இறக்குமதிகளைத் தடுப்பது அதற்கு உரிய மிக எளிய முறையாக இருக்கிறது. அரசாங்கத்திற்காக வரிகளை விதிக்கவேண்டி இருக்குமானால், வருவாய்ச் சுங்கங்களை (Revenue tariffs) ஏற்படுத்துவது கடினமான செயல் அன்று. வளர்ச்சி குறைந்த நாடுகளில் கடந்த காலத்தில் அத்தகைய சுங்கங்கள் மிகவும் விரும்பப்பட்டுள்ளன. குழந்தைத் தொழில்களுக்குப் (Infant industries) பாதுகாப்புத் தேவைப்படும்போது, அத்தொழில்களுக்கு நேர்முக உதவிக் கொடைகள் (Direct subsidies) அளிப்பதற்காக நிதிகளை எழுப்ப முயல்வதைவிட இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துவது எளிய செயலாக இருக்கிறது. இந் நிலைமைகள் யாவற்றிலும், வாணிபக் கைக்கோள் முறை, மிக எளிதில் கையாளப்படக்கூடிய ஒன்றாக இருக்கிறது என்பது உண்மையே; ஆனால் மிகுந்த பயன் விளைவிக்கவல்ல முறையாகவோ அல்லது நேர்மை நிறைந்த முறையாகவோ இருக்கிறது என்று கூறமுடியாது.

அதுபோலவே, உள்நாட்டு நுகர்வுத் தேவையைக் கட்டுப்படுத்துவதற்கும், நிதிக் கைக்கோள் (Fiscal policy) முதலிய முறைகளைக் கையாள்வதைவிட வாணிபக் கைக்கோள் முறையைக் கையாள்வதே எளிதாகும். ஆனால் வாணிபக் கைகோள் முறையால் சிக்கலின் அடிப்படையைத் தீர்க்கமுடிவதில்லை. ஒருகால் இவ்வளவுதான் செய்யமுடியும் என்பது உண்மையாக இருக்கலாம். சிக்கலின் அடிப்படை தீர்க்கப்படவே முடியாததாக இருக்கலாம்.

இந்த அத்தியாயத்தில் இதுவரை நம்மால் செய்யப்பட்ட கருத்தாய்வைச் சுருக்கிக் கூறுவதானால், பின்வருமாறு இயம்பலாம். ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதிகளின்மீது விதிக்கப்படுகிற கட்டுப்பாடுகளை, முன்னேறிய நுகர்வுக் கோலங்களால் வளர்ச்சி குறைந்த நாடுகளின் மக்களிடம் ஏற்படுகிற மாபெரும் கவர்ச்சியைத் தடுப்பதற்காக அந்த நாடுகளின் அரசாங்கங்களால் எழுப்பப்படுகிற தடைச் சுவர்கள் என்று கருதலாம். நுகர்வுப் பொருள்களின் இறக்குமதிகளைத் தடுப்பதிலும், முன்னிலும் கூடுதலான முதலீட்டுப் பொருள்களை இறக்குமதி செய்வதிலும் இத் தடைச் சுவர்கள் ஓரளவுக்கு வெற்றி பெறுகின்றன, ஆனால்

வளர்ச்சி குறைந்த நாடுகளின் துறைமுகங்களில் முன்னிலும் மிகுதியான பொறிகள் வந்து இறங்குகிற கட்சியைக் கண்டு நாம் மயங்கிவிடத் தேவையில்லை. ஆடம்பரப் பொருள்களின் இறக்கு மதிகளின்மீது விதிக்கப்படுகிற கட்டுப்பாடுகளின் விளைவாகச் சேமிப்பில் ஒரு நிகர உயர்வு ஏற்பட்டிருக்கிறதா என்பதுதான் தலையாய கேள்வியாகும். இக் கேள்விக்கு உரிய விடை எதிர் மறையாக (Negative) இருக்குமானால், முதலாக்கத்தில் ஓர் உயர்வு ஏற்படமுடியாது. விடை உடன்பாடாக (Affirmative) இருந்தாற்கூட, நாட்டின் மூலதன அளிப்பானது தவறான திசை களில் பயன்படுத்தப்படக்கூடிய வாய்ப்பு இருக்கிறது என்னும் உண்மையை மறவாமலிருப்பது இன்றியமையாதது.

## ஐந்தாம் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. இப் பகுத்தாய்வைப் பொறுத்தவரை, பேராசிரியர் அலெக் சாண்டர் காஃப்காவுடன் (Alexander Kafka) நடத்திய உரை யாடல்கள் எனக்குப் பேருதவியாக இருந்தன.

2. ஐக்கிய நாடுகள் மன்றத்தின் "Measures for the Economic Development of Under-Developed Countries" என்னும் அறிக்கையின் (இந்த அறிக்கை முன்னரே சுட்டிக்காட்டப் பட்டுள்ளது.) 76ஆம் பக்கத்தில் தரப்பட்டுள்ள அட்ட வணையிலிருந்து, லத்தீன் அமெரிக்காவில் 1949-ல் சராசரிச் சேமிப்பு விகிதமானது, நாட்டு வருமானத்தில் ஏறத்தாழ 8 சதவிகிதமாக இருந்தது என்னும் உண்மை புலப்படுகிறது.

# 6. பன்னாட்டு மூலதன இயக்கங்கள் பற்றிய கோட்பாட்டின் அண்மைக் காலப் போக்குகள்

வளர்ச்சியடையாத நாடுகளின் முதலாக்கச் சிக்கல்களைப் பன்னாட்டு முதலீடு பற்றிய கோட்பாட்டின் (The theory of international investment) வாயிலாக ஆராய்வது பொருத்தமான செயலாகத் தோன்றுகிறது. இதுவரை நம்மால் கருத்தாய்வு செய்யப்பட்ட குறிப்பிட்ட சிக்கல்களைப்பொறுத்தவரை, இந்தக் கோட்பாடானது, அதனுடைய மரபார்ந்த வடிவங்களில், எத்தகைய விளக்கத்தையும் தராவிட்டாலும், நம்முடைய கருத்தாய்வை ஒரு முடிவுக்குக் கொண்டுவருவதற்கு, இக் கோட்பாட்டைப் பற்றிய ஒரு சிறு மதிப்பீடு பயன் உள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

## தொன்மைக் கோட்பாடும் புதிய தொன்மைக் கோட்பாடும்
## (Classical and Neo-Classical Theory)

பொருளியல் கோட்பாடானது, நடைமுறை நிகழ்ச்சிகளை விடப் பின்தங்கிய நிலையில் இருப்பது, தவிர்க்கமுடியாத ஒன்றாகும். ஆனால் பன்னாட்டு மூலதன இயக்கங்கள் என்னும் துறையைப் பொறுத்தவரை இந்த இடைவெளியானது மாபெரும் அளவினதாக இருக்கிறது. தனியாரின் அயல் நாட்டு முதலீடு பெரும் அளவில் நடைபெற்றுவந்த நீண்டகால சகாப்தம், 1920ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் பிற்பகுதியில் முடிவடைந்த பின்னர், மூலதன இயக்கங்கள் பற்றிய கோட்பாடானது முழு அளவில் ஆராயப்படலாயிற்று. ஆனால் அந்த ஆண்டுகளுக்குப்பின், பன்னாட்டுத் தனியார் மூலதன இயக்கங்கள் பெரும்பாலும் நடைபெறவில்லை என்றே இயம்பலாம். நடைபெறாமல்

இருந்தபோதிலும், அம் மூலதன இயக்கங்கள் பற்றிய கோட்பா டானது விறுவிறுப்பான முறையில் ஆராயப்பட்டது; இப்போதும் ஆராயப்பட்டு வருகிறது. ''ஜான் பிரௌனின் உடல் இடுகாட் டில் அடக்கம் செய்யப்பட்டுவிட்டது, ஆனால் அவருடைய ஆத் மாவோ உலவிக் கொண்டே இருக்கிறது'' என்னும் கவிதை வரி களையே இந் நிலைமை நினைவூட்டுகிறது.

பன்னாட்டு மூலதன இயக்கங்களைப் பொறுத்தவரை, நடை முறைக்கும் கோட்பாட்டுக்கும் இடையே உள்ள இடைவெளிக்குச் சிறப்பான ஒரு காரணம் இருக்கிறது. உழைப்பு, மூலதனம் ஆகிய உற்பத்திக் காரணிகள் ஒரு நாட்டைவிட்டு மற்றொரு நாட்டுக்குச் செல்லமாட்டா என்னும் கருத்து, பன்னாட்டு வாணிபம் பற்றிய தொன்மைக் கோட்பாட்டின் (The classical theory of international trade) அடிப்படைப் பாவனைகளில் ஒன்றாகும். அதிலும், குறிப்பாக, தராதரச் செலவுக் கோட்பாடு பற்றிய (The comparative cost doctrine) ரிகார்டோவின் (Ricardo) வர்ணனையில் இப் பாவனை இன்றியமையாத இடம் பெற்றுள்ளது. இந்தப் பாவனை ஏன் இத்துணை இன்றியமையாததாகக் கருதப்பட்டது என்பது, இங்கே ஆராயப்படத் தேவையில்லாத ஒரு கேள்வி ஆகும். பன்னாட்டு வாணிபத்தில் பொருள்களின் மதிப்பை ஒழுங்கு படுத்தும் விதியானது உள்நாட்டு வாணிபத்தில் அதே பணியைச் செய்யும் விதியிலிருந்து வேறுபட்ட ஒன்று என்று ரிகார்டோ கருதினார். அந்தக் கருத்துக்கு மேற்படிப் பாவனை யானது இன்றியமையாத அடிப்படையாக அமைந்து விட்டது என்பதை மட்டும் நாம் நினைவு கூர்தல் சாலும். மேற்படிக் கருத்தி லிருந்துதான், ரிகார்டோ, பன்னாட்டு வாணிபம் பற்றிய தராதரச் செலவுக் கோட்பாட்டை உருவாக்கும் நிலைமை எழுந்தது.

ஆகவே, பன்னாட்டு மூலதன இயக்கங்கள் மிக விறு விறுப்பாக நடைபெற்ற நூற்றாண்டில், மூலதன இயக்கங்கள் பற்றிய கோட் பாடு எதுவும் குறிப்பிடத்தக்க அளவு உருவாகவில்லை. ஆனால் மாற்றல் அமைப்பைப் (Transfer mechanism) பொறுத்த அளவில் மட்டும் அத்தகைய கோட்பாடு உருவாகியிருந்தது. அந்த அமைப் பைப் பொறுத்த அளவில்கூட, அயல்நாட்டுச் செலுத்தல் நிலை யைப் (Balance of payments) பாதிக்கக்கூடிய காரணிகளில் ஒன்று என்கிற நிலையில்தான் — போதிய அறுவடை இல்லாமை, நுகர் வோரின் தேவையில் மாறுதல் ஏற்படுதல் முதலிய எதிர்பாரா நிகழ்ச்சிகளைப் போன்ற ஒன்று என்கிற தன்மையில்தான் - மூலதன இயக்கங்கள் ஆராயப்பட்டன. அப்படி ஆராயப்பட்ட நிலையிற் கூட அந்த இயக்கங்கள்மீது சிறப்பான கவனம் செலுத்தப்பட வில்லை. எடுத்துக் காட்டாக, ஜான் ஸ்டுவர்ட் மில், மாற்றல்

அமைப்பைப்பற்றி ஆராய்ந்தபோது, உற்பத்தியைப் பெருக்கும் மூலதனத்தின் மாற்றலைப் பற்றி ஆராயவில்லை. அதற்கு மாறாக அவர், ஒரு நாடு இன்னொரு நாட்டிற்குக் கட்டுகிற கப்பம் அல்லது திறையைத்தான் (Tribute) தம் ஆராய்ச்சிக்கு உரிய எடுத்துக் காட்டாக மேற்கொண்டுள்ளார். அவரைப் பொறுத்தவரை — சில பிற்கால எழுத்தாளர்களைப் பொறுத்தவரையில்கூட — பன்னாட்டு மதிப்புகள் பற்றிய கோட்பாடானது (The theory of international values), மூலதனத்தை உள்ளிட்ட உற்பத்திக் காரணிகள் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்குச் செல்வதில்லை - செல்ல முடியாது என்னும் பாவனையை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், மூலதனத்தின் பன்னாட்டு இயக்கங்களைப் பற்றி வெளிப் படையாகப் பேசுவது அவருக்குச் சங்கடமாக இருந்தது என்பது தெளிவு. மூலதனமும், மக்களும் ஐரோப்பாவிலிருந்து பிற கண்டங்களுக்குப் பெரிய அளவில் சென்று கொண்டிருந்த ஒரு நூற்றாண்டில் இத்தகைய பாவனை மேற்கொள்ளப் பட்டிருப்பது, வியப்பூட்டத்தக்க ஒரு நிலைமையே.[1]

உழைப்பு, மூலதனம் ஆகியவற்றின் இயக்கத்தைப் பன்னாட்டுப் பொருளியல் கோட்பாட்டில் (The theory of international economics) திட்டவட்டமான வகையில் முதல் முறை யாக இணைக்க முயன்றவர் பெர்டில் ஓலின் (Bertil Ohlin) அவர்களே. அன்னார், மாற்றல் கோட்பாட்டைப்பற்றி ஆராய்ந்ததோடு நில்லாமல், பன்னாட்டு வாணிபத்திற்கும் உற்பத்திக் காரணிகளின் இயக்கங்களுக்கும் இடையே உள்ள உறவைப்பற்றியும், பல்வேறு உற்பத்திக் காரணிகளின் இயக் கங்கள் ஒன்றிற்கு ஒன்று பெற்றுள்ள உறவைப் பற்றியும் ஆராய்ந் துள்ளார். ஆனால் அவருடைய நூல்[2] வெளியிடப்பட்ட காலத் திற்குள் உற்பத்திக் காரணிகள் நாடுவிட்டு நாடு இடம் பெயர்ந்து செல்லமாட்டா என்னும் தொன்மைப் பொருளியற் பாவனை, ஏறத்தாழ முழு அளவில் நடைமுறை உண்மையாக ஆகிவிட்டது. இவ்வாறாக நீண்ட காலத்திற்குப் பின்னர் உருவெடுத்த கோட் பாடு, அப்போதுதான் மறைந்துவிட்ட ஓர் உலகத்திற்கே பொருந்துவதாக அமைந்துவிட்டது.

அவருடைய மாற்றல் கோட்பாட்டில், ஓலின், கடன் தரும் நாட்டிலிருந்து கடன் பெறும் நாட்டிற்கு, வாங்கும் திறன் (Buying power) மாற்றல் ஆவதால் ஏற்படுகிற நேர்முக ஒத்த நிலைப் படுத்தும் விளைவை (Direct equilibrating effect) வற் புறுத்திக் கூறியுள்ளார்; அப்படிக் கூறுவதன் வாயிலாக, பழைய கண்ணோட்டங்களைப் புதுப்பித்து அவற்றிற்குப் புத்துயிர் ஊட்டி யுள்ளார். அவருடைய இக்கருத்தின் விளைவாக, மூலதன மாற்றல்

நிகழும்போது, தங்க இயக்கங்களும் (Movements of gold) விலை மாறுதல்களும் நிகழவேண்டிய தேவையில்லை என்னும் நிலைமை உருவாகிறது. பெற்ற கடனின் பயனாகக் கடன் வாங்கியோரின் தேவையானது (Borrowers' demand) எந்தெந்தப் பண்டங்களை, அல்லது பண்டங்களின் தொகுதிகளைப் பொறுத்தவரை உயர்கிறதோ, அதே பண்டங்களுக்கான அல்லது பண்டத் தொகுதிகளுக்கான கடன் தந்தோரின் தேவை குறையுமானால், அத்தகைய நிலையில், விலைகள் அல்லது விலை உறவுகள் (Prices or price relationships) மாறுவதற்கான தேவை எதுவும் இல்லை என்பது தெளிவு. அதுபோலவே, அத்தகைய நிலையில், தங்க மானது, ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் சென்றாக வேண்டிய தேவையும் இல்லை. இந்தக் கண்ணோட்டத்தில் பார்த் தால், வாணிப மாற்று வீதங்கள் (Terms of trade) மாறமாட்டா! ஒருகால் மாறினாலும், கடன் வாங்கும் நாட்டுக்கு நலன்தரும் வகையில் அவை மாறுவதற்கான வாய்ப்பு எந்த அளவுக்கு இருக் கிறதோ அதே அளவுக்குக் கடன்தரும் நாட்டுக்கு நலன்தரும் வகையில் மாறுவதற்கும் இருக்கிறது. அதுபோலவே, இந் நாடு களுக்கு இடையே தங்கமானது இடம் பெயர்ந்து செல்லாது; ஒரு வேளை செல்லுமானால், கடன் தரும் நாட்டிலிருந்து கடன் பெறும் நாட்டுக்குச் செல்லக்கூடிய அதே அளவு வாய்ப்பு, பிந்திய நாட்டி லிருந்து முந்திய நாட்டுக்குச் செல்வதற்கும் இருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில், தங்க இயக்கம் எந்தத் திசையில் நிகழ் கிறது என்பது, வாணிப மாற்று வீதத்தின் மாறுதல் எந்தத் திசை யில் நிகழ்கிறது என்பதை எடுத்துக் காட்டும் ஒரு குறியீடாக (Index) அமைந்து விடுகிறது.

இந்தக் கருத்துக்கு மாறாக, தொன்மைக் கோட்பாடு என்று இப்போது பொதுவாக அழைக்கப்படுகிற கோட்பாடானது, அதிலும் சிறப்பாக ஜான் ஸ்டுவர்ட் மில் அவர்களால் உருவாக்கப் பட்ட அதன் வடிவத்தில் பார்க்கும்போது, மூலதன மாற்றல் நிகழும்போது மூலதனத்தை ஏற்றுமதி செய்யும் நாட்டின் நலனுக்கு எதிரான முறையில் வாணிப மாற்று வீதங்கள் மாற வேண்டியதன் இன்றியமையாமையை அழுத்தந் திருத்தமாக எடுத்துக் கூறியுள்ளது.[3] வாங்கும் திறனின் மாற்றல் பற்றிய 'புதிய - தொன்மைக்' கருத்தாய்வானது (The 'neo - classical' shift - of - buying power analysis) அதன் இறுதி முடிவுக்குக் கொண்டு செல்லப்பட்டு, போக்குவரத்துச் செலவுகள் அல்லது வாணிபக் கட்டுப்பாடுகளின் விளைவாகச் சில உள்நாட்டுப் பண்டங்கள் பன்னாட்டு வாணிபத்தில் சேர்வதில்லை என்னும் உண்மையையும் நினைவில் வைத்துக் கொண்டால், அத்தகைய

நிலையில், கடன் தரும் நாட்டின் வாணிப மாற்று வீதங்கள் அந் நாட்டுக்கு எதிரான போக்கில் சென்றே தீரவேண்டும் என்கிற கட்டாயம் இல்லாவிட்டாலும், பெரும்பாலும் அப்படித்தான் செல்லும் என்று எதிர்பார்க்கலாம். பன்னாட்டு வாணிபத்திற் சேராத உள்நாட்டுப் பண்டங்களைப் பொறுத்தவரை, ஒரு நாட்டில் அவற்றின் தேவையில் (Demand) ஏற்படுகிற குறைவை, மற்றொரு நாட்டில் அவற்றின் தேவையில் ஏற்படுகிற உயர்வைக் கொண்டு நிறைவு செய்யமுடியாது. பன்னாட்டு வாணிபத்தில் ஈடுபடும் பொருள்களைப் பொறுத்த அளவில்தான் அவ்வாறு நிறைவு செய்யமுடியும். வாங்கும் திறனின் மாற்றல் எந்த அளவுக்கு உள்நாட்டுப் பொருள்களைப் பாதிக்கிறதோ அந்த அளவுக்கு உற்பத்திக் காரணிகளின் உள்நாட்டு மாற்றல்கள் இன்றியமையாதன ஆகின்றன. இத்தகைய மாற்றல்களின் விளை வாகக் கடன் தரும் நாட்டின் ஏற்றுமதி அளிப்புப் பட்டியல் (Export supply schedule) தாழும்; கடன் பெறும் நாட்டின் ஏற்றுமதி அளிப்புப் பட்டியல் உயரும். ஆகவே, பண்டங்களின் நிறைவிலா இடப் பெயர்ச்சியின் (Imperfect mobility) விளை வாக, வாணிப மாற்று வீதங்கள், கடன் பெறும் நாட்டிற்கு ஆதர வான முறையிலும் கடன் தரும் நாட்டிற்கு ஆதரவான முறை யிலும் கடன் தரும் நாட்டிற்கு எதிரான வகையிலும் மாறுவதற்கு இருக்கிற வாய்ப்பு, அதற்கு நேர்மாறான முறையில் மாறுவதற்கு இருக்கிற வாய்ப்பைவிட மிகுதியானதாகும். இவ்வாறு பார்க்கும் போது, 'தொன்மை' முடிவுக்கு (Classical conclusion) ஆதர வான ஒரு நிலைமை ஏற்பட்டுவிடுகிறது.[4]

ஆனால் மூலதன மாற்றல் முறையில் அடங்கியுள்ள வாணிப மாற்று வீதங்கள் பற்றிய பகுத்தாய்வு முழுவதும், தற்செயலான — இரண்டாந்தர முதன்மையுடைய — பொருள்களைப் பற்றியே கவனம் செலுத்துகிறது என்பதோடு, அப் பகுத்தாய்வை முடி வான முறையில் சரி பார்த்தலும் இயலாத செயலாக இருக்கிறது. மூலதன இயக்கமானது, வாணிப மாற்று வீதங்களைக் கடன் பெறும் நாட்டிற்கு ஆதரவான முறையிலும் கடன்தரும் நாட் டிற்கு எதிரான வகையிலும் மாற்றி அமைக்கவல்லது என்பது உண்மையாக இருந்தால், ஒரு நாட்டின் பொருள்களுக்கான உலகத்தின் தேவை கூடுதலாவது முதலிய காரணங்களால் அந் நாட்டு வாணிப மாற்று வீதங்களில் ஏற்படுகிற முன்னேற் றத்தின் விளைவாக அயல் நாட்டு மூலதனம் அந்நாட்டுக்கு வருவது கூடுதலாகும் என்பதும் உண்மையே. ஆகவே, வாணிப மாற்று வீதங்களில் ஏற்படுகிற சாதகமான மாறுதல், மூலதன இயக் கத்தை உருவாக்கும் காரணமாகவும் இருக்கக்கூடும்; மூலதன

இயக்கத்தின் விளைவாக ஏற்படும் ஒரு நிலையாகவும் இருக்கக் கூடும். மூலதன இயக்கங்களுக்கும் வாணிப மாற்று வீதங்களுக்கும் இடையே உள்ள உறவானது, ஒன்றை ஒன்று சார்ந்ததாக இருப்பது தெளிவு. மூலதன இயக்கங்களுக்கும் வாணிப மாற்று வீத மாறுதல்களுக்கும் இடையே குறிப்பிடத்தக்க கால இடை வெளி இருந்தாலொழிய, மேற் குறிப்பிடப்பட்ட அவற்றின் உறவுத் தன்மையின் விளைவாக, மூலதன மாற்றலால் வாணிப மாற்று வீதங்களில் எத்தகைய விளைவு ஏற்படும் என்பதைத் துல்லியமாக அளந்து கூறுதல் மிகக் கடினமான செயலாகும்; இயலாத செயல் என்றும் கூறலாம்.

ஹெபர்லர் (Haberler), ஓலின் (Ohlin) ஆகிய இருவரின் நூல்களும் 1933ல் வெளியாயின. அவை இரண்டிலுமே, தராதர அநுகூலம்பற்றிய கோட்பாடானது (The doctrine of comparative advantage), உற்பத்திக் காரணிகள் நாடுவிட்டு நாடு இடம் பெயர்ந்து செல்லமாட்டா என்னும் பாவனையை ஏற்க வேண்டிய தேவையில்லாத புதிய வடிவங்களில் திருத்தி அமைத்துத் தரப் பட்டிருக்கிறது. இவ்வாறாக, மாற்றல் அமைப்பைப் பற்றி மட்டும் தனியாக ஆராயும் போக்குக்கு மாறாக, பன்னாட்டு வாணிபச் சிக்கல்கள் - பன்னாட்டு வளர்ச்சிக் சிக்கல்கள் ஆகிய வற்றின் பின்னணியில் மூலதன இயக்கங்களை விரிவான அடிப் படையில் ஆராயும் போக்குக்கு வழி வகுக்கப்பட்டுவிட்டது. நாம் முன்னரே குறிப்பிட்டதைப்போல், மூலதன இயக்கங்களைப் பரந்து விரிந்த கண்ணோட்டத்தில் ஆராயும் முறையை, ஓலின் அவர்களே தொடங்கி வைத்து விட்டார்.[5]

## மூலதன ஏற்றுமதிகளும் வருமானக் கண்ணோட்டமும்

சில ஆண்டுகளுக்குப் பின்னர், கீன்சின் புரட்சி (Keynesian revolution) வீறிட்டு வெடித்தது. அயல் நாட்டு முதலீடு பற்றிய கோட்பாட்டில் அந்தப் புரட்சியால் ஏற்பட்ட விளைவு, ஓர் உற்பத்திக் காரணி என்னும் முறையில் மூலதனத்தைப்பற்றிய அடிப்படையான நீண்ட காலச் சிக்கல்களிலிருந்து, நம் கவனத் தைக் குறுகிய காலத்தில் மட்டும் முதன்மையுடைய தற்செயலான சிக்கல்கள்மீது, அதாவது, முன்னேற்றமடைந்த — கடன் தரும் நாடுகளில் காணப்படும் வேலையின் அளவின்மீது அயல் நாட்டு முதலீட்டால் ஏற்படும் விளைவுகள் மீது மீண்டும் திருப்பியதே ஆகும். கீன்சின் பொருளியலின் விளைவாக மூலதன ஏற்றுமதி களையும், அதனை ஏற்றுமதி செய்யும் நாட்டில் — உலகம் முழுவதி லும்கூட - பயன்விளை தேவையிலும் (Effective demand) வேலை

யின் அளவிலும் ஏற்படும் உயர்வையும் இணைத்துப் பார்க்கும் போக்கு வலுப்பெற்றுவிட்டது.

உலகத்தில் உள்ள மொத்தத் தேவை (Aggregate demand) ஒரே நிலையான அளவுடையதாக இருக்கிறது என்றும், அப்படி இருப்பதால், மூலதன மாற்றல் ஏற்படும்போது ஒரு நாட்டின் வாங்கும் திறனில் குறைவும், மற்றொரு நாட்டின் வாங்கும் திறனில் உயர்வும் ஏற்படுகின்றன என்றும் கருதுகிற போக்கு, ஓலின் அவர்களால் தரப்பட்டுள்ள மாற்றல் கோட்பாட்டின் புதிய தொன்மை (Neo - classical) வர்ணனையில் கூடக் காணப் படுகிறது. மூலதன இயக்கத்தின் பயனாகக் கடன் தரும் நாட்டில் மந்த நிலையும் (Depression) கடன் பெறும் நாட்டில் எழுச்சி நிலையும் (Boom) ஏற்படும் என்கிற கருத்து, உண்மையான உலகத் தில் இவ்வாறு நடைபெறுவதில்லை என்ற போதிலும், மொத்த வாங்கும் திறன் ஒரே அளவில் மாறாமல் இருக்கும் என்னும் தொன்மைப் பொருளியல் கோட்பாட்டில் பொதிந்துகிடக்கிறது. ஓலின் அவர்களால் தரப்பட்டுள்ள இக் கோட்பாட்டின் வடிவத் தில்கூட இக் கருத்து பொதிந்துதான் இருக்கிறது. ஆனால் உண்மையான உலகத்தின் நடைமுறை நிலைமைகளை ஆய்ந்து அறிந்த டாஸ்ஸிக் (Taussig) அவர்கள், கடன் தரப்படும் காலங் களில், கடன் தரும் நாட்டில், வீழும் விலைகள் அல்ல — உயரும் விலைகளே நிலவுகின்றன என்பதையும், வாணிப மந்தம் (Business depression) அன்று — வாணிபச் செழுமையே (Business prosperity) காணப்படுகிறது என்பதையும் தெளிந்து அறிந்தார். டாஸ்ஸிக் அவர்களுக்குப் புதிர்போலக் காணப்பட்ட இந் நிலை மைகள், கீன்சின் வருமானக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது முற்றிலும் இயல்பான தன்மை உடையனவாகத் தெரிகின்றன. மூலதன இயக்கங்கள் தாமாகத் தோன்றிப் பிற விளைவுகளை உரு வாக்குகின்ற இயல்புடையனவே தவிரப் பிற காரணிகளால் உரு வாக்கப்படுவன அல்ல என்பது தொன்மைப் பொருளியற் கருத் தாகும். ஆனால், கீன்ஸ் அவர்களால் முன்னரே சுட்டிக் காட்டப் பட்டிருப்பதுபோல, வாணிபச் செலுத்தல் நிலையில் (Balance of trade) ஏற்படுகிற மாறுதல்களின் விளைவாகவும் மூலதன இயக் கங்கள் நிகழக்கூடும் என்பதையும் இந்தப் புதிய கண்ணோட்ட மானது கவனத்தில் பதித்துக் கொண்டிருக்கிறது. இவ்வாறாக, தாமே எழுகிற மூலதன இயக்கங்களுக்கும் (Autonomous capital movements), ஒன்றன் விளைவாக எழுகிற மூலதன இயக்கங் களுக்கும் (Accommodating capital movements) இடையே உள்ள வேறுபாடானது, மாச்லப் (Machlup) அவர்களின் பெருக்கும் எண் கோட்பாடுபற்றிய நூலில் சிறப்பான இடம் பெற்றிருக்

கிறது. நீண்ட கால நோக்கில் இந்த வேறுபாட்டின் முதன்மை மறைந்துவிடுகிறது என்ற போதிலும், குறுகிய கால முறைகள் பற்றிய பகுத்தாய்வுக்கு இது பயன் மிகுந்ததாக இருக்கிறது. ஆனல் இந்த வேறுபாடானது, இந்த இரண்டுவகை மூலதன இயக்கங்களைத் தவிர மூன்ருவது வகையான மூலதன இயக்கங்கள் நிகழக்கூடிய — மிக முதன்மையான ஒரு நிலைமையைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. வாணிப நிலைமையும் மூலதன இயக்கங்களும் ஒன்றை ஒன்று உருவாக்குவதற்கு மாருக, இந்த இரண்டுமே, கடன் பெறும் நாட்டின் அல்லது கடன் தரும் நாட்டின் வாணிப ஏற்ற இறக்கங்களோடு (Business fluctuations) தொடர்புடைய மூன்ருவது காரணி ஒன்ருல் உருவாக்கப்படலாம் என்பதே அந்த நிலைமை. எடுத்துக் காட்டாக, ஒரு நாட்டில் ஏற்படுகிற முதலீட்டு எழுச்சியின் (Investment boom) விளைவாக, ஒரே சமயத்தில் அந்த நாட்டில், பண்டங்களின் இறக்குமதிகள், மூலதனத்தின் இறக்குமதிகள் ஆகிய இரண்டும் நிகழக்கூடும். அவ்வாறு கூடுதலாக வருகிற பண்ட இறக்குமதிகளை, மூலதன இறக்குமதிகளுக்கான காரணம் என்ருே, மூலதன இறக்குமதிகளின் விளைவு என்ருே கூறுதல் பொருந்தாது. பண்டங்கள், மூலதனம் ஆகிய இரண்டின் இறக்குமதிகளும் பொதுவான மூன்ருவது காரணம் ஒன்றின் - அதாவது, முதலீட்டு எழுச்சியின் - விளைவுகள் ஆகும். இம் முதலீட்டு எழுச்சிதான், வட்டி விகிதங்கள், பண வருமானம், இறக்குமதிகளுக்கான தேவை ஆகிய எல்லாவற்றிலும் ஒரே சமயத்தில் உயர்வை ஏற்படுத்தி விடுகிறது.[6]

ஒரு மூலதன இயக்கமானது, தாஞகத் தோன்றுவதாக இருந்தாலும், ஒன்றன் விளைவாகப் பிறப்பதாக இருந்தாலும், அல்லது மூன்ருவதாகக் குறிப்பிடப்பட்டபடி வேறு ஒன்றைப் போல அதனுடன் கூடவே மாறுவதாக இருந்தாலும், எல்லாச் சமயங்களிலும், அந்த இயக்கமானது, பயன்விளை. தேவை (Effective demand), வேலை (Employment) ஆகியவற்றில் ஏற்படும் உயர்வோடு தொடர்பு உடையதாக இருக்கிறது. தொடர்பு என்னும் சொல்லை நாம் இங்குப் பயன்படுத்துவதற்குக் காரணம், மேற் குறிப்பிட்ட மூவகைக் காரண உறவுகளில் (Causal relationships) எது ஒன்றும் ஏற்படக்கூடும் என்பதே. மூலதன மாற்றலானது தானே எழும் ஒரு காரணி என்றும், அம் மாற்றல் நிகழ்வதன் விளைவாக வருமானம், வேலை, வாணிபச் செலுத்தல் நிலை ஆகியவற்றில் ஒரு மாறுதல் ஏற்படுகிறது என்றும் பொதுவாகக் கருதப் படுவதைப் பார்க்கும்போது, தொன்மைப் பொருளியற் கருத்தானது இப்போதும் ஏற்கப்பட்டுவருகிறது. என்றே கூற

வேண்டும். இவ்வாறு ஏற்கப்படுவதற்குப் போதிய காரணம் இருக்கிறது. வாணிபச் செலுத்தல் நிலையில் ஒரு மாறுதல் ஏற்படும் போது, அதற்கு ஏற்ற அளவு மூலதன இயக்கம் நடைபெற்றுலொழிய, அம் மாறுதலை நீண்ட காலத்திற்கு நிலை நாட்ட முடியாது. தொடக்க நிலையில், ஏற்றுமதிகளில் ஏற்படும் உயர்வின் விளைவாகவே பண வருமானம், வேலை ஆகியவற்றில் உயர்வு ஏற்பட்ட போதிலும், ஏற்படக்கூடிய ஏற்றுமதி உபரிக்கு (Export surplus) ஏற்ற அளவு மூலதன ஏற்றுமதி ஏற்பட்டாலொழிய, ஏற்றுமதிகள் - வருமானம் - வேலை ஆகியவற்றில் ஏற்படும் உயர்வை நிலை நாட்டமுடியாது ; எனவே, நீண்ட காலக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது, மூலதன ஏற்றுமதியின் விளைவாகவே வருமானம், வேலை ஆகிய வற்றில் உயர்வு ஏற்படுகிறது என்று நாம் கருதவேண்டும். அத்தகைய நிலையில், பெருக்கப் படும் எண்ணுகை (Multiplicand) இருப்பது, ஏற்றுமதி உபரியே தவிர, குறுகிய காலப் பகுத்தாய்வில் காட்சியளிக்கிற ஏற்றுமதி உயர்வு அன்று. அத்தகைய ஏற்றுமதி உயர்வைப் பொறுத்த வரை, வாணிபச் செலுத்தல் நிலையில் தாற்காலிகமாக ஏற்படுகிற வேறுபாடுகள், தங்கம் அந்நிய நாட்டுச் செலாவணி ஆகிய வற்றின் இருப்புகளைக் கொண்டு சரிக்கட்ட முடியும் என்று நம்பலாம். ஏற்றுமதி உபரிக்கு முதன்மை தருகிற இந்தப் போக்கு, அண்மைக் காலப் பொருளியல் நூல்கள் பலவற்றிலும் காணப் படுகிறது.[7] மூலதன இயக்கமே பிற விளைவுகளை ஏற்படுத்தும் சிறப்புடைய காரணியாக விளங்குகிறது என்னும் கருத்துக்கு இந்தப் போக்கு ஆக்கம் தருவதாக உள்ளது. மூலதன இயக்கம் ஏற்படாவிட்டால், வாணிபச் செலுத்தல் நிலையில், நீண்ட காலத்திற்கு நிலைத்திருக்கக்கூடிய மாறுதல் ஏற்படாது என்பது வெள்ளிடைமலையென விளங்குகிறது.

அயல்நாட்டு முதலீட்டின் பொதுவான வருமான ஆக்க விளைவானது (Income generating effect), இருவகை ஊற்றுக் கால்களிலிருந்து, அல்லது இரண்டில் ஒன்றிலிருந்து ஏற்படக்கூடும். முதலாவதாக, அயல் நாட்டுக் கடனுக்குத் தேவையான நிதிகள், ஆளப்படா இருப்புகளிலிருந்து (Idle balances) அல்லது புதிதாகப் படைக்கப்பட்ட பணத்திலிருந்து கிடைக்கலாம். அப்படிக் கிடைக்குமானால், அக் கடன் தொகையின் செலவானது, கடன் தரும் நாட்டில் நிகழ்ந்தாலும் சரி, கடன் பெறும் நாட்டில் நிகழ்ந் தாலும் சரி, அதன் விளைவாகப் பொருளியல் துறையின் நானு பகுதிகளிலும் ஒரு பெருக்கம் ஏற்படும். இரண்டு நாடுகளின் இறுதி நிலைச் செலவு நாட்டங்கள் ஒரே அளவுடையனவாக இருந்தாற் கூட இத்தகைய பெருக்கம் ஏற்படும். இரண்டாவது ஊற்றுக்

கால், சிறப்பாக லாய்ட் ஏ. மெட்ஸ்லெர் (Lloyd A. Metzler) அவர்களால்[8] விளக்கிக் கூறப்பட்டுள்ள ஒன்று. நுகர்வு, முதலீடு. இறக்குமதிகள் ஆகியவற்றின் மீதான இறுதி நிலைச் செலவு நாட்டங்கள், கடன் தரும் நாட்டில் இருப்பதைவிடக் கடன் பெறும் நாட்டில் உயர்வாக இருக்கின்றன என்னும் நிலையிலிருந்து பிறப்பதே இந்த ஊற்றுக்கால். இந்த நிலைமையே பெரும்பாலும் நடைமுறையில் இருக்கக்கூடிய ஒன்று. இத்தகைய நிலைமையில், மூலதன மாற்றலானது, செலவு ஆகியவற்றில் ஓர் உயர்வை ஏற்படுத்தும். தொடக்க நிலையில் கடனானது புதிய பணம் அல்லது செயல் முனைப்பு அற்ற பணத்திலிருந்து (Inactive money) தரப் படாமல், கடன் வழங்கும் நாட்டின் உள்நாட்டு மூலதனச் செலவை அல்லது நுகர்வுச் செலவைக் குறைப்பதன் வாயிலாகத் தரப்பட்டாற்கூட இந்த உயர்வு ஏற்படும்.

## அயல்நாட்டு முதலீடு—ஒரு பொருளியல் தூண்டுகோல்

அயல்நாட்டு முதலீட்டின் பயனாக வருமான ஆக்க விளைவும் வேலைத் தூண்டல் விளைவும் (Employment stimulating effect) ஏற்படுகின்றன என்னும் கருத்தின் பயனாக, முன்னேறிய தொழில் துறை நாடுகளின் வாணிபச் சுழல் கைக்கோளில் அயல்நாட்டு முதலீட்டை ஒரு சுழல் எதிர்ப்பு ஏற்பாடாகப் (A counter cyclical device) பயன்படுத்துவதற்குரிய வாய்ப்பைப்பற்றி ஆராய்கிற நிலைமை ஏற்பட்டது. இந்த ஆராய்ச்சியின் முடிவு, பெரும்பாலும் அத்தகைய வாய்ப்பு இராது என்பதாகவே இருந்திருக்கிறது.[9] முதலாவதாக, அயல்நாட்டு முதலீட்டை ஒரு சுழல் எதிர்ப்புத் தேவைக்கேற்ற காலங்களில் நிகழும்படிச்செய்வது, ஏராளமான நடைமுறை இடர்ப்பாடுகளைக் கொண்டிருக்கிறது என்பது உணரப்பட்டது. உள்நாட்டுப் பொதுப் பணித் திட்டத்தை ஒரு சுழல் எதிர்ப்புக் கைக்கோளாக நிறைவேற்றுவதில் உள்ள நடைமுறை இடர்ப்பாடுகள்கூட மாபெரும் அளவுடையனவாக இருக்கின்றன. பன்னாட்டுக் கடன் மனுக்களைப் பரிசீலித்து முடிவெடுப்பதற்கு எத்துணை நீண்டகாலமாகிறது என்பதை அண்மைக் கால அநுபவத்திலிருந்து நாம் நன்கு அறிந்துள்ளோம்.

இரண்டாவதாக. அயல்நாட்டு முதலீடானது, முன்னேறிய தொழில்துறை நாடுகளின் வேலை அளவில் வாணிபச் சுழலையொட்டி ஏற்படுகிற உயர்வு அல்லது தாழ்வுக்கு எதிரான திசையில் அதன் பெருக்கத்தை அல்லது சுருக்கத்தைக் கொண்டிருக்க வேண்டும் என்று முடிவு செய்யப் படுமானால், சுழல் எதிர்ப்புத் தன்மையுடைய அயல்நாட்டு முதலீட்டின் விளைவாக, வளர்ச்சி

குறைந்த நாடுகளின் முதலாக்கத்தில் தீவிரமான ஏற்ற இறக்கங்கள் ஏற்படக்கூடும். முதன்மைப் பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகளின் ஏற்றுமதி வரவுகள் பெரும்பாலும் வாணிபச் சுழலுக்கு ஏற்ற முறையில் ஏற்ற இறக்கங்களைக் கொண்டுள்ளன என்பது உண்மையே. அத்தகைய நிலை இருப்பதால், அந் நாடுகளின் மூலதன இறக்குமதிகளைச் சுழல் எதிர்ப்பு இயல்புடையனவாக ஆக்கினால், ஏற்றுமதி வரவுகளும் மூலதன இறக்குமதிகளுமாகச் சேர்ந்து, அந் நாடுகளின் மொத்த இறக்குமதித் திறனை ஒரே நிலையில் நிறுத்தும் என்று சிலர் முடிவு கட்டக்கூடும். ஆனால் ஒன்று, ஒரு நாட்டின் இறக்குமதித் திறன் என்பதும், அந்நாட்டின் முதற்பொருள் இறக்குமதிகள் உள்ளிட்ட முதலாக்க வழிகள் என்பதும் ஒன்றாகா. சுழல் எதிர்ப்புத் தன்மை படைத்த அயல்நாட்டு முதலீட்டைப் பெறுகிற ஒரு முதன்மைப் பொருள் (A primary producing country) முதலாக்க விகிதம் ஒரே நிலையில் நிறுத்தப்பட வேண்டுமானால், அந் நாட்டு ஏற்றுமதி வரவுகளின் ஏற்ற இறக்கங்களால் உள்நாட்டு வருமானத்தில் ஏற்படுகிற விளைவுகள் அகற்றப்பட்டாகவேண்டும். அவற்றை அகற்ற முயல்வது எளிய செயலன்று. அவை அகற்றப்பட்டுவிடும் என்று உறுதியாகக் கூறுவதும் இயலாத செயல்.[10]

இக் காரணங்களாலும், இன்ன பிற காரணங்களாலும், மூலதன ஏற்றுமதிகளை ஒரு சுழல்எதிர்ப்புத் திட்டமாகக் கையாளும் எண்ணம், பின்னணிக்குத் தள்ளப்பட்டுவிட்டது. ஆனால், அயல்நாட்டு முதலீட்டை, வாணிபச் சுழல் கைக்கோளுக்கான ஒரு கருவியாகக் குறுகிய காலத்தில் கையாள்வதில் இடர்ப்பாடுகள் இருக்கின்றன என்பதால், உள்நாட்டு முதலீட்டு வாய்ப்புகளைவிட உள்நாட்டுச் சேமிப்பு நாட்டம் மிகக்கூடுதலாக இருக்கும்போது, அதனை எதிர்க்கும் ஒரு நீண்டகாலக் கருவியாக அயல்நாட்டு முதலீட்டைப் பயன் படுத்த முடியாது என்று கூறிவிட முடியாது. முதிர்ந்த தொழில்துறைப் பொருளியலுக்கு விரும்பத்தக்க ஒரு தூண்டுதலை அளிக்கிற கருவியாக அயல்நாட்டு முதலீடு காட்சி அளிக்கிறது. எது எப்படி இருந்தாலும், இந்தத் துறையில், கீன்சின் கோட்பாட்டுக்கும் மார்க்சீயக் கோட்பாட்டுக்கும் இடையே ஓர் ஒருமைப்பாடு இருப்பது வெளிப்படை. ஆனால் இந்த மார்க்சீயக் கோட்பாடானது மார்க்சிடமிருந்து (Marx) பிறக்கவில்லை, ஜே. ஏ. ஹாப்சனிடமிருந்து (J. A. Hobson) தோன்றியிருக்கிறது. ஜே. ஏ. ஹாப்சன் இந் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே இப் பொருள்பற்றி எழுதியுள்ளார். அன்னாரிடமிருந்து, ரோசா லக்செம்பர்க் (Rosa Luxemberg), லெனின் (Lenin) ஆகியோர், பத்து அல்லது பன்னிரண்டு

ஆண்டுகளுக்குப் பின்னர், இக்கோட்பாட்டை எடுத்துக்கொண்டுள்ளனர். ஹாப்சன், தம்முடைய நுகர்வுக் குறைவுக் கோட்பாட்டின் வாயிலாக (Theory of under consumption). கீன்சின் பொதுக் கோட்பாட்டின் (Keynesian general theory) சில இயல்புகளை, முன்னதாகவே கண்டறிந்துள்ளார். இதனால்தான், அயல் நாட்டு முதலீட்டுத் துறையில், இந்த இரு கோட்பாடுகளுக்கும் இடையே ஒருமைப்பாடு காணப்படுகிறது.

பொருளியல் ஏகாதிபத்தியம் பற்றிய இந்தமார்க்சிய அல்லது புதிய மார்க்சியக் கோட்பாட்டின்படி, முன்னேறிய முதலாளித்துவ நாடுகள், தங்களுடைய உள்நாட்டுப் பொருளியலைச் செழிப்பும் ஆதாயமும் மிகுந்த முறையில் நடைபெறச் செய்வதற்காக மூலதனத்தை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து தீரவேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றன; அப்படி ஏற்றுமதி செய்வதன் வாயிலாக அவற்றின் உபரிப் பண்டங்களை அந் நாடுகளின்மீது சுமத்த வேண்டிய கட்டாயத்திலும் இருக்கின்றன.

இத்தகைய கட்டாயம் கடந்த காலத்தில் ஓரளவுக்கு இருந்திருக்கலாம். நிகழ் காலத்திலும் இத்தகைய கட்டாயம் இருக்குமானால், இதில் எத்தகைய தவறும் இல்லை என்பது, இக் கோட்பாடுபற்றிய என்னுடைய கருத்தாகும்.இக் கட்டாயத்தால் தீமை இல்லை என்பது மட்டுமல்ல; மாபெரும் நன்மையே உண்டு. தங்களுடைய நல்வாழ்வை முன்னிட்டுத் தங்களுடைய மூலதனத்தைப் பின்தங்கிய நிலையில் உள்ள—வறுமை மிகுந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தாகவேண்டிய கட்டாயத்திலும், அப்படிச் செய்வதன் வாயிலாக அந் நாடுகளின் பொருளியல் முன்னேற்றத்திற்குத் துணைபுரிய வேண்டிய நிலையிலும், பணக்கார நாடுகள் இடையீடின்றி இருக்குமானால், அப்படி இருப்பது, மாபெரும் நலன் தரும் ஒரு நிலைமையாகும். உண்மையிலேயே அத்தகைய நிலைமையை, தானாகவே ஒழுங்காக அமைந்துள்ள வியக்கத்தக்க ஓர் ஒருமைப்பாடு என்றே கூறவேண்டும்.

மூலதன ஏற்றுமதிக்கான இக் கட்டாய நிலைமட்டுமே பொருளியல் ஏகாதிபத்தியம் பற்றிய மார்க்சியக் கோட்பாட்டின் உள்ளடக்கம் அன்று என்பதை நான் நன்கு அறிவேன். அக் கோட்பாட்டில் அடங்கியுள்ள மற்றொரு கொள்கை, முற்றுரிமை முதலாளித்துவத்தால் (Monopoly Capitalism) பின்தங்கிய நாடுகள் சுரண்டப்படுவதைப் பற்றியதாகும். இந்தக் கொள்கையைப்பற்றி நான் முதலில் தெரிவிக்க விழைகிற கருத்து, 1914ஆம் ஆண்டுக்கு முன்னர் மூலதனத்தை மிகப் பெரிய அளவில் ஏற்றுமதி

செய்துவந்த நாடாகிய இங்கிலாந்து, ஜெர்மனியைப் போலவோ, ஐக்கிய அமெரிக்க நாட்டைப் போலவோ, டிரஸ்டுகள் (Trusts) அல்லது கார்டெல்கள் (Cartels) என்னும் முற்றுரிமை முதலாளித்துவ அமைப்புகளைப் பெற்றிருக்கவில்லை என்பதாகும்.[11] கடன் பெறும் நாடுகளில் கடன் வழங்கும் நாடுகளின் முதலீட்டுக்குச் சிறப்பான சில சலுகைகள் தரப்படிட்ருந்தால், சில சமயங்களிலாவது அத்தகைய சலுகைகளுக்கு ஓரளவு பொருளியல் அடிப்படை இருந்திருக்கும். இஃது, இச் சமயத்தில் நான் தெரிவிக்க விரும்புகிற இரண்டாவது கருத்து ஆகும். பொருளியலில் பின்தங்கியுள்ள நாடுகள், பொதுப் பயன்பாட்டுத் தொழில்கள், முன்னேற்றங்கள் ஆகியவற்றில் பற்றுக்குறை உடையனவாக இருக்கின்றன. எனவே, குறிப்பிட்ட ஓர் உற்பத்திப் பணியைத் தொடங்க விரும்புகிற தனிப்பட்ட முதலீட்டாளரே, தம்முடைய மூலதனத்தின் ஒரு பகுதியைக்கொண்டு இத்தகைய பயன்பாட்டு வசதிகளை ஏற்படுத்த வேண்டிய நிலை பெரும்பாலும் இருக்கிறது. அம் முதலீட்டாளருக்கு நன்மை செய்வதோடு நாட்டின் பொருளியலுக்கும் பொதுவான முறையில் நலன்தரும் இயல்புடைய இத்தகைய வசதிகளில் அவர் செய்யும் முதலீட்டிற்குப் பொருத்தமான ஆதாயம் அவருக்குக் கிடைக்க வேண்டுமானால், அவருக்கென்று சில சிறப்புச் சலுகைகள் தேவைப்படும் அல்லவா? இந்த ஒரு காரணத்திற்காக மட்டுமே சிறப்புச் சலுகைகள் தரப்படுகின்றன என்று கூறமுடியாது. ஆனால் கடந்த கால அயல்நாட்டு முதலீட்டில் காணப்பட்ட முற்றுரிமைப் பகுதிக்கு ஆதரவாக எழுப்பப்படக்கூடிய - ஏற்கத்தக்க - ஒரு வாதமாக அஃது அமைந்துள்ளது. ஒட்டுமொத்த மூலதன வசதிகளை (Overhead capital facilities), தேவைப்பட்டால் அயல்நாட்டுக் கடன்களைக்கொண்டு, அரசாங்கங்களே அளிக்க முன் வந்திருந்தால், இந்த வாதம் தோற்றுவிடும்.

மூலதனத்தை ஏற்றுமதி செய்வதில் முதிர்ந்த முதலாளித்துவ நாடுகளிடம் ஆழமான விருப்பம் இருக்கும் என்பதுபற்றிய - முதலில் நாம் சுட்டிக்காட்டிய - மார்க்சீயக் கோட்பாட்டைப்பற்றி மீண்டும் நாம் கருத்தைச் செலுத்தலாம். கீன்சின் பொருளியல் இந்தக் கோட்பாட்டை உறுதி செய்திருப்பதோடு இதற்கு ஓரளவு மதிப்பையும் அளித்திருக்கிறது. 1939-45ல் நடைபெற்ற இரண்டாம் உலகப் போருக்குப் பின் சில ஆண்டுகள்வரை, வளர்ச்சி குறைந்த நாடுகளில் பரவலான முறையில் ஒரு நம்பிக்கை இருந்துவந்ததாகத் தெரிகிறது. உடனடியாகவோ அல்லது சற்றுப் பொறுத்தோ, ஐக்கிய அமெரிக்க நாடானது, தன்னுடைய பொருளியலை மகிழ்ச்சியும் செழிப்பும் மிக்க நிலையில்

வைத்திருப்பதற்காக, ஏராளமான அளவில் தன் மூலதனத்தை அந் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தே ஆகவேண்டும் என்பதே அந் நம்பிக்கை. எடுத்துக்காட்டாக, 1948ல் ஹவானாவில் (Havana) நடைபெற்ற வாணிப மாநாட்டின்போது இந்த மனப்போக்கானது தெளிவாகத் தெரிந்தது. எத்தகைய நிபந்தனைகளின்கீழ் வளர்ச்சி குறைந்த நாடுகள் அயல்நாட்டு மூலதனத்தை ஏற்றுக்கொள்ள ஆயத்தமாக இருந்தன என்பது, சில சமயங்களில் ஐக்கிய அமெரிக்க நாடானது வேலை நிறைவு நிலையைத் (Full employment) தன் பொருளியலில் நிலை நாட்டுவதற்காக அயல்நாட்டு முதலீட்டைச் செய்யவேண்டிய கட்டாயத்திற்கு விரைவில் உள்ளாகும் என்னும் பாவனையை அடிப்படையாகக் கொண்டிருந்தது என்று சொல்லப்பட்டது. இந்தக் கூற்று உண்மையா, அல்லவா என்பது எனக்குத் தெரியாது. இந்தப் பாவனையைச் செய்வது ஆபத்தானது என்பதையும், இந்தப் பாவனையை நம்பிக்கொண்டு செயலில் இறங்குவதால் விரும்பத்தகாத விபரீத விளைவுகள் ஏற்படக்கூடும் என்பதையும் மட்டுமே நான் இங்கு அழுத்தந் திருத்தமாக எடுத்துக்கூற விரும்புகிறேன்.

கடன் தரும் நாட்டின் பொருளியலில் அந் நாட்டின் அயல் நாட்டு முதலீடு காரணமாக ஏற்படக்கூடிய சாதகமான வருமான விளைவுகளையும் வேலை விளைவுகளையும் கீன்சின் பகுத்தாய்வு வெளிப்படுத்தியிருக்கிறது என்பது உண்மையே. ஆனால், அயல்நாட்டு முதலீட்டின் துணை இல்லாமலே, முன்னேறிய ஒரு தொழில்துறை நாட்டின் வேலையைத் தொடர்ச்சியாக நல்ல நிலையில் நிலைநாட்டுவதற்கு உரிய நிதித்துறை மற்றும் பணத்துறைக் கைக்கோள்களைக் (Fiscal and monetary policies) கீன்சின் பொருளியல் வகுத்துத் தந்திருக்கிறது என்பதை இச் சமயத்தில் மறவாதிருத்தல் இன்றியமையாதது. குறைந்தது கொள்கை அளவில் - ஓரளவுக்கு நடைமுறையில்கூட - மூலதன மாற்றலின் தற்செயலான விளைவு என்பதைவிட உயர்ந்த நிலை எதையும் எப்போதும் பெற்றிராத - அயல்நாட்டு முதலீட்டின் வருமானம் மற்றும் வேலை விளைவானது (Income and employment effect), உலகப் பணக்கார நாடுகளின் உள்நாட்டுப் பொருளியல் நிலைபேறுக்கக் கருவி (A means of domestic economic stabilisation) என்னும் வகையில் சிறிதளவும் முதன்மை அற்ற ஒன்றாக ஆகிவிட்டது. இவ்வாறாக, எந்தக் கோட்பாடானது மூலதன ஏற்றுமதிக்கான கட்டாயத்தைப்பற்றி முன்னிலும் சிறப்பான விளக்கத்தை அளித்ததோ அந்தக் கோட்பாட்டாலேயே அந்தக் கட்டாயும் அகற்றப்பட்டு விட்டது,

## அயல்நாட்டு முதலீட்டிற்கான உண்மையான தேவை

மேற்குறிப்பிடப்பட்ட காரணத்தால், உலகத்தின் ஏழை நாடுகளுக்குத் தங்களுடைய உபரி உற்பத்தியை மாற்றல் செய்லாக வேண்டிய இன்றியமையாமை பணக்கார நாடுகளுக்கு இல்லை என்பதை வருத்தத்தோடு எடுத்துக்கூற வேண்டியிருக்கிறது. அத்தகைய மாற்றல் ஏற்பட வேண்டுமானால், அம் மாற்றதால் கடன் அளிக்கும் நாட்டின் பொருளியலில் தாற்காலிகமாக ஏற்படுகிற வருமான விளைவு வேலை விளைவைத் தவிர்த்த வேறு ஏதேனும் காரணம் இருந்தாகவேண்டும். ஆனால் ஒன்று: மேற்குறிப்பிட்ட இன்றியமையாமை பணக்கார நாடுகளுக்கு இல்லாதது அவ்வளவாக வருத்தப்பட வேண்டிய ஒரு நிலையும் அன்று. ஏனென்றால், வளர்ச்சி குறைந்த நாடுகளை நோக்கி மூலதனம் செல்வது, முன்னேறிய தொழில்துறை நாடுகளின் வேலை நிலையைப் (State of employment) பொறுத்ததாக இருப்பதும், அவ் வேலை நிலைக்கு நேர் எதிரான திசையில் மாறுவதும், ஓரளவுக்கு விபரீதமான ஒரு நிலையே ஆகும். பன்னாட்டு முதலீட்டுக்கான பொருளியல் தேவை, அதற்கென்று அமைந்துள்ள அடிப்படையைப் பெற்றிருக்கிறது. அத் தேவை, அம் முதலீட்டால் பணப் பெருக்கத்தில் தற்செயலாகவும் தாற்காலிகமாகவும் ஏற்படுகிற விளைவுகளைப் பொறுத்த ஒன்று அன்று. வாணிப மந்தப் போக்குகளை எதிர்ப்பதற்கு அவ் விளைவுகள் தேவைப்படும்போதெல்லாம், எந்த அளவுக்கு அயல்நாட்டு முதலீட்டால் அவற்றைப் பெற முடியுமோ அதே அளவுக்கு அதே சிறப்பான முறையில் உள்நாட்டுக் கைக்கோள்களாலும் பெறமுடியும்.

உலகம் முழுவதையும் ஒன்றாக வைத்துப் பார்க்கும்போது, பணவழித் தேவையின் (Monetary demand) பற்றாக்குறை, தாற்காலிகமான - குறிப்பிட்ட வட்டாரத்தைச் சேர்ந்த - விதிவிலக்குப் போன்ற ஒரு நிலைமையாகவே தோற்றம் அளிக்கிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளின் மூலதனப் பற்றாக்குறை, வாழ்க்கைத் தரங்களில் உள்ள பெரிய வேறுபாடுகள் ஆகியவற்றிலிருந்து எழுகிற இடர்ப்பாடுகள், பணவழித் தேவையின் பற்றாக் குறையைவிட மிகுந்த அடிப்படைத்தன்மை வாய்ந்தனவாக இருக்கின்றன. அயல்நாட்டு முதலீடானது, அடிப்படையில், உலகத்தின் உற்பத்திச் சாதனங்களின் பங்கீடு - பயன் ஆகியவற்றை முன்னேற்றி அமைப்பதற்கான ஒரு கருவியே. அயல்நாட்டு முதலீட்டின் வருமான - வேலை விளைவுகளுக்குப் பதிலாகப் பொருளியல் நிலைபேறுக்கத்திற்கான உள்நாட்டுக் கைக்கோள்கள் பலவற்றை அமைத்திருப்பதன் வாயிலாக, கீன்சின் பொருளிய

லானது, பன்னாட்டு மூலதனஇயக்கத்தின் வளர்ச்சிபற்றிய கூறுகளை ஆராய்வதற்குரிய வழியை ஒழுங்குபடுத்தித் தந்திருக்கிறது. இத்தகைய ஆராய்ச்சிதான் இத்துறையில் முதலிலிருந்தே தலை சிறந்த இடத்தைப் பெற்றிருக்கவேண்டும். கீன்ஸ் பொருளிய லின் விளைவாக, மூலதன இயக்கங்களை, ஓர் அடிப்படை உற்பத் திக் காரணியின் இயக்கங்களாகக் கருதமுடிகிற நிலை, இவ்வளவு காலத்திற்குப் பிறகாவது ஏற்பட்டிருக்கிறது.

மூலதன இயக்கம் என்னும் சொற்றொடருக்குப் பொதுவாகக் கொள்ளப்படுகிற பொருள், புதிய முதலீட்டிற்குரிய இடம் மாறுகிறது என்பதும், அப்படி மாறுவதால், ஒரு நாட்டில் செய்யப்படுகிற புதிய சேமிப்பு மற்றொரு நாட்டின் மெய்ம் முதற் பொருள்களைப் பெருக்குவதற்குப் பயன்படுகிறது என்பதும் ஆகும். அச் சொற்றொடருக்கு இதைவிடக் கூடுதலான பொருள் இருக்கமுடியும், இருக்கவேண்டும் என்றும் கூறலாம். நடைமுறை உலகத்தில், ஏனைய உற்பத்திக் காரணிகளோடு ஒப்பிட்டுப் பார்க் கும்போது, பல்வேறு நாடுகள் பெற்றுள்ள மூலதன அளிப்புகளில் மாபெரும் வேறுபாடுகள் இருக்கின்றன. உலகமானது தூய பொருளியல் முறைகளில் நடத்தப்படுமானால், ஐக்கிய அமெரிக் காவைப் போல் மிகுந்த வளர்ச்சியைப் பெற்றுள்ள ஒரு நாடு, தன்னுடைய நடப்புக் காலப் புதிய சேமிப்பு முழுவதையும் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவிடும் என்பதோடு, சிறிது காலத் திற்காவது அதனுடைய ஈடு செய் நிதிகள் (Replacement funds), அசல்கடன் தீர்வு நிதிகள் (Amortization funds) ஆகியவற்றின் ஒரு பகுதியையும் ஏற்றுமதி செய்துவிடும் என்று கருதலாம். வேறு சொற்களில் கூறுவதானால், மெய் வருமானத்தை உச்ச அளவுப் படுத்தும் கோட்பாட்டை (The principle of real income maximisation) உலக அடிப்படையில் கையாளத் தொடங்கினால், நடப்புக் காலப் புதிய முதலீட்டை மட்டுமல்லாமல், உலகத்தில் முன்னரே திரட்டிவைக்கப்பட்டுள்ள மெய்ம் முதலையும் பல்வேறு நாடுகளுக் கிடையே மறு பங்கீடு செய்யவேண்டியிருக்கும். இதுதான், 'மூலதன இயக்கம்' என்னும் சொற்றொடரின் உண்மைப் பொருளாகும். மூலதன இயக்கமானது நடப்புக் காலப் புதிய சேமிப்பிலிருந்து மட்டும் நிகழ்ந்துகொண்டிருக்கும் வரை, அந்த இயக்கத்தில் அடங்கியிருப்பதெல்லாம், உலகப் புது முதலீட்டு நடவடிக்கையின் நாடு வழிப் பங்கீடேதவிர, ஏற்கெனவே உள்ள மூலதன இருப்பின் இடப் பெயர்ச்சி அன்று.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடைபெற்ற அயல்நாட்டு முதலீட்டின் புதுமை என்னவென்றால், அந்த முதலீடு நடைபெற்ற போது, அதனோடு தொடர்புடைய வகையில், ஐரோப்பாவி

லிருந்து மட்டான தட்பவெப்பமுடைய ஏனைய வட்டாரங்களின் மாபெரும் வெற்றிடச் சமவெளிகளை ('Empty' plains) நோக்கி மக்கள் குடி பெயர்ந்து சென்றார்கள் என்பதாகும். இயற்கை வளங்களை ஏராளமான அளவில்பெற்றுத் திகழ்ந்த புதிய நாடுகளில் கிடைக்கக்கூடிய உயர்ந்த வருமானங்களைப் பெறவேண்டும் என்கிற விழைவுடன், மூலதனம், உழைப்பு ஆகிய இரண்டும் அந்த நாடுகளை நோக்கிச் செல்லலாயின. இந்த இரண்டின் இயக்கங்களில் ஏதேனும் ஒன்றிற்குத் தடை இருந்திருந்தால், அதன் விளைவாக மற்றொன்றின் ஓட்டம் குறைந்திருக்கும். இரண்டு இயக்கங்களும் ஒன்றிற்கு ஒன்று துணையாக இருந்திருக்கின்றன. ஆனால் அந்த இரண்டு காரணிகளுக்கு இடையே இதேவகையான உறவு எப்போதும் எல்லா இடங்களிலும் இருக்கும் என்று கூறமுடியாது. இருபதாம் நூற்றாண்டில் ஐக்கிய அமெரிக்க நாட்டிலிருந்து நடைபெறும் மூலதன ஏற்றுமதிகளில் ஒரு பகுதியை, பிற நாடுகளிலிருந்து ஐக்கிய அமெரிக்காவுக்கு மக்கள் வந்து குடியமர்வதற்குப் பதிலாக நடைபெறும் நிகழ்ச்சி என்று கருதலாம். (அப்படி வந்து குடியமர்வது சட்டத்தால் தடுக்கப்பட்டிருக்கிறது.) குறைந்த கூலிக்கு வேலை செய்யக்கூடிய மக்கள், பிற நாடுகளிலிருந்து அமெரிக்காவுக்கு வந்து அமெரிக்க மூலதனத்தோடு இணைந்து பணியாற்ற அனுமதிக்கப்படுவதற்கு மாறாக, அவர்களுடைய நாட்டிலேயே அமெரிக்க மூலதனத்தோடு இணைந்து பணியாற்றுவதற்கு ஏற்ற வகையில் அமெரிக்க மூலதனம் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அதனை ஏற்றுமதி செய்பவர்கள், உயர்ந்த ஆதாய விளைவுகளை விழையும் தனிப்பட்ட முதலீட்டாளர்களாக இருக்கலாம் (1920 ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் அப்படித்தான் இருந்தது) அல்லது அமெரிக்க அரசினராக இருக்கலாம் (1945 முதல் 52 வரை அவ்வாறு இருந்தது).

மூலதனத்தை ஓர் உற்பத்திக் காரணி என்னும் கண்ணோட்டத்தில் ஆராயும் மூலதன இயக்கங்கள்பற்றிய ஒரு கோட்பாடானது, உலகத்தின் பல்வேறு பகுதிகளில், நிலம், உழைப்பு ஆகிய காரணிகளோடு மூலதனம் இணைந்து பணியாற்றும் விகிதங்கள் வெவ்வேறாக இருப்பது பற்றியும், பல திறப்பட்ட தராதரக் காரணி ஆற்றல்களுக்கு (Relative factor endowments) ஏற்ற வகையில் மூலதனம் அடையவேண்டிய தொழில் நுணுக்க வடிவங்கள்பற்றியும், மூலதன இயக்கங்கள் - மக்கள்தொகை வளர்ச்சி - மக்களின் நாட்டுப் பெயர்ச்சி (Migration) இவற்றிற்கு இடையே உள்ள உறவுபற்றியும், இன்ன பிற அடிப்படையான கருத்துக்கள் பற்றியும், ஆய்வு செய்தல் வேண்டும். இத்தன்மை படைத்த மூலதன இயக்கக் கோட்பாட்டின் சில சிறு பகுதிகள்மட்டுமே

தற்போது அமைந்துள்ளன. ஆனால் தற்போது ஏற்பட்டுள்ள மாபெரும் விழிப்புணர்ச்சியின் பயனாக இந்த அடிப்படைக் கேள்விகளை ஆராயவேண்டும் என்கிற விழைவு, உலகம் எங்கணும் உள்ள பொருளியல் அறிஞர்களுக்குத் தற்காலத்தில் ஏற்பட்டுள்ளது. இந்த விழைவின் பயனாக, மூலதனத்தின் ஆக்கம் - வளர்ச்சி - ஆகியவைபற்றிய கோட்பாட்டுக்கு மட்டுமல்லாமல், பன்னாட்டுப் பொருளியல் முழுவதற்குமே நலன் விளையும் என்று நம்புவோமாக.

## மூலதனம் திரும்ப வருதல்பற்றிய சிக்கல்கள்

முன்னேறிய தொழில்துறை நாடுகளில் பொருளியல் நிலைபேற்றை அடைவதற்கு உள்நாட்டு முறைகளின் முதன்மையை வற்புறுத்திக் கூறியதன்மூலம், கீன்சின் பொருளியலானது பன்னாட்டு மூலதனத்தின் அடிப்படையான வளர்ச்சிக் கூறுகள் பற்றி முன்னிலும் சிறந்த முறையில் ஆராய்வதற்கான பாதையை வகுத்துத் தந்திருக்கிறது என்று நான் கருதுகிறேன். வாணிப மந்தநிலை (Business depression) என்னும் நோய் அடியோடு தீர்ந்துவிட்டது என்றும், மீண்டும் வரவே வராது என்றும் கருதுவது, மிகை நம்பிக்கையின்பாற்பட்ட ஒரு செயலாக இருக்கக் கூடும். போர் அல்லது பாதுகாப்புத் தேவைகள் இல்லாத சமயங்களில், தேவைப்பட்டால் அயல்நாட்டு முதலீட்டிலிருந்து நிதிகளைப் பெறுகிற ஏற்றுமதி உபரியின் தூண்டுதல் இல்லாமல், வேலையின் அளவை நிலை நாட்டமுடியும் என்று கருதுவதற்குரிய காலம் இன்னும் வரவில்லை.

வேலையின் அளவை நிலைநாட்டுவதற்கு அயல்நாட்டு முதலீடு சிறந்த கருவியாக இருக்கிறது என்பது உண்மையே. ஆனால் இந்த உண்மையை ஏற்றுக்கொண்டவுடன், மற்றொரு சிக்கல் நம்மால் தீர்க்கப்படவேண்டியிருக்கிறது. அயல்நாட்டு முதலீடானது, அதனைச் செய்யும் நாட்டின் வாணிப நடவடிக்கை, வேலையின் அளவு ஆகியவற்றிற்கு நலன் பயக்குமானால், விரைவிலோ பின்னரோ, முதலீட்டைப் பெறும் நாட்டிலிருந்து முதலீட்டைச் செய்யும் நாட்டிற்கு வரும் என்று எதிர்பார்க்கப்படுகிற வருமானம் - அசல் தொகைச் செலுத்தல் (Amortization) ஆகியவற்றால், முதலீட்டைச் செய்யும் நாட்டின் வேலையின் அளவுக்குத் தீமை விளைவது இயல்பு. ஒரு பொருளியல் தூண்டுகோலாகப் (An economic stimulant) பயன்படுத்தப்படாத நிலையில் அயல்நாட்டு முதலீடு செய்யப்படும் போதுகூட, இந்தச் சிக்கல் இதே அளவுக்கு ஏற்படக்கூடும் என்பது உண்மைதான்.

சென்ற ஆறு அல்லது ஏழு ஆண்டுகளாக, அமெரிக்கப் பொருளியல் அறிஞர்கள் பலர், தனியாரின் அயல்நாட்டு முதலீட்டிலிருந்து எழுகிற மூலதனத்தின் திரும்புகை (The return flow) பற்றிய சிக்கலை ஆராயத் தொடங்கியுள்ளார்கள். அவர்களுடைய தலையாய கவலை, அமெரிக்கர்கள் பிற நாடுகளில் முதலீடு செய்தால், அந்த முதலீட்டைப் பெறுகிற நாட்டினர் அதனைத் திருப்பிச் செலுத்தாவிட்டால் என்ன செய்வது என்பது அன்று. அவர்கள் அப்படிச் செலுத்தும்போது, வட்டி, ஆதாய ஈவுகள், அசல் கடன் தீர்வு (Amortization) ஆகியவற்றின் செலுத்தலுக்குத் தேவைப்படும் இறக்குமதி உபரியின் (Import surplus) விளைவாக மந்த விளைவுகள் (Depressive effects) ஏற்பட்டு, அமெரிக்கப் பொருளியல் அல்லல் உறக்கூடும் என்பதே அமெரிக்கப் பொருளியல் அறிஞர்களின் கவலையாகும். நார்மன் எஸ். புகானன் (Norman S. Buchanan), அவருடைய புகழ்மிக்க நூலில், ‘ஐக்கிய அமெரிக்க நாடானது, எப்படி, எத்தகைய தன்மறுப்போடு, செலுத்தலை (Payment) ஏற்கமுடியும்?’ என்னும் கேள்வியை எழுப்பியுள்ளார்.[12] ஹால் பி. லாரி (Hal B. Lary), அயல்நாட்டு முதலீட்டின் உள்நாட்டு விளைவுகளைப் பற்றிய அன்னாரின் ஆராய்ச்சிக் கட்டுரையில், மூலதனம் திரும்பி வரும்போது அதற்கு ஏற்றவகையில் அமெரிக்கப் பொருளியலில் செய்யப்படவேண்டிய சரிக்கட்டல்தான், “பிற நாடுகளில் செய்யப்படுகிற அமெரிக்க முதலீட்டின் தொடர்பாக மிகுந்த கவலையளிக்கும் சிக்கலாக இருக்கலாம்” என்று தெரிவித்துள்ளார்.[13] எவ்சே டி. டொமார் (Evsey D. Domar), அயல்நாட்டு முதலீட்டால் அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் ஏற்படும் விளைவைப் பற்றிய தம்முடைய அண்மைக்காலப் பகுத்தாய்வில், “அயல்நாட்டு முதலீட்டுத் திட்டத்தின் வெற்றிக்குத் தலையாய தடையாக இருப்பது, இறக்குமதி ஒத்தநிலை (Import balance) தேவைப்படும் நிலையே என்பது பலரின் கருத்து” என்று குறிப்பிட்டுள்ளார்.[14] இவர்களும் ஏனைய பொருளியல் எழுத்தாளர்களும், இறக்குமதி உபரியையே (Import surplus), அமெரிக்க அயல்நாட்டு முதலீட்டின் இறுதி விளைவாகவும், நீண்ட காலத்திற்கு முன்னதாகவே ஏற்படக்கூடிய விளைவாகவும் கருதுகிறார்கள். திரும்பிவரும் செலுத்தல்களை (Return payments) அமெரிக்க நாடு தேவையில்லை என்று தெரிவித்துவிடுமானால், இந்த இறக்குமதி உபரியை எளிதில் தவிர்த்துவிடலாம். இந்தக் கருத்தாய்வின் விளைவாக, ஒரு வழி மாற்றலாக (Unilateral transfer) அமைந்த மூலதன ஏற்றுமதி தான் சிறந்த ஏற்பாடு என்று முதலில் தோன்றக்கூடும், ஆனால் தனியாரின் மூலதன ஏற்றுமதியைப் பொறுத்தவரை இது நடைமுறைக்கு ஏற்ற ஓர் ஏற்பாடு அன்று.

டொமாரின் (Domar) கருத்தாய்வானது, இறக்குமதி உபரி ஏற்படக்கூடும் என்று கருதுபவர்களின் அச்சத்தைத் தணிப் பதாக அமைந்துள்ளது. அயல்நாட்டு முதலீட்டுக் கணக்கில், ஓர் ஆண்டில், நாட்டைவிட்டு வெளியே செல்கிற தொகையில் (அயல்நாட்டுக்குச் செல்லும் நிகரக் கடன்) நாட்டுக்கு உள்ளே வருகிற தொகையின் (அசல் மறு செலுத்தலும் வருமானச் செலுத்தலும்) விகிதம், $\frac{a + i}{a + g}$ என்னும் வாய்பாட்டின் முடிவுக் குள் இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார். இந்த வாய்பாட்டில், a என்பது அசல் மறு செலுத்தலின் விகிதத்தை யும், (Rate of amortization) i என்பது அயல்நாட்டுக் கடன்களுக் கான வட்டி விகிதத்தையும், g என்பது ஆண்டுதோறும் அயல் நாட்டுக்குத் தருகிற புதிய கடன் தொகையில் ஆண்டுக்கு ஆண்டு ஏற்படுகிற வளர்ச்சியின் சதவீதத்தையும் குறிப்பிடுகின்றன. இந்த வாய்பாடானது எவ்வாறு உருவாக்கப்பட்டது என்பதை இங்குத் தெரிவிக்கவேண்டிய தேவை இல்லை. வளர்ச்சி விகித மானது (Rate of growth) வட்டி விகிதத்தை விடக் (Rate of interest) கூடுதலாக இருக்கும் வரை மேற்படி வாய்பாடானது ஒன்று என்னும் எண்ணைவிடக் குறைந்த முடிவை அடையும் என் பதும், அத்தகைய நிலையில் இறக்குமதி உபரி ஏற்படாது என்பதுமே, இந்த வாய்பாட்டிலிருந்து தெளிவாகத் தெரியும் முடிவுகளாகும். எடுத்துக் காட்டாக, அமெரிக்க நாடானது அதன் நாட்டு வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட சத வீதத்தை - 2 சதவீதம் என்று வைத்துக்கொள்வோம் - ஆண்டுதோறும் அயல் நாட்டு முதலீட்டுக்காக ஒதுக்கி வைக்கிறது என்றும், அந்நாட்டின் ஆண்டு வருமானம் ஆண்டுதோறும் 3 சதவீதம் உயர்கிறது என்றும் வைத்துக் கொண்டால், அத்தகைய நிலையில், இந்த அயல்நாட்டு முதலீட்டிற்கான வட்டி விகிதம் 3 சதவிகிதத்தை விடக் குறைவாக இருக்கும் வரையில் இறக்குமதி உபரி ஏற்படாது. டொமார் பின்வருமாறு தெரிவித்துள்ளார்:— ''தேவைப்படும் வளர்ச்சி விகிதத்தைப் பொறுத்தவரை, தனி யாரின் அல்லது அரசினரின் உள்நாட்டு முதலீட்டால் ஏற்படுகிற சிக்கல்களிலிருந்து அடிப்படையில் மாறுபடுகிற எத்தகைய சிக்கல் களும் அயல்நாட்டு முதலீட்டால் ஏற்படுவதில்லை. இம் முதலீடுகள் யாவற்றிலும், முதலீட்டின் தராதர அளவு, அதன் உற்பத்தித் திறன் அல்லது விளைவு (Productivity or yield) ஆகியவை பற்றிய சில நிலைமைகள் அமைந்திருப்பதன் பயனாக, ஒரு கூட்டு வட்டித் தீர்வு (A compound interest solution) ஏற்படுகிறது. அவை யாவற்றிலும், இருப்பனவாகக் கற்பனை செய்யப்பட்டுள்ள நிலைமைகள் மாறினாலொழிய, அமைந்துள்ள தன்னளவு அளவுகள்

(Absolute magnitudes), காலம் செல்லச் செல்ல, விசித்திரமான அளவுக்குப் பெருகத்தான் செய்யும்.''[15]

முந்திய பொருளியல் எழுத்தாளர்கள், இறக்குமதி உபரி ஏற்படுவதைத் தடுக்க வேண்டுமானால், அயல்நாட்டுக்குக் கடன் அளிக்கும் விகிதத்தை எதிர்காலத்தில் மாபெரும் அளவுக்கு உயர்த்தியாக வேண்டும் என்கிற சோர்வுமிக்க முடிவுக்கு வந்துள்ளார்கள். ஆனால் டொமார் அவர்களோ, புதிய கடனின் விகிதமானது அமெரிக்க நாட்டு வருமான உயர்வின் விகிதத்தைவிடக் குறைவாக இருக்கும் வரையிலும், கடன்களிலிருந்து கிடைக்கிற சராசரி விளைவு விகிதம் (Average rate of return), ஆண்டுக்கு ஆண்டு ஏற்படுகிற இந்த வருமான உயர்வு விகிதத்தைவிடக் குறைவாக இருக்கும் வரையிலும், எல்லாம் நல்லபடி நடைபெறும் என்றும், இறக்குமதி உபரி ஏற்படாது என்றும் விளக்கிக் காட்டிய தன் வாயிலாக நமக்கு நன்னம்பிக்கையை அளித்துள்ளார்.

இறக்குமதி உபரியின் விளைவாகப் பொருளியலில் மந்தநிலை ஏற்படுவதால் அதனை எப்பாடு பட்டாவது தடுத்தாக வேண்டும் என்று பொதுவாகக் காணப்படுகிற கருத்தை வாதத்திற்காக ஏற்றுக் கொண்டால்தான், மேலே குறிப்பிட்டபடியெல்லாம் நாம் விளக்கம் அளிக்க வேண்டிவரும். ஆனால் இறக்குமதி உபரியின் விளைவாக ஏற்படக் கூடிய மந்தப் போக்கு எதனையும், பொருத்தமான உள்நாட்டு நிதிக் கொள்கை, பணக் கொள்கை ஆகியவற்றைக் கையாள்வதன் மூலமாக அகற்ற முடியும் என்னும் உண்மை, சொல்லாமலே விளங்கும் அன்றோ?

டொமாருடைய கொள்கை வழி வாய்பாடானது (Theoretical formula) மூலதனத்தின் திரும்புகை பற்றிய சிக்கலைத் தெளிவாக விளக்குகிறது என்பதில் ஐயமில்லை என்றபோதிலும், அது, வருமானச் செலுத்தல்களையும் மூலதனச் செலுத்தல்களையும் ஒன்றாக இணைத்து விடுகிறது. ஆனால் நடைமுறையில், மக்கள், மூலதனக் கணக்கில் கிடைக்கிற வரவுகளையும் (Receipts on capital account) வருமானக் கணக்கில் கிடைக்கிற வரவுகளையும் (Receipts on income account) தனித்தனியாகப் பிரித்துக் காண்பது இயல்பு. மூலதன மறு செலுத்தலைப் பெறுகிற ஒருவர் அதன் ஒரு பகுதியைக் கூடச் செலவு செய்கிற உரிமை தமக்கு இருப்பதாகக் கருதமாட்டார். ஆனால் ஆதாய ஈவு அல்லது வட்டியைப் பெறுகிற ஒருவர் அத் தொகை முழுவதையும் செலவு செய்கிற விருப்பம் உடையவராக இருப்பார். ஆகவே, மூலதனத் திரும்புகைச் சிக்கலின் இந்த இரு பகுதிகளையும் தனித்தனியாகப் பிரித்து ஆய்வதையே நான் விரும்புகிறேன்.

மூலதனக் கணக்கைப் பொறுத்தவரை, கடன் தரும் நாடும் கடன் பெறும் நாடும், பொருளியல் வளர்ச்சியின் தராதர அளவீட்டில் உள்ள தங்களுடைய இடங்களை (நிலைமைகளை) ஒன்றிற்கு மற்றொன்றாக மாற்றிக் கொள்கிறவரை, நிகர மறு செலுத்தல் (Net repayment) நடைபெறத் தேவையில்லை என்றும், அது நடைபெறும் என்று எதிர்பார்த்தல் ஆகாது என்றும் வாதாடுவோரின் கூற்றை நான் ஏற்றுக் கொள்கிறேன். தனிப்பட்ட கடன்கள் திருப்பிச் செலுத்தப்படலாம்; ஆனால் அவை தீர்க்கப்படும்போதே புதிய கடன்கள் வழங்கப்படும். அயல்நாட்டு முதலீட்டிலிருந்து நல்ல வருமானம் கிடைக்கிற வரையில், கடன் தரும் நாடானது, நிகர மறு செலுத்தலை (Net repayment) விரும்பவும் கூடாது தேவையென்று கேட்டலும் ஆகாது. அரசாங்கத்தின் உள்நாட்டுக் கடனின் நிகர மறு செலுத்தலானது, குறிப்பிட்ட ஒரு கடன் பத்திரத்தின் நிபந்தனைகளைப் பொறுத்ததாக இல்லாமல், நாட்டுப் பொருளியல் முழுவதன் நிலைமையைப் பொறுத்ததாக இருக்க வேண்டும். அதுபோலவே, வெளிநாடுகளில் முதலீடு செய்யப்பட்ட தொகையின் திரும்புகை, முதலீடு செய்த நாடு - முதலீடு செய்யப்பட்ட நாடு ஆகியவற்றின் நிலைமைகளில் ஏற்படுகிற மாறுதலைப் பொறுத்திருக்கிறது. இந்த இரு நாட்டுப் பொருளியல்களின் அடிப்படை நிலைமைகள் ஒன்றிற்கு மற்றொன்றாக மாறி, அப்படி மாறியதன் விளைவாகக் கடன் தரும் நாட்டில், உள்நாட்டு முதலீட்டுத் தேவைகளைவிடச் சேமிப்பு நாட்டம் குறைவடைந்து, கடன் பெறும் நாட்டில் அதற்கு நேர்மாறான நிலைமை உருவானாலொழிய, பொருளியல் கண்ணோட்டத்தில், அயல் நாட்டுக் கடன்களின் நிகர மறு செலுத்தல் நடைபெறாது என்பது தெளிவு. மூலதனத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தை உச்ச நிலைப்படுத்தும் நோக்கத்தால் தூண்டப்பட்டு, மூலதனத்தின் நிகரத் திரும்புகை (A net return flow of capital) ஏற்படுவதற்கு முன், குறைந்தது, அயல் நாட்டு முதலீட்டைச் செய்யத் தூண்டிய இரு நாடுகளின் வட்டி விகிதங்களில் உள்ள வேறுபாடாவது, முன்னர் எந்த நாட்டிற்கு ஆதரவாக இருந்ததோ அந்த நாட்டிற்கு எதிராக மாறியாக வேண்டும். இத்தகைய மாறுதல்கள் மெதுவாகத்தான் நடைபெற முடியும். 1939 - 45ஆம் ஆண்டுகளில் இருந்ததைப் போல், போரின் விளைவாக வழக்கத்திற்கு மாறான சூழ்நிலைகள் ஏற்படுகிற சமயங்கள் தவிர்த்த பிற காலங்களில், திடீரென்று ஏராளமான அளவில் மூலதனத்தைத் திருப்பிச் செலுத்த முடியாது. 1939 - 45ஆம் ஆண்டுகளில், பிரிட்டனின் கடனாளிகள் பிரிட்டனுக்குத் தரவேண்டிய கடனைத் திருப்பித் தந்தபோது மாற்றல் சிக்கல்கள் எவற்றிற்கும் அவர்கள் ஆளாகவில்லை என்னும் உண்மை குறிப்பிடத் தக்கது.

எத்தகைய சட்டமுறைகளில் மூலதன இயக்கங்கள் நடைபெற முடியுமோ அத்தகைய முறைகளால் இத் துறையில் ஓரளவு தொல்லை ஏற்படக்கூடும். மூலதனத்தை ஏற்றுமதி செய்கிற ஒரு நாடு, புதிய கடன்களை அளித்தாகவேண்டும் என்கிற சட்ட வழிப்பட்ட கடமை எதுவும் இல்லை. அது புதிய கடன்கள் அளிப்பதை நிறுத்தி விடக்கூடும். அப்படி நிறுத்திவிடுவது, பழைய கடன்களின் அசலைத் திருப்பிச் செலுத்துவதுபற்றிய (Amortization) சட்ட வழிப்பட்ட நிபந்தனைகள் ஆகிய இரண்டுமாகச் சேர்ந்து, கடன் தரும் நாட்டிலிருந்து கடன் பெறும் நாட்டுக்கு மூலதன இயக்கம் நடைபெறுவதை நிறுத்திவிடக்கூடும் என்பது மட்டுமல்ல ; பிந்திய நாட்டிலிருந்து முந்திய நாட்டுக்கு மூலதன இயக்கம் நிகழுமாறும் செய்துவிடக் கூடும். இத்தகைய இயக்கம், இந்த இரு நாடுகளின் அடிப்படைப் பொருளியல் நிலைமைகளில் ஏற்படும் எந்த மாறுதலோடும் சிறிதும் தொடர்பற்றதாக இருக்கலாம். கேட்கும் போது அல்லது குறுகிய கால முன்னறிவிப்பில் (On demand or at short notice) திருப்பிப் பெறக் கூடிய குறுகிய காலக் கடன்களைப் பொறுத்தவரை நிலைமை இன்னமும் மோசமானதாக இருக்கிறது. அத்தகைய நிதிகளைப் பொருளியல் வளர்ச்சிக்காகப் பயன்படுத்தவே முடியாது. மழை இல்லாமல் இருக்கும்வரை ஒரு குடையை இரவலாகப் பெற்றுப் பயன்படுத்த ஒருவரை அநுமதித்துவிட்டு, மழை பெய்யத் தொடங்கியவுடனே குடையைத் திருப்பித் தந்துவிடவேண்டும் என்று சொல்லப்பட்டால், அத்தகைய நிலையில், அந்தக் குடையால் அவருக்கு என்ன பயன் இருக்க முடியும்? அயல்நாட்டுக் கடன் உதவி அத்தகைய ஒரு குடை போன்றதே என்று நையாண்டி செய்யும் போக்கு, இருபது ஆண்டுகளுக்கு முன்னர் ஏற்பட்ட பன்னாட்டு நிதி நெருக்கடியின் போது, சில நாடுகளில் பரவலாகக் காணப்பட்டது.

வட்டி, ஆதாய ஈவு ஆகிய வருமானங்களின் வருகையைப் பொறுத்தவரை, நம்மால் கவனிக்கப்படவேண்டிய முதல் செய்தி, கடன் அளிக்கும் நாட்டின் பொருளியல் இந்த வரவுகளின் பயனாகத் திட்டவட்டமான ஒரு வருமான விளைவு (Income effect) ஏற்படும் என்பதே. அப்படி ஏற்படும் என்னும் உண்மை, நம்மால் புறக்கணிக்கத்தக்கது அன்று. பெருக்கும் எண் கோட்பாடானது (Multiplier theory) பண்டங்களின் வாணிபத்தை எந்த அளவு பாதிக்கிறதோ, அதே அளவு, அயல் நாட்டுச் செலுத்தல் நிலையின் நடப்புக் கணக்கில் உள்ள புலனாகா இனங்களையும் (Invisible items in the current account of the balance of payments) பாதிக்கிறது என்பதே உண்மை. பெருக்கும் எண் கோட்பாட்டை விளக்குவதற்காகத் தரப்படும் எடுத்துக்காட்டுகள், பெரும்

பாலும் மண்டலங்களின் ஏற்றுமதி வரவுகளிலிருந்தே தரப்படுகின்றன என்ற போதிலும், அந்தக் கோட்பாடானது எந்த அளவுக்கு இத்தகைய வரவுகளுக்குப் பொருந்துமோ அதே அளவுக்கு வட்டி வரவுகளுக்கும் (Interest receipts) பொருந்தும். ஏனென்றால், வட்டி வரவுகளும், ஒரு நாட்டில் உள்ள மக்கள் பெறுகிற ஒரு நடப்புச் செலுத்தல்தான் (A current payment) ; அதையும் அவர்கள் செலவிடுவார்கள்; அந்தச் செலவின் விளைவாகவும் அந்தச் செலவைவிடக் கூடுதலான அளவுக்கு, மொத்தப் பண வருமானத்தில் ஓர் உயர்வு ஏற்படும். பண்டங்களின் இறக்குமதி உபரி ஏற்படுகிற அதே நேரத்தில், வட்டி வரவுகள் முதலிய புலனாகா உடன்பாட்டு இனம் ஒன்றில் (An invisible positive item) உயர்வு ஏற்படுமானால், அந்த இறக்குமதி உபரியால் மந்த நிலை ஏற்பட வேண்டிய தேவை இல்லை. அதற்கு மாறாக, வட்டி வரவுகளின் பயனாக, மொத்தப் பண வருமானத்தில் ஒரு பெருக்க விளைவு (An expansive effect) ஏற்பட்டு, அந்த விளைவின் பயனாக, இறக்குமதிகளில் சிறிதும் 'துன்பமற்ற' ஓர் உயர்வு ஏற்படும். ஆனால், ஏற்படக்கூடிய சிக்கல் என்னவென்றால், வட்டியைப் பெறுகின்றவர்களின் சேமிப்பு நாட்டம், பொருளியலின் பிற பகுதிகளில் ஏற்படக்கூடிய சேமிப்பு ஒழுக்கல் (Saving leakage) ஆகியவற்றின் விளைவாக, மேற்படிப் பெருக்க விளைவால், கிடைக்கிற வட்டி வரவுகளுக்கு ஈடான அளவு இறக்குமதி உயர்வை ஏற்படுத்த முடியாமல் இருக்கும் என்பதே. அப்படி இருப்பதால் ஏற்படக்கூடிய வாணிபச் சரிக்கட்டால் (Trade adjustment), கடன் வழங்கும் நாட்டுக்குத் துன்பம் தரக்கூடியதாக இருக்கக்கூடும். இச் சூழ்நிலையில், கடன் பெறும் நாடு, தன் நாணயத்தின் அயல்நாட்டு மாற்றுவிகிதத்தைக் குறைத்தல், அல்லது வாணிபக் கட்டுப்பாடுகளை விதித்தல் என்னும் முறையைக் கையாள நேரலாம். அப்படிக் கையாள்வதன் பயனாக, கடன் வழங்கும் நாட்டில் ஒரு மந்த விளைவு (A depressive effect) ஏற்படக்கூடும். ஆனால் அப்படி ஏற்படக்கூடிய மந்த விளைவானது, வட்டி வரவுகளால் நேரடியாக ஏற்படுகிற பெருக்க விளைவை விடக் கூடுதலாக இருக்குமா என்பதைத் திட்டவட்டமாகக் கூற முடியாது.[18] ஒரு நிகர மந்த விளைவு ஏற்படுவதாக வைத்துக் கொண்டாலும், நாம் முன்னரே சுட்டிக்காட்டியிருப்பதைப் போல், கடன் வழங்கும் நாட்டில் ஈடுசெய் உள்நாட்டுக் கைக் கோள்களைக் (Compensatory domestic policies) கையாள்வதன் வாயிலாக அதனை அகற்றிவிட முடியும்.

மூலதனத் திரும்புகையின் பயனாகக் கடன் வழங்கும் நாட்டில் ஏற்படக்கூடிய வருமான விளைவுகளைப்பற்றி இது வரையிற் கருத்

தாய்வு செய்தோம். கடன்பெறும் நாட்டின் கண்ணேட்டத்திலிருந்து பார்த்தால், வட்டிச் செலுத்தலில், இரண்டு சிக்கல்கள் அடங்கியுள்ளன என்பது தெளிவாகும். வரவு செலவுத் திட்டச் சிக்கல் அல்லது தண்டல் சிக்கல் (Budgetary or collection problem) என்பது ஒன்று. மாற்றல் சிக்கல் (Transfer problem) என்பது, மற்ருென்று. இந்த இரு சிக்கல்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு, 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் நடைபெற்ற ஜெர்மானிய இழப்பீட்டு வாக்குவாதத்தின்போது (German reparations controversy) நன்கு அறிமுகமாயிற்று. இந்த வேறுபாடு, நம் தற்போதைய கருத்தாய்வுக்கு முற்றிலும் பொருந்தும். கடன் பெறும் நாட்டில் எழுகிற தண்டல் பற்றிய வரவு செலவுத் திட்டச் சிக்கல் முதலில் தீர்க்கப்பட்டபின்னரே மாற்றல் சிக்கலைத் தீர்க்க முடியும். தற்போதைய கருத்தாய்வில் வரவு செலவுத் திட்டச் சிக்கல் என்பது, முதலீடு செய்யப்பட்டுள்ள நாட்டில், உள்நாட்டு நாணயக் கணக்கில் வருமானத்தைப் பெறுவதாகும். அப்படிப் பெறமுடியுமா என்பது, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ, முதலீட்டின் உற்பத்தித் திறனைப் பொறுத்திருக்கிறது. அந்த வருமானம் நேரடியாக வாணிபத் துறையிலிருந்து வந்தாக வேண்டும் என்கிற தேவை இல்லை. வரிதாங்கு வல்லமையில் (Taxable capacity) ஏற்படும் உயர்வின் வடிவத்திலும் அந்த வருமானம் உருவாகலாம். எது எப்படி இருந்தாலும் மாற்றலானது வெற்றிமிக்க முறையில் நடந்து முடிய வேண்டுமானுல், இரண்டு நிபந்தனைகள் நிறைவு செய்யப்பட வேண்டும். அயல் நாட்டிலிருந்து கடனைப்பெறுகிற நாடு, அக் கடனை உற்பத்தியைப் பெருக்கும் பணிகளில் ஈடுபடுத்தவேண்டும் என்பதும், அதன் விளைவாக நாட்டின் வருமானம் உயர்ந்து, வட்டியைச் செலுத்துவதற்குத் தேவையான ஆதாயம் உள்நாட்டு நாணய வடிவில் உருவாக வேண்டும் என்பதும், முதல் நிபந்தனையாகும்,

இரண்டாவது நிபந்தனை, அயல்நாட்டுக் கடனைத் தீர்ப்பதற்குரிய அயல்நாட்டு நாணயத்தை அளிக்கவல்ல ஏற்றுமதி உபரி ஏற்பட வேண்டும் என்பதாகும். ஆனுல் அப்படி ஏற்படுவது, கடன் பெறும் நாட்டைமட்டுமன்று, கடன் அளிக்கும் நாட்டையும் பொறுத்த ஒரு நிலைமையாகும். கடன் அளிக்கும் நாட்டைப் பொறுத்தவரை, கடந்த காலத்தில், தாராளமான ஒரு வாணிபக் கைக்கோள் (Liberal commercial policy) கையாளப்பட வேண்டும் என்பது வற்புறுத்தப்பட்டு வந்தது. ஆனுல், அண்மைக் காலமாக, அத்தகைய நாடானது, தன் வாணிப நடவடிக்கையைப் பெருக்கிக்கொள்ளவேண்டும் என்பதும், மூலதனத் திரும்புகையின் பயனுக ஏற்படக்கூடிய மந்த விளைவை உள்நாட்டுப் பெருக்க

நடவடிக்கைகள் (Domestic measures of expansion) வாயிலாக அகற்றவேண்டும் என்பதும் மிக அழுத்தமான முறையில் வற்புறுத்திக் கூறப்படுகின்றன.

கடன் பெறும் நாட்டைப் பொறுத்த வரை, அயல்நாட்டுக் கடனின் வாயிலாக நிறைவேற்றுப்படுகிற ஒரு திட்டமானது, அந் நாட்டின் ஏற்றுமதித் திறனை அல்லது இறக்குமதிகட்குப் பதிலாகப் பயன்படுத்தப்படக் கூடிய பொருள்களின் உற்பத்தியை வட்டி செலுத்தலுக்கு ஈடான அளவு பெருக்குவதன் வாயிலாக அயல்நாட்டுச் செலுத்தல் நிலைக்கு நேர்முகமான முறையில் தன் உதவியைச் செய்தாக வேண்டும் என்பது அவசியமில்லை என்று நான் கருதுகிறேன். ஒரு புறத்தில், அயல்நாட்டு முதலீடு எந்தெந்தக் குறிப்பிட்ட திட்டங்களில் செய்யப்பட வேண்டும் என்பது, இயற்கையாகவே மூலதனத்தின் இறுதி நிலை உற்பத்தித் திறனைப் பொறுத்திருக்கிறது. இல்லறத்தை இனிது நடத்துவதற்கு உரிய அடிப்படை விதிகளின்படிப் பார்த்தால், ஒரு நாட்டிற்குக் கூடுதல் மூலதனம் கிடைக்கும்போது, மிக உயர்ந்த ஆதாயத்தை அளிக்கவல்ல தொழில்களில் அதனை முதலீடு செய்யத்தான் அந் நாடு விரும்பும்; அல்லது விரும்பும்படிச் செய்யப்பட வேண்டும். ஆதாயத்தைப்பற்றிக் கணக்கிடும்போது, குறிப்பிட்ட தொழில்களின் நேர்முக வாணிப ஆதாயத்தை மட்டுமல்லாமல் அத் தொழில்களின் விளைவாக ஏற்படக் கூடிய புறச் சிக்கன நலன்களையும் சேர்த்துப் பார்க்கவேண்டும். மற்றொரு புறத்தில், எந்தப் பண்டங்களின் வாயிலாக வட்டியை அயல்நாட்டிற்கு மாற்றமுடியும் என்பது, பன்னாட்டு வாணிபத்தைச் சேர்ந்த தராதரச் செலவுகளைப் (Comparative costs) பொறுத்திருக்கிறது. (இந்தச் செலவுகள் நிலையானவை அல்ல, முதலீட்டின் விளைவாகக் கூட இவை மாறக்கூடும்.) மூலதன இறுதிநிலை உற்பத்தித் திறன் பட்டியலுக்கும் (Marginal productivity of capital schedule) தராதரச் செலவுப் பட்டியலுக்கும் இடையே எந்த ஒரு குறிப்பிட்ட உறவு முறையும் இருந்தாக வேண்டும் என்கிற தேவை இல்லை. மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு நிபந்தனைகளும் நிறைவு செய்யப்பட்டால், கடன்பெறும் நாடு, கடனைத் திருப்பிச் செலுத்துவதில் எத்தகைய உள்ளீடான இடர்ப்பாடும் இருக்க முடியாது.

இந்தக் கருத்தைத்தான், நான், ஐந்து ஆண்டுகளுக்கு முன், மூலதனத்தின் திரும்புகை எத்தகைய இடர்ப்பாடும் இன்றி நடைபெற வேண்டுமானால், கடன் பெறும் நாட்டின் எதிர்கால அயல் நாட்டுச் செலுத்தல் நிலைக்கு, அயல் நாட்டு முதலீடானது நேர்

முக உதவி செய்யவேண்டுமா, செய்யத் தேவையில்லையா என்னும் கேள்விக்கு விடையாகத் தந்தேன்.[17] அயல்நாட்டு முதலீடானது அத்தகைய நேர்முக உதவியைச் செய்தாலொழிய அதனுல் இடர்ப்பாடே ஏற்படும் என்னும் கோட்பாடானது அந்தச் சமயத்தில் புதிய ஆதரவாளர்களைப் பெற்றிருந்தது. ஆனுல் அதற்கு முன்னரேகூட அக் கோட்பாட்டுக்குப் பல ஆதரவாளர்கள் இருந்தார்கள். எடுத்துக்கட்டாக, அதிகார பூர்வமான பிரிட்டிஷ் அறிக்கை ஒன்று 1937ல் பின்வரும் கருத்தை அழுத்தந்திருத்தமான முறையில் எடுத்துக் கூறியிருக்கிறது:—''ஒரு நாட்டின் மூலதன வளர்ச்சியின் பயனுக அதன் அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் எதிர்காலத்தில் முன்னேற்றம் ஏற்படும் என்கிற நிலைமை இருந்தால்தான் அம் மூலதன வளர்ச்சிக்காக அந்நாடு பிறநாடுகளிலிருந்து கடன்பெறலாம் என்பது, பன்னுட்டு நிதித்துறைபற்றிய ஓர் அடிப்படையான - அழுத்தந்திருத்தமான கோட்பாடாகும்.''[18] இக் கருத்து அடிப்படைப் பொருளியற் கோட்பாடுகளுக்குப் பொருத்தமான ஒன்று அன்று என்பதே, எப்போதும் என் கருத்தாக இருந்து வந்திருக்கிறது.

வருமானக் கண்ணேட்டத்தின் விளைவாகச் சிலரால் மிகத் திறமையான வாதம் ஒன்று எழுப்பப்படுகிறது. அயல்நாட்டு முதலீட்டின் நிதிகளைப் பெற்று ஒரு திட்டம் நிறைவேற்றப்பட்டதும் அத் திட்டத்தில் பணியாற்றும் உற்பத்திக் காரணிகளுக்குப் புதிய வருமானம் ஏற்படுவது உறுதி என்பதும், அத்தகைய வருமானத்தில் ஒரு பகுதி இறக்குமதிப்பொருள்களின்மீது செலவிடப்படும் என்பதுமே, அந்த வாதம். மேற்படி திட்டமே புதிய ஏற்றுமதிப் பொருள்களை அல்லது இறக்குமதிப் பொருள்களுக்கு மாறுகப் பயன்படுத்தப்படக்கூடிய பொருள்களை உற்பத்தி செய்தாலொழிய மேற்குறிப்பிடப்பட்டசெலவின் விளைவாக அயல்நாட்டுச் செலுத்தல் நிலை துன்பத்திற்கு உள்ளாகக்கூடும், சோர்வு மிக்க இக் கருத்தானது, சிக்கலின் ஒரு புறத்தை மட்டுமே ஆய்வதாக இருக்கிறது என்னும் உண்மையை ஆல்பர்ட் ஈ. கான் (Albert E. Kahn) என்பவரின் அண்மைக்காலக் கருத்தாய்வு ஒன்று[19] தெளிவுபடுத்தியிருக்கிறது. புதிய பண்டத்தை உள்நாட்டு அங்காடியில் வாங்கும் மக்கள், அந்தப் பண்டத்தைப் பணவீக்க ஊற்றுக்கால்களிலிருந்து வாங்காமல் தங்கள் வருமானத்திலிருந்து வாங்கும் வரை, இறக்குமதிப்பொருள்கள் உள்ளிட்ட பிற பொருள்களின்மீது அவர்கள் செலவிட்டுவந்த தொகையின் ஒரு பகுதியை அப் புதிய பண்டத்திற்காகத் திருப்பியாக வேண்டும். இந்த உண்மையே, சிக்கலின் மறுபுறம் ஆகும். ஆகவே, அயல்நாட்டு முதலீட்டின் துணைகொண்டு தொடங்கப்படும் தொழிலா

னது,முன்னர் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களுக்கு மாற்ருகப் பயன் படுத்தப்படக்கூடிய பொருள்களை உற்பத்தி செய்யாவிட்டாலும், உள்நாட்டு அங்காடியில் விற்கப்படக்கூடிய புதிய பொருள்களை உற்பத்தி செய்யுமாஞல், பணவீக்க நிதிகளிலிருந்து அப் பொருள்கள் வாங்கப்படாமல் இருக்கும் வரை, அயல்நாட்டுச் செலுத்தல் நிலையில் இடர்ப்பாடுகள் ஏற்படவேண்டிய தேவை இல்லை. உள்நாட்டு அங்காடிக்காகப் பொருள்களைக் கூடுதலாக உற்பத்தி செய்யும் தொழில்களிலிருந்து அயல்நாட்டு முதலீட்டை வேண்டுமென்றே விலக்கிவைப்பதற்கு எத்தகைய காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை.

கடந்த காலத்தில் அயல்நாட்டு வாணிப முதலீடானது, பொருளியலில் பின்தங்கிய நாடுகளின் உள்நாட்டு அங்காடிக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களிலிருந்து தாஞகவே விலகி இருந்திருக்கிறது. ஆஞல் எப்போதுமே அப்படி விலகி இருந்தது, - குறிப்பாக 1914ஆம் ஆண்டுக்கு முன்னர் - மாற்றல் இடர்ப்பாடுகள் (Transfer difficulties) பற்றிய அச்சத்தால்தான் என்று கூறமுடியாது. மூலப் பொருள்களையும் உணவுப் பொருள்களையும் மேலும் மேலும் பெறுவதற்காகத் துடித்துக்கொண்டிருக்கிற-நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்றுவருகிற தொழில்துறை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கான பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களோடு ஒப்பிடும்போது, வறுமைமிக்க உள்நாட்டு மக்களுக்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் முதலீடு செய்வதற்கான தூண்டுதல் குறைவாக இருந்ததுதான், அயல் நாட்டு முதலீடு அத்தகைய தொழில்களிலிருந்து விலகி இருந்ததற்கான தலையாய காரணமாகும். அப்படி இருந்தது, அயல்நாட்டு அங்காடித் தேவையின் (Market demand) செல்வாக்கு உட்பட்ட தனியாரின் ஆதாய நோக்கங்களுக்கு முற்றிலும் ஏற்புடைய ஒரு நிலையே ஆகும். இத்தகைய சூழ்நிலையில், குறைந்த வருமான நாடுகளில், மூலதனத்தின் தனியார் இறுதிநிலை உற்பத்தித்திறன் (Private marginal productivity of capital) உள்நாட்டு அங்காடிக்காக உற்பத்தி செய்யும் தொழில்களைவிட ஏற்றுமதிக்கான தொழில்களில் கூடுதலாக இருந்தது இயற்கையே. இப் பகுத்தாய்வானது, இந் நூலின் முதல் அத்தியாயத்தில் தெரிவிக்கப்பட்ட ஒரு கருத்துக்கு நம்மை மீண்டும் அழைத்துச் செல்கிறது. கடந்த காலத்திலும், நிகழ்காலத்திலும் தனியாரின் அயல்நாட்டு மூலதன இயக்கம் ஒரு குறிப்பிட்ட முறையில் நிகழ்ந்ததற்கான அடிப்படை விளக்கமாக-ஆஞல் ஓரளவோடு நின்றுவிடுகிற விளக்கமாக அக் கருத்து அமைந்துள்ளது.

ஆனுல் இக் கருத்து, தனிப்பட்ட தொழில் துணிவோரின் முதலீட்டுக்கு மட்டுமே சிறப்பாகப் பொருந்தும். ஒட்டு மொத்தப் பொது நிறுவனங்களை (Overhead public installations) அமைப்பதற்காகவும், உள்நாட்டுத் தேவைகளை நிறைவேற்றுவதற்கான பொறிவழித் தொழில்களையும், வேளாண்மை நடவடிக்கைகளையும் தொடங்குவதற்காகவும், வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொது அமைப்புகளால் பெறப்படுகிற அயல்நாட்டுக் கடன்கள் என்னும் வடிவத்தில் நடைபெறுகிற பன்னுட்டு மூலதன இயக்கங்களைப் பொறுத்தவரை, அங்காடி இடர்ப்பாட்டால் எத்தகைய இடையூறும் ஏற்படாது. தனியாரின் பன்னுட்டு முதலீடானது பல்கிப் பெருகிச் செழித்துநின்ற பத்தொன்பதாம் நூற்ருண்டுச் சூழ்நிலையிற்கூட-அந்தச் சூழ்நிலை, 1920ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளின் பிற்பகுதியில் அழிந்து விட்டது-இத்தகைய மூலதன இயக்கங்கள் உருவாகியிருக்கின்றன; சில சமயங்களில் இத்தகைய இயக்கங்கள் மாபெரும் விளைவுகளையும் ஏற்படுத்தியுள்ளன. உலகத்தின் வறுமைப் பகுதிகளில் முதலீடு செய்வதற்காகத் தனியாரின் வாணிப மூலதனம் முன்வருமானுல் அதனை நாம் மிக்க மகிழ்ச்சியோடு வரவேற்போம். ஆனுல், பின்னர் நமக்கு ஏமாற்ற உணர்ச்சி ஏற்படாமல் இருக்கவேண்டுமானுல், அந்தப் பகுதிகளில் உள்ள நுகர்வோரின் வறுமையானது, அத்தகைய முதலீட்டைத் தடுக்கும் முட்டுக்கட்டையாக இருக்கிறது என்னும் உண்மையை நாம் மறந்துவிடக்கூடாது. ஆனுல் இந்த முட்டுக்கட்டையானது, 'தன்னுரிமை' வகையைச் சேர்ந்த ('Autonomous' variety) முதலீட்டைத் தடுக்கமுடியாது. பொருளியல் வளர்ச்சிக்கான பன்னுட்டு முதலீடு மீண்டும் நடைபெறும் என்று நாம் நம்ப முடியுமானுல், அந்த நம்பிக்கை, பெரும்பாலும் இந்த வகையைச் சேர்ந்த முதலீட்டின் மீதுதான் அமைய முடியும் என்பது என் கருத்து.

## ஆரும் அத்தியாயத்திற்கான அடிக்குறிப்புகள்

1. ஜான் எச். வில்லியம்ஸ் (John H. Williams), 1929ல் அவர் எழுதிய புகழ்மிக்க கட்டுரையில் பின்வருமாறு தெரிவித்துள்ளார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது :— "தற்காலத்தில்கூட, பன்னுட்டு வாணிபக் கோட்பாடு பற்றிய பெரும்பாலான கருத்தாய்வுகளில், மூலதன இயக்கங்கள், அயல்நாட்டுச் செலுத்தல் நிலையோடு தொடர்புடையவை என்னும் வகையில் மட்டும்தான் ஆராயப்பட்டுள்ளன. வாணிபச் சரிக்கட்டல் அமைப்பில் (Trade adjustment mechanism) அந்த மூலதன இயக்கங்களின் நாணயப் பணிகள் (Currency functions) [வாங்கும் திறன்பற்றிய அல்லது தங்க இயக்கத்

திற்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் காரணிகள் பற்றிய பணிகள்] எவ்வாறு நடைபெறுகின்றன என்பதைப்பற்றியன வாகத்தான் அந்தக் கருத்தாய்வுகள் அமைந்துள்ளனவே தவிர; மூலதன இயக்கங்களை உற்பத்தி ஆற்றலின் மாற்றல் களாகக் (Transfers of productive power) கருதி ஆராயும் போக்கு அவற்றில் காணப்படவில்லை. உழைப்பாளர்களின் பன்னாட்டு இயக்கங்கள்பற்றிய கருத்தாய்வோ, நடை பெறவே இல்லை.'' [முன்னர்க் குறிப்பிடப்பட்ட "Readings in the Theory of International Trade" என்னும் நூலின் 255ஆம் பக்கத்தில் தொடங்குகிற ''பன்னாட்டு வாணிபக் கோட்பாடுபற்றிய மறு ஆய்வு" ("The Theory of International Trade Reconsidered.") என்னும் கட்டுரை.]

2. "Inter regional and International Trade" என்னும் நூல். (கேம்பிரிட்ஜ், 1933).

3. ''கடன் வழங்கும் நாடு கடனை அளிப்பதற்கு முன், அயல்நாட்டு வாணிபமானது அதன் இயற்கையான ஒத்தநிலையில் (Natural state of equilibrium) இருந்திருந்து, அந் நாடு இப்போது கடனைஅளிக்கவேண்டுமானால், அயல்நாடுகள் இந் நாட்டிட மிருந்து முன்பு பெற்றதைவிடக் கூடுதலான இதன் ஏற்று மதிகளை இப்போது பெறும்படிச் செய்யப்படவேண்டும். அவ் வாறு செய்யப்படவேண்டுமானால், அந்த ஏற்றுமதிப் பொருள்கள், முன்னிலும் குறைந்த விலைக்கு இப்போது விற்கப்படவேண்டும். வேறு சொற்களில் கூறுவதானால், அயல் நாட்டுப் பொருள்களுக்கு இந் நாடு இப்போது முன்னிலும் மிகுதியான விலையைத் தரவேண்டும்...........இதன் விளைவு யாதெனில், அயல்நாடுகட்குத் தொடர்ச்சியாகக் கடன் வழங்கும் நாடு, தான் வழங்குவதை இழந்து விடுவதோடு நில்லாமல், அதைவிடக் கூடுதலான இழப்புக்கும் உள்ளாகிறது. ஏனென்றால், அதன் பொருள்களை, அயல் நாட்டுப் பொருள்களுக்கு, முன்னிலும் குறைந்த அநுகூலம் படைத்த வாணிபமாற்று வீதங்களில்தான் அது மாற்றிக் கொள்ளவேண்டியிருக்கிறது.'' — ஜே. எஸ். மில், Principles of Political Economy என்னும் நூல், [ஆஷ்லி (Ashley) பதிப்பு, லண்டன், 1929], பக்கம் 627.

4. வியன்னாவில் 1935ல் வெளியிடப்பட்ட என் Internationale Kapital-bewegungen என்னும் நூலின் 3 ஆம் அத்தியா யத்தில் இதனை ஓரளவு விரிவாக எடுத்து விளக்கியுள்ளேன்.

5. மேற்குறிப்பிட்ட நூலின் முதலாவது, நான்காவது அத்தியாயங் களில், அதே வழியில் மேலும் சில கருத்தவாய்வுகளைச் செய்துள்ளேன்.

6. "Review of Economic Studies" என்னும் பத்திரிகையின் 1943 ஆம் ஆண்டு இதழில் வெளியாகியுள்ள ஜே. நாப் (J. Knapp) என்பாரின் "The Theory of International Capital Movements and its Verifications" என்னும் கட்டு ரையைக் காண்க. மூலதனத்தை ஏற்றுமதி செய்யும்

நாட்டின் கோணத்திலிருந்து பார்க்கும்போது, இத்தகைய நிலைமை ஏற்படக்கூடும் என்னும் உண்மையானது, 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளில், ஐக்கிய அமெரிக்க நாட்டின் ஏற்றுமதி உபரி, அயல்நாட்டுக் கடன் பத்திரங்களின் வெளியீடு ஆகியவற்றில் ஏற்பட்ட ஏற்ற இறக்கங்களிலிருந்து தெளிவாகிறது. இந்த இரு ஏற்ற இறக்கங்களும் அந்தக் காலத்தில் அந்த நாட்டில் நடைபெற்ற உள்நாட்டு வாணிப ஏற்ற இறக்கங்களோடு தொடர்பு உடையன. "Quarterly Journal of Economics" என்னும் பத்திரிகையின் 1943 மே திங்கள் இதழில் வெளியாகியுள்ள ஆர்தர் ஐ. ப்ளூம்ஃபீல்ட் (Arthur I. Bloomfield) என்பாரின் "The Mechanism of Adjustment of the American Balance of Payments" என்னும் கட்டுரையையும், பொருளியல் ஆராய்ச்சிக்கான தேசீயக் கழகத்தால் (National Bureau of Economic Research) நியூ யார்க்கிலிருந்து 1951ல் வெளியிடப்பட்ட இல்ஸ் மின்ட்ஸ் (Ilse Mintz) என்பாரின் "Deterioration in the Quality of Foreign Bonds Issued in the United States, 1920—1930" என்னும் நூலின் முதல் அத்தியாயத்தையும் காண்க.

7. ராய். எப். ஹெராட் (Roy F. Harrod) என்பாரின் "Towards a Dynamic Economics" என்னும் நூல் (லண்டன், 1949) பக்கங்கள் 101—115 ; எரிக் பிரீசர் (Erich Preiser) என்பாரின் "Kapitalexport und Vollbeschaftigung" என்னும் கட்டுரை (Economia Internazionale என்னும் பத்திரிகையின் 1950 மே இதழ்) ; பால் ஏ. சாமுவேல்சன் (Paul A. Samuelson) என்பாரின் "The Simple Mathematics of Income Determination" என்னும் கட்டுரை (ஆல்வின் எச். ஹான்சன் அவர்களைப் பாராட்டும் வகையில் நியூயார்க்கிலிருந்து 1948ல் வெளியிடப்பட்ட கட்டுரைத் தொகுதியாகிய Income, Employment and Public Policy என்னும் நூலில் இக் கட்டுரை உள்ளது) பக்கங்கள் 148—149 ஆகியவற்றைக் காண்க.

8. "Journal of Political Economy" என்னும் பத்திரிகையின் 1942 ஜூன் இதழில் வெளியாகி, "Readings in the Theory of International Trade" என்னும் நூலில் (பிலடெல்பியா, 1949) இணைக்கப்பட்டுள்ள "The Transfer Problem Reconsidered" என்னும் கட்டுரையைக் காண்க. இந்தக் கோட்பாட்டைப்பற்றிய ஓர் அருமையான கருத்தாய்வைக் காண வேண்டின், ராபர்டோ டி ஒலிவீரா காம்பாஸ் (Roberto de Oliveira Campos) என்பாரின் Lord Keynes e a Teoria de Transferencia de Capitais" என்னும் கட்டுரையைப் பார்க்க. "Revista Brasileira de Economia" என்னும் பத்திரிகையின் 1950 ஜூன் இதழில் இக் கட்டுரை வெளியாகியுள்ளது.

9. எடுத்துக்காட்டாக, "Journal of Political Economy" என்னும் பத்திரிகையின் 1947 அக்டோபர் இதழில் வெளியாகியுள்ள கென்னெத் கே. குரிஹாரா (Kenneth K. Kurihara) என்பாரின் "Foreign Investment and Full Employment"

என்னும் கட்டுரையையும், முன்னர்க் குறிப்பிடப்பட்ட எரிக் பிரீசர் என்பாரின் கட்டுரையையும் காண்க.

10. இந் நூலின் நான்காம் அத்தியாயத்தின் 'வாணிப மாற்று வீதத்தின் சிறப்பு' என்னும் பகுதியைக் காண்க.

11. முன்னர்க் குறிப்பிடப்பட்ட எரிக் பிரீசர் என்பாரின் கட்டுரையைக் காண்க. முற்றுரிமை அமைப்புகள் இல்லை என்ற போதிலும், சில பிரிட்டிஷ் கம்பெனிகள் சில சமயங்களில் முற்றுரிமை நிலைகளை அடைந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், ஆப்பிரிக்காவில், சிறப்புச் சலுகைகள் பெற்ற உரிமைப் பதிவுக் கம்பெனிகள் (chartered companies) என்னும் அமைப்புமுறை வியக்கத்தக்க முறையில் புத்தெழுச்சி பெற்றுள்ளது என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கது. முன்னர்க் குறிப்பிடப்பட்ட எஸ். எச். ஃபிராங்கெல் (S. H. Frankel) என்பாரின் நூல், 21ஐத் தொடர்ந்த பக்கங்கள்.]

12. "International Investment and Domestic Welfare" என்னும் நூல், (நியூ யார்க், 1945), பக்கம் 179.

13. "American Economic Review" என்னும் பத்திரிகையின் 1946 மே இதழில் வெளியாகியுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நடைமுறைகளும் (Papers and proceedings) என்னும் பகுதி, பக்கம் 678.

14. மேற்படிப் பத்திரிகையின் 1950 டிசம்பர் இதழ், பக்கம் 808.

15. மேற்படிப் பத்திரிகையின் மேற்படி இதழ், பக்கம் 807.

16. முன்னர்க் குறிப்பிடப்பட்ட பால் ஏ. சாமுவேல்சன் என்பாரின் "The Simple Mathematics of Income Determination" என்னும் நூல், பக்கம் 150.

17. பன்னாட்டு மன்றத்தால் (League of Nations) 1946ல் வெளியிடப்பட்ட "The Course and Control of Inflation" என்னும் நூலின் 82ஆம் பக்கத்தைக் காண்க.

18. முன்னர்க் குறிப்பிடப்பட்ட "The Problem of International Investment" என்னும் நூல், பக்கம் 67.

19. "Quarterly Journal of Economics" என்னும் பத்திரிகையின் 1951 பிப்ரவரி இதழில் வெளியாகியுள்ள "Investment Criteria in Development Programs" என்னும் கட்டுரையைக் காண்க.

# 7. உள்நாட்டு நடவடிக்கை

## அயல்நாட்டு ஊற்றுக்கால்களும் உள்நாட்டு ஊற்றுக்கால்களும்

'தன்னுரிமை படைத்த' பன்னாட்டு முதலீடு ('Autonomous' international investment) எந்த அளவு பயன்தரத்தக்கதாக இருக்கும் என்பது, உள்நாட்டு நடவடிக்கையைப் பொறுத்திருக்கிறது என்பதே, அம் முதலீட்டில் உள்ள சிக்கலாகும். தேவைப்படுகிற உள்நாட்டுக் கைக்கோள்கள் ஆற்றல்மிக்க முறையில் கையாளப்பட்டால் மட்டுமே, மேற்படி முதலீடு முழுவதும், நுகர்வுக்காகச் செலவிடப்படாமல், முதல் திரட்சியின் பெருக்கத்திற்காகப் பயன்படுத்தப்படும் என்கிற உறுதி ஏற்படும். 'குடியேற்ற' முறையின் ('Colonial' form) அமைந்த நேர்முக முதலீட்டைத் தவிர்த்த ஏனைய அயல்நாட்டு மூலதன ஊற்றுக் கால்கள் யாவற்றிலும் இந்த இடர்ப்பாடு பொருந்தியிருக்கிறது.

ஓர் அரசாங்கம் இன்னோர் அரசாங்கத்திற்குத் தருகிற உதவி மானியங்களைப் பொறுத்தவரை இந்த இடர்ப்பாடு அமைந்திருப்பது மிகத் தெளிவாகத் தெரிகிற ஓர் உண்மையாகும். சேமிப்பு, முதலீடு ஆகியவற்றிற்கான விரிவான உள்நாட்டுத் திட்டம் ஒன்றின் பகுதிகளாக அந்த மானியங்கள் இணைக்கப்பட்டாலொழிய, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ கூடுதல் நுகர்வுக்காக அவை மிக எளிதில் செலவிடப்பட்டுவிடும்.

தேவைப்பட்டால் நிதித்துறை மற்றும் பணத்துறைக் கைக்கோள்களின் வாயிலாகத் துணைசெய் இயல்புடைய உள்நாட்டுச் சேமிப்பு (Complementary domestic saving) உருவாக்கப்பட்டாலொழிய, நுகர்வுப் பொருள்களின்மீது விதிக்கப்படுகிற இறக்குமதிக் கட்டுப்பாடுகள், முதற் பொருள்களைப் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதன் வாயிலாக முதலாக்கத்திற்கு உரிய ஒரு

கருவியாகத் திகழமுடியாது என்னும் உண்மையை நாம் முன்னரே அறிந்துள்ளோம்.

அதுபோலவே, வாணிப மாற்று வீத முன்னேற்றத்தின் விளைவாக முதல் திரட்சியின் விகிதத்தில் உயர்வு ஏற்படவேண்டுமானல், உள்நாட்டு நடவடிக்கை எடுக்கப்படுவது இன்றியமையாதது என்னும் உண்மையையும் நாம் கண்டறிந்தோம். மேற்படி முன்னேற்றமானது, நாட்டின் பொருளியல் வளர்ச்சியைப் பெருக்குதற்குரிய புதிய சாதனங்களை நாட்டிற்கு அளிக்கிறது என்பது உண்மையே. ஆனல், அம் முன்னேற்றத்திற்கு ஏற்ற அளவு உள்நாட்டுச் சேமிப்பு ஏற்படாவிட்டால், அயல்நாட்டு வாணிபத்தின் விளைவாக நடப்பு வருமானத்தில் ஏற்படும் உயர்வின் பயனுக, முதலீட்டின் அளவில் எத்தகைய நிகர உயர்வும் ஏற்படமுடியாது. இத் துறையிலும், செய்யப்படவேண்டிய உண்மையான பணி, அயல்நாட்டு வாணிபத்திலிருந்து கூடுதல் முதற்பொருள்களை எவ்வாறு பெறுவது என்பது அன்று; நாட்டு வருமானத்திலிருந்து கூடுதல் சேமிப்பை எவ்வாறு பெறுவது என்பதே.

மேற்கூறப்பட்ட நிலைகள் யாவற்றிலும், முதலாக்கமானது, துணைசெய் இயல்புடைய உள்நாட்டுக் கைக்கோள்களையே பொறுத்திருக்கிறது. அயல்நாட்டு மூலதனத்தின் வருகை மிக மிக விரும்பத்தக்க வடிவங்களில் நிகழ்ந்தால்கூட, அந்த வருகையால் மட்டுமே முதலாக்கம் ஏற்பட்டுவிடாது. பிற்பட்ட நாடுகளின் முதல் திரட்சிச் சிக்கலுக்கான ஒரு தீர்வை, அந்த வருகை, அதுவாகத் தந்துவிடாது. உள்நாட்டில் இருக்கக்கூடிய ஊற்றுக்கால்களைப் பெறுவதற்கு மட்டுமல்ல; அயல்நாட்டு உதவிகளை ஆற்றல்மிக்க முறையில் பயன்படுத்துவதற்கும் உள்நாட்டு நடவடிக்கை இன்றியமையாதது ஆகும். உள்நாட்டு முனையில் தொடர்ச்சியாகவும் அழுத்தமாகவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படாவிட்டால் முதலாக்கச் சிக்கலைத் தீர்ப்பது என்பது இயலாத செயலே. ஆகவே, ஒரு வகையில் பார்க்கும்போது, மூலதனம் உள்நாட்டில் உருவாக்கப்படுகிறது என்னும் முடிவுக்குத்தான் நாம் வரவேண்டியிருக்கிறது.

அதே சமயத்தில், முன்னேறிய நாடுகள், தங்கள் உள்நாட்டு வேலை அளவை நிலைநாட்டுவதற்காக மூலதனத்தை ஏற்றுமதி செய்தாக வேண்டும் என்கிற நிலையில் இல்லை என்பதையும் நாம் முன்னரே கண்டறிந்தோம்.

மூலதனத்தை அயல்நாடுகளிலிருந்து பெறுவது விரும்பத்தகாதது என்று கூறுவது என் நோக்கம் அன்று, எல்லையற்ற

வறுமையைப் பெற்றுள்ள நாடுகள், அந்த வறுமையில் தொடங்கிப் பொருளியல் முன்னேற்றத்தை அடைவதற்காகச் செய்யும் முயற்சிகளில் பொதிந்துள்ள துயரத்தைக் குறைப்பதில் அயல் நாட்டு மூலதன ஊற்றுக் கால்களுக்கு உள்ள ஆற்றலைக் குறைத்து மதிப்பிடுவதும் என் நோக்கம் அன்று. அயல்நாட்டு நிதிகளால், பொருளியல் முன்னேற்ற வேகத்தைப் பெருக்க முடியும் என்பதிலும், அந்த முன்னேற்றத்தை அடைவதற்கான முயற்சித் துயரத்தையும், அந்த முயற்சியின்போது ஏற்படக்கூடிய தீவிரமான சமுதாயச் சீர்குலைவையும், எதேச்சாதிகார அரசாங்கங்கள் ஏற்படும் வாய்ப்பையும் குறைக்க முடியும் என்பதிலும் ஐயமில்லை. இந்தக் கருத்துக்கள் யாவும் மிகப் பலரால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. நானும் இவற்றை முழு அளவில் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் அதே சமயத்தில், அயல்நாட்டு மூலதனமானது அனைத்துப் பிணிகளையும் தீர்க்கும் அருமருந்தாகத் திகழ்கிறது என்னும் கருத்து பரவலாகக் காணப்படுகிறது அல்லவா; அக் கருத்தை நாம் ஒதுக்கித் தள்ளுவதுதான் முறை. முன்னரே குறிப்பிடப்பட்ட வழிகளில் உள்நாட்டு முனையில் துணைசெய் இயல்புடைய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டாலொழிய, அயல் நாட்டு ஊற்றுக் கால்கள் பொருளியல் வளர்ச்சிக்குச் சிறப்பான முறையில் உதவி புரிதல் இயலாது என்னும் உண்மையை அழுத்தந் திருத்தமாக எடுத்துக் கூறுவது நம் கடமை.

ஆனால், அயல்நாட்டு மூலதன உதவியை உற்பத்திப் பெருக்கத்திற்காகப் பயன்படுத்தவல்ல உள்நாட்டுக் கைக்கோள்களைக் கையாள்வதற்கு ஏற்ற அளவு, ஒரு நாட்டுக்கு அதன் பொருளியல் மீது ஆதிக்கம் இருக்குமானால், அத்தகைய நிலையில், அந்த நாடு, அதன் மூலதன அளிப்புக்காக முழு அளவுக்கோ அல்லது ஓரளவுக்கோ பிற நாடுகளின் உதவியைச் சார்ந்திருக்கவேண்டிய தேவை இல்லாமற்போகிறது. ஏனென்றால், அத்தகைய நிலையில், அந்த நாடு, அதே வகையான நிதித்துறை மற்றும் பணத்துறைக் கட்டுப்பாடுகளை, உள்நாட்டில் இருக்கக்கூடிய சேமிப்புகளைத் திரட்டுவதற்கும் பயன்படுத்த முடியும்.

திரட்டப்படக்கூடிய சேமிப்புகள், எடுத்துக்காட்டாக, வேளாண்மைத் துறையைச் சேர்ந்த கரந்துறை வேலையின்மை அல்லது சமூகத்தின் வசதிமிக்க பிரிவினரிடம் காணப்படுகிற—பணி இயல்பற்ற பகட்டு நுகர்வு (Non - functional conspicuous consumption) என்னும் வடிவத்தில், சமுதாயத்தில் ஏற்கெனவே இருக்கக்கூடும். அப்படி அவை இல்லாமலிருந்தால், அவற்றை உருவாக்க முடியும். 'வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குக' என்பதே அவற்றைப் படைப்பதற்கான எளிய வாய்பாடு ஆகும்,

(கருத்தளவில், இந்த வாய்பாடு, கரந்துறை வேலையின்மையைப் பயன்படுத்துவதையும் உள்ளடக்கி நிற்கிறது. ஏனென்றால், கரந்துறை வேலையின்மையானது பயன்படுத்தப்பட்டால், அதன் விளைவாக, வேளாண்மையில் எஞ்சியிருக்கும் உழைப்பாளர்களின் தலா உற்பத்தி பெருகுகிறது.)

வறுமை மிக்க ஒரு சமுதாயத்தில், தனியார் நுகர்வின் பெரும்பகுதி உணவுப் பொருளாக இருப்பதுபோல, மனித ஆற்றலின் பெரும்பகுதியை உணவுக்கான போராட்டமே விழுங்கிவிடுகிறது. உணவு உற்பத்தித் துறையை முன்னிலும் மிகுதியான திறமை உடையதாக ஆக்குவதே, மனித ஆற்றலை முதலாக்கப் பணிக்காகத் திருப்பிவிடுவதற்கு உரிய அடிப்படை வழி ஆகும். திரட்டப்படுதற்கு உரிய உள்நாட்டுச் சேமிப்பு என்பது, மெய் வருமானத்தில் ஏற்படக்கூடிய உயர்வைக் குறிக்கிறது. அந்தச் சேமிப்பைத் திரட்டுதல் என்பது, இந்த உயர்வில் மிக உயர்ந்த அளவை முதலீட்டுப் பணிகளுக்காக ஒதுக்கிவைப்பதைக் குறிக்கிறது.

வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவது, பொருளியல் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில், இன்றியமையாத தேவை ஆகும். ஆனால் அவ் வளர்ச்சி பெருகிக்கொண்டே செல்லும் போது, திரண்டுள்ள மூலதனத்தின் விளைவாகவே மெய் வருமானத்தில் ஓர் உயர்வு ஏற்படும். இந்த உயர்வில், முடிந்த அளவு தொகையை, மறுபடியும் முதலாக்கப் பணிக்குத் திருப்பி விடவேண்டும்.[1] இப் பணியின் தொடர்பில், மக்கள் தொகை வளர்ச்சி விகிதத்தைவிட உற்பத்தி விகிதம் உயர்ந்ததாக இருக்க வேண்டியதன் இன்றியமையாமை பரவலாக உணரப்பட்டிருக்கிறது. எனவே, அதுபற்றி மேலும் அழுத்தமான முறையில் எடுத்துக்கூறத் தேவையில்லை.

இறுதிநிலைச் சேமிப்பு விகிதத்தை - அதாவது, வருமான உயர்வில் எந்த அளவு சேமிக்கப்படுகிறது என்னும் விகிதத்தை - மிக உயர்ந்த அளவினதாக ஆக்குவது எப்படி என்பதுதான் பொதுவான சிக்கலாகும். உற்பத்தியில் ஏற்படும் உயர்வு, மக்கள் தொகை வளர்ச்சியால் விழுங்கப்படாமல் இருந்தால், அந்த உயர்வின் விளைவாகக் கூடுதல் சேமிப்புக்கான ஒரு வாய்ப்பு உருவாகிறது. இந்த வாய்ப்பானது பயன்படுத்தப்படலாம்; அல்லது தவற விடப்படலாம். அது பயன்படுத்தப்படுவது, கூடுதல் வருமானத்திலிருந்து சேமிப்பைப் பெறுவதற்காகக் கையாளப்படும் வழிவகைகளைப் பொறுத்திருக்கிறது. கூடுதல் வருமானம் முழுவதும் சேமிக்கப்படுமானால், அது தலைசிறந்த

நிலையாக அமையும். ஆனால் நடைமுறையில் இவ்வாறு நிகழ்தல் அரிது. வறுமையின் தாங்கமுடியாத சுமையிலிருந்து உடனடியாக ஓரளவு விடுதலை தரப்படுவது, தவிர்க்க முடியாதது என்றே கூறவேண்டும். பொருளியல் வளர்ச்சிக் கோணத்திலிருந்து பார்த்தாற்கூட அத்தகைய விடுதலை விரும்பத்தக்க ஒன்றாகவே இருக்கிறது.[2] இத்தகைய விடுதலைக்காக, கூடுதல் வருமானத்திலிருந்து எவ்வளவு தொகையை ஒதுக்குவது என்பதைக் கண்டறிவது மிக அரிய செயலே. ஓரளவு விடுதலையேனும் தரப்பட வேண்டும் என்று வற்புறுத்தும் சக்திகள் இடையீடின்றி இருந்து வருகின்றன என்பது, குறிப்பிடத்தக்க உண்மை. உள்நாட்டு ஊற்றுக் கால்களிலிருந்து மூலதனத்தைப் பெறுவதற்காக நுகர்வில் எத்தகைய குறைவும் ஏற்படத் தேவையில்லை என்பதும், உற்பத்திப் பெருக்கத்தால் விளையும் ஆதாயங்களைச் சேமித்தாற் போதும் என்பதும் மன ஆறுதல் அளிக்கும் செய்திகள் ஆகும். முதலாக்கத்திற்கான இந்தப் பாதைகூடப் பின்பற்றப்படாவிட்டால் பொருளியல் வளர்ச்சி ஏற்படுதல் அரிது.

## பொது நிதியின் பங்கு
## (The Role of Public Finance)

ஒரு நாட்டினுடைய கூடுதல் வருமானத்தின் சேமிப்பு விகிதம் தான் - அதாவது, இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம்தான் - அந்நாட்டின் பொருளியல் வளர்ச்சியைத் தீர்மானிக்கும் தலைசிறந்த காரணியாகும். அது தன்னைத்தானே பேணி வளர்த்துக் கொள்ளும் ஒரு காரணி அன்று ; அது, தானாகவே உச்ச அளவை அடைந்துவிடாது. அதற்கு மாறாக, மக்கள் தொகை உயர்வு உள்ளிட்ட 'தாமே இயங்கும் சக்திகள்' ('Automatic' forces) யாவும், கூடுதல் வருமானத்தை நுகர்வுக்காகத் திருப்பிவிடும் தன்மை படைத்தனவாகவே உள்ளன. முன்னேறிய நுகர்வுத் தரங்களின் பயனாக ஏற்படுகிற காட்சி விளைவை, நினைவில் வைத்துப் பார்க்கும்போது, இந்தத் தொடர்பில் ஏற்படுகிற ஒரு தீவிரமான கேள்வி, தானே எழும் சேமிப்பை (Voluntary saving) எந்த அளவு எதிர்பார்க்க முடியும் என்பதே.

இந்தத் துறையில் ஜப்பானுக்கு ஏற்பட்ட அநுபவத்தை ஆராய்வோம். நுகர்வுக் கோலங்களைப் பொறுத்தவரை, அந்த நாடு, மேற்கு நாடுகளிலிருந்து விலகித் தனித்து நின்றது. சிக்கனம், எளிய வாழ்வு ஆகிய பண்புகளைக் கையாள வேண்டியதன் இன்றியமையாமை அந் நாட்டு மக்களின் உள்ளங்களில் அழுத்தமாக வேரூன்றும்படிச் செய்யப்பட்டது. வாணிப நிறுவனங்கள்,

அவற்றின் ஆதாயங்களை மீண்டும் முதலீடு செய்யவேண்டும் என்றும், ஆதாய ஈவுகளை (Dividends) மிகக் குறைந்த அளவிலேயே வழங்கவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டன. அளிக்கப்பட்ட கூலிகளின் அளவு மிகக் குறைவாகவே இருந்தது. இத்தனை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டும் முதலாக்கம் நடைபெற இவைமட்டும் போதியனவாக இல்லை. வரி விதிப்பு, கட்டாயக் கடன்கள் ஆகிய பொது நிதி முறைகளின் வாயிலாகவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டியிருந்தது.

வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கல் என்னும் கோணத்திலிருந்து பார்க்கும்போது, பொது நிதிக்கு ஒரு புதிய சிறப்பிடம் ஏற்படுகிறது என்று நான் கருதுகிறேன். ஆனால் பொது நிதியின் துறை நுணுக்கச் சிக்கல்கள் மாபெரும் அளவுடையன. எனவே, சில பொதுவான கருத்துகளைமட்டுமே இங்கு நான் கோடிட்டுக் காட்டமுடியும்.

பணவீக்கம் அற்ற வேலை நிறைவு நிலைக்கு ஏற்ற அளவில் பண வருமானத்தை நிலைநாட்டுவதோடு அரசு தன் பணியை நிறுத்திக் கொள்ளவேண்டும் என்றும், அந்த வருமானத்தில் எந்த அளவுள்ள தொகையை நுகர்வுக்கும், எந்த அளவுள்ள தொகையைச் சேமிப்புக்கும் ஒதுக்குவது என்பதை முடிவு செய்யும் பொறுப்பானது, தனியாட்களிடமே விடப்படவேண்டும் என்றும் ஒரு சாரார் கருதுகின்றனர். அவர்களுடைய கருத்துகள் பின்பற்றப்படுமானால், சுன்னத்தைவிடக் (Zero) கூடுதலான ஏதோ ஒரு சராசரிச் சேமிப்பு விகிதம் ஏற்படக்கூடும்; அல்லது ஏற்படாமல் இருக்கவும் கூடும். அரசாங்கம் மக்களுடைய நடவடிக்கையில் தலையிடாமல் இருந்துவிட்டால், அவர்கள், அவர்களுடைய வருமானத்தில் ஒரு கணிசமான பகுதியைச் சேமிப்பார்கள் என்றோ, அல்லது அவர்களுடைய கூடுதல் வருமானத்தில் குறிப்பிடத்தக்க ஒரு பகுதியைச் சேமிப்பார்கள் என்றோ எண்ணிக் கொள்வது, அளவு கடந்த மிகை நம்பிக்கையின்பாற் பட்டதாகும். தற்காலத்தில் உலகத்தின் ஏழை நாடுகளில் காணப்படும் நுகர்வு நாட்டமானது, முன்னேறிய நாடுகளில் உள்ள நுகர்வுக் கோலங்களின் கவர்ச்சியால் தொடர்ச்சியான முறையில் தூண்டப்பட்டு வருகிறது. இத் தூண்டுதலின் பயனாக, ஏழை நாடுகளில் தானே எழக்கூடிய சேமிப்பு ஆற்றல் குறைந்து விடுகிறது. இந்த இடர்ப்பாட்டை நீக்க முயல்வது, பொது நிதியின் கடமையாகும்.

காட்சி விளைவின் பயனாக ஏற்படுகிற அரசியல் இடர்ப்பாடுகள், பொது நிதியை இக் கடமையை ஆற்றாதவாறு தடுக்கின்றன என்கிற கூற்று, பொதுவாகப் பார்க்கும்போது உண்மை

தான். ஆனால் இந்தத் தடையை அப்படியே விட்டுவிட்டால், வறுமை என்னும் நச்சு வளையத்தை நாம் ஏற்றுக் கொள்கிறோம் என்று ஆகிவிடும். பொதுநிதியின் வாயிலாக எடுக்கப்படக்கூடிய கூட்டு நடவடிக்கையின் மூலமாகத்தான் இந்த நச்சு வளையத்தை முறியடிப்பதற்குச் சிறிதாவது இடம் இருக்கிறது.

முதலாக்க முறையை இயக்குவதில் முன்னிலும் கூடுதலான பொறுப்பை அரசு மேற்கொள்கிற போக்கு, தற்காலத்தில் பரவலாகக் காணப்படுகிறது. இத்தகைய நிலையில், முதல் திரட்சியின் விகிதமானது, சேமிப்பு - நடப்பு நுகர்வு ஆகியவைபற்றிய தனியாட்களின் விருப்பங்கள் - தெரிவுகள் ஆகியவற்றின் கூட்டுத் தொகையாக இருக்க முடியாது. அதற்கு மாறாக, அந்த விகிதமானது, நாட்டுக் கொள்கையின் அடிப்படையில், முன்னிலும் கூடுதலான அளவுக்கு, அரசாங்கங்களால் முடிவு செய்யப்படுகிறது. பொருளியல் வளர்ச்சி நடைபெற வேண்டுமானால் அரசாங்கத்தால் திட்டமிடப்படுதல் இன்றியமையாதது என்று தற்காலத்தில் கருதப்படுகிறது அன்றோ? இந் நிலை, பெரும் அளவுக்கு, விரும்பப்படுகிற வளர்ச்சி விகிதத்தை அடைவதற்குத் தேவையான வேகத்தில், முதல் திரட்சியை, நாடுகள், தலையிடா நிலைமைகளின் கீழ்ப் (Laissez - faire conditions) பெறத் தவறியதன் விளைவே என்று வாதாடமுடியும்.[3] நாட்டு வருமானத்தில் முன்னிலும் கூடுதலான பகுதியை முதலீட்டு நடவடிக்கைகளுக்காக அரசு மேற்கொள்வதால், தங்களுடைய செலவிடற்குரிய வருமானத்தைத் (Disposable income) தாங்கள் விரும்புகிற பொருள்களுக்கும் ஊழியங்களுக்கும் செலவு செய்வதற்கு, நுகர்வோருக்கு உள்ள உரிமை எந்த வகையிலும் பாதிக்கப்படமாட்டாது. நாட்டு வருமானத்தின் ஒரு பகுதியை, நுகர்வுக்குச் செலவிடுவதா அல்லது சேமிப்புக்குப் பயன்படுத்துவதா என்பதை முடிவு செய்யும் பொறுப்பே மேலும் மேலும் கூடுதலான அளவுக்கு அரசினரால் மேற்கொள்ளப்படுகிறது. வரி விதிப்பானது, கட்டாயச் சேமிப்புக்கான ஒரு கருவியாக, முன்னிலும் கூடுதலான அளவுக்குப் பயன்படுத்தப்பட்டுவருகிறது.

1804ல் அவரால் எழுதப்பட்ட ஒரு கட்டுரையின் வாயிலாகக் கட்டாயச் சேமிப்பு என்னும் கருத்தைப் பொருளியல் இலக்கியத்திற்கு அளித்த பெந்தாம் அவர்கள் (Bentham), அந்தக் கருத்தில், பண வீக்கத்தின் விளைவாக ஏற்படக்கூடிய சேமிப்பை மட்டுமல்ல, அரசாங்க வரிவிதிப்பால் ஏற்படுத்தப்படக்கூடிய கட்டாயச் சேமிப்பையும் இணைத்துள்ளார் என்பது, இங்குக் குறிப்பிடத்தக்க சுவைமிக்க ஓர் உண்மையாகும்.[4] 'கட்டாயச் சிக்கனம்'. ('Forced frugality') என்னும் அவருடைய சொற்றொடரின் இந்த இரண்

டாவது பொருள், பத்தொன்பதாம் நூற்ருண்டில் முழு அளவில் புறக்கணிக்கப்பட்டது என்ற போதிலும், தற்காலத்தில் முன்னணிக்கு வந்திருக்கிறது. ஆனால் பணவீக்கத்தின் பயஞன தான் விரும்பாச் சேமிப்பு (Involuntary saving) என்னும் முறையோ இக் காலத்தில் பொதுவாக விரும்பப்படுவதில்லை.

பணவீக்கத்தின் விகிதம் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் உயர்ந்தால், சில எதிர்நோக்குகளும் நடத்தை முறைகளும் உரு வாகி, அப்படி உருவாகுவதன் பயனாகப் பண வீக்கமானது, கட்டாயச் சேமிப்பை உருவாக்குவதற்கு உரிய தன் ஆற்றல் முழு வதையும் இழந்துவிடுகிறது. பண வீக்கத்தின் விகிதம் மிகக் கூடுதலாக ஆகும்போது, நாட்டுப் பொருளியலில் மூலதனம் நுகரப்படுகிற (Capital consumption) ஒரு நிலையைக்கூட அது ஏற்படுத்தக்கூடும். ஆனல் இத்தகைய நிலைமைகள் யாவும், பண வீக்க விகிதம் அளவு கடந்து செல்லும்போதுதான் ஏற்படும். குறிப்பிட்ட விரிவான ஓர் அளவுவரையில், பணவீக்கமானது, கட்டாயச் சேமிப்பை உருவாக்கவல்ல ஆற்றல்மிக்க கருவியாகத் திகழும் என்பதையும், தற்காலத்தில் வளர்ச்சி குறைந்த நாடுகள் பலவற்றில் அது அப்படித்தான் திகழ்கிறது என்பதையும் நாம் மறுக்க முடியாது. ஆனல் பல சமயங்களில், அதனல் படைக்கப் படுகிற சேமிப்பு, அதனலேயே தவருன திசைகளில் செலுத்தப் பட்டு விடுகிறது. எடுத்துக் காட்டாக, பல சமயங்களில், ஆடம் பரப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் முதலீடு செய்யப்படுவதும், இன்றியமையாத பொது வசதித் தொழில்கள் தேவையான முதலீடு இன்றித் தத்தளிப்பதும் ஆகிய நிலையை அஃது ஏற்படுத்தி விடுகிறது. வருமானத்தின் ஒரு பகுதி, ஏழை களிடமிருந்து பணக்காரர்களுக்கு மாற்றலாவது, பணவீக்க முறையின் ஓர் இயல்பான பகுதியாகும். அப்படி மாற்றலாவதால் பண வீக்கமானது, கட்டாயச் சேமிப்பை வீணுக்கும் ஒரு முறை யாக அமைந்து விடுகிறது. ஏனென்ருல், இம் முறையின் கீழ்ப் பணக்காரர்கள், ஏழைகளிடமிருந்து தங்களுக்கு வருகிற கூடுதல் வருமானம் முழுவதையும் சேமிக்காமல், அதன் ஒரு பகுதியை நுகர்வுக்காகச் செலவிடக்கூடும். ஆகவே, பணக்காரர்களின் தலையீடு ஏற்படக்கூடிய இப் பண வீக்க முறையைவிட, நேரடியாக ஏழைகள் மீது வரி விதித்து, அவ் வரியால் கிடைக்கும் தொகையை முதலீடு செய்யும் முறையே சாலச் சிறந்தது ஆகும். பண வீக்க மானது, சமுதாய அதிருப்தியையும் சீர்குலைவையும் ஏற்படுத்தி, அப்படி ஏற்படுத்தியதன் வாயிலாக அதி தீவிர அரசியல் இயக்கங் களின் ஆற்றல் மிக்க கூட்டாளியாக அமைந்துவிடுகிறது என்பது, சிறப்பாகக் குறிக்கத்தக்க உண்மையாகும். பணவீக்கச் சக்திகள்

முதலீட்டு நடவடிக்கையில் இயல்பாகப் பொதிந்திருக்கின்றன என்பது உண்மையே. ஆனால் அச் சக்திகளைத் தடுப்பதற்கான வழி, முதலீட்டைத் தடுப்பது அன்று. அவற்றைத் தடுக்க, நிதிக் கைக்கோள் (Fiscal policy) என்னும் ஆற்றல் மிக்க முறை உள்ளிட்ட வேறு பல வழிகள் இருக்கின்றன.

வரி விதிப்பைக் கட்டாயச் சேமிப்புக்கான ஒரு கருவியாகப் பயன்படுத்துவதற்குச் சில காரணங்களால் எதிர்ப்பானது தெரிவிக்கப்படுகிறது. தானே எழும் சேமிப்புக்கான (Voluntary saving) தூண்டுதலை அது குறைத்துவிடுகிறது என்பது, முதற் காரணம். தானே எழும் சேமிப்பானது குறிப்பிடத்தக்க அளவுடையதாக இருக்குமானால் இந்த வாதத்திற்கு மிக்க மதிப்பு இருக்கும். ஆனால் உண்மையில் ஏழை நாடுகள் பெரும்பாலனவற்றில் அச்சேமிப்பு மிகக் குறைந்த அளவினதாகவே இருக்கிறது. பொன் முட்டைகளை இடும் வாத்தைக் கொன்றுவிடாதீர் என்னும் வேண்டுகோள், அந்த வாத்தால் இடப்படுகிற எந்தவகையான முட்டைகளும் மிகச் சிலவாக இருக்கும்போது, மிகுந்த ஆற்றல் உடையதாக இருக்க முடியாது. தனியார் சேமிப்புக்கான தூண்டுதலை நிலைநாட்டுவதும் உயர்த்துவதும் இன்றியமையாதன என்பதில் ஐயமில்லை. ஆனால், பொருளியல் காரணங்களை மட்டும் முன்வைத்துப் பார்த்தால், இத்துறையில் எத்தகைய திட்டவட்டமான முடிவுக்கும் வந்துவிட முடியாது. அதற்குமாறாக, மேற்படித் தூண்டுதலை அளிப்பதற்கான சமுதாயச் செலவையும் (Social cost), தனியாரின் தானே எழும் சேமிப்பின் வடிவத்தில் அத்தூண்டுதலின் பயனாக உடனே கிடைக்கும் விளைவையும் (Current returns) அல்லது எதிர்பார்க்கப்படும் விளைவையும் ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டுப் பார்த்து முடிவெடுப்பதற்கான தேவையைத்தான் அந்தப் பொருளியற் காரணங்கள் வற்புறுத்துகின்றன. பொருளியற் கணக்கீடானது (Economic calculus) கையாள்வதற்கு இடர்ப்பாடு மிகுந்ததாக இருந்த போதிலும், இத் துறையிலும் அதனைக் கையாளவேண்டிய தேவை இருக்கிறது.

கட்டாயச் சேமிப்புக்கான ஒரு கருவியாக வரி விதிப்பைப் பயன்படுத்துவதற்குத் தெரிவிக்கப்படும் எதிர்ப்புக்குரிய மற்றொரு காரணம் — முந்திய காரணத்தை விட இது மிகவும் திட்டவட்டமான ஒன்று, அந்த வரி விதிப்பின் விளைவாகத் தனியார், தங்களால் செய்யப்படக்கூடிய சேமிப்பின் அளவைக் குறைத்துவிடுவர் அல்லது முன்னரே செய்யப்பட்டுள்ள சேமிப்பைச் செலவழித்து விடுவர் என்பதாகும். இத்தகைய நிலையின் பயனாக, வரிவிதிப்பு மேலும் மேலும் கூடுதல் ஆக்கப்படுவதும், தனியாரின் சேமிப்பு மேலும் மேலும் குறைந்து விடுவதும் ஆகிய

தொடர் நிகழ்ச்சி உருவாகிவிடும். இந் நிகழ்ச்சி வரிசையில், வரி விதிப்பு என்னும் கட்டாய முறையின் மூலமாகச் சேமிப்பை உயர்த்த அரசு முன் வருகிறது; ஆனால் பொதுமக்களோ அந்த வரி விதிப்பு நிகழ்ந்தவுடன் தங்கள் சேமிப்பின் அளவைக் குறைத்துக் கொள்கிறார்கள்; இவ்வாறு சேமிப்பானது குறைவதைக் கண்ட அரசு, வரி விதிப்பை மீண்டும் உயர்த்தி, அதன் வாயிலாகச் சேமிப்பின் அளவைப் பெருக்க முனைகிறது; பொது மக்கள் தங்கள் சேமிப்பை மேலும் ஓர் அளவுக்குக் குறைத்துவிடுகிறார்கள்; நிகழ்ச்சிகள் இவ்வாறு தொடர்ந்து செல்கின்றன. மேற்கு ஐரோப்பாவில் 1945க்குப்பின் இத்தகைய நிகழ்ச்சி வரிசையே ஏற்படத் தொடங்கி விட்டது என்று எண்ணிச் சிலர் அஞ்சினார்கள். ஐரோப்பிய நாடுகளின் முதற்பொருள்களை மீண்டும் உருவாக்குவதற்காக அந்தந்த நாடுகளிலிருந்தே பெரும் அளவுக்குக் கிடைத்த சேமிப்பிற் பெரும்பகுதி, அரசால் உருவாக்கப்பட்டது; ஒரு பகுதி, தனியார் வாணிபத் துறையால் உருவாக்கப்பட்டது; தானே எழுந்த தனியாட்களின் சேமிப்பு (Voluntary personal saving), புறக்கணிக்கத்தக்க மிகச் சிறு அளவினதாகவே இருந்தது. அப்படி இருந்தபொதிலும், நீண்டகால அளவில் பார்க்கும்போது, கட்டாயக் கூட்டுச் சேமிப்பின் (Compulsory collective saving) பயனாகத் தனியாட்களின் சேமிப்பு அகற்றப்படுவது என்கிற மெய்யான ஆபத்து உருவாகாது என்றே தோன்றுகிறது. மேற்கு ஐரோப்பாவில் போருக்குப் பிந்திய காலத்தில் இருந்த சில சிறப்பு நிலைகளை அடிப்படையாகக் கொண்டு பொதுவான முடிவுகளுக்கு வருவது முறையாகாது. ஏனென்றால், அந்தக் காலத்தில் அங்கு ஓரளவுக்குச் சேமிப்பின் அழிப்பு (Dissaving) நிகழ்ந்தது இயல்பானதே. போர்க் காலத்தில் ஏற்பட்ட சேமிப்பானது, நுகர்வின் தாற்காலிக ஒத்திவைப்பே தவிர, நிலையான முறையில் ஏற்பட்ட சேமிப்பு அன்று. இத்தகைய இயல்பல்லாத காலங்களை ஒதுக்கிவிட்டு, இயல்பான காலங்களை மட்டும் முன்வைத்துப் பார்த்தால், வரி விதிப்பானது கணிசமான விகிதத்தில் இருக்கும்போதுகூட, செல்வர்களைப் பொறுத்தவரையிலாவது, புதிய சொத்துக்களைப் பெற வேண்டும் என்கிற விழைவும், அந்த விழைவை நிறைவு செய்வதற்காகச் சேமிப்பில் ஈடுபடுகிற போக்கும் ஓரளவுக்காவது இருக்கும் என்று கூறலாம்.

சேமிப்பைத் தூண்டுவதற்காக வரிகள் விதிக்கப்படும்போது, அந்த வரி விதிப்பானது, தனியாட்களின் வருமானத்தின்மீது இருத்தல் ஆகாது; செலவின்மீதே இருக்க வேண்டும். தற்போது உள்ள நிலையிலேயே, ஆயத்தீர்வைகள் (Excise duties) முதலிய மறைமுக வரிகளின் வாயிலாகச் செலவின்மீது வரி விதிப்பு இருந்து

வருகிறது இததகைய வரிகள வளாசசி குறைநத நாடுகளின நிதி அமைபபுகளில பெருமபாலும பெரிய ஓா இடததைப பெற றுளளன எனருலும தனியாடகளின மீதான வருமான வரிககுப (Pe sonal n me ta ) பதிலாக விரிவான வகையில அமைநத தனியாள நுகாவுச செலவு வரி (Tax on pe nal onsumpt n xpend ture) ஒனறை விதிபபது நலலது அலலவா எனபதை மீண டும ஆராயவது நலன பயககும ஒருவருடைய வருமானததில அவரால சேமிககபபடும பகுதிககு வருமான வரியிலிருநது விலககு அளிபபதன மூலம இதே விளைவை ஓரளவுககுப பெறமுடியும இநத முறையானது இபபோதே சில நாடுகளில ஏதேனும ஒரு வடிவததில கையாளபபடடு வருகிறது எடுததுககாடடாக ஜப பானில உயிா ஈடடுறுதிக கடடணஙகளுககு (Life nsuran e p em um ) வரி விதிககப டுவதறகு உரிய வருமானததிலிருநது விலககு அளிககபபடடிருககிறது ஆளுல இம முறைகள நிாவாக இடாபபாடுகளுககு மடடுமலலாமல கோடபாடடுவழிக கண டனஙகளுககும உளளாகக கூடியனவே

வரி விதிபபால சேமிபபுககான தூணடுதலில (In ent ve to s ve) ஏறபடும விளைவை மடடுமலலாமல வேலை செயவதறகான தூணடுதலில (Incent ve t work) ஏறபடும விளைவையும ஆராய தல இனறியமையாதது தனியாடகள தஙகளுடைய நடபபு நுகாவில மடடுமலலாமல தஙகளுடைய செ ததுடைமைகளின அளவிலும அககறை கொணடிருககிற காரணததால கடடாயக கடன ஏறபாடடை வரி விதிபபுககு மாறருகக கையாளவதறகு இடமிருககிறது கடடாயக கடனகளால கிடைககும வரவுகள வரி விதிபபால கிடைததறகுரிய வரவுகளைவிடச சிறிதளவே கூடுதலாக இருககும அபபடி இருநத போதிலும கடடாயக கடனகளால வேலை செயவதறகும உறபததி செயவதறகும கூடு தலான தூணடுதல ஏறபடுகிறது இநத உணமையைப போாக காலததில தெளிவாக உணரமுடிநதது அநதக காலததில பஙகீட டின (R tion ng) விளைவாகத திரணட செலவிட முடியாத ரொகக இருபபுகள (Unsp nd ble sh r e ve ) நுகாவோரின மகிழச சியைப பெருககின வரி விதிபபுககுப பதிலாகக கையாளபபடுகிற கடடாயக கடனகள உளளடககததில மடடுமலல வடிவததிலும கடடாயச சேமிபபு முறையாகத திகழகினறன

மெய வருமான உயாவில முடிநத அளவு கூடுதலான தொகையைச சேமிகக வைபபதும முடிநத அளவு குறைநத தொகையை நுகாவின உடனடி உயாவுககு அநுமதிபபதுமே பொதுவான பொருளியல சிககல ஆகும எனறு நாம முனனரே எடுததுககூறியுளளோம வருமானம உயாகிறபோது வரி வரு

வாயும், (அதன் பயனுக, வரி விதிப்பின் மூலம் திரட்டப்படுகிற கட்டாயச் சேமிப்பும்) தானுக உயர்ந்து விடும் என்று சிலர் கருதக் கூடும். ஆனுல் வருமானத்தில் எந்தத் தொகை அளவுக்கு உயர்வு ஏற்படுகிறதோ அதே அளவு உயர்வு, வரி வருவாயில் பெரும் பாலும் ஏற்படுவதில்லை. வருமானத்தில் எந்த விகிதத்தில் உயர்வு ஏற்படுகிறதோ அந்த விகிதத்தில்கூட வரி வருவாயில் உயர்வு ஏற்படும் என்று உறுதி கூறமுடியாது. வரி வருவாயில் எத்தகைய உயர்வு ஏற்படும் என்பது, எத்தகைய வரி விதிப்பு முறைகள் கையாளப் படுகின்றன என்பதைப் பொறுத்திருக்கிறது. தலை வரி (Poll tax), இன்றியமையாப் பொருள்களின்மீது விதிக்கப்படும் ஆயவரி (Excise duty) ஆகியவற்றைப் பொறுத்தவரை, நாட்டு வருமானத்தில் உயர்வு ஏற்படும்போது, அவ் வரிகளின் வருவாயில் எத்தகைய உயர்வும் ஏற்படாமல் இருக்கக்கூடும். வருமானத்தில் உயர்வு ஏற்படும்போது, வருமானத்திலிருந்து முதலாக்கத்திற்காக வரி விதிப்பின் வாயிலாகப் பெறப்படும் தொகையிலும் தானுகவே ஓர் உயர்வு ஏற்படத்தக்க அமைப்பு, தற்போது இல்லை. இத்தகைய விளைவு ஏற்படவேண்டுமானுல் இதனை ஏற்படுத்தத் தக்க வகையில் வரி முறைகள் மாற்றியமைக்கப்படவேண்டும்.

பொது நிதியின் முறைகளில் ஒரு புதிய கண்ணேட்டம் ஏற்படுவது இன்றியமையாதது. பின் தங்கிய நாடுகளின் முதலாக்கச் சிக்கலைப் பொறுத்தவரை, பொது நிதியின் மரபு வழி முறைகள் எல்லாச் சமயங்களிலும் பொருத்தமாக இருக்கும் என்று கூறமுடியாது. கடந்த காலத்தில் மேற்கொள்ளப்பட்ட மூன்று வகைக் கண்ணேட்டங்களின்மீது இப்போது சிறிதளவு கவனம் செலுத்தலாம்.

முதலாவதாக, அரசாங்கச் செலவை மிகக் குறைந்த அளவில் நிறுத்துவதும், இச் செலவுக்குத் தேவையான நிதிகளை, மக்களுக்கு மிகக் குறைந்த துன்பத்தைத் தரவல்ல வரி விதிப்பின் மூலம் எழுப்புவதுமே பொது நிதியின் பணிகள் என்று கருதுபவர்கள் பலர் கடந்த காலத்தில் இருந்தார்கள்; நிகழ் காலத்திலும் இருக்கிருர்கள். இந் நிதிக் கோட்பாட்டை 'இன்னு செய்யாமை விதி' (The canon of Innocuity) என்னும் நற்பெயரால் அழைக்கலாம்.[5] மந்தமான இம் மனப்போக்கு, பின் தங்கிய நாடுகளின் முதலாக்கச் சிக்கலைத் தீர்ப்பதற்குத் துணைபுரியாது.

இரண்டாவதாக, ஜான் ஸ்டூவர்ட் மில் உள்ளிட்ட பலரால் நூறு ஆண்டுகளுக்கு முன் பகுத்தாய்வு செய்யப்பட்ட - செல்வ ஒத்தநிலையின்மையைக் (Inequality of wealth) குறைப்பதற்கு

உரிய - ஒரு கருவியாக வரி விதிப்பைப் பயன்படுத்தலாம் என்னும் கருத்தும் புரட்சிமிக்க ஒரு கருத்தாகவும், அடிப்படையில் சம தர்ம நோக்குடைய ஒரு கருத்தாகவும் இருந்தபோதிலும், தற் போது ஓரளவுக்குப் பழமைத்தன்மை உடையதாகக் காட்சியளிக் கிறது. அஃது எப்படி இருந்தாலும், அக் கருத்து, தற்போதைய சிக்கலுக்குத் தொடர்பற்ற ஒன்றாக இருக்கிறது. '' பங்கீட்டு நீதியின் (Distributive justice) உண்மையான அடிப்படை, இயற்கையின் ஒத்தநிலையின்மைகளையும் தவறுகளையும் பின்பற்று வது அன்று; அவற்றை அகற்றுவதே '' என்று மில் அவர்களால் தெரிவிக்கப்பட்ட கருத்துக்கு[6] இக் காலத்திலும் நாம் உடன்பட லாம் என்றபோதிலும், இக் காலத்தில் நம் கவனம் வேறு ஒரு குறிக்கோளின்மீது திரும்பியிருக்கிறது. பொருளியல் வளர்ச்சிக் கோணத்திலிருந்து பார்க்கும்போது பொதுநிதியின் தலையாய நோக்கமாக இருப்பது, தனியாட்களிடையே உள்ள வருமானப் பங்கீட்டில் ஒரு மாறுதலை ஏற்படுத்துவது அன்று; நாட்டின் வரு மானத்தில் முதலாக்கத்திற்காக ஒதுக்கப்படும் விகிதத்தில் ஓர் உயர்வை ஏற்படுத்துவதே ஆகும். இப்படிக் கூறுவதால், செலுத் தும் திறன்பற்றிய கோட்பாடு அதன் சிறப்பு நிலையை இழந்து விட்டதாகப் பொருளாகாது. அதற்கு மாறாக, அக் கோட்பாடு, கூட்டுச் சேமிப்புக்கான வரி விதிப்பில் கண்டிப்பாகப் பின்பற்றப் படவேண்டும் என்று கூறலாம். கட்டாயச் சேமிப்பைப் பெறு வதற்குப் பணவீக்க முறையைவிட நிதி முறையே (Fiscal method) சாலச் சிறந்ததாகக் கருதப்படுவதற்கு இதுதான் காரணம். ஆனால் அப்படிக் கருதுவதுதான் முறை என் பதற்கு ஆதரவாக வேறு காரணங்களையும் கூறமுடியும்.[7]

மூன்றாவதாக, பணிவழி நிதி (Functional finance) என்னும் கீன்சின் கோட்பாடுகூடத் தற்போதைய சிக்கலுக்குப் பொருத்த மான ஒன்று அன்று. பணவீக்கம் (Inflation), பணச்சுருக்கம் (Deflation) ஆகியவற்றைத் தடுப்பதைமட்டுமே நோக்கமாகக் கொண்ட ஒரு நிதிக் கைக்கோளால் முதலாக்கச் சிக்கலைத் தீர்க்க முடியாது. கலையுணர்வுக் காரணங்கள், பொருளியற் காரணங்கள் ஆகியவற்றை முன்னிட்டு, கீன்ஸ், போர்க் காலத்திற்கு முன்னர், விக்டோரிய சகாப்தத்துப் பண்பு நலன்களாகிய (Victorian virtues) மிகுபொருள் நுகராமை, சிக்கனம் ஆகியவற்றைக் கிண்டல் செய்தார். ஆனால் வளர்ச்சி குறைந்த நாடுகளின் சிக்கலைத் தீர்ப்பதற்கு இந்த மனப்போக்கு துணையாக இருக்க முடியாது. கீன்சின் பொருளியல், ஆற்றல் மிக்க - நெகிழ்ச்சியுள்ள - ஒரு பகுத்தாய்வுக் கருவி என்பதில் ஐயமில்லை. கொள்கை அளவிலாவது அக் கருவியை வெவ்வேறு வகையான நிலைமைகள்

யாவற்றிற்கும் ஏற்றவகையில் மாற்றி அமைத்துக்கொள்ள முடியும். இஃது உண்மையே என்ற போதிலும், அடிப்படையில், கீன்சினுடைய பொதுக் கோட்பாடு (Keynes's General Theory), சேமிப்புக்கு எதிரான - செலவுக்கு ஆதரவான - ஒரு போக்கைக் கொண்டிருக்கிறது என்பதை மறுக்கமுடியாது. 1930ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் பழைய தொழில்துறை நாடுகளில் காணப்பட்ட சூழ்நிலேகளேப் பொறுத்தவரை, இந்தப் போக்கு, இயற்கையானது; முறையானதுகூட. ஆனல் வளர்ச்சி குறைந்த நாடுகளில் தற்போது காணப்படுகிற சூழ்நிலேகளிலும் இந்தப் போக்கை மேற்கொள்வது ஆபத்தானது.

வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கப் பணிக்கான ஒரு கருவியாகப் பொது நிதியைப் பயன்படுத்துவது, கொள்கை அளவிலான - நடைமுறைக்கு ஒவ்வாத ஒரு கருத்து அன்று. நடைமுறையில் அப்படிப் பயன்படுத்தியுள்ள பல நாடுகள் இருக்கின்றன. மீண்டும் ஒரு முறை ஜப்பானேப் பார்க்கலாம். அந் நாட்டுப் பொருளியல் வளர்ச்சியின் தொடக்கநிலேகளில், குறிப்பாக 1870ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளிலும் 1880ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளிலும், பொதுப் பணிகளுக்கும் தொழில் வளர்ச்சிக்கும் தேவையான மூலதனத்தைப் பெற்று அளிப்பதில் அரசு தலேயாய இடத்தைப் பெற்றிருந்தது. இம் மூலதனத்திற்குத் தேவையான நிதியை அது எவ்வாறு பெற்றது? கண்டிப்பான வரி விதிப்பின் மூலம்-குறிப்பாக வேளாண்மைத் துறை மக்கள் மீது விதிக்கப்பட்ட வரிகளின்மூலம் அதைப் பெற்றது. சில சமயங்களில், நகரங்களேச் சேர்ந்த வாணிப நடுத்தர வகுப்பினர்மீது திணிக்கப் பட்ட கட்டாயக் கடன்கள்மூலமும், செலாவணிப் பெருக்கத்தின் வாயிலாகவும், அரசு, தேவையான நிதியை எழுப்பியிருக்கிறது. இச் செலாவணிப் பெருக்கம், பொருளியலின் பணத்துறைப் பகுதியின் வளர்ச்சியைப் பிரதிபலித்த காரணத்தால், பணவீக்க நிலேயை ஏற்படுத்தவில்லே. பணத்தை முன்னர்ப் பயன்படுத்தி யிராத மக்களிடம் இப்போது பணம் கிடைத்து, அவர்கள் அதைச் சேர்த்துவைக்கத் தொடங்கியதன்மூலம், சேமிக்க லாயினர். குறிப்பிடத்தக்க அளவு பணவீக்கம் இல்லாமலேயே, ஜப்பான், தன் தொழில் வளர்ச்சியைப் பெற்றுவிட்டது.

நெடுங் காலமாக இருந்துவந்த நிலவரியைத்தான் ஜப்பான் கட்டாயச் சேமிப்புக்கான தலேசிறந்த கருவியாகக் கொண்டது. 1870ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில் இந் நிலவரி மறு மதிப்பீடு செய்யப்பட்டு மிகத் தீவிரமான முறையில் கையாளப்பட்டது. இதன் விளேவாக அந்த ஆண்டுகளில் அரசாங்கத்தின் மொத்த வருவாயில் ஏறத்தாழ ஐந்தில் நான்கு பங்கு அவ் வரியிலிருந்தே

கிடைக்கலாயிற்று. ''இதுதான், வேளாண்மையில் ஏற்பட்ட உற்பத்தி உயர்வின் ஒரு பகுதியை வெளியே கொண்டு வருவதற்குக் கையாளப்பட்ட முறையாக அமைந்தது. அப்படி வெளியேற்றப்பட்ட வருவாய், அரசாங்க நடவடிக்கையின் மூலமாக நேரடியாக முதலீட்டுத் திட்டங்களுக்குத் திருப்பிவிடப்பட்டது.''[9] முதலாக்கப் பணிக்குத் தேவையான நிதிகள் இவ்வாறுகத்தான் பெறப்பட்டன. வேளாண்மையின்மீது தீவிரமாக வரி விதிக்கப்பட்டதற்கு நேர்மாறாக, பொறிவழித் தொழில்கள்மீது மிகக் குறைந்த வரிகளே விதிக்கப்பட்டன. சில சமயங்களில் அத் தொழில்களுக்கு உதவிக் கொடைகளும் (Subsidies) அரசாங்கத்தால் வழங்கப்பட்டன. எனவே, வேளாண்மையின் மீது சுமத்தப்பட்ட கண்டிப்பான வரி விதிப்பின் விளைவாகத் தொழில்துறையிலும் பொதுப்பணிகளிலும் உள்ள முதலீட்டுத் தூண்டுதல்களில் எத்தகைய குறைவும் ஏற்படவில்லை. இது சிறப்பாகக் கவனிக்கத் தக்க ஓர் உண்மையாகும். ஆண்டுகள் செல்லச் செல்ல நிலைமை மெதுவாக மாறியது. மாறிய போதிலும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில்கூட, அரசாங்கத்தின் மொத்த வரி வருவாயில் கிட்டத்தட்டப் பாதிப் பங்கு, நில வரியிலிருந்தே கிடைக்கலாயிற்று.

மிக அண்மைக் காலத்தைச் சேர்ந்த வேறு சில எடுத்துக்காட்டுகளையும் தரமுடியும். லாட்வியா (Latvia), போரின் விளைவாக அழிவுக்கு உள்ளாகிய - வளர்ச்சி குறைந்த - குறிப்பிடத்தக்க அளவுக்கு அயல்நாட்டுக் கடன்களைப் பெறுத ஒரு நாடு ஆகும். தனியார் நிறுவனங்களாலும் அரசாங்க நிறுவனங்களாலும் மேற்கொள்ளப்பட்ட முதலீட்டுச் செலவுக்குத் தேவையான நிதிகளை வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்குவதற்காக, அந் நாடு, 1920ஐத் தொடர்ந்த பத்தாண்டுகளில், அரசாங்க வருவாயைப் பெரும் அளவுக்கு உயர்த்தியது. அதோடு, ஏராளமான நிதிகளை வரவு செலவுத் திட்ட உபரிகளாகப் பெற்று, அவற்றை மையப் பாங்கியில் (Central bank) வைப்புகளாகப் (Deposits) போட்டுவைத்தது. 1920ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் இந்தப் பாங்கியில் இருந்த அரசாங்க வைப்புகளின் தொகை, பெரும் அளவுக்கு உயர்ந்தது. வணிகர்கள், உழவர்கள், தொழில்துறையினர் ஆகியோருக்கு அந்தப் பாங்கியால் அளிக்கப்பட்ட கடன்கள், கழிவுகள் (Discounts) ஆகியவற்றின் தொகையும், ஏறத்தாழ அதே அளவுக்கு உயர்ந்தது. சுருக்கமாகக் கூறுவதானல், இந்தத் தொடர்பில், மையப் பாங்கியானது, அரசாங்கத்தால் திரட்டப்பட்ட சேமிப்பு முழுவதும் சேர்த்துவைக்கப்படுவதற்கு உரிய இடமாகவும், பின்னர் அச் சேமிப்பை நாட்டின்

பொருளியல் முழுவதிலும் மூலதனச் செலவுக்காக வழங்குதற்கு உரிய கருவியாகவும் பணியாற்றியிருக்கிறது.

ஆனால், அதே சமயத்தில், இத் தொடர்பில் லாட்வியாவின் நிதி அமைப்பு பெற்றுள்ள வெற்றி, ஓரளவுக்குத் தற்செயலாக அமைந்த சூழ்நிலைகளையும் பொறுத்திருந்தது என்பதை எடுத்துக் கூறவேண்டும். முதல் உலகப் போர் முடிந்த சில ஆண்டுகள்வரை, லாட்வியாவில் புழக்கத்தில் இருந்த தாள் செலாவணி (Paper currency), போர்க் காலத்தில் அந் நாட்டை ஆண்டுவந்த அயல் நாட்டு அதிகாரிகளால் விட்டுச் செல்லப்பட்டதே ஆகும். அந் நிலையில் அதன் அளவை உயர்த்த முடியாமல் இருந்தது. சிறிது காலம்வரை, லாட்விய அரசாங்கத்திற்குச் செலாவணித் தாள் களை அச்சிடுவதற்குத் தேவையான அச்சகம் இல்லாமலிருந்தது. அந்த அரசாங்கம் தொழில் நுணுக்கத் துறையைச் சேர்ந்த இந்தச் சிறிய இடர்ப்பாட்டின் விளைவாகத் தொடக்கத்தில் ஓரளவு கண்டிப்பான வருவாய் முறையை (Revenue system) அமைக்க வேண்டியிருந்தது. ஆனால் அப்படி அமைக்கப்பட்ட முறை, சில ஆண்டுகளுக்குப் பின்னர், முதலீட்டிற்கான நிதி களைத் திரட்டுவதற்கு உரிய ஆற்றல்மிக்க ஒரு கருவியாகப் பயன் படலாயிற்று.[10] அதுமட்டும் அல்லாமல், ஜப்பானின் மூலப் பட்டுக்கு (Raw silk) இருந்த அயல்நாட்டுத் தேவை, எவ்வாறு ஜப்பானின் தொழில் வளர்ச்சித் தொடக்க நிலையில் அந் நாட்டுக்கு உதவியாக இருந்ததோ அது போல, லாட்வியாவின் ஒரு வகைச் சணல் (Flax), மரம் ஆகியவற்றிற்கு இருந்த சிறந்த ஏற்றுமதி அங்காடிகள் அந் நாட்டுக்குப் பேருதவி புரிந்தன. ஆனால், பெட்ரோலியத்தை ஏராளமான அளவில் பெற்றிருந்த சில நாடுகள் உட்பட வேறுபல நாடுகளுக்கு மேற்குறிப்பிட்டவற் றைப் போன்ற வாய்ப்புகள் இருந்தும், அவ் வாய்ப்புகளிலிருந்து மேற்குறிப்பிட்ட நாடுகள் பெற்றவற்றைப் போன்ற நன்மைகளை அவற்றால் பெறமுடியவில்லை.

மேற் குறிப்பிட்ட லாட்விய நிகழ்ச்சி ஓரளவுக்குப் பலருக்கும் அறிமுகமாகாத ஒன்றாக இருந்த போதிலும், போலந்தில் (Poland) நடைபெற்ற நிகழ்ச்சி, பலருடைய பார்வையையும் கவர்ந்திருக் கிறது. இரண்டு உலகப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில், போலந்து அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்ட நிதி ஒதுக்கங்களை (Budgetary appropriations), அந்த நாட்டின் மையப் பாங்கியை விட, இரண்டு அரசாங்கப் பாங்கிகளே மிகுதியாகப் பெற்று வந்தன. அவற்றில் ஒன்று வேளாண்மைக்கான பாங்கி; மற்றொன்று தொழில் துறைக்கான பாங்கி. இந்த நாட்டு அரசாங் கமும் பல ஆண்டுகள் தொடர்ந்து வரவு செலவுத் திட்ட உபரி

களைப் (Budget surpluses) பெற்று வந்தது. அது அந்த உபரிகளை மேற் குறிப்பிடப்பட்ட இரண்டு அரசாங்கப் பாங்கிகளில் போட்டு வைக்க, அந்தப் பாங்கிகள் அந் நிதிகளைத் தனியார் நிறுவனங் களுக்கும் அரசாங்க வாணிபக் கார்ப்பரேஷன்களுக்கும் முதலீடு செய்வதற்காகக் கடனுக அளித்தன.[11] துருக்கியிலும் (Turkey) இத்தகைய ஏற்பாடு ஒன்று இருந்தது; அது போலந்தின் ஏற்பாட்டைவிட மிகுதியாக அறிமுகம் ஆகியிருக்கிறது; எனவே, அதைப்பற்றி நான் வர்ணிக்கவேண்டிய தேவையில்லை.

சோவியத் ரஷ்யாவில் 1928லிருந்து தொடங்கிய ஐந்தாண்டுத் திட்டங்களின் கீழ்ச் செய்யப்பட்ட கட்டாயக் கூட்டுச் சேமிப்பே, அத்தகைய சேமிப்புக்கான - மிகச் சிறப்பாகக் குறிக்கத் தக்க எடுத்துக்காட்டு ஆகும். ஆனால் சோவியத் ரஷ்யா வில் தனியாரின் முதலீட்டு நடவடிக்கை முழுமையாகத் தடுக்கப் பட்டுவிட்டது. அரசியல் விடுதலையையும் தனியாட்களின் உரிமை களையும் பெற்றுத் திகழும் நாடுகளுக்கு இந்த எடுத்துக் காட் டானது, பொருந்தாது. ஏனைய எடுத்துக்காட்டுகளோடு இந்த எடுத்துக்காட்டையும் நான் தருவதற்குக் காரணம், பல நாடுகள் முற்றிலும் வேறுபட்ட அரசியல் கோட்பாடுகளை உடையனவாக இருந்த போதிலும், அந் நாடுகள் யாவற்றிலும் பொதுவாகக் காணப்படுகிற அடிப்படைப் பொருளியல் தேவைகளின் பயனுக, அவை அனைத்திலும் கூட்டுச் சேமிப்பு முறை உருவாகியிருக்கிறது என்னும் உண்மையைச் சுட்டிக் காட்டுவதுதான். இந்தக் கூட்டுச் சேமிப்பு முறை, மனிதர்களால் உருவாக்கப்பட்டதாக இருப்ப தால் (இயற்கையாகத் தோன்றுத ஒன்றுக இருப்பதால்) முற்றிலும் சிறந்த வகையில் பணியாற்ற முடியவில்லை என்பது உண்மையே. ஆனுல் அது பணியாற்றியிருக்கிறது என்பதை நாம் மறுக்க முடியாது. 1940ஐத் தொடர்ந்த ஆண்டுகளில் மேற்கு ஐரோப்பாவில் நடைபெற்ற போருக்குப் பிந்திய பொருளியல் சீரமைப்பு முயற்சிகளில், கூட்டுச் சேமிப்பு முறையானது, எடுப் பான இடத்தைப் பெற்றிருந்தது. ஆனுல் இந்த எடுத்துக்காட்டு, வளர்ச்சி குறைந்த பகுதியைச் சேர்ந்த ஒன்று அன்று.

பொது நிதியானது (Public finance) மிகப் பல சமயங்களில், சிப்பந்திகளை அளவுக்கு மீறிப் பெற்றுள்ள ஊழியங்கள், பகட் டான கட்டிடங்கள், இராணுவ அமைப்புகள் முதலியவற்றிற்கு வீணுகச் செலவழிக்கப்பட்டிருக்கிறது என்பது உண்மைதான். மேலே உள்ள பத்திகளில் நாம் எடுத்துக்காட்ட முயன்றதெல் லாம், கூட்டுச் சேமிப்புக்கான வாய்ப்புகள் இருக்கின்றன என்னும் உண்மையைத்தான். கூட்டுச் சேமிப்பானது, அரசாங்கங்களின் நடவடிக்கையில் தவருமல் காணப்படுகிற ஒரு பகுதியாக இல்லாம

லிருபபது வியபபுககு உரிய ஒனறு அ"ஈறு ஏனெனறுல கடநத காலததில கூடடுச சேமிபபானது பொது நிதியின ஒபபுக கொளளபபடட நோககஙக"ரில ஒனறுககூடக கருதபபடட திலலே

மேலே தரபபடட எடுததுககாடடுகளிலிருநதும பொது வான ஆராயசசியிலிருநதும பொது நிதியின வாயிலாகக கடடாயச சேமிபபை எழுபபுவதும தனியாா முதலீடும ஒனறுடன ஒனறு பொருநதக கூடியனவே என னு ம உணமை[1] தெளிதின விளஙகும அரசாஙகததால மேற கொளளபபடுவது சேமிபபு நடவடிககை மடடுமே முதலீடடு நடவடிககை தனியாா கைக"ரில விடபபடலாம அரசாங கததால திரடடபபடும சேமிபபைத தனியாரின முதலீட டுககு வழஙகும பணியை ஆறறப பலதிறபபடட நிறுவன அமைபபுகளை உருவாககமுடியும [அரசு வழஙகும கடனகள பஙகு மூலதனததை அளிததல கலபபுக கமபெனிகள (M d mp n s) வளாசசி நிதி நிறுவனஙகள (D vel pm t fin n p at n ) முதலீ டுப பொறுபபகஙகள (Inve tment t ust ) ஆகியவை அததகைய அமைபபுகளிற சில ] ஏதேனும ஒரு வகைப பாஙகிகள ஏறகெனவே இருககுமானுல புதிய நிறுவனஙகளை அமைககவேணடிய தேவை இலலே அரசாஙகததால திரடடப படுகிற சேமிபபுகள பாஙகிகளில வைபபுகளாகப போடடு வைககபபடலாம அலலது பாஙகிகளிடமிருநது அரசாஙகம பெறறுளள கடனகளை அடைககப பயனபடுததபபடலாம இபபடிச செயயபபடுவதன விளைவாக பாஙகிகள தனிபபடட தொழில துணிவினருககு பணவீகக விளைவுகளை ஏறபடுததாத முறையில கடனகளை அளிகக முடியும இக கடனகளின பயனுக முதலீடடுத திடடஙகளை நிறுவுவதும அவறறைத தொடாநது நடததுவதும தனிபபடட ஆடகள அலலது நிறுவனஙகளிடம விடபபடடுவிடுகினறன முதலாககததின இரணடு கூறுகளாகிய சேமிபபும முதலீடும சிககனம தொழில துணிவு ஆகியவறறைப பொறுததிருககினறன கூடடுச சிககனததைத (C lle t v th ft) தனியாள தொழில துணிவோடு (Ind v du l ent pr s ) இணைப பதில எததகைய தவறும இலலே

பெருமபாலான வளாசசி குறைநத நாடுகளுககு சேமிபபு முதலீடு ஆகிய துறைகளில தனியாா நடவடிககை அரசாஙக நடவடிககை ஆகிய இரணடின ஓா இணைபபு தேவைபபடும ஒவவொரு நாடும அதன சிறபபான தேவைகளுககும வாயபபு களுககும ஏறற முறையில இநத இணைபபின வடிவததை ஏறபடுததிக கொளளவேணடும எலலாநாடுகளுககும பொருநதக

கூடிய இணைப்பு வடிவம் என்பதாக எதுவும் கிடையாது. பொது நிதித் துறையில் ஒரு சிறிய கருத்தாய்வைச் செய்வது பயன் உள்ள தாக இருக்கும் என்று நான் கருதியதால், சேமிப்புச் சிக்கலைத் தீர்ப்பதற்கு நிதித்துறை முறைகளையே நான் முற்றிலும் நம்பி யிருப்பதாக யாரும் எண்ணி விடக்கூடாது. என்ன இருந்தாலும், வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டில் நிதித்துறை அமைப்பும் வளர்ச்சி குறைந்ததாகத்தான் இருக்கும். தீர்க்கப்படாமலிருக்கிற சிக்கல்கள் யாவற்றையும் ''அரசாங்கத்''தின் தோள்களில் சுமத்திவிடுவது, பொருளியல் அறிஞர்கட்கு மிக எளிய செயலாக இருக்கலாம். ஆனால் ''அரசாங்கம்'' என்றால் யார்? ஏதேனும் ஒருவகைக் கூட்டு நடவடிக்கையை மேற்கொள்ளாமல் சில செயல் களைச் செய்து முடிப்பது, இயலாதது அன்று என்ற போதிலும், மிகவும் கடினமானது. பொருளியலில் பின் தங்கியுள்ள நாடுகளின் உள் நாட்டுச் சேமிப்புச் சக்தியைத் திரட்டுவது, அத்தகைய அருஞ் செயல்களில் ஒன்று என்பது என் கருத்து.

## சமூக ஒட்டுமொத்த மூலதனம்
## (Social overhead capital)

முதலீட்டுத் துறையில் அரசாங்க நடவடிக்கைக்கு ஏதேனும் இடமிருந்தால், அஃது, இன்றியமையாத பொதுப் பணிகள், ஊழியங்கள் ஆகிய துறைகளில்தான் இருக்கமுடியும் என்பது ஏறத்தாழ எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை யாகும். சாலைகள், இருப்புப் பாதைகள், தந்தி மற்றும் தொலை பேசி அமைப்புகள், மின்சார நிறுவனங்கள், தண்ணீர் வழங்கு அமைப்புகள், இறுதியாக - ஆனால் முக்கியமாகப் பள்ளிக் கூடங்கள், மருத்துவமனைகள் ஆகியவை, இத்தகைய பணிகள் மற்றும் ஊழியங்களில் அடங்கும். முன்னேறிய தொழில்துறை நாடுகளில் இந்த வசதிகள் அமைந்திருப்பது இயற்கை. ஆனால் இத்தகைய வசதிகளை இன்னும் பெறாமலிருக்கிற பின்தங்கிய நாடு களில் செய்யப்படுகிற தனியார் முதலீட்டிற்குக் கிடைக்கிற ஆதாயமானது, ஏமாற்றத்தை அளிக்கத்தக்க அளவு மிகச் சிறிய தாகவே இருக்கும். இத்தகைய வசதிகளிற் சிலவற்றைத் தன்னு டைய மூலதனத்தைக் கொண்டே உருவாக்கிக் கொள்வது, பெரிய அளவில் நடைபெறுகிற ஓர் அயல்நாட்டு வாணிப நிறுவனத்திற்கு இயலக்கூடிய செயலாக இருக்கலாம். ஆனால் சிற்றளவுத் தனி யார் தொழில் துணிவுகளால் அவ்வாறு உருவாக்குதல் இயலாத செயலே.

பின்தங்கிய நாட்டின் முதற் பொருளாக்கம் 'மொத்தமாகச்' செய்யப்படவேண்டிய ஓர் ஏற்பாடாக ('Lumpy' process) இருப்

பதற்கு, இத்தகைய முதலீட்டிற்கான தேவையே காரணமாகும். இந்தக் காரணத்தால்தான், மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறன் என்னும் கருத்தைப் பின்தங்கிய நாடுகளைப் பற்றிய சிக்கல் களிற் கையாள்வது, கடினமான செயலாக அமைகிறது. எச். டபள்யூ. சிங்கர் (H. W. Singer) அவர்களால் சுட்டிக் காட்டப் பட்டதைப்போல், அத்தகைய நாடுகளில் உள்ள சிக்கல், "இறுதி நிலைக் கூட்டல்களைப் பற்றிய (Marginal additions) ஒன்று அன்று என்பதில் சிறிதும் ஐயமில்லை. அஃது, அமைப்பு முறையில் மாறுதலை ஏற்படுத்துவதைப் பற்றிய ஒரு சிக்கல் ; எல்லாத் துறைகளிலும் வளர்ச்சியை உருவாக்குவது பற்றிய ஒரு சிக்கல்."[13] அத்தகைய சூழ்நிலையில், மாறுதலானது, மார்ஷலுடைய (Marshall) "பொருளியற் கோட்பாடுகள்" ("Principles of Economics") என்னும் நூலில் நுவலப்பட்டிருப்பதைப்போல மெதுவாக நடை பெறுகிற ஒன்றாக இல்லாமல், திடீரென்று பெரும் அளவில் ஏற்படுகிற ஒன்றாக அமைந்து விடுகிறது.

சமூக ஒட்டு மொத்த முதற் பொருள்கள் ஒரு குறிப்பிட்ட அளவு ஏற்பட்டு விட்டால், அதன்பின், எந்தத் தனியார் நிறுவன மும், அவற்றைச் சிறிதளவு கூடுதற் செலவில், அல்லது கூடுதற் செலவே இல்லாத நிலையில், தன் நலனுக்காக மட்டுமல்லாமல் சமுதாயத்தின் நலனுக்காகவும் பயன்படுத்த முடியும். அத்தகைய ஒட்டு மொத்த வசதிகளுக்கு முழு வேலை அளிக்கக்கூடிய நிலையில் உள்ள (அவ் வசதிகளை முழு அளவில் பயன்படுத்தக்கூடிய நிலையில் உள்ள) சமுதாயங்கள், அநுகூலமான நிலையில் இருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்தத் தொடர்பிலும் நாம் ஒரு வளையத்தை (A circle) — வளைய வளைய வரும் நிகழ்ச்சிக் கோவையைக் காண விரும்பினால், அவ்வாறே காண முடியும். ஓர் ஏழை நாட்டில், அமைகிற ஒட்டு மொத்த முதற் பொருள் அமைப்பானது, தொடக்க நிலையில், அந்த அமைப்பு இருப்பதை நியாயப்படுத்தக் கூடிய அளவு வேலையைப் பெற முடியாமல் இருக்கலாம். அத்தகைய நிலையில், எதிர்காலத்தில் அந்த அளவு வேலை கிடைக்கும் என்கிற நம்பிக்கைதான், அந்த அமைப்பு இருப்பதற் கான நியாயமாக இருக்கமுடியும்.

சமூக ஒட்டு மொத்த மூலதனம் மிகவும் இன்றியமையாததாக இருப்பதால், தற்போது நடைபெறும் முதலீட்டின் தன்மையை ஓரளவு மாற்றியமைக்கவேண்டிய தேவை இருக்கிறது.[14] நடை முறையில் உள்ள முதலீட்டின் தன்மை, நாட்டின் பின்தங்கிய நிலையால் உருவாக்கப்பட்டதாகவே இருக்கும். இத்தகைய நிலை யில் உள்ள முதலீட்டின் தன்மையில் எத்தகைய முன்னேற்றத்தை யும் ஏற்படுத்த முடியாது என்று கருதுவது, பெருந் தவருகவே

அமையும எடுததுககாடடாக கிழககு ஐரோபபாவில உளள மககள தொகை மிகுநத வேளாணமை நாடுகளில உழவாகள ஓரளவு சேமிபபைச செயத போதிலும முதலீடடுப பணியை யும அவாகளே செயய விழைகிறாாகள இததகைய விருபபததின பயனைக் தறபோதைய சூழநிலையில தனிபபடட உழவாகளால கையாளபபடுகிற குதிாகள வணடிகள காலததிறகு ஒவவாத கருவிகள உழு மாடுகள முதலிய முதறபொருளகளின அளிபபு மிகக கூடுதலாக இருககிறது ஆனால இநதச சூழநிலையை மாறறி அமைததிருககககூடிய மாபெரும முதற பொருளகள பறறுககுறை யாக இருககினறன இததகைய நிலையில கூடடுறவு முறையில அமைநத கிராமபபுற முதலீடடுககுத தேவை இருககிறது எனபது தெளிவாக விளஙகுகிறது அததகைய முதலீடடைப பெறுவ தறகான முயறசிகள பலகேரியாவைப (Bulg ) பொறுதத வரையிலாவது இரணடாம உலகபபோருககுமுன மேறகொளளப படடன

தறகாலததில அமெரிககப பொருளியலானது சிறபபாக அத னுடைய பெரிய அளவு உறபததி முறைகளாலேயே உலகததின வனததை ஈககிறது எனறபோதிலும பததொனபதாம நூற றுணடின தொடககததில சமூக ஒடடு மொதத முதறபொருளகளை அது உருவாககிப பெருககி வநத திறததாலேயே பெரும புகழ பெறறது அமெரிககாவை அக காலததில பாாவையிடட கண டன நோககு உடைய பிரானசெஸ டிரலலோப (F n e T llope) எனனும ஆஙகிலேயா கூட 1832ல பினவருமாறு எழுதியுளளாா — பொதுப பணிகளைத தொடஙகுவதிலும நடததி முடிபபதிலும அமெரிகக மககள காடடுகிற அருசாமையும ஆறறலும அவாகளுடைய நாடடுப பணபாடடின வேறு எநதப பகுதியாலும பெறமுடியாத அளவு மதிபபைப பெறறிருககின றன இநதப பொதுபபணி வளாசசியில அரசாஙக முதலீடடின பஙகு எவவளவு பெரியதாக இருநதிருககிறது எனபதை நாம மறநது விடுகிறோம ஆனால காாடடா குடாிச (Ca te G od ch) எனபவரால எழுதபபடட கடடுரைத தொடாகள மேறபடிப பஙகை நமககு நனகு நினைவூடடும இயலபுடையனவாக இருககின றன பததொனபதாம நூறறுணடின முதற பாதியில கால வாயகள சுஙககச சாவடிகள (Turnp k s) முதலிய முனனேறற அமைபபுகளையும சிறிது காலததிறகுப பின இருபபு வணடிப பாதைகளையும அரசாஙகச செலவில அமைபபதறகான முன மொழிவுகள (P opo al ) அநதக காலததின மிக முககியமான கைககோள கேளவிகளாக (Polı y qu t n ) விளஙகின விாி வான அளவில அமைநத 1808ஆம ஆணடில உருவாககபபடட

கலாடின் திட்டம் (Gallatin plan) கைவிடப்பட்டதற்குக் காரணம் தனியார் தொழில்துணிவைப் பாதுகாக்க வேண்டும் என்பது அன்று; "உள் நாட்டு முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்கான பொருத்தமான கருவி, மாநில அரசாங்கங்களே தவிரக் கூட்டாட்சி அரசாங்கம் அன்று" என்னும் கருத்து இறுதியில் ஏற்கப்பட்டதே ஆகும்.[17]. உண்மையைச்சொல்வதானால், "விரிவான அளவில் நடைபெற்ற அரசாங்க நடவடிக்கையும், தனியார் தொழில் துணிவுக்கும் அரசாங்கத்தொழில் துணிவுக்கும் இடையே வியக்கத்தக்க அளவில் ஏற்பட்ட இணைப்பும் பிணைப்புமே, உள் நாட்டுப் போர் (Civil War) நடைபெற்ற வரையில், உள்நாட்டு முன்னேற்றங்களுக்கான இயக்கத்தின் சிறப்பான இயல்புகளாகக் காட்சியளித்தன."[18]

ஷூம்பீடர் எடுத்துக்காட்டியிருப்பதைப்போல, ஏறத்தாழ இதே முறையில்தான், ஜெர்மானியச் சிற்றரசுகளும், சாலைகளை அமைத்தல், கால்வாய்களைத் தோண்டுதல் முதலிய பணிகளை மேற்கொண்டதன் மூலம், தனியார் தொழில் துணிவுக்கு அநுகூலமான ஒரு சூழ்நிலையை உருவாக்க முயன்றன.[19] பொருளியல் வளர்ச்சியின் தொடக்க நிலைகளில் பொதுப் பணிகளில் அரசாங்க முதலீடு செய்யப்பட்டதற்கு உரிய மற்றொரு சிறந்த எடுத்துக்காட்டாக ஆஸ்திரேலியா விளங்குகிறது என்னும் உண்மையை நாம் முன்னரே கண்டறிந்தோம்.

வேறு எந்த வகை முதலீட்டையும்விட, ஒட்டு மொத்த முதற்பொருள் அமைப்பை உருவாக்கும் முதலீட்டிற்கு, நீண்ட காலக் கண்ணோட்டமும் இடைவிடாத முயற்சியும் தேவைப்படுகின்றன. வளர்ச்சி குறைந்த நாடுகளைப் பொறுத்தவரை ஒட்டு மொத்த முதற்பொருள் ஆக்கம், கூட்டு நடவடிக்கையால் அல்லது கூட்டுறவு நடவடிக்கையால் செய்யப்படவேண்டிய சிறப்புத்தன்மை உடையதாக இருந்தபோதிலும், அரசியல் மாறுதலுக்கு எளிதில் இரையாகக் கூடிய ஒன்றாகவும் இருக்கிறது. எனவே, அப்பணியை, முடியுமானால், மாறிக் கொண்டிருக்கும் அமைச்சர் அவைகளாலும் பாராளுமன்ற நிலைமைகளாலும் பாதிக்கப்பட முடியாத-சுயேச்சைத் தன்மைபடைத்த தொடர்ச்சியாக இருக்கக்கூடிய ஓர் அமைப்பிடம் ஒப்படைப்பது நலம் பயக்கும். பல நாடுகளில் இதற்காகவென்றே நிலையான பொருளியல் மன்றங்கள் (Permanent economic councils) அல்லது வளர்ச்சி நிறுவனங்கள் (Development corporations) ஏற்படுத்தப்பட்டுள்ளன. சமூக ஒட்டுமொத்த முதற் பொருள் திரட்சி என்பது, மிகுந்த செலவில், நீண்டகால அடிப்படையில் செய்யப்படுகிற ஒரு முதலீடு ஆகும். அதனை, அரசியல் அரங்கத்தில் ஏற்படும்

குறுகிய கால மாறுதல்களால் தொடர்ச்சியாகப் பாதிக்கப்படும் படியான நிலைக்கு உள்ளாக்கக்கூடாது.

இறுதியாக, சமூக ஒட்டு மொத்த முதற்பொருள் என்பது, சமூக ஒட்டு மொத்தச் செலவு என்பதையும், அதற்கு உரிய செலவை அதுவாகவே ஈட்டக்கூடிய நிலையில் அஃது இல்லை என்பதையும் நாம் மறந்துவிடலாகாது. எத்தகைய சிறப்புவகை நடவடிக்கைகளுக்கு அஃது உதவியாக இருக்கவேண்டும் என்று கருதப்படுகிறதோ அத்தகைய நடவடிக்கைகள் உருவாகிற வரையில், அது ஒரு பொருளியல் வெற்றியாக அமைய முடியாது. அஃது ஓர் அடிப்படையை மட்டுமே அமைக்கிறது. அந்த அடிப்படையின் மீது, முன்னிலும் குறைந்த அளவில் மொத்தத் தன்மையை உடைய (Less lumpy)-முன்னிலும் மிகுதியான அளவில் பல்வேறு துறைகளிலுல் விரிந்து பரந்து விளங்குகிற முதலீடுகளின் வாயிலாகவும், மிகச் சிறப்பாக, தனியாட்களின் முயற்சி, தொழில் துணிவு ஆகியவற்றின் மூலமாகவும், பொருளியலானது வளர வேண்டும்; வளர்வதற்கு ஊக்கம் ஊட்டப்படவேண்டும்.

## தனியாட்களின் முயற்சியாகிய அடிப்படை

மேல்நாடுகளின் தொழில் வளர்ச்சியில் உற்பத்தித் துறைகளில் செய்யப்பட்ட முதலீடாவது பெரும்பாலும் தனிப்பட்ட தொழில் துணிவோராலேயே கையாளப்பட்டிருக்கிறது. தற்காலத்தில் தொழில் துறையில் பின்தங்கியுள்ள நாடுகளிற் சில, கொள்கையின் அடிப்படையில் இந்த ஏற்பாட்டை ஏற்க மறுக்கலாம்; அல்லது இந்த ஏற்பாடு தங்களுக்குப் பொருந்தாத ஒன்று என்று கருதலாம். ஆனால் உலகத்தில் மாபெரும் அளவில் நடைபெற்றுள்ள பொருளியல் வளர்ச்சி இயக்கத்தின் உயிர்நாடிபோன்ற ஒரு பகுதியின் சிறப்பை உணர மறுப்பது அறிவுடைமை ஆகாது. திட்டமிடுதல் (Planning) தேவை என்பவர்கட்கும், அது தேவையில்லை என்பவர்கட்கும் இடையே நடைபெறும் கருத்துப் போரில் நாம் இங்கு ஈடுபடத் தேவையில்லை. அது மட்டும் அல்லாமல், தற்போது நம்மால் கருத்தாய்வு செய்யப்படுகிற சிக்கல், அரசாங்க நடவடக்கை அல்லது தனியாள் தொழில் துணிவு ஆகிய இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் பணியாகமட்டுமே இருக்கிறது என்று கருதுவதும், நடைமுறைக்கு ஒவ்வாத செயலேயாகும். முதலீட்டுப் பணி தனியாராலேயே ஆற்றப்படவேண்டும் என்னும் கருத்துக்கு ஆதரவாக எழுப்பப்படும் புகழ்மிக்க வாதங்களில் இரண்டொன்றை மட்டும் தனியாக எடுத்து, அவற்றின் அடிப்படையில் சில கருத்துக்களை இங்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

நடைமுறையில் முதலீட்டுப் பணியானது ஏனைய பொருளியல் பணிகளிலிருந்து பிரிக்கப்பட்டில்லை என்பதும், பிரிக்கப்பட முடியாது என்பதும் உண்மையே. வாணிபத்தின் உடைமையும் அதனை நடத்திச் செல்லும் பொறுப்பும் தனியாரின் கைகளில் இருக்கின்ற காரணத்தால்தான், அப்படி இருப்பதன் ஒரு துணை விளைவாக (By-product), முதலீட்டுப் பணியில் தனியாரால் மேற் கொள்ளப்பட வேண்டிய நிலை ஏற்படுகிறது. ஆகவே, நம்மால் கருத்தாய்வு செய்யப்படுகிற சிக்கல், பல பகுதிகள் சேர்ந்த ஒரு மாபெருஞ் சிக்கலின் ஒரு பகுதியே ஆகும்.

தனிப்பட்ட தொழில்துணிவோரிடம் முதலீட்டுப் பொறுப்பை விடுவதில் ஒரு நன்மை இருக்கிறது. முதலீட்டின் விளைவாகக் கிடைக்கக்கூடிய கூடுதல் வருமானத்தைச் சேமிப்பதற்கு உரிய அமைப்பை அது பெற்றிருக்கிறது என்பதே அந்த நன்மை. குறிப்பிடத்தக்க அளவில் தனியார் சேமிப்பு நடைபெறுவதற்கு ஏதேனும் வழி இருக்கிறது என்றால், அது, தொழில் துணிவோரின் ஆதாயங்கள் மறுமுதலீடு செய்யப்படுதிலேயே அடங்கியிருக் கிறது. பொருளியலில் பின்தங்கிய ஒரு நாட்டில், வணிகரைத் தவிர (தொழில்துணிவோரைத் தவிர) வேறு யார், சேமிப்பதற் கான தூண்டுதலையும் ஆற்றலையும் பெற்றிருக்கமுடியும்? சேமிப் புத் தூண்டுதலும் முதலீட்டுத் தூண்டுதலும் ஒன்றாகப் பிணைந்து, தொழில்துணிவோரிடம்-அவருடைய கடந்தகால வெற்றிகளிலும் எதிர்கால ஆர்வங்களிலும் செறிந்து கிடக்கின்றன. தொழில் துணிவோரின் ஆதாயங்கள் மறுமுதலீடு செய்யப்பட்டிருப்பது தான், மேற்கு நாடுகளின் பொருளியல் வளர்ச்சியில் முதல் திரட்சிக்கான தலையாய ஊற்றாக இருந்திருக்கிறது என்பதை வரலாற்றுச் சுவடியிலிருந்து நன்கு அறிகிறோம். ஆகவேதான் அத்தகைய மறுமுதலீடு, ஷும்பீடரின் (Schumpeter) வளர்ச்சிக் கோட்பாட்டில் (Theory of development) அடிப்படையான இடத் தைப் பெற்றிருக்கிறது. இதே வகையான ஏற்பாடு பிற நாடு களிலும் கையாளப்பட முடியுமானால், அஃது, ஒரு நாட்டின் இறுதிநிலைச் சேமிப்பு விகிதத்தை மிக உயர்ந்த அளவுடையதாக ஆக்கவல்ல - பயன்மிக்க - ஏறத்தாழத் தானே இயங்கும் தன்மை படைத்த - ஒரு வழியாக இருக்கமுடியும்.

மூலதன உணர்வுடைய ஒரு சமுதாயத்தில்தான் மூலதன ஆக்கம் நிலையான அடிப்படையில் வெற்றிபெற முடியும். இந்த உண்மை, மூலதனத்தின் தொடக்கநிலைப் படைப்புக்கு மட்டுமல் லாமல் அதன் தொடர்ச்சியான பராமரிப்புக்கும் பொருந்துகின்ற இன்றியமையாத தன்மை உடையதாகும். முதலீட்டு நடவடிக்கை யானது தனியாட்களிடம் விரிவான அளவில் பரவுவதன்

வாயிலாகத்தான் அத்தகைய மூலதன உணர்வு பல்கிப் பெருக முடியும். இத் தொடர்பில் மக்களின் பண்பு நலன்களைவிட முதன்மைமிக்கது வேறு எதுவும் இல்லை. ஒரு திட்டக் குழுவினால் தீட்டப்படும் மாபெரும் திட்டங்களைவிட மூலதனத்தைப் பயன் படுத்தும் பணியோடு தொடர்புடைய தனியாட்களின் பழக்கங் களும் பண்புகளுமே, ஒரு நாட்டின் பொருளியல் வளர்ச்சிக்கான அடிப்படையை, ஆழமாகவும் அழுத்தமாகவும் அமைக்கின்ற ஆற்றல் படைத்தனவாக விளங்குகின்றன. தனியாட்களின் துணிவுடைமை, அறிவு, திறமை, வரும்பொருள் அறியும் நுண் மதி ஆகியவை, மேற்குறிப்பிட்ட தனியாட்களின் பழக்கங்கள் - பண்புகளிற் சில ஆகும். இந் நிலையில் அரசாங்கமானது இப் பண்புகளின் நடவடிக்கைக்குப் போதிய இடம் அளிப்பதும், இப் பண்புகளின் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கக் கூடியவற்றை அகற்றுவதும் நலம் பயக்கும் செயல்களாக அமையும். தனியார் தொழில்துணிவானது தன் ஆற்றலையே சார்ந்திருக்கக்கூடிய அளவுக்கு வன்மை பெற்றுள்ள துறைகளிலிருந்து அரசாங்கம் ஒதுங்கி நிற்கவேண்டும். எந்தத் துறைகளில் உள்ள இடர்ப்பாடு களை அகற்றி வளர்ச்சிக்கான வழியை ஒழுங்குபடுத்த அரசாங்கத் தின் ஆற்றல்கள் தேவைப்படுகின்றனவோ அந்தத் துறைகளில் மட்டுமே அஃது ஈடுபடவேண்டும். எடுத்துக்காட்டாக, ஜப்பானிய அரசாங்கம் சென்ற நூற்றாண்டின் இறுதியில் இப்படித்தான் நடந்துகொண்டது. துருக்கியில் அரசாங்கமானது இருபது ஆண்டுகளாகச் சேமிப்பு நடவடிக்கையில் மட்டுமல்லாமல் முதலீட்டு நடவடிக்கையிலும் ஆதிக்கம் செலுத்திய பிறகு, இப்போது, மேற்குறிப்பிட்ட நடைமுறையைக் கையாளத் தொடங்கியிருப்பதாகத் தெரிகிறது.[20] தொழில் துறையில் பின் தங்கியுள்ள ஒரு நாட்டின் சமுதாய அமைப்பில் மூலதனத்தை நுழையவைப்பதற்கு வேறு பல முறைகள் இருக்கக்கூடும் என்ற போதிலும், நீண்ட காலக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, தனியார் முதலீட்டிற்கான வாய்ப்பை ஏற்படுத்துவதுதான் மிகச் சிறந்த பயனை அளிக்கவல்ல ஒரு முறையாகக் காணப்படுகிறது.

ஒரு நாட்டில் உள்ள மக்கள், அவர்களாக ஓரளவு சேமிப்பைச் செய்வதற்கும், சுற்றுவழி உற்பத்தி முறைகளின் (Roundabout methods of production) அநுகூலத்தை அவர்களுடைய அநுபவத் தின் வாயிலாகவே அறிந்து கொள்வதற்கும் ஆயத்தமாக இருந்தா லொழிய அந் நாட்டின் மூலதன உணர்வு அழுத்தமானதாக இருக்கமுடியாது. அம் மக்கள் அவ்வாறு ஆயத்தமாக இல்லாத நிலையில் அந் நாட்டில் ஏதேனும் அயல்நாட்டு வாணிப முதலீடு நிகழுமானால், அம் முதலீடு, கடன் வழங்கும் நாட்டுப் பொருளிய

வின் ஒரு முன்னணிப் பகுதியாகமட்டுமே இருக்கமுடியும். இத்தகைய சூழ்நிலையில் செய்யப்படும் நேர்முக அயல்நாட்டு முதலீடானது, எல்லாச் சமயங்களிலும் பண்பாட்டுத் தொடர்பை மகிழ்ச்சி ததும்பும் முறையில் ஏற்படுத்தும் ஒரு கருவியாக இருக்கும் என்று கூறமுடியாது. நேர்முக அயல்நாட்டு முதலீட்டின் விளைவாகப் பல சமயங்களில் உருவாகியிருக்கிற இடர்ப்பாடுகளுக்கு இதுவே மூலகாரணமாக இருக்கக்கூடும்.

தூய பொருளியலைவிட (Pure Economics) விரிவான ஒரு கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, மூலதனத்தை, '' சமுதாயத்தில் உள்ள தனியாட்களின் நிறுவனங்கள், பழக்கமான சிந்தனைப் போக்குகள், நடவடிக்கைக் கோலங்கள் ஆகியவற்றைச் சார்ந்துள்ள - வழிவழி வருகிற ஒரு சமுதாய உடைமை'' என்று வர்ணிப்பது, முற்றிலும் பொருத்தமான செயலாக அமைகிறது. ''ஆகையால்தான், ஒரு புதிய நடவடிக்கைக் கோலத்திற்கு ஏற்ற முறையில் மூலதனத்தை மாற்றி அமைக்கவல்ல தனியாட்களோடு சேர்த்தே மூலதனத்தை ஒரு நிலைமையிலிருந்து இன்னொரு நிலைமைக்கு மாற்ற முடியுமே தவிர அதைமட்டும் தனியாக மாற்றல் செய்யமுடியாது.''[21] பத்தொன்பதாம் நூற்றுண்டின் அயல்நாட்டு முதலீடானது அதன் இணையற்ற வெற்றிகளைப் பெற்றது, மட்டான தட்பவெப்பமுடைய நாடுகளின் வெற்றுச் சமவெளிகளிலேயே ஆகும். அந்த நாடுகளுக்கு அது சென்றபோது ஏராளமான மக்களையும் உடன் அழைத்துச் சென்றிருக்கிறது. அந் நாடுகளில் அது பெற்ற வெற்றியும், ஏராளமான உழைப்பாளிகள் உடன் சென்றதும், தற்செயலாக நிகழ்ந்த தனித்தனி நிகழ்ச்சிகள் அல்ல. அம் மக்கள் அங்குச் சென்றபோது வழிவழியாகத் தாங்கள் பெற்றிருந்த கருத்துகளையும் (Ideas) தங்களோடு கொண்டு சென்றுர்கள்.

'' கருத்துகள், கலை இயலையும் அறிவியலையும் சார்ந்தனவாக இருந்தாலும் சரி; அல்லது, நடைமுறைக் கருவிகளில் பொதிந்துள்ளனவாக இருந்தாலும் சரி; அவைதாம், ஒரு தலைமுறையானது. அதன் முந்திய தலைமுறைகளிலிருந்து பெறுகிற மிக 'மெய்யான' நன்கொடைகள் (Most 'real' gifts) ஆகும். உலகத்தின் பருப் பொருள் செல்வம் மட்டும் (Material wealth) அழிக்கப்பட்டு, அச் செல்வத்தை உருவாக்கிய கருத்துகள் எஞ்சி இருக்குமானுல், அச் செல்வத்தை விரைவில் உற்பத்தி செய்துவிட முடியும். ஆனுல் அதற்கு மாறுக, கருத்துகள் அழிக்கப்பட்டுச் செல்வம் மட்டும் எஞ்சி இருக்குமானுல், அச் செல்வம் தேய்ந்து மறைந்து ஒழியும்; உலகம் மீண்டும் வறுமையில் மூழ்கிவிடும்'

